கழக வெளியீடு, ௧௦௦௫

# சிலேடை யகரவரிசை



ஆசிரியர்

திரு சு அ இராமசாமிப் புலவர்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.

1960

கு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

# மதிப்புரை

புலத்துறை முற்றிய புலவர்கள் மாணக்கர்களுக்குச் சொற் பொருளுணர்வு பெருகுதற் பொருட்டும், நிகண்டு முதலிய சொற்கோவை நூல்கள் நினைவின்கண் அழுந்தி நிற்றற்பொருட் டும், நிரம்பாப் புலவர்தம் நிலைமையினைப் பொள்ளெனப் புலப் படுத்துதற் பொருட்டும் 'மடக்கு' முதலிய சொல்லணிகளை யமைத்து அந்தாதியாகவும், தனியாகவும் பாடுவாராயினர். இம்முறையில் எழுந்தனவே 'சிலேடை' நூல்களும்.

சிலேடை என்பது இருபொருள்பட இசைக்கும் சொல். அச் சொற்களின் பொருளை அறிந்தார் விரித்துக் கூறுங்கால் கேட்பார்க்கு மிக்க உவகை துளும்பி உள்ளக்களிப்பும் உண்டா கும். அம்முறையான் அச் சொல்லும் அதற்குரிய பல பொரு ளும் அவர்தம் நினைவின் நின்று சொற்பொருள் அறிவு பெருகு தற்கும், கற்கும் வேட்கையினை எழுப்புதற்கும், சிலேடைச் செய் யுட்கள் யாப்பதற்கும் துணை செய்வனவாகும்.

சிலேடை 'செம்மொழிச் சிலேடை' எனவும், 'பிரிமொழிச் சிலேடை' எனவும் இருவகைப்படும். செம்மொழிச் சிலேடை யாவது சொற்கள் நின்றவாறே நிற்க இருபொருள் படுவது. பிரிமொழிச் சிலேடையாவது சொற்களைப் புணர்ச்சிவகையாற் பிரித்துப் பலபொருள் காண்பது. இத்தகைய சீரியநிலை மொழிவளர்ச்சியின் தொன்மையினையும் இலக்கண இலக்கியப் பன்மையினையும், அம்மொழிக்குரிய தனிப் பேராற்றலையும் விளக்குவதாகும். நம் தமிழ் மொழி பல்லாயிர யாண்டுகளுக்கு முன்தோன்றி இன்றுகாறும் இருவகை வழக்கிலும் நின்று நிலவி வளர்ச்சியுற்றுவருந் தனிப்பெருமொழியாகும். அதனல் இம்மொழிக்கண் வேறெம்மொழியினுங் காணப்படாத தனிச் சிறப்புக்கள் பலவுள. அவற்றுள் சில: 'சிலேடை மடக்கு, பழ மொழி, விடுகவி, மரபு' முதலியனவாகும். இவற்றைத் தமிழ் கற்றுத் தனிவேட்கையுற்று நூல், உரை, மொழி பெயர்ப்பு

முதலியன யாத்துப் பேரின்பமுற்ற மேனுட்டறிஞர்கள் பலரும் வியந்து பாராட்டியுள்ளார்கள்.

அத்தகைய **'சிலேடை யகரவரிசை'**யினை எங்கள் வேண்டு கோளுக்கிணங்கி அத்துறையின்கண் புலமை நிரம்பிய திரு. **சு. அ. இராமசாமிப் புலவர்** அவர்கள் செவ்விய உரையோடும் யாத்துத் தந்துள்ளார்கள். இதன்கண் பல நூற்றுக்கணக் கான பாடல்களிலமைந்த சொற்றொடர்கள் வந்துள்ளன. இன் னும் வரவேண்டுவனவும் அளவில. அவற்றையும் தொகுத்துப் பின்னிணைப்பாகவோ இரண்டாம் புத்தகமாகவோ வெளியிட எண்ணியுள்ளோம். இதன் தொகுப்பாசிரியரவர்கட்குக் கழகத் தார் நன்றியுரித்தாகுக. இந்நூல் அகர வரிசையாக அமைந் திருப்பது கற்பார்க்குப் பெருந்துணையாகும்.

இதனைப் பொதுவாகச் செந்தமிழ் அன்பர்களும் சிறப்பாக ஆசிரியர் மாணவர்களும் வாங்கிக் கற்றுத் தமிழ்க்கருவூல மாண்புணர்ந்து தமிழுணர்வெய்தி இன்புறுவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

## நன்றியுரை

இந்நூல் வெளியீட்டுச் செலவு தொகையில் ஒரு பகுதி நன்கொடையாக **மத்திய அரசின் அறிவியலாராய்ச்சி பண் பாடு செய்தித்துறை அமைச்சரால்** வழங்கப் பெற்றிருக்கிற தென்பதை நன்றியறிதலுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

# முன்னுரை

தமிழ்மொழியில் தமிழ்மொழியகரவரிசை, பழமொழியகர வரிசை, வடசொல் அகரவரிசை, உவமையகரவரிசை, இல்லப் பெயர் அகரவரிசை, மக்கட்பெயர் அகரவரிசை, மூலிகையகர வரிசை, ஆட்சிச்சொல் அகரவரிசை முதலிய பல அகரவரிசை நூல்கள் வெளிவந்துலவுகின்றன.

'சிலேடையகர வரிசை' எனனும் இந்நூல் இப்பொழுது புது முறையாகவும் முதன்முறையாகவும் அமைக்கப்பட்டதாகும். இதற்குமுன இத்தகைய நூல் வெளிவந்ததாகத் தெரிய வில்லை. இத்தகைய அகரவரிசை நூல் ஒன்றைத் தொகுத்து வெளியிடுதல் இலக்கியப் பயிற்சியிற் புகுவார்க்கும் சிலேடை நூல்களைக் கற்பார்க்கும் அரிய துணையாகுமன்றோ என்று கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் கூற, அவ்வாறு செய்தல் தக்கதேயாமெனத் துணிந்து யான் இந்நூலை ஒருவாறு தொகுத்து முடித்தேன்.

இந்நூலை தொகுப்பதற்குக் **கலைசைச் சிலேடை வெண்பா, சிங்கைச் சிலேடை வெண்பா, நெல்லைச் சிலேடை வெண்பா, தில்லைச் சிலேடை வெண்பா, பனசைச் சிலேடை வெண்பா, துறைசைச் சிலேடை வெண்பா, பூவனூர்ச் சிலேடை வெண்பா, புலியூர்ச் சிலேடை வெண்பா, திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா, குற்றாலச் சிலேடை வெண்பா, போரூர்ச் சிலேடை வெண்பா, அரியக்குடிச் சிலேடை வெண்பா, திருவேங்கடச் சிலேடை வெண்பா, பவானிச் சிலேடை வெண்பா, திருவரங்கச் சிலேடைமாலை, சந்திரவிலாசம், சமுத்திர விலாசம், யமகவந்தாதிகள், கலம்பகங்கள், தனிப்பாடல் திரட்டு,** அரசஞ் சண்முகனார் இயற்றிய **ஏகபாத நூற்றந்தாதி** முதலிய பல நூல்கள் பயன்பட்டன.

இச் சிலேடையகர வரிசையில் முப்பொருள் தரும் மொழி களும் நாற்பொருள் தரும் மொழிகளும் உள்ளன. ஆயினும் இவைகள் சிறுபான்மையும் இருபொருள் தரும் மொழிகளே

பெரும்பான்மையுமாக இருத்தலைக் கொண்டு "**சிலேடையகர வரிசை**" என்று நூலுக்குப் பெயர் வைக்கப்பட்டிருக்கிறது.

இச் சிலேடை யகரவரிசையைப் பயில்பவர்கள் சிலேடை நூல்களுக்குப் பொருள் காணும் ஆற்றல் அமையப்பெறுவ தோடு கடினமான பாடல்களுக்குப பொருள்காணும் ஆற்றலும் அமையப்பெறுவார்கள். கற்பவர்கட்கு வியப்பையும் களிப்பை யும் அளிக்கத்தக்க இச் சிலேடையகரவரிசை ஒரு புதுமையான போக்குடையது. இதனில் வரும் பல சொற்கள் கதையின்பம் போற் பயனளித்து மகிழ்வளிப்பனவாகும். எடுத்துக்காட்டாக "இவனல்ல யோக்கியன்" என்பது இவன் நல்ல யோக்கியன் எனவும் இவன் அல்ல யோக்கியன் எனவும் இவன் நல்ல அயோக்கியன் எனவும் பொருள் கொள்ளுமாறு நின்று களிப் பூட்டுதலைக் காண்க. சொற்களுக்கு மற்றும் புதுமையான பொருள் காண்பவர்கள் தெரிவிப்பின் மறுபதிப்பில் சேர்க்கலாம்.

இந்நூலில் மூவாயிரத்து நூற்று அறுபத்தேழு சொற்கள் வரை அமைந்துள்ளன. மேலும் பல சிலேடைச் சொற்கள் கிடைக்கக் கூடும்; அவைகளையுந் திரட்டி மறுபதிப்பில் வெளியிட எண்ணியுள்ளேன். பல சொற்களுக்கு எழுதப்பட் டுள்ளவைகளைவிட மேலுஞ் சில பொருள்களையும் அன்பர்கள் ஆராய்ந்துணர்ந்து மகிழலாம்.

இத்தகைய நூலுக்கும் இதைப் போன்ற மற்றும் பல சீரிய நூல்கட்கும் அடிப்படையான திட்டம் வகுக்கும் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களின் கூரிய நுண்ணுணர்வு எல்லோராலும் நன்கு பாராட்டக்கூடியதாகும். இந் நூலுக்கு அணிந்துரை வழங்கிய நண்பர் உயர்திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கட்கு எனது நன்றி உரித்தாகுக. என் முயற்சிகள் எல்லாவற்றிற்குந் தோன்றாத் துணையாக விருந்து திருவருள் நல்கும் திருமுருகப்பெருமான் திருவடிகளைப் போற்றி வணங்கி வாழ்த்துகின்றேன்.

பைந்தமிழ்ப் பண்ணை,
கருப்பக்கிளர்,
1-5-1960

**சு. அ. இராமசாமிப் புலவர்.**

# அணிந்துரை

தமிழன் வாழ்வில் இனிமை கண்டவன். துன்பம் உற வரினும் அதைப் போக்கும் மருந்தாகச் சிரிப்பையே கொண்டவன். வாழ்வில் காணும் அவன் நினைவும், சொல்லும், செயலும் அனைத்தும் இன்பம் நிறைந்தனவே. அந்த இன்ப வாழ்வில், அவன் தன்னைமட்டுமன்றி உலகையே ஆழ்த்த நினைத்தவன். 'தான் இன்புறுவது உலகின்புறக் காணும்' அவனுடைய உள்ளத்திலிருந்து நல்ல சொற்கள் உருவாகி உதட்டின்வழி உலகுக்கு வந்தன. அவ்வாறு அவன் பேசும் பேச்சுக்களில் இனிமை தவழும். அந்த இனிமைகளுள் ஒன்று—ஏன்?—தலைசிறந்தது—இரட்டுறமொழிதல் என்னும் சிலேடையாகும்.

பண்டுதொட்டு இன்றுவரைத் தமிழில் எத்தனையோ சிலேடைமொழிகள் வழங்கிவந்தன. சிலேடை என்பது ஒரு சொல்லுக்கோ தொடருக்கோ ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் காணும் தன்மைவாய்ந்தது என யாவரும அறிந்ததே. அத்தகைய சிலேடைத் தொடர்களும் சொற்களும் நாட்டில் அளவில. அத்தனையும் பேச்சுவழக்கில் அமைந்தனவாகவும், புலவர் நாவில் பொருந்தி ஒருசில பாடல்களுள் இடம்பெற்றனவாகவும் நின்றன. எனினும் அவற்றை ஒன்றுகத் தொகுத்துக் கற்ருரும் மற்ருரும் எளிதில் பயின்று பயன்பெறும்வகையில் இதுவரை யாரும் வெளியிடவில்லை. இன்று அந்தப் பணி நிறைவேறுகின்றது.

தமிழ்நாட்டுப் புலவர்களைப் பலகோணங்களில் இருந்து ஆராய்ந்து அவர்களைத் தொகுக்கும் வழித் தொகுத்து இருபத்தொரு நூல்களிலே தமிழ்நாட்டுக்கு அறிமுகப்படுத்தியவர் கருப்பக்கிளர் திரு சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள். அப்புலவர்களை அன்றி—அன்று தொட்டு நேற்றுவரை வாழ்ந்த மற்றைப் புலவர்களையும் — அகரவரிசையில் முறைப்படுத்தி

உலகுக்குக் காட்டியவரும் அவரே. அந்த நூல்களையெல்லாம் கவினுற அச்சிட்டு, கொள்வோர் கொள்வகை அறிந்து அழகிய கட்டுக்களில் நாட்டுக்கு நல்கிய பெருமை சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தாருக்கும், சிறப்பாக அதன் ஆட்சியாளர் திரு. வ. சுப்பையாப் பிள்ளை அவர்களுக்குமே உண்டு. இன்று இந்தச் 'சிலேடை யகரவரிசை'யைத் திருவாளர். சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள் தொகுத்துத்தரக் கழகத்தார் அழகுற அச் சிட்டு நாட்டுமக்கள் முன் வைக்கின்றனர்.

மூவாயிரத்துக்கும் மேற்பட்ட, உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் உள்ள சிலேடைச் சொற்களையும், தொடர்களையும் இந் நூல் நமக்குத் தருகின்றது. அவற்றுக்கு உள்ள இரு வேறு, மூவேறு வகைப்பட்ட பொருள்களை முறைப்படத் தொகுத்துக் காட்டுகின்றார் புலவர். தொடர்களையும் சொற்களை யும் எவ்வெவ்வாறு பகுத்தும் தொகுத்தும் பொருள் காண வேண்டும் என்பதையும் நன்கு விளக்கிக் காட்டியுள்ளார். சிலேடை என்பது கல்லாதவனுக்குப் புரியாத ஒன்று என்றும், அது புலவர்தம் கைப்பாவை என்றும் இனி யாரும் கூற முடியாது. தமிழை நன்கு படிக்கத் தெரிந்தவர் யாவராயினும் அவர்கள் இந் நூல்வழித் தமிழில் உள்ள சிலேடை வகைகளை நன்கு உணர்ந்துகொள்ளலாம்.

இச் சிலேடைச் சொற்களையும் தொடர்களையும் தொகுக்கும் பணியினை மேற்கொண்ட புலவர்தம் முயற்சி 'வெல்க' என வாழ்த்துகின்றேன். அவற்றைத் தொகுத்து அழகுற அச்சிட்டு நாட்டுக்கு நல்கிய கழகத்தார் செயல் 'சிறக்க' எனப் பாராட்டு கின்றேன். தமிழ்நாடு இந்நூலை யேற்றுப் பயன்கொள்ளுமாக!

தமிழ்க்கலை இல்லம்
சென்னை-30.
25-4-60

அன்பன்,
அ. மு. பரமசிவானந்தம்.

# சிலேடை யகரவரிசை



**அகங்காரநந்த**

அகங்காரம் நந்த-ஆணவமானது கெட.

அகம் கார் அநந்த-உடல் கருமை யாகப் பெற்ற திருமாலே.

**அகந்தி**

அகம் தி-வீட்டிலுள்ள நெருப்பு.

அகத்தி - அகத்தி மரம்.

அகந்தி - இல்லத்தாள்.

**அகத்தியக்கத்தன்**

அகம் தியக்கத்தன் - மனக் கலக்கத்தை யுடையவன்.

அகத்தியன் கத்தன் - அகத்திய முனிவருக்கு ஆசிரியனான தலைவன்.

அகத்து இயக்கத்தன் - உள்ளத்திலே இயங்குதலுடையவன்.

அகத்தினில் சூதுண்டு-உள்ளத்திலே கபடமுண்டு.

அகத்தினில் சூதுண்டு - மார்பிற் சூதாடு கருவிபோன்ற கொங்கையுண்டு.

**அகலத்தாணுண்டான்**

அகலத்தான், ஆண்தான் - மார்பையுடையவன், ஆணுந் தானே யானவன்.

அகல தான் ஆண்டான் - (என் மயக்கம்) நீங்கத் தான் அடிமைகொண்டான்.

**அகலாவிரைமஞ்சரிதழுவி**

அகலா விரை மஞ்சரி தழுவி - மாறுத மணமுள்ள பூங் கொத்துகள் பொருந்தப் பெற்று.

அகல் ஆவிரை மஞ்சு அரி தழுவி - ஆவிரஞ்செடிகளும் முகில்களும் அரிமாக்களும் சேரப்பெற்று.

**அகவல்**

அகவல் - கூவுதல்.

அக அல் - மனவிருள்; அறியாமை.

**அகன்றிரியுங்காலம்**

அகன்று இரியும் காலம் - நீங்கி ஒழியுங் காலம்

அகன் திரியும் காலம் - இடத்திலே உலவுகின்ற காலம்

அகன் திரியும் காலம் - மனம் மாறுபடுகிற காலம்.

**அகிலந்தலைமேற்சுமந்தே**

அகிலம் தலைமேல் சுமந்தே-நிலத்தைத் தலைமேல் தாங்கி

அம் தலைமேல் சுமந்தே - 1ல் மரங்களைத் தன் அழகிய மேலிடத்திற்கொண்டு.

**அக்கதைகள்மேவும்**

அ கதைகள் மேவும் - அழகிய வரலாறுகள் பொருந்தும்.

அ கதைகள் மேவும் - அழகிய கதாயுதங்கள் பொருந்தும்
அக்கதைகள் மேவும் - அட்சதைகள் பொருந்தியிருக்கும்.

**அக்கதையேற்கும்**

அக்கு அதை ஏற்கும் - சங்கு மணியை ஏற்றுக்கொள்ளும்.
அக்கதை ஏற்கும் - மங்கல அரிசியை ஏற்றுக்கொள்ளும்.

**அக்கரம்பிரிக்கும்**

அக்கரம் பிரிக்கும் - எழுத்துக்களைப் பிரிக்கும்.
அ கரம் பிரிக்கும்-நிலத்தின் தீர்வையைப் பிரிக்கும்

**அக்கவடமல்கும்**

அக்கவட மல்கும்-உருத்திராக்க மாலை பொருந்தும்.
அக் கவடம் அல்கும் - அந்த வஞ்சனையானது குறையும்

**அக்காரநேரும்**

அக்காரம் நேரும் - வெல்லப்பாகை
அக்கு ஆரம் நேரும் - கண்மணி (உருத்திராக்க) மாலையைப் பொருந்தும்.

**அங்கங்கருந்தவரையண்டியும்**

அங்கு அங்கு அருந்தவரை அண்டியும் - அங்கங்கே குடிக்கவும் மலைகளை நெருங்கியும்.
அங்கு அங்கு அருந்தவரை அண்டியும் - ஆங்காங்கு அருமையான தவத்தினரைச் சேர்ந்தும்.

**அங்கங்கருமையால்**

அங்கு அங்கு அருமையால் - எல்லாவிடங்களினும் அருமையாக விளங்குகிற தன்மையால்.
அங்கம் கருமையால் - உடல் கரிய நிறமாக இருப்பதால்.

**அங்கங்களவால்**

அங்கம் களவால் - உடலிற் களவுக்குறியை உடைமையால்.
அங்கு அங்கு அளவால் - ஒவ்வோர் உறுப்புக்கும் அளவு செய்யப்படுவதால்.

**அங்கங்கறுப்பால்**

அங்கு அங்கு அறுப்பால்-அவ்வவ்விடங்களில் அறுவடையினால்
அங்கம் கறுப்பால்-உடல் கருமையாக விருத்தலால்

**அங்கங்கெடுத்தார்**

அங்கம் கெடுத்தார் - உடலைக் கெடுத்தவர்.
அங்கு அங்கு எடுத்தார்-அவ்வவ்விடங்களில் (ஐயம்) எடுத்தவர்.

**அங்கங்கோடி**

அங்கு அங்கு ஓடி - இடங்கள் தோறும் ஓடிச் சென்று.
அங்கம் கோடி - உடல் குறுகியிளைத்து.

**அங்கசனம்பெய்யும்**

அங்கசன் அம்பு எய்யும் - காமன் கணையைச் செலுத்தும்
அங்கு அசனம் பெய்யும் - அவ்விடத்தில் உணவையிடும்.

அம் கஞ்சுகம் கொள் - அழகிய கச்சினைக் கொள்ளுகிற.

அங்கு அஞ்சுகம் கொள் - *அவ்விடத்திலே கிளியைக் கொள்ளுகின்ற.*
அங்கம் சுகம் கொள் - *உடல் நலத்தைப் பெறுகின்ற.*
அங்கு அஞ்சு உகம் கொள்-*அவ்விடத்திலே ஐந்து யுகத்தைப் பெறுகின்ற.*

**அங்கணிகைமேவும்**

அம் கணிகை மேவும் - *அழகிய கணிகையரிடத்துச் செல்லும்.*
அங்கு அணிகை மேவும் - *அவ்விடத்திலே அணிகலன்களைப் பெறும்.*

**அங்கதமலங்கும்**

அங்கதம் அலங்கும் - *பாம்புகள் விளங்கும்.*
அங்கதம் அலங்கும் - *தோள் வளைகள் விளங்கும்.*

**அங்கதனைப்பெற்ருன்**

அங்கதனைப் பெற்ருன் - *அங்கதன் என்பவனைப் பெற்றவன்.*
அங்கு அதனைப் பெற்ருன் - *அவ்விடத்தில் அந்த வீடுபேற்றையடைந்தவன்.*

**அங்கத்தன்**

அங்கத்தன்-*உடலையுடையவன்.*
அம் கத்தன் - *அழகிய தலைவன்.*
அங்கு அத்தன்-*அவ்விடத்திலே தலைவன்.*

**அங்கநகத்தினணிபெறலால்**

அங்கம் நகத்தின் அணிபெறலால் - *காலில் நகங்கள் நல்ல அழகுபொருந்தியிருத்தலால்.*
அம் கநகத்தின் அணிபெறலால்- *அழகிய பொன்மணியைப் பூண்டிருத்தலால்.*

**அங்கமலமிக்க**

அம் கமலம் மிக்க - *அழகிய தீர்த்தங்களுள் உயர்ந்த. அழகிய தாமரைகள் நிறைந்த*
அங்கம் அலம் மிக்க - *ஆறங்கங்களையுடைய அமைவுமிகப் பெற்ற.*

**அங்கமலைக்கும்**

அங்கம் அலைக்கும் - *உடலை வருத்தும்.*
அம் கமலைக்கும் - *அழகிய திருமகளுக்கும்.*

அங்கு அமலை வீடா - *அவ்விடத்தில் ஆரவாரம் ஒழியாத.*
அம் கமலை வீடா - *அழகிய திருமகள் தங்கப்பெற்ற.*

**அங்கம்படலால்**

அங்கம் படலால் - *உடல் சேருதலால்.*
அங்கம் படலால்-*உடல் அழிவதால்.*

**அங்கம்புமானும்**

அம் கம்பு மானும் - *அழகிய சங்கைப் போன்று விளங்கும்.*
அங்கு அம்பு மானும்-*அவ்விடத்தில் அம்பைப்போல் விளங்கும்.*

**அங்கயனைமானும்**

அங்கு அயனை மானும் - *அவ்விடத்தில் நான்முகனை ஒக்கும்.*
அங்கயனை மானும் - *காமனை நிகர்க்கும்.*

**அங்கயிலாயகிரி**

அம் கயிலாயகிரி - *அழகிய கயிலாயமலை.*

**அம் கு அயில் ஆயகிரி** - *நீர் சூழ்ந்த நிலத்தையுண்டவ ராகிய வராகவடிவர்.*

**அங்கரத்தராஞர்**

**அம் கரத்தர் ஆஞர்** - *அழகிய கையிலே உடையவர், காளை யூர்தியில் ஏறியவர்.*

**அங்கு அரத்தர் ஆஞர்** - *அவ் விடத்தில் அரத்தைப் போன்றவர் ஆயிஞர்.*

**அங்கரிணிமேஞடு**

**அம் கரிணி மேல்நாடு** - *அழகிய பெண் யானையை விரும்புகிற*

**அங்கு அரிணிமேல் நாடு** - *அவ் விடத்தில் பெண்மான் மேல் நாடிச் செல்லுகிற.*

**அங்கலேகளாரும்**

**அங்கு அலேகள் ஆரும்** - *அவ் விடத்தில் அலேகள் பொருந் தும்.*

**அம் கலேகள் ஆரும்** - *அழகிய மான்கள் அடையும்.*

**அம் கலேகள் ஆரும்** - *அழகிய கலேயறிவுகள் பொருந்தும்.*

**அம் கலேகள் ஆரும்** - *சிறந்த ஆடைகள் திகழும்.*

**அங்கலேயிஞேங்கும்**

**அங்கு அலேயின் ஓங்கும்** - *அவ் விடத்தே அலேயால் ஓங்கி விளங்கும்.*

**அம் கலேயின் ஓங்கும்** - *அழகிய கலேயிஞற் சிறந்து விளங்கும்.*

**அங்கவலேநீக்கி**

**அம் கவலே நீக்கி** - *நீர்க் கவலே யையுந் தணித்து*

**அங்கு அவலே நீக்கி** - *அவ்விடத் தில் துன்பத்தைப் போக்கி.*

**அங்களபஞ்சாரும்**

**அம் களபம் சாரும்** - *அழகிய கலவைச் சந்தனஞ் சேரும்.*

**அம் களபம் சாரும்** - *அழகிய யானேக்குட்டி செல்லும்.*

**அங்கனகவில்லான்**

**அம் கனக இல்லான்** - *அழகிய பொன் மயமான வீட்டை யுடையவன்.*

**அங்கு அனக இல்லான்** - *அங்கு குற்றமற்ற மோட்ச வீட்டை யுடையவன்.*

**அம் கனக வில்லான்** - *அழகிய பொன் மலேயாகிய வில்லே யுடையவன்.*

**அங்கனகனேக்கொலலால்**

**அம் கனகனேக் கொலலால்** - *அழகிய இரணியனேக் கொல்லுதலால்.*

**அங்கு அனகனேக் கொலலால்** - *அவ்விடத்தில் அனங்கஞகிய காமனேக் கொல்லுதலால்.*

**அம் கனமே நேரும்** - *நீரையும் முகிலேயும் ஒக்கும்.*

**அம் கனமே நேரும்** - *அழகிய பாரத்தைப் பொருந்தும்.*

**அங்கு அனமே நேரும்** - *அவ் விடத்தில் அன்னப்பறவை யையே ஒத்திருக்கும்.*

**அங்கனமுமேற்கொளலால்**

**அம் கனமும் மேற்கொளலால்** - *அழகிய பொன்னேயு மேலே கொள்ளுதலால்.*

**அங்கு அனமும் மேற்கொள லால்** - *அவ்விடத்தில் அன்னப் பறவையும் வசித்தலால்.*

அம் கனமும் மேற்கொளலால் - *நீருண்ட முகிலும் பொருந்துவதால்.*

**அங்கனியோடேயும்**

அம் கனியோடு ஏயும் - *அழகிய கன்னியா ராசியோடு பொருந்தும்.*

அம் கனியோடு ஏயும் - *அழகிய கனிகளோடு விளங்கும்.*

**அங்கனையானங்கனையான்**

அங்கு அனையான் அம் கனை ஆன் - *அவ்விடத்தே தாயைப் போன்றவன்; அழகிய கத்தலுடைய காளையூர்தியை உடையவன்.*

அங்கன் ஐயான் அங்கம் நையான் - *ஆறங்கம் உடைய அழகன், உடல் நையப் பெறுதவன்.*

**அங்காக்கை**

அம் காக்கை-*அழகிய காக்கை.*

அங்காக்கை - *வாயைத் திறக்கை.*

அங்கு ஆக்கை - *அவ்விடத்தே உடல்.*

அங்கு ஆக்கை-*அவ்விடத்திலே செய்தல்.*

**அங்காடிமேவும்**

அங்காடி மேவும் - *கடைத் தெருவை அடையும்.*

அங்கு ஆடி மேவும் - *அவ்விடத்தில் கண்ணுடிகள் பொருந்தும்*

அம் காடி மேவும் - *இனிய கள் பொருந்தும்.*

**அங்காரமேவும்**

அங்கு ஆரம் மேவும்-*அவ்விடத்தில் முத்துமாலைகள் பொருந்தும்.*

அங்காரம் மேவும் - *திக் கனல் பொருந்தும்.*

**அங்கார்**

அம் கார் - *அழகிய முகில்.*

அங்கு ஆர் - *அங்கு பொருந்துவாயாக.*

**அங்காவணஞ்சேர்**

அங்கு ஆவணம் சேர் - *அவ்விடத்திற் கடை வீதியிற் சேர்ந்திருக்கின்ற.*

அம் காவணம் சேர் - *அழகிய பந்தல் பொருந்தியுள்ள.*

**அங்காவிலகும்**

அம்கா இலகும்-*அழகிய சோலை விளங்கும்*

அங்கு ஆ விலகும் - *அவ்விடத்திலே பசு விலகிச் செல்லும்.*

**அங்கிக்கணக்கன்**

அங்கி கணக்கன் - *சட்டையை அணிந்த கணக்கப் பிள்ளை.*

அங்கி கண் நக்கன்-*திக்கண்ணை உடைய சிவபெருமான்.*

**]ங்கிக்களித்தார்**

அங்கு இக்கு அளித்தார் - *அவ்விடத்திலே கருமபைக் கொடுத்தவர்*

அங்கிக்கு அளித்தார் - *திக்குக் கொடுத்தவர்.*

**அங்கியென்றுமேவிடலால்**

அங்கி என்றும் மேவிடலால் - *சட்டையை எந்நாளும் போடுவதால்.*

அங்கி என்று மேவிடலால் - *தீ என்று கூறப்படுவதால்.*

**அங்கிளைகள்**

அம் கிளைகள் - *அழகிய கொப்புகள்.*

அம் கிளைகள் - *அழகிய கிளிப் பிள்ளைகள்.*

**அங்குசங்கைக்காக்கும்**

அங்கு சங்கைக் காக்கும் - *அவ்விடத்திலே சங்கைப் பாது காக்கும்.*

அங்குசம் கைக்கு ஆக்கும் - *தோட்டியைக் கையிற் கொள்ளும்.*

**அங்குசத்தைக்கொள்ளும்**

அம் குசத்தைக் கொள்ளும் - *அழகிய கொங்கை யமையப் பெறும்.*

அங்குசத்தைக் கொள்ளும் - *தோட்டி என்னும் கருவியைக் கொள்ளும்.*

அம் குசத்தைக் கொள்ளும் - *அழகிய தருப்பையைக் கொள்ளும்.*

அங்கு சத்தைக் கொள்ளும் - *அவ்விடத்தில் மெய்ப்பொருளைக் கொள்ளும்.*

**அங்குசப்பையல்**

அம் குசப்பையல்-*அழகிய குயச் சாதிச் சிறுவன்.*

அங்குசப் பையல் - *யானைத் தோட்டியை உடைய ஆண் மகன்.*

**அங்குசம்**

அம் குசம் - *அழகிய தனம்*

அங்குசம் - *யானைத் தோட்டி.*

**அங்குமரியினடியிணையாம்**

அங்கும் அரியின் அடி இணையாம் - *அவ்விடத்திலும் திருமாலின் இரண்டு திருவடிகளாம்.*

அம் குமரியின் அடியிணையாம் - *அழகிய குமரிப்பெண்ணின் இரண்டு கால்களாம்.*

**அங்குரங்கண்மேவும்**

அங்குரங்கள் மேவும்-*முளைகளை அடையும்.*

அங்கு உரங்கள் மேவும் - *அவ்விடத்தில் வலிமைகளைப் பொருந்தும்*

அம் குரங்கள் மேவும் - *அழகிய குளம்புகளைப் பெற்றிருக்கும்.*

**அங்குவலையமிசைப்பொலிவுற்று**

அங்கு வலையம் இசை பொலிவு உற்று - *அவ்விடத்தில் தோள் வளையல் அணியப்பெற்று.*

அம் குவலையம் மிசை பொலிவு உற்று *அழகிய நிலத்தின்கண் சிறப்புப்பெற்று*

**அங்குவட்டிநண்ணும்**

அங்கு வட்டி நண்ணும் - *அவ்விடத்தில் வட்டியைப் பொருந்தும்.*

அம் குவட்டில் நண்ணும் - *அழகிய மலையிற் பொருந்தும்.*

**அங்குளத்தில்**

அம் குளத்தில் - *அழகிய குளத்தில்.*

அங்கு உளத்தில் - *அங்கே மனதில்*

அம் குளத்தில் - *அழகிய நெற்றியில்.*

**அங்கேகயஞ்சேர்**

அங்கே கயம் சேர் - *அங்கே ஆழமாகப் பொருந்திய.*

அங்கே கயம்சேர் - *அவ்விடத்தில் யானை சேரப்பெறுகிற.*

அம் கேகயம் சேர் - *அழகிய மயில்கள் சேரப்பெறுகிற.*

அங்கே அயம் சேர் - *அவ்விடத்திற் குதிரைகள் சேரப்பெறுகிற.*

அங்கு ஏகு அயம் சேர் - *அவ்விடத்திற் செல்லும் குதிரைகள் சேரப்பெறுகிற.*

**அங்கேதனஞ்சேர்**

அங்கே தனம் சேர் - *அவ்விடத்தில் பொருள் சேரும்.*

அம் கேதனம் சேர் - *அழகிய கொடிகள் பொருந்தும்.*

**அங்கேயாழநிலையாமல்**

அங்கே ஆழம் நிலையாமல்-*அவ்விடத்தே நிலைப்பாக நிற்காமல்.*

அங்கே ஆழம் நிலையாமல் - *உள்ளிடத்தே ஆழத்தின் அளவு தெரியவொண்ணுமல்.*

**அங்கேழ்மருவும்**

அம் கேழ் மருவும் - *அழகிய நிறத்தைப் பொருந்தும்*

அங்கு ஏழ் மருவும் - *அவ்விடத்திலே ஏழு பொருந்தியிருக்கும்.*

**அங்கைவரைவெல்**

அங்கு ஐவரை வெல்-*அவ்விடத்திலே ஐம்புலன்களையும் வெல்லும்.*

அம் கை வரை வெல் - *அழகிய கையை உடைய மலைபோன்ற யானையை வெல்லும்.*

**அங்கொன்றைத்தாரார்**

அம் கொன்றை தாரார்-*அழகிய கொன்றை மாலையை அணிந்தவர்.*

அங்கு ஒன்றைத் தாரார்-*மறுமையில் வீடுபேற்றைக் கொடாதவர்.*

**அங்கோடுபற்றுதலால்**

அம் கோடு பற்றுதலால் *அழகிய சங்கைப் பிடித்தலால்.*

அங்கு ஓடு பற்றுதலால் - *அவ்விடத்தில் ஓட்டைப்பற்றியிருத்தலால்.*

**அங்கோலமெய்தலால்**

அம் கோலம் எய்தலால்-*சிறந்த அழகுகளை எய்துவதால்*

அங்கு ஓலம் எய்தலால் - *அங்கு ஒலியை அடைவதால்.*

**அச்சங்கடரும்**

அ சங்கு அடரும்-*அழகிய சங்குகள் நெருங்கும்.*

அச்சங்கள் தரும் - *அச்சத்தினை உண்டாக்குகின்ற.*

அச்சு அங்கு அடரும் - *அச்சானது அங்கு நெருங்கியுள்ள.*

**அச்சங்கவிக்கும்**

அச்சம் கவிக்கும் - *அச்சத்தினை விளைவிக்கும்.*

அ சங்கு அவிக்கும் - *அழகிய சங்கைக் கெடுக்கும்.*

**அச்சங்கரிக்கும்**

அ சங்கு அரிக்கும் - *அழகிய சங்குகளை அரித்தெடுக்கும்*

அ சங்கரிக்கும் - *அழகிய இறைவிக்கும்.*

அச்சம் கரிக்கும் – *அச்சத்தைப் போக்கும்.*

**அச்சங்குதிக்கும்**

அ சங்கு உதிக்கும் - *அழகிய சங்குகள் தோன்றும்.*

அச்சம் குதிக்கும் - *அச்சமானது விலகும்.*

**அச்சங்குமேவுதலால்**

அச்சு அங்கு மேவுதலால் - *அச்சானது அவ்விடத்திற் பொருந்துகையால்*

அ சங்கு மேவுதலால் - *அழகிய வளையல் பொருந்துவதால்*
அ சங்கு மேவுதலால் - *அழகிய சங்கு பொருந்தியிருப்பதால்.*

**அச்சத்துரு**

அச் சத்துரு - *அப் பகைவன்.*
அச்சத்து உரு - *அச்சத்தின் வடிவம்.*
அ சத்து உரு - *[illegible]ய சத்தின் வடிவம்.*

**அஞ்சக்கரங்காட்டி**

அஞ்ச கரம் காட்டி - *அஞ்சு மாறு கையைக் காட்டி.*
அஞ்சு அக்கரம் காட்டி - *ஐந்து எழுத்துக்களைக் காட்டி.*
அம் சக்கரம் காட்டி - *அழகிய உருளையைக் காண்பித்து.*

**அஞ்சக்கரத்தால்**

அஞ்ச கரத்தால் - *அஞ்சுமாறு கையினால்.*
அம் சக்கரத்தால் - *அழகிய உருளைப் படையினால்.*
அஞ்சு அக்கரத்தால்-*திருவைந் தெழுத்தினால்.*

**அஞ்சக்கரமோது**

அஞ்சக் கரம் மோது - *அஞ்சு மாறு கையினை மோதுகின்ற.*
அஞ்சு அக்கரம் ஓது - *ஐந் தெழுத்தைச் சொல்லுகிற*
அம் சக்கரம் மோது - *அழகிய சக்கரத்தினால் மோதுகிற.*

**அஞ்சக்கரவான்**

அம் சக்கரவான் - *அழகிய உருளைப்படையை உடைய திருமால்*
அஞ்சு அக்கரவான்-*ஐந்தெழுத் துக்களை உடைய சிவபெரு மான்*
அஞ்ச கரவான் - *அஞ்சுமாறு ஒளிக்கமாட்டான்.*

**அஞ்சக்கரன்**

அம் சக்கரன் - *அழகிய உருளைப் படையை உடையவன்.*
அஞ்சு அக்கரன் - *ஐந்தெழுத் துக்களை உடைய இறைவன்.*

**அஞ்சங்கரர்**

அம் சங்கரர் - *அழகிய சிவபெரு மான்.*
அஞ்சு அம் கரர்-*ஐந்து அழகிய கைகளை உடையவர்.*

**அஞ்சங்குலாவும்**

அஞ்சம் குலாவும் - *அன்னப் பறவைகள் விளங்கும்.*
அம் சங்கு உலாவும் - *அழகிய வளையல்கள் அசையும்.*

**அஞ்சசியோடேயும்**

அம் சசியோடு ஏயும் - *அழகிய திங்களோடு பொருந்தும்*
அம் சசியோடு ஏயும் - *அழகிய இந்திராணியோடு விளங்கும்.*
அஞ்சு அசியோடு ஏயும் - *அச்சத்தை யுண்டாக்குகிற வாளோடு பொருந்தும்*

**அஞ்சத்தகத்த**

அஞ்சு அத்த கத்த - *ஐந்து கைகளையுடைய தலைவனே!*
அம் சத்து அகத்த - *அழகிய மெய்ப்பொருளெல்லாம் உள்ளத்தனவாம்.*
அஞ்சத்து அகத்த - *அன்னப் பறவையில் வீற்றிருப்ப வனே!*

**அஞ்சத்தியங்கும்**

அஞ்ச தியங்கும் - *அஞ்சுமாறு மயங்கும்.*

அஞ்சத்து இயங்கும் - *அன்ன ஊர்தியிலே போக்கு வரவு செய்யும்.*

**அஞ்சத்திரமேவு**

அஞ்சு அத்திரம் மேவு - *ஐந்து கணைகளைப் பொருந்தும்.*

அம் சத்திரம் மேவு - *அழகிய குடையைக் கொள்ளும்.*

அம் சத்திரம் மேவு - *அழகிய அறச்சாலைக்குச் செல்லும்.*

அஞ்சத் திரம் மேவு - *(பகைவர்கள்) அஞ்ச வலிமை பொருந்திய*

**அஞ்சத்திருப்பான்**

அஞ்சத்து இருப்பான் - *அன்ன ஊர்தியில் இருக்கும் நான்முகன்.*

அஞ்ச திருப்பான் - *அஞ்சுமாறு திருப்பி விடாதவன்.*

**அஞ்சந்திகழார்**

அஞ்சம் திகழ் ஆர் - *அன்னமானது திகழ்ந்து பொருந்திய.*

அம் சந்து இகழார் - *அழகிய தூதினை இகழாதவர். அழகிய சந்தனத்தை இகழாதவர்.*

**அஞ்சமறியான்**

அஞ்சம் அறியான் - *(நான்முகனாகிய) அன்னப்பறவையால் அறியப்படாதவன்.*

அஞ்ச மறியான் - *அஞ்சும்படி இல்லையென்று மறுத்துக் கூறான்.*

**அஞ்சப்படுக்கும்**

அஞ்சம் படுக்கும் - *அன்னப் பறவைகள் படுத்திருக்கும்*

அஞ்சு அம்பு அடுக்கும்-*(மலர்க்) கணைகள் ஐந்து சேர்ந்திருக்கும்.*

**அஞ்சம்பினால்**

அஞ்சம் பினால் - *அன்னமானது பிறகே.*

அஞ்சு அம்பினால் - *ஐந்து கணைகளினால்.*

**அஞ்சம்புபெற்றவேள்**

அஞ்சு அம்பு பெற்றவேள்-*ஐந்து மலர்க் கணைகளையுடைய காமன்.*

அம் சம்பு பெற்ற வேள்-*அழகிய இறைவன் பெற்ற முருகக் கடவுள்.*

**அஞ்சலிகைக்காக்கும்**

அஞ்சலிகைக்கு ஆக்கும் - *வௌவாலுக்குக்கொடுக்கும்.*

அஞ்சலி கைக்கு ஆக்கும் - *கும்பிடுகையைக் கையினிடத்துச் செய்யும்.*

**அஞ்சனங்களாரும்**

அஞ்சனங்கள் ஆரும் - *மைகள் பொருந்தும்*

அம் சனங்கள் ஆரும் - *அழகிய மக்கள் விளங்கும்.*

**அஞ்சனத்தன்**

அஞ்சன் நத்தன்-*அன்னமேறும் நான்முகனுஞ் சங்கேந்துந் திருமாலும்.*

அஞ்சனத்தன் - *மையை உடையவன், குற்றம் உடையவன்.*

**அஞ்சனநாட்டத்தன்**

அஞ்சன நாட்டத்து அல் - *மை தீட்டப்பெற்ற கண்களையுடைய இருள்போலும்.*

அம் சனம் நாட்டு அத்தன் - *அழகிய மனிதர்களை உயர் பதவியில் நாட்டுகிற தலைவன்.*

**அஞ்சாங்குலத்தவர்பார்ப்பாரைச்**

**அஞ்சாம் குலத்தவர் பார்ப் பாரைச் சேர்ந்தது** - *பஞ்சம குலத்தினர் அந்தணர்களைச் சேர்ந்தது.*

**அஞ்சாம் குலத்தவர் பார்ப் பாரைச் சேர்ந்தது**-*ஐந்தாகிய மாறுபாடுடைய கை கண் களைச் சேர்ந்தது.*

**அஞ்சாதகங்காட்டி**

**அம் சாதகம் காட்டி** - *அழகிய பிறந்த நாட்குறிப்பைக் காணச்செய்து*

**அஞ்சாது அகம் காட்டி** *அஞ்சாமல் தீச்செயல்களைச் செய்து.*

**அஞ்சாமகானத்தான்**

**அஞ்சா மகான் நத்தான்** - *அஞ்சாத பெரியோன் சங்கேந்திய திருமால்.*

**அம் சாம கானத்தான்** -*அழகிய சாமவேத கீதத்தை உடையவன்*

**அஞ்சாமரைசேர்**

**அஞ்சா மரை சேர்** - *அஞ்சுதலில்லாத மான்கள் சேருகின்ற.*

**அம் சாமரை சேர்** - *அழகிய சாமரைகள் இரட்டுகிற.*

**அஞ்சாயகத்தார்**

**அஞ்சு ஆய் அகத்தார்** - *ஐந்தெழுத்துக்களையும் ஆராய்கிற உள்ளத்தில் எழுந்தருளியவர்.*

**அம் சாயகத்தார்** - *அழகிய அம்பை உடையவர்.*

**அஞ்சுகந்தரத்தேம்**

**அஞ்சுகம் தரத்தேம்** - *அஞ்சுகிறோம் மேன்மையை உடையேம்.*

**அஞ்சு கந்தரத்தேம்** - *ஐந்து கழுத்துக்களையுடையேம்.*

**அம் சுகம் தர தேம்** - *அழகிய நன்மையைக் கொடுக்க இனிமையாம்.*

**அஞ்சுகமார்**

**அம் சுகம் ஆர்** - *அழகிய கிளி பொருந்தப்பெற்ற.*

**அஞ்சு உகம் ஆர்** - *ஐந்து யுகமாக அமையப்பெற்ற.*

**அஞ்சுகம் ஆர்** - *ஐந்து தலைகள் பொருந்திய.*

**அஞ்சுமதியார்**

**அஞ்சும் மதியார்** - *அஞ்சுகிற திங்களை யணிந்தவர்.*

**அம் சுமதியார்** -*அழகான நல்ல அறிவினையுடையவர்.*

**அஞ்சுமுகமார்ந்திடலால்**

**அஞ்சு முகம் ஆர்ந்திடலால்** - *அஞ்சத்தக்க முகம் பொருந்துதலால்.*

**அஞ்சு முகம் ஆர்ந்திடலால்** - *ஐந்து முகங்கள் பொருநதுதலினால்.*

**அம் சுமுகம் ஆர்ந்திடலால்** - *அழகிய நல்ல முகம் பொருந்துதலால்.*

**அஞ்சுமுகன்**

**அஞ்சு முகன்** - *அஞ்சத்தக்க முகத்தையுடையவன்.*

**அஞ்சு முகன்**-*ஐந்து முகங்களை உடையவன்.*

**அம் சுமுகன்** - *அழகிய நல்ல முகம் உடையவன்.*

A

**அஞ்சுவர்க்கமண்டும்**

**அஞ்சு வர்க்கம் மண்டும்**-*ஐந்து வகையாகப் பகுக்கப்படு தலைப் பொருந்தும்.*

**அம் சுவர்க்கம் அண்டும்** - *அழகிய விண்ணுலகத்தைப் பொருந்தும்.*

**அடரும்பகடுகோடுடைத்தும்**

**அடரும் பகடு கோடு உடைத்தும்** - *மேல் வந்த யானையின் கொம்பை முறித்தும்.*

**அடரும் பகடு கோடு உடைத்தும்** - *நெருங்குகிற எருமைக் கடாக்கள் சங்குகளைக்காலால் மிதித்துடைத்தும்.*

**அடிச்சுவடுவேய்ந்தார்**

**அடிச்சு வடு ஏய்ந்தார்**-*(பாண்டியன்) அடிக்கத் தழும்பைப் பொருந்தினர்.*

**அடிச் சுவடு வேய்ந்தார்** - *அடிச் சுவட்டை அணிந்தார்*

**அடுக்குமாலைப்புறத்தேந்தி**

**அடுக்கும் மாலை புறத்து ஏந்தி** - *தன்னைச் சேர்ந்த திருமாலைத் தன் உடலிற் சுமந்து.*

**அடுக்குமாலை புறத்து ஏந்தி** - *திரளுடைய முகில்களைத் தன்னிடமெங்குஞ் சேரப் பெற்று*

**அடுக்குமேட்டைவிலக்கலினல்**

**அடுக்கும் ஏட்டை விலக்கலினல்** - *அடுக்காக வைத்திருக்கும் நூல் ஏடுகளைப் புரட்டுவதால்.*

**அடுக்கும் ஏட்டை விலக்கலினல்** - *அடுத்தடுத்து வந்து மூடுகிற கண்ணிமைகளை விழித்தபடி யிருந்து தடுத்தலால்.*

**அடுக்கும் மேட்டை விலக்கலினல்** - *அடுத்துள்ள மேட்டு நிலத்தை விட்டுத் தனியாக இருத்தலினல்.*

**அடுத்தவரிசைபெற்று**

**அடுத்த வரிசை பெற்று** - *பொருந்திய மேன்மையடைந்து.*

**அடுத்தவர் இசை பெற்று** *சென்றவர் சிறப்பெய்தி.*

**அடுத்தவாய்மைகடவாமல்**

**அடுத்த வாய்மை கடவாமல்** - *சார்ந்த உண்மை தவருமல்.*

**அடுத்தவாய் மைகள் தவாமல்** - *சார்ந்த தான முகில்கள் நீங்காதனவாய்*

**க**

**அடுத்தார் அச்சம ஒதுங்க** - *சார்ந்தவர்களின் அச்சமெல்லாம் நீங்கியோட.*

**அடுத்து ஆர் அச்சங்கு அலைந்து ஒதுங்க** - *பக்கத்தில் நிறைந்துள்ள அந்தச் சங்குகள் பிரிந்து கரை சேர.*

**அடைக்கலந்தாய்**

**அடை கலந்தாய்** - *ஆலிலையிற் பள்ளிகொண்டாய்.*

**அடைக்கலம் தாய்** - *தாயைப் போன்றவனே அடைக்கலம்.*

**அடைக்கலம் தாய்** - *அடைக்காமல் விட்டோம் தாயே.*

**அடையப்பன்னகம்**

**அடைய பல் நாகம்** - *பல யானைகள் சேர.*

**அடை அப்பு அநாகம்** - *அடுத்தலையுடையநீர் அந்த மலையின் மீது.*

**அணங்காயநங்கை**

**அணங்கு ஆயம் நங்கை** - *துன்பத்தைச் செய்கிற மகளிர் கூட்டத்துள் அகப்பட்டுக் கொண்ட பெண்.*

**அணங்கு ஆய நங்கை** - *வருத்துவதாகிய பழிச்சொல்.*

**அணங்காறுதலையுள்ளார்**

**அணங்கு ஆறுதலை உள்ளார்** - *தெய்வத்தன்மை பொருந்திய கங்கையாற்றைத் தலையிலே கொண்டவர்.*

**அணங்கு ஆறுதலையுள்ளார்** - *தெய்வத்தன்மை பொருந்திய ஆறு தலைகளை யுடையவர் (முருகக்கடவுள்.)*

**அணங்கு ஆறுதலை உள்ளார்** - *வருத்தம் தணிதலை எண்ண மாட்டார்.*

**அணங்குமையத்தன்**

**அணங்கு உமை அத்தன்** - *அழகிய உமையை இடப்பாகத்தில் வைத்தவன்.*

**அணங்கும் ஐ அத்தன்** - *அழகிய ஐந்து கைகளை உடையவன்.*

**அணிகழற்சியுறவாடவல்லேன்**

**அணி கழற்சி உற ஆடவல்லேன்** - *அழகான விளையாடலை நன்றாக அறிந்துள்ளேன்.*

**அணி கழற்சி உற ஆடவல்லேன்** - *அணிகலன்கள் கழலுமாறு நன்கு புணர வல்லேன்.*

**அணிகாப்புடைத்தாகியதிறத்தால்**

**அணி காப்பு உடைத்து ஆகிய திறத்தால்** - *நெருங்கிப் பாதுகாப்புடைய தன்மையினுல்.*

**அணி கா புடைத்து ஆகிய திறத்தால்** - *அழகிய சோலைகளைப் பக்கத்தில் கொண்டிருப்பதால்.*

**அணிபணிவார்மொய்**
**கும்பகருணன்**

**அணி பணிவு ஆர்மொய் கும்ப கருணன்** - *அழகாகிய வணக்கம் பொருந்திய வலிமையுள்ள கும்பகருணன்.*

**அணி பணிவார் மொய் கும்ப கருணன்** - *அழகாகிய அணிகலன் அணிந்து வாரினுல் அழகு செய்யப்பட்ட குடம் போன்ற கொங்கை.*

**அணிபாவனந்தந்துறைதரலால்**

**அணிபா அனந்தம் துறைதரலால்** - *அழகுள்ள பாடல்கள் பலவற்றின் துறைகளை விளக்குவதால்.*

**அணிபா வனம் தந்து உறைதரலால்** - *ஓர் நிலையிற் கூடித் தியானத்தைக்கொண்டுநிலைத்திருப்பதால்.*

**அணிபாவல் நந்து அந்து உறைதரலால்** - *அழகிய விரிந்துள்ள நத்தைகளும் நெல்லந்துகளும் தங்கிக் கிடத்தலால்.*

**அணிமுத்திவரும்**

**அணி முத்திவரும்** - *அழகிய வீடுபேறு கிடைக்கும்.*

**அணி முத்து இவரும்** - *நல்ல முத்துக்கள் மிகுதியாகத் தோன்றும்.*

**அண்டங்காக்கை**

**அண்டம் காக்கை** - *உலகத்தைக் காத்தல்.*

**அண்டங் காக்கை** - *காக்கையில் ஒருவகை.*

**அண்டசங்கள்வைகும்**

**அண்டு அசங்கள் வைகும்** - *நெருங்கிய ஆடுகள் தங்கும்.*

**அண்டசங்கள் வைகும்** - *பறவைகள் வந்து தங்கும்.*

**அண்டத்தினையாதரித்து**

**அண்டத்தினை ஆதரித்து** - *உலகங்களைப் பாதுகாத்து.*

**அண்டு அத்தினை ஆதரித்து** - *நெருங்கிய அந்தத் தினைப் புனத்தைப் போற்றி.*

**அண்டத்துதிக்கும்**

**அண்ட துதிக்கும்** - *நெருக்கமாகப் போற்றும்.*

**அண்டத்து உதிக்கும்** - *முட்டையில் தோன்றும்.*

**அண்டமடங்கலையும்**

**அண்டம் அடங்கலையும்**-*உலகங்கள் எல்லாவற்றையும்.*

**அண்ட மடங்கலையும்**-*நெருங்கு மாறு சிங்கத்தையும்.*

**அண்டர்மதிக்கும்**

**அண்டர் மதிக்கும்** - *தேவர்கள் போற்றும்.*

**அண்டர் மதிக்கும்** - *இடையர்கள் கடையும்.*

**அண்டினரைக்காய்ந்திடலால்**

**அண்டினரைக் காய்ந்திடலால்** *நெருங்கினவர்களைச் சுடுவதால்.*

**அண்டினரைக் காய்ந்திடலால்** - *நெருங்கியவர்களிடஞ் சினங் கொள்ளுவதால்.*

**அண்டுறக்கம்விட்ட**

**அண்டு உறக்கம் விட்ட** - *அடைந்த தூக்கத்தினைப் போக்கிய.*

**அண் துறக்கம் விட்ட** - *பொருந்திய சுவர்க்கத்தினை நீங்கிய.*

**அதிகவலையுமறைந்தோட**

**அதி கவலையும் மறைந்துஓட** - *மிகுந்த வருத்தமும் ஒடுங்கியோட்டம் பிடிக்க.*

**அதிக அலையும் அறைந்துஓட** - *மிகுந்த அலைகளும் இரைச்ச லிட்டுச் செல்ல.*

**அதிசயனத்தன்**

**அதிசயன் அத்தன்** - *வியப்பினையுடைய தலைவன்.*

**அதி சயனத்தன்** - *சிறந்த படுக்கையை உடையவன்.*

**அதிரசமுந்தோசை**

**அதிரசமும் தோசை** - *அதிரசமுந் தோசையும்.*

**அதிரசம் முந்து ஓசை** - *அதிகச் சுவை முதிர்ந்த கண்டத்தி லுள்ள ஓசை.*

**அத்தத்தாரானர்**

**அத்தத்தார் ஆனர்** - *கையில் உடையவராயினர்.*

**அத்தத்தார் ஆனர்** - *பாதியில் உடையவராக ஆனவர்.*

**அத்தத்தார் ஆனர்** - *பொருளுடையவரானர்.*

**அத்தந்திமேவும்**

**அம்தந்தி மேவும்** - *அழகிய யானைகளில் ஏறும்.*

**அ தந்தி மேவும்** - *(வீணைகளும்) அழகிய நரம்பைப் பொருந்தும்.*

**அத்தந்திகழும்**

**அத்தம் திகழும்** - *அத்த விண்மீனைச் சேர்ந்து நிற்கும்.*

**அத்தம் திகழும்** - *பொருள் வளத்தால் விளங்கும்.*

அ தந்து இகழும் - *மெல்லிய பஞ்சு நூலையும் பழிக்கும்*

**அத்தமனமோரும்**

அத்தமனம் ஓரும் - *கதிரவன் மறைதலை அறியும்*

அத்தம் மனம் ஓரும் - *பொருள் நூற் கருத்துக்களை மனதில் உணரும்*

**அத்தருவந்தாடும்**

அத்தர் உவந்து ஆடும் - *தலைவனுகிய சிவபெருமான் மகிழ்ந்து கூத்தாடும்.*

அத் தரு வந்து ஆடும் - *அந்தக் கற்பகதரு வந்து அசையும்.*

**அத்தவளைசிந்த**

அத்த வளைசிந்த - *கைவளையல்கள் கழன்று விழ.*

அம்தவளை சிந்த - *நீர்த்தவளைகள் சிதறியோட*

**அத்தவெற்பாதவர்**

அத்த வெற்பா தவர் - *பொன் மலையோ வில்.*

அத்தவெற்பு ஆதவர் - *கதிரவன் மறையும் மலையை அடைந்த கதிரவர்.*

**அத்தனைவேதனை**

அத்தனை வேதனை - *இறைவனை நான்முகனை*

அத்தனை வேதனை - *அவ்வளவு துன்பம்.*

**அத்திகிரியத்தர்**

அ திகிரி அத்தர் - *அழகிய உருளைப் படையைத் தாங்கிய தலைவர்.*

அத்திகிரி அத்தர் - *அத்திகிரி (யானைமலை) என்னும் பதிக்கு உரியவர்.*

**அத்திக்கடுக்கும்**

அத்திக்கு அடுக்கும் - *யானையைப்போன்று விளங்கும்.*

அத் திக்கு அடுக்கும் - *அத் திக்கைப் பார்த்துப் பொருந்தும்.*

**அத்தியாயஞ்சேர்**

அத்தி ஆயம் சேர் - *யானையின் கூட்டம் சேருகிற.*

அத்தியாயம் சேர் - *நூற்பிரிவுகள் அமைகிற.*

**அத்தியிலம்புயம்வாய்த்தது**

அத்தியில் அம்புயம் வாய்த்தது- *கடலில் தாமரை மலர்ந்தது.*

அத்தியில் அம்புயம் வாய்த்தது- *அத்தி மரத்தில் தாமரை மலர் பூத்தது.*

அத்தியில் அம்புயம் வாய்த்தது- *கடலைப்போன்ற கண்ணில் தாமரை மலர் போன்ற கைகள் பொருந்தின.*

**அத்தியும்வம்பும்உடையீர்**

அத்தியும் வம்பும் உடையீர் - *யானையும் (தனமும்) கச்சும் உடையவராக விருக்கிறீர்.*

அத்தியும் வம்பும் உடையீர் - *கொலையையும் வீண் காரியங்களையும் உடையவராக விருக்கிறீர்.*

**அத்திரமேவும்**

அத் திரம் மேவும் - *அந்த உறுதியான தன்மையைப் பொருந்தும்.*

அத்திரம் மேவும் - *கணையைப் போல் விளங்கும்.*

**அத்திரியாவரன்**

அத்து இரியா அரன் - *செந்நிறங் கெடாத சிவன்.*

அ திரியா வரன் - *அந்தக் கெடாத மேன்மை.*

**அநந்தப்பணியான்**

அநந்தப் பணியான் - *ஆதிசேட ஞகிய பாம்பையுடையவன்.*

அநந்தப் பணியான் - *பல அணி கலன்களை உடையவன்.*

**அந்தகரை**

அம் தகரை - *அழகிய ஆட்டை.*

அந்தகரை - *குருடர்களை.*

அந்தகரை - *மறலியை.*

**அந்தக்கும்பமுகந்து**

அந்த கும்பு.அம்முகந்து-*அந்தக் கடலின் மிகுந்த நீரை முகந்து.*

அந்த கும்பம் உகந்து - *அழகுள்ள மத்தகம் உடையதாகி.*

**அந்தத்தலைவரை**

அந்தம் தலைவரை - *அழகிய முதல்வரை.*

அம் தத்து அலைவரை - *அழகாகத் தாவுகிற அலையினிடத்து.*

**அந்தத்தையில்**

அந்தத்து அயில் - *இறுதியிலே உண்.*

அம் தத்தையில் - *அழகிய கிளியைப் போல்.*

அந்தத்தை இல் - *முடிவையில்லாத.*

அந்தத் தையில் - *அத் தைத் திங்களில்.*

**அந்தரங்கஞ்சூழும்**

அம் தரங்கம் சூழும் *அழகிய* ...*கள் சுற்றும்.*

அந்தரங்கம் சூழும் - *மறைமுகமாகப் பொருந்தும்.*

**அந்தரங்கத்தலம்**

அம் தரங்கத் தலம் - *அழகிய அலை வீசப் பெறுமிடமாகிய திருச்செந்தூர்.*

அந்தர் அங்கத்து அலம் - *சூக்கும உடலின் துன்பம்.*

அந்தரங்கத் தலம்-*மறைவிடம்.*

**அந்தரங்கத்தார்**

அந்த ரங்கத்தார் - *அந்தச் சீரங்கத்தை யுடையவர்.*

அந்தரங்கத்தார் - *மறைவினை யுடையவர்.*

**அந்தரங்கத்தானனத்தான்**

அந்த ரங்கத்து ஆனனத்தான் - *அழகிய நடனசாலையாகிய முகத்தையுடையான்.*

அம் தரங்க தான நத்தான் - *அழகிய கடலை இருப்பிடமாகவுடைய சங்கேந்திய திருமால்.*

அந்தரங்கத்தான் நனத்தான் - *அந்தரங்கத்தில் உள்ளவர், எங்கும் பொருந்தியவர்.*

**அந்தரங்கமாயனையே**

அந்த ரங்க மாயனையே - *அந்த அரங்கநாதனாகிய திருமாலையே.*

அந்தரங்கமாய் அனையே - *மறைமுகமாகத் தாயே.*

**அந்தரங்கமோதும்**

அந்தரங்கம் ஓதும் - *மறைமுகமாக உரைக்கும்.*

அம் தரங்கம் மோதும் - *அழகிய அலைகள் மோதப்பெறும்*

**அந்தரங்கமோதுவார்**

அம் தரங்கம் மோதுவார் - *அழகிய அலைகள் மோதும் நீண்ட.*

அந்தரங்கம் ஓதுவார் - *மறைப் பொருளைச் சொல்லுவார்.*

**அந்தவரைப்பூட்டும்**

அம் தவரைப் பூட்டும் - *அழகிய வில்லை நாணேற்றும்.*

அந்த அரைப்பு ஊட்டும் - *அந்த அரைவையைக் கொடுக்கும்.*

**அந்தவளநாறும்**

அம் தவளம் நாறும் - *அழகிய கர்ப்பூர மணம் வீசும்.*

அந்த வளம் நாறும் - *அழகின் சிறப்பு விளங்கும்.*

**அந்தவளைபற்றுதலால்**

அந்த வளை பற்றுதலால்-*அழகிய வளையலை அணிவதால்.*

அம் தவளை பற்றுதலால்-*அழகிய தவளையைப் பிடிப்பதால்.*

**அந்தவாரணத்தந்தம்**

அந்த ஆரணத்து அந்தம்-*அந்த மறையின் முடிவு.*

அந்த வாரணத் தந்தம்-*அழகிய யானையின் கோடு.*

**அந்தனமாவினை**

அந்த நம் மாவினை - *அந்த நம் முடைய நல்வினை.*

அம் தனம் ஆவி நை - *அழகிய பொருளின் பொருட்டு உயிர் வருந்துதல்.*

**அந்தாதிகாணும்**

அம் தாதி காணும் - *அழகிய தாதிப் பெண்கள் காணப் பெறும்.*

அந்தாதி காணும் - *அந்தாதி என்னும் நூலினை இயற்றும்.*

**அந்தாதியோதி**

அந்தாதி ஓதி-*அந்தாதி என்னும் நூலைப் படித்து.*

அம் தாது இ ஓதி - *அழகிய மகரந்தத்தோடு கூடிய இந்தக் கூந்தலை.*

**யாகத்தன்**

அந்தி ஆகத்தன் - *அந்தி நேரத்தைப் போன்ற செம்மேனியை உடையவன்.*

அம் தியாகத்தன் - *அழகிய கொடையை உடையவன்.*

**யா**

அபராதம் தந்தனையோ-*தண்டப் பணம் கொடுத்தாயோ?*

அபரம் ஆதம் தந்தனையோ - *முதுகுப் பக்கத்திலுள்ள கூந்தற் பனையை (கூந்தலை)க் கொடுத்தனையோ?*

**அப்பஞ்சமைக்கும்**

அப்பம் சமைக்கும் - *அப்பம் என்னுஞ் சிற்றுண்டியைச் செய்யும்.*

அ பஞ்சு அமைக்கும் - *அழகிய பஞ்சைச் சேர்க்கும்.*

**அப்பணிலஞ்சேரும்**

அப்பு அண் நிலம் சேரும் - *நீர் வளம் பொருந்திய நன்செய் கள் சேரும்.*

அப்பு அணிலம் சேரும் - *பற்றுகின்ற அணில்கள் பொருந் தும்.*

அ பணிலம் சேரும் - *அழகிய சங்குகள் சேரும்.*

அ பண் இல் அம் சேரும்-*இசையில் அழகு பொருந்தும்.*

**அப்பனகனுரியன்**

அப்பு அனகன் ஆரியன் - *(கண்ணைச்) சாத்திய கடவுளாற் பூசித்தற்குரியர்.*

அப்பன் நக நாரியன் - *தந்தை, மலைமகளாகிய உமாதேவியை உடையவர்.*

அப்ப(ன்)னக நாரியன் - *அந்தப் பாம்பு நாணியை உடையவர்.*

**அப்பால்வாசித்திடமிகலால்**

அப்பால் வாசித்திட மிகலால் - *பிறகு படிப்பதற்கு முந்துவதால்.*

அப்பால் வாசி திடம் மிகலால் - *உயர்ந்த மேற்பகுதிக்கு மூக்கின் உயிர்க்காற்றை இழுக்கும்வலிமை மிகுதலால்.*

அப்பால் வாசி திடம் இகலால்- *நீரினால் மிக்க வன்மை குறைதலால்.*

**அப்பாற்கஞ்சனடுவாளை**

அப்பால் கஞ்சன் அடு *பிறகு கஞ்சனுடைய போர் வீரர்களை.*

அப்பால் கஞ்சன் அடு வாளை - *நீரினால் வளர்ந்த தாமரையை துள்ளிக் கிழிக்கிற வாளை மீன்களை.*

**அப்பானலங்காட்டு**

அ பானல் அம் காட்டு-*அழகிய கருங்குவளையின் அழகைக் காட்டுகிற.*

அ பால் நலம் காட்டு - *அந்தப் பாலின் இனிமையைக் காட்டுகிற.*

அப்பால் நலம் காட்டு - *பிறகு நன்மையைக் காட்டுகிற.*

**அப்புநிதம்நீங்கா**

அப் புநிதம் நீங்கா - *அந்தத் தூய்மைத் தன்மை கெடாத.*

அப்பு நிதம் நீங்கா - *நீர் எந்நாளும் குறையாத.*

**அப்புற்றிருந்து**

அ புற்று இருந்து - *அழகிய புற்றுக்களில் இருந்து.*

அப்பு உற்று இருந்து - *நீரைப் பொருந்தியிருந்து.*

**அமரவரம்பையில்**

அமர அரம் பையில் - *பொருந்து மாறு அரத்தால் அராவப் பெற்ற.*

அமர அரம்பையில் - *தேவலோகத்து அரம்பைப் பெண்களைப் போல்.*

**அமரவாயங்காக்குதலால்**

அமர் அவாய் அங்காக்குதலால் - *போரை விரும்பி வாயைத் திறப்பதால்.*

அமர ஆயம் காக்குதலால் - *போர்க்களப் படைத்திரளைக் காப்பதால்.*

**அமருங்காசினிதாங்கும்**

அம்அரும் காசினி தாங்கும் - *அழகிய அரிய மண்ணுலகைச் சுமக்கும்.*

அ மருங்கு ஆசினி தாங்கும் - *அப் பக்கங்களில் ஈரப் பலா மரங்களைத் தாங்கும்*

**அமர்வண்டரைநின்றடக்குதலால்**

அமர்வண் தரைநின்று அடக்குதலால் - *பொருந்திய வளமிக்க உலகைத் தன்னுட் கொண்டிருத்தலால்.*

அமர் வண்டரை நின்று அடக்குதலால் - *போர் செய்கின்ற வீரர்களை எதிர்த்து மடக்குதலால்*

**அமர்வாயிருந்து**

அமர்வாய் இருந்து - *போரினிடத்திலே இருந்து.*

அமர்வாய் இருந்து - *அமரிக்கையா யிருந்து.*

**அமுதகடேசர்**

அமுதகடேசர் - *திருக்கடவூரில் எழுந்தருளிய சிவபெருமான்.*
அமுதகட ஈசர் - *அமுதம் நிறைந்த குடத்தை வைத்திருப்பவராகிய (பெண்கள்.)*

**அமுதுகடைந்தேன்**

அமுது கடைந்தேன் - *அமுதத்தைக் கடைந்தேன்*
அ முதுகு அடைந்தேன் - *அழகிய முதுகைக் கண்டேன்.*

**அமுதுகைதந்தீர்**

அமுதுகை தந்தீர் - *அமுதைக் கையிற் கொடுத்தீர்.*
அம்முதுகை தந்தீர் - *அழகிய முதுகைக் காட்டினீர்.*

**அமைச்சர்**

அமைச்சர் - *அமைச்சர்கள் (மந்திரிகள்.)*
அ மைச்சர் - *அழகிய மினின் தன்மையை உடையவர் (மச்சர்—மைச்சர்: போலி)*

**அமையத்தோசைதந்து**

அமையதோசை தந்து - *நல்ல தோசை யென்னுஞ் சிற்றுண்டி கொடுத்து*
அமையத்து ஓசை தந்து - *அந்நேரத்திலே இடி இடித்து முழங்கி.*

**அம்பகழிசேரும்**

அம்பு அகழிசேரும் - *நீர்நிறைந்த அகழி பொருந்தும்.*
அம் பகழி சேரும் - *அழகிய கணைகள் சேரும்.*

**அம்பஞ்சார்**

அம் பஞ்சு ஆர் - *அழகிய செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப் பெற்ற.*
அம்பு அஞ்சு ஆா - *காமனுடைய ஐங்கணைகள் பொருந்தப் பெற்ற.*

**அம்பஞ்சிரிக்கும்**

அம்பு அஞ்சு இரிக்கும் - *கணைகள் ஐந்தைக் கெடுக்கும்*
அம் பஞ்சு இரிக்கும் - *அழகிய பஞ்சை விலக்கும்.*

**அம்பஞ்சுமேவுதலால்**

அம் பஞ்சு மேவுதலால் - *அழகிய பஞ்சு பொருந்துவதால்.*
அம்பு அஞ்சு மேவுதலால் - *கணைகள் ஐந்து பொருந்துவதால்.*

**அம்பட்டர்**

அம்பு அட்டர் - *அம்பையழித்து வென்றவராகிய கண்கள்.*
அம்பட்டர் - *மயிர் வினைஞர்.*
அம் பட்டர் - *அழகிய பட்டத்தை யுடையவர்கள்*

**அம்பணைவாய்மேவும்**

அம் பணைவாய் மேவும் - *அழகிய வயலினிடத்திலே பொருந்தும்.*
அம்பணை வாய் மேவும் - *அழகிய மூங்கிலிற் கணுக்கள் பொருந்தும்.*

**அம்பதிகநேரும்**

அம்பு அதிகம் நேரும் - *கணைகளை மிகுதியாகப் பெற்றிருக்கும்.*
அம் பதிகம் நேரும் - *அழகிய நீர்ப்பாசியை ஒத்திருக்கும்.*

**அம்பரங்காவணம்**

அம்பு அரங்கா வணம் - *காமன் அம்பு மனதைக் கலக்காத படி.*
அம்பரம் கா வணம் - *ஆடையைக் காத்த அழகு.*

**அம்பரத்தைநாடுதலால்**

அம்பரத்தை நாடுதலால்-*ஆடையைத் தேடுவதால்.*
அம் பரத்தை நாடுதலால்-*விண்ணிடத்தை அடைதலால்.*
அம் பரத்தை நாடுதலால்-*அழகிய பரம்பொருளை எண்ணுவதால்.*
அம் பரத்தை நாடுதலால் - *அழகிய விலைமகளை விரும்புவதால்.*

**அம்பரமழுங்கும்**

அம்பரம் அழுங்கும் - *விண்ணிடமானது வருந்தும்.*
அம்பு அரம் அழுங்கும்-*அம்பும் அரமும் தோற்று வருந்தும்*

**அம்பரமேனாடும்**

அம் பரம் மேல்நாடும் - *அழகிய பரலோகத்தின்மேல் விருப்பத்தைச் செலுத்தும்.*
அம்பரம் மேல் நாடும் - *கொடி மேலே விளங்கும்.*
அம்பரம் மேல்நாடும் - *விண்ணுலகத்தின்மேற் செல்லும்.*

**அம்பரவனூன்**

அம்பரவன்; ஆனூன்-*ஆடையை உடையவன்; இடபவூர்தியை உடையவன்.*
அம் பரவன் ஆனூன் - *அழகிய வலைஞனைன்.*

**அம்பரவை**

அம்பு அரவு ஐ - *கங்கையும் பாம்பும் அழகு.*
அம் பரவை - *அழகிய கடல்.*
அம்பர் அவை - *அவ்விடத்திய அவை.*
அம்பர வை - *பொரான வைக் கோல்.*

**அம்பரவைமானும்**

அம்பு அரவை மானும்-*அம்பையும் அரவையும் போன்றிருக்கும்.*
அம்பரவை மானும் - *அழகிய கடலைப்போல் விளங்கும்.*
அம்பர் அவை மானும் - *அவ்விடத்தில் உள்ள அவையை ஒக்கும்.*

**அம்பரியங்கஞ்சார்**

அம் பரியங்கம் சார் - *அழகிய கட்டிலைச் சேரும்.*
அம்பரி அங்கம்சார் - *அழகிய குதிரையின் உடலைச் சாருகின்ற.*

**அம்பலங்கள்காணும்**

அம்பலங்கள் காணும் - *அழகிய கனிகள் காணப்பெறும்.*
அம்பலங்கள் காணும் - *மன்றங்கள் விளங்கும்.*

**அம்பலமலா**

அம்பல் அமலா - *பழிப்புரை நெருங்காத.*
அம்பலம் அலா - *அம்பலம் அல்லாத.*

**அம்பலம்வந்தாட**

அம்பலம் வந்து ஆட - *நீரலைகள் வலிமையுடன் வந்து துள்ள.*

அம்பலம் வந்துஆட - *அவைகளில் வந்து ஆடுதலைச் செய்ய.*

**அம்பலவா**

அம்பல்அவா - *பழிச்சொல்லில் விருப்பம்.*
அம்பலவா - *அம்பலத்தையுடையவனே.*
அம்பு அலவா - *கணை அல்லவா?*
அம் பலவா - *அழகு பலவாறு?*

**அம்பலவாவம்பலவா**

அம்பலவா அம்பலவா - *கூத்தப்பிரானே கூத்தப்பிரானே.*
அம்பல்அவா வம்பு அலவா - *பழிச்சொல்லை விரும்புதல் வம்பு அன்றோ.*

**அம்பவளவாயினன்**

அம் பவளம் வாயினன் - *அழகிய பவளம்போன்ற வாயினை யுடையவன்.*
அம்பு அ அளவு ஆயினன்-*தண்ணீரின் அளவாக வளர்ந்தருளியவன்.*

**அம்பாரிமேவும்**

அம்பாரி மேவும் - *அழகிய மழை விலை அடையும்*
அம்பாரி மேவும் - *அம்பாரி என்னும் இருக்கையைத் தாங்கும்.*

**அம்பார்ப்புமேவும்**

அம் பார்ப்பு மேவும் - *அழகிய பறவைக் குஞ்சுகள் பொருந்தும்.*
அம்பு ஆர்ப்பு மேவும் - *நீரின் ஆரவாரம் பொருந்தும்.*

**அம்பிறைக்கும்**

அம் பிறைக்கும் - *அழகிய பிறைத் திங்களுக்கும்*
அம்பு இறைக்கும் - *மலர்க்கணைகளைத் தூவும் காமனுக்கும்.*
அம்பு இறைக்கும் - *(கண்ணுல்) தண்ணீரைச் சிந்தும்*

**அம்பினலைவாரும்**

அம்பின் அலைவு ஆரும் - *நீரின் அலை பொருந்தும்*
அம்பினலை வாரும் - *அழகிய பின்னலைச் சீவும்.*

**அம் புகையிற்சாரங்கமானதனு வெடுத்து**

அம்பு கையில் சாரங்கம் ஆன தனு எடுத்து - *அம்பையும் கையில் சாரங்கம் என்னும் வில்லையும் எடுத்து.*
அம் புகையில் சார் அங்கமான தனு எடுத்து - *அழகிய புகையில் பொருந்திய உறுப்பான உடலை எடுத்து.*

**அம்புதரங்கமே**

அம்புதர் அங்கமே - *நான்முகனது எலும்புகளே.*
அம்பு தரங்கமே - *நீரின் அலைகளே.*

**அம்புயத்தலார்க்கும**

அம்புயத்தில் ஆர்க்கும்-*அழகிய தோளில் அணியும்.*
அம்புயத்தில் ஆர்க்கும் - *தாமரையில் ஆரவாரிக்கும்.*

**அம்புயத்துமின்னும்**

அம்புயத்து மின்னும் - *தாமரையினிடத்திலே விளங்கும்.*
அம் புயத்து மின்னும் - *அழகிய தோளினிடத்திலே விளங்கும்.*

**அம்புயந்தழுவி**

அம்புயம் தழுவி - *அழகிய தோளைச் சேர்ந்து.*

அம்புயம் தழுவி - *தாமரையைப் பொருந்தி.*

**அம்புருவங்காட்டும்**

அம் புருவம் காட்டும் - *அழகிய புருவத்தைக் காண்பிக்கும்.*

அம்புஉரு அங்கு ஆட்டும் - *அம்பினது அழகை அவ்விடத்திலே வருத்தும்.*

**அம்புருவநோக்கினன்**

அம்புருவம் நோக்கினன் - *அழகிய புருவத்தையுங் கண்ணையும் உடையவன்.*

அம்பு உருவ நோக்கினன் - *அம்பானது ஊடுருவிச் செல்லப் பார்த்தவன்.*

**அம்புலியைநாடும்**

அம்புலியை நாடும் - *திங்களை அளாவும்.*

அம் புலியை நாடும் - *அழகிய புலியைத் தேடித் திரியும்.*

**அம்புவியாளவரம்**

அம்புவி ஆள வரம் - *அழகிய உலகத்தை ஆள்வதற்கு வரத்தை.*

அம்பு வியாளம் வரம் - *கணையும் பாம்பும் மேன்மையுடையன.*

**அம்புவிலங்கை**

அம்புவில் அம்கை - *அம்பையும் வில்லையும் கொண்ட அழகிய கை.*

அம்புவி லங்கை - *அழகிய பூமியில் உள்ள இலங்கை.*

**அம்புளினமேவும்**

அம்புள் இனம் மேவும் - *அழகிய பறவைக் கூட்டங்கள் சேரும்.*

அம் புளினம் மேவும் - *அழகிய மணல்மேடுகள் திகழும்.*

அம்புஉள் இனம் மேவும் - *நீருக்குள் கூட்டமாகத் திரியும்.*

**அம்போருகக்கண்பொருந்தேன்**

அம்போருகம் கண் பொரும் தேன் - *தாமரை மலரிடத்துச் சேரும் வண்டு.*

அம் போருகக் கண் பொருந் தேன் - *தாமரை மலரைப் போன்ற கண் உறங்குதலைப் பெறமாட்டேன்.*

**அம்மஞ்சுவைக்கும்**

அம்மம் சுவைக்கும் - *கொங்கையைச் சுவைத்துப் பருகும்.*

அம் மஞ்சு வைக்கும் - *அழகிய முகில்களைத் தன்னிடத்தே கொண்டிருக்கும்.*

**அம்மணிகள்மேவும்**

அம் அணிகள் மேவும் - *அழகிய அணிகலன்களை அணியும்.*

அம் அணிகள் மேவும் - *சிறந்த படையணிகளைப் பொருந்தும்.*

அம் அணிகள் மேவும் - *அழகிய அலங்காரங்கள் அமையும்.*

அம் மணிகள் மேவும் - *அழகிய மணிகளைப் பெற்றிருக்கும்.*

**அம்மனையாடுதி**

அம்மனை ஆடுதி - *அம்மானை விளையாட்டைச் செய்.*

அம் மனை ஆடுதி - *அழகிய மனைவியின் விளையாடலைப் புரிதி.*

**அம்மனைகள்காணும்**

அம் மனைகள் காணும் - *அழகிய விடுகள் காணப்பெறும்.*

அம்மனைகள் காணும் - *அம் மானைக் காய்கள் காணப் பெறும்.*

**அம்மன்**

அம் மன் - *அழகிய அரசன்.*

அம் மன் - *கங்கையை அணிந்த இறைவன்.*

அம்மன் - *பெண்தெய்வம்.*

**அம்மாவினை**

அம்-மாவின்-ஐ - *அழகிய திருமகளின் தலைவன்.*

அம் மாவினை - *அழகிய மாமரத்தை. (விலங்கு முதலியவைகளை)*

**அம்மாவின்மேவும்**

அம் மாவில் மேவும் - *அழகிய சிறந்த வில்லைப்பொருந்தும்.*

அம் மா இல் மேவும் - *அழகிய பெரிய வீடுகள் இருக்கும்.*

அம் மாவில் மேவும் - *அழகிய யானையில் பொருந்தும்.*

அம் மாஇல் மேவும் - *அழகிய திருமகள் இல்லிற் பொருந்தும்.*

**அம்மானையாடலும் பார்க்க**

அம்மானை ஆடலும் பார்க்க - *அம்மானையாட்டத்தையும் பார்க்கும்படி.*

அ மான் ஐ ஆடலும் பார்க்க - *அந்த மானினுடைய (மானைப் போன்ற கண்ணின் உடைய) அழகிய ஆடலையும் பார்ப்பதற்கு.*

**அம்மான்**

அம் மான் - *அழகிய மான்.*

அம்மான் - *மாமன்.*

**அம்மேகந்தனை**

அம் - மேகம் - தன் - ஐ - *நீரையுடைய முகிலுக்குத் தலைவனாகிய இந்திரனை.*

அம்-மேகம்-தனை - *அழகிய முகிலை.*

அம்-மே-கந்தனை - *அழகிய மேம்பாடு பொருந்திய முருகக் கடவுளை.*

**அம்மைகடுக்கும்**

அம்மை கடுக்கும் - *மறுபிறவியை வெறுக்கும்.*

அம் மை கடுக்கும் - *அழகிய முகிலையொத்து விளங்கும்.*

**அயத்தையுமாடாக்குவோம்**

அயத்தையும் மாடு ஆக்குவோம்-*இரும்பையும் பொன்னாகச் செய்வோம்.*

அயத்தையும் மாடு ஆக்குவோம் - *ஆட்டையும் மாடாகச் செய்வோம்.*

**அயனகத்தையடக்கி**

அயன் அகத்தை அடக்கி-*நான் முகனுடைய ஆணவத்தைத் தணித்து.*

அயல் நகத்தை அடக்கி - *பிற மலைகளையெல்லாம் கீழ்ப் படுத்தி.*

**அயிலம்புரக்க**

அயிலம் புரக்க - *உலகத்தைக் காப்பாற்ற.*

அயில் அம்பு உரக்க - *கூரிய அம்பைப் பலமாக.*

(அகிலம் - *அயிலம்; போலி.*)

**அரங்கநீங்கி**

அரங்கம் நீங்கி-*கல்விச்சாலையை விட்டு வெளிவந்து.*

அரங்கு அம் நீங்கி - *தன்னிடத்தைவிட்டு நீர் வெளிப்போந்து.*

**அரசவனத்தான்**

அரச அனத்தான் - *அரச அன்னத்தையுடைய நான்முகன்.*
அரச வனத்தான் - *திருவா வடுதுறையை உடையவன்.*

**அரவஞ்செய்தல்**

அரவம் செய்தல் - *ஒலி உண்டாக்கல்.*
அரவு அஞ்சு எய்தல் - *பாம்புகள் ஐந்தினை எய்தல்.*
அரவு அஞ்ச எய்தல் - *பாம்புகள் அஞ்சுமாறு கணைசெலுத்தல்.*

**அரவந்தாங்குதலால்**

அரவம் தாங்குதலால் - *பாம்பு சுமக்கிற படியால்,*
அரவம் தாங்குதலால் - *ஒலியை மேற்கொண்டிருக்கிறபடியால்.*

**அரவமணிவார்கோடீரமடுத்து**

அரவம் அணிவார் கோடீரம் அடுத்து - *பாம்பையணிந்துள்ள சிவபெருமானுடைய சடைமுடியைச் சார்ந்து.*
அரவம் அ(ண்)ணிவார்கோடு ஈரம் மடுத்து - *இரைச்சல் கொண்டு ,நீண்டகரைகளில் ஈரம் பொருந்தவைத்து.*

**அரவமரு**

அரவம் அரு - *ஒலி நீங்கப் பெருத.*
அரவம் அரு - *பாம்புகள் நீங்கப் பெருத.*

**அரவம் படிந்திடலால்**

அரவம் படிந்திடலால் - *ஒலியுண்டாகுதலால்.*
அரவம் படிந்திடலால் - *பாம்பணி பொருந்துதலால்.*

**அரவிந்தம்**

அரவு இந்து அம் - *பாம்பு திங்கள் நீர்.*
அரவிந்தம் - *தாமரை.*

**அரவிந்தம்புனை**

அரவு இந்து அம்புனை-*பாம்பையும் பிறையையும் கங்கையையும் அணிந்த.*
அரவிந்தம் புனை - *தாமரை மலரையணிந்த.*

**அரனந்தரி**

அரன் அந்தரி-*சிவனும் இறைவியும்.*
அரன் நந்து அரி - *சிவனுஞ் சங்கேந்திய திருமாலும்.*

**அரிசிவசம்போவென்றழுதாள்**

அரிசி வசம்போ என்று அழுதாள் - *அரிசி வசம்பாகிவிட்டதோ என்று வருந்தினள்.*
அரி சிவ சம்போ என்று அழுதாள்-*அரியே சிவனே சிவனே என்று கதறினள்.*

**அரிச்சுவடி**

அரிச்சுவடி - *அரிச்சுவடி என்னும் நூல்.*
அரிச்சு வடி - *அரிசியை நன்ருகக் களைந்து அரித்து வடி.*

**ாமரைக்கணம்**

அரி தாம் மரை கணம் - *சிங்கங்களையும் தாவிப் பாயும் மான் கூட்டங்களையும்.*

அரிது ஆம் அரைக்கணம் - *அரைக் கணப்பொழுதுகூட அருமையாகும்.*

**அரிமாவொடு மெல்லியகைப் போதகஞ்சேர்ந்த**

அரிமா ஒடு மெல்லிய கைப் போதகம் சேர்ந்த - *சிங்கத்தோடு மெல்லிய துதிக்கையினையுடைய யானைகள் சேர்ந்தன.*

அரிமா ஒடு மெல்லிய கைப்போ தகஞ்சேர்ந்த - *கண்ணுகிய வண்டோடு மெல்லிய கையாகிய தாமரை மலர்கள் சென்று சேர்ந்தன.*

**அரியமருந்தாண்டவத்தன்**

அரி அமரும் தாண்டவ அத்தன் - *பாம்பு (பதஞ்சலி) விரும்பும் கூத்தினையுடைய தலைவன்.*

அரிய மருந்து ஆண்ட அத்தன் - *அருமையான மருந்துகளைக் கையாண்ட தலைவன்.*

**அரியமாமண்டலத்தார்**

அரியமா மண்டலத்தார் - *கதிரவன் மண்டலத்தையுடையவர்.*

அரிய மா மண் தலத்தார்-*அரிய பெருமை பொருந்திய பல பதிகளை உடையவர்.*

**அரியமாவைச்சுமந்துளதால்**

அரிய மாவை சுமந்து உளதால்- *அருமையுள்ள விலங்குகளைத் தன்மேற் கொண்டிருந்ததலால்.*

அரிய மாவை சுமந்து உளதால் - *அருமையான உறுப்புக்களை ஏற்றிருப்பதால்.*

**அரியாயிரங்காய்**

அரி ஆயிரம் காய் - *கதிரவர்கள் ஆயிரம்பேர் காய்தலைச் செய்ய.*

அரியாய் இரங்காய்-*திருமாலே இரங்கமாட்டாயோ?*

**அரியுண்ணும்**

அரி உண்ணும் - *காற்றையுண்ணும்.*

அரியுண்ணும் - *(கத்தியால்) அரிதலைப்பெறும்.*

**அரிவையம்பாகத்தான்**

அரி வை அம்பு ஆக தான்-*திருமால் கூரிய அம்பு ஆக இறைவனுகியதான்.*

அரிவை அம்பாகத்தான் - *மலைமகளை அழகிய இடப்பக்கத்திலே உடையவன்.*

**அருகாதவத்தலைவா**

அருகாத வ தலைவா-*சுருங்காத வகரத்திற்குத் தலைவனே!*

அருகு ஆ தவ தலை வா - *பக்கமாகத் தவத்தினிடத்திலே வருவாயாக.*

**அருகினத்தமர் வையையால்**

அருகில் நத்து அமர் வையையால் - *பக்கத்தில் விரும்பியுறைகின்ற உறவினர்கள் இகழ்தலால்.*

அருகில் நத்து அமர் வையையால் - *பக்கத்திற் சங்குகள் பொருந்தியுள்ள வையை ஆற்றினுல்.*

**அருக்கங்கணியார்**

அருக்கம் கண்ணியார் - *எருக்கம்பூமாலையை உடையவர்.*

அருக்கு அங்கு அணியார் - *(மெய்)யருக்கு அங்குக் கிட்டினவர்.*

**அருங்கல்லணைகாட்டிவருதலால்**

அரும் கல் அணை காடு இவருதலால்-*அரிய கற்கள் பொருந்திய காடுகளில் செல்லுதலால்.*

அரும் கல்லணை காட்டி வருதலால் - *அரிய சேணத்தைக் காட்டிக்கொண்டுவருவதால்.*

**அருணந்திவளத்தன்**

அருணந்தி வளத்தன் - *அருணந்தி சிவசாசாரியர்.*

அருணம் திவள் அத்தன் - *செந்நிறம் விளங்குகின்ற தலைவன்.*

**அருணவனன் கற்பகம**

அருண வனன் கற்பு அகம் - *மானையுங் கங்கையையுந் தாங்கியவன்.*

அருண வனன் கற்பகம் - *ஒளி தங்கிய முருகக் கடவுள் கற்பக தரு.*

**அருந்தமருத்தமென்றேன்**

அருத்தம் அருத்தம் என்றேன் - *பொருள் பொருள் என்றேன்.*

அருத்த மருத்த மென்தேன் - *பொருளாகிய வாசனையுள்ள மிருதுவான தேன்.*

**அருந்ததி**

அருந்ததி - *வசிட்டர் மனைவியாகிய அருந்ததி.*

அரும் ததி - *அருமையான சமயம்.*

**அருமைப்புளகமெழத்தழைத் - -திட்டு**

அருமை புளகம்எழ தழைத்திட்டு- *அரிய மயிர்க்கூச்செறிய வளர்ந்து நிமிர்ந்து.*

அருமைப் புள் அகம் எழத் தழைத்திட்டு - *அரிய பறவைகள் தன்னுட் பொருந்தச் செழிப்புற்று.*

**அரும்பாவருந்தனம்**

அரும் பாவரும் தனம் - *தீவினையற்றவர்களுஞ் செல்வத்தை.*

அரும்பு ஆவரும் தனம் - *அரும்பாக வருகின்ற தனங்கள்.*

**அரும்பிணை**

அரும்பு இணை - *அரும்புகளின் இரட்டை.*

அரும்பிணை-*அரிய பெண்மான்.*

**அரும்புங்கவின்மருத**

அரும் புங்க வில் மருத-*அருமையாகிய அம்பும் வில்லும் நீங்காத.*

அரும்பும் கவின் மருத-*அரும்புகின்ற அழகு ஒழியாத.*

**அருவிபுதர்தாழ**

அரு விபுதர் தாழ - *அரிய தேவர்கள் வணங்க.*

அருவி புதர் தாழ - *அருவிகள் புதர்களிலே தாழ்ந்து விழ.*

**அருளியங்கேகயமேற்பொலி - -தலினால்**

அருளி அம் கேகயமேல் பொலிதலினால் - *அருள்செய்து அழகிய மயிலின்மேல் விளங்குவதால்.*

அரு உளியம் கேகயம் மேல் பொலிதலினால் - *அரியகரடி அசுணமா முதலியன தன்னிடம் திரிதலால்.*

**அரைக்கலைவேலை**

அரை கலை வேலை - *அரையில் ஆடையாகக் கடலை.*

அரைக்கலை வேலை - *கெடுத்துத் தொலைக்க வில்லை தொழிலை.*
அரைகலைவேலை - *அரைக்கணப் பொழுது.*

**அலங்காரத்தனே**

அலம் கார் அத்தனே - *நீர் பொருந்திய முகிலைப்போன்ற கையையுடையவனே, தலைவனே.*
அலங்கு ஆரத்தனே - *அசைகின்ற மாலையை அணிந்தவனே.*

**அலர்க்கட்டாளெழுகலான்**

அலர்க்கண் தான் ஒழுகலான் - *தாமரை மலரில் தான் வாழ்கிறபடியால்.*
அலர்கள் தான் ஒழுகலால் - *மலரில் தேன் ஒழுகுகிறபடியால்.*

**அலர்தூற்றுங்காலம்**

அலர் தூற்றுங் காலம் - *பழி மொழிகளைக் கூறுங்காலம்.*
அலர் தூற்றுங் காலம் - *மலர்களை வெளிப்படுத்துங்காலம்*

**அலையாக்கருவிபலமிகலால்**

அலை ஆக்கு அருவிபல மிகலால் - *அலைகளையுடைய அருவிகள் பல மிகுந்துள்ளமையால்.*
அலையாக் கருவி பல மிகலால் - *கெடுதலில்லாத பலவகைப் போர்க்கருவிகளைக் கொண்டிருத்தலால்.*

**அல்லாரைவிட்டு**

அல்லாரைவிட்டு - *தீயவர்களை விட்டு.*
அல்லாரை விட்டு - *இருள் போன்ற கூந்தலைக்கொண்டு.*

**அவலங்களை**

அவல் அங்கு அளை - *பள்ளமாகிய அவ்விடத்திற்பொருந்திய.*
அவலங்களை - *துன்பங்களை.*
அவலம் களை - *துன்பங்களைப் போக்கு.*

**அவல்**

அவல் - *இடிக்கப்பட்ட அவல்.*
அ வல் - *அழகிய சூதாடு கருவி.*

**அவனிதனிலேதொட்டுமிகுந்து**

அவனி தனிலே தொட்டு மிகுந்து - *உலகத்தில் சார்ந்து பெருக்கமுற்று.*
அவனிதனில் ஏது ஒட்டு மிகுந்து - *நிலத்திலுள்ள எந்தப் பொருள்களிலும் ஒட்டுவது மிகுதியாகி.*

**அவன்மேவநேரொருப்படுக் - -கீரென்**

அவன் மேவநேர் ஒரு படுக்கீர் என் - *பயனின்றித் தெய்வத்திற்குமுன் ஆட்டைக்கொல்லாதீர்கள் என்று சொல்லும்.*
அவம் - அவன், (போலி)
அவன்மேவ ஒருப்படுக்கீர் என் - *நான் விரும்பிய காதலன் வர இசையச் செய்கின் றீர்களில்லையே என்று சொல்லும்.*

**அவையார்க்கும்**

அவை யார்க்கும் - *அவையிலே ஆரவாரிக்கும்.*
அவை யார்க்கும் - *அவைகள் எவர்க்கும்.*

**அவ்வானனமும்பொலிவுதர**

அவ் ஆனனமும் பொலிவு தர - *அழகிய முகமும் விளக்கத்தைக்காட்ட.*

அவ் வால்நல் அனமும் பொலிவு தர - *அங்குள்ள வெள்ளிய நல்ல அன்னப் பறவைகளும் சிறந்து விளங்க.*

**அவ்வானையுமேவியசிறப்பால்**

அவ் வானையும் மேவிய சிறப்பால்-*அழகிய வானுலகத்தையுஞ் சார்ந்திருக்கின்ற பெருமையால்.*

அவ் ஆனையும் மேவிய சிறப்பால் - *சிறந்த யானைகளையும் பெற்றிருக்கிற மேன்மையால்.*

**அழகாகா**

அழகா கா - *அழகனே! காப்பாற்றுவாயாக.*

அழகு ஆகா-*அழகாகமாட்டா.*

**அழியாக்கனகந்தனைஏந்தி**

அழியா கனகம் தனை ஏந்தி - *கெடாதபொன் பொடிகளை மேலே தாங்கிக்கொண்டு.*

அழியா கனகம் தனை ஏந்தி - *வற்றாத உயர்ந்த நீரினைப் பெருக்கி.*

**அழியாவெயில்சுற்றிடுதலினுல்**

அழியா வெயில்சுற்றி இடுதலினுல் - *கெடாத ஒளியைத் தன்பக்கம் முழுவதும் உண்டாக்குதலினுல்.*

அழியா எயில் சுற்று இடுதலினுல் - *கெடாத மதிலரண் தன்னைச் சூழ்ந்துகொண்டிருத்தலால்.*

**அளகாபுரி**

அளகாபுரி - *அளகாபுரி என்னும் ஊர்.*

அளகாபுரி-*கூந்தலின் பின்னல்.*

**அளகைவள்ளி**

அளகை வள்ளி-*கூந்தலையுடைய வள்ளி.*

அளகை வள்ளி - *அளகையைப் போன்ற வள்ளியூர்.*

**அளவாநின்ற விருந்தோடுவந்தார்**

அளவா நின்ற விருந்தோடு உவந்து ஆர் - *அன்பொடு கலவாநின்ற விருந்தினரோடு மகிழ்ந்து புசிக்கும்.*

அளவா நின்று அவிரும் தோடு வந்து ஆர் - *காதுக்கு அளவாக நின்று விளங்குகிற தோடு வந்து தங்குகிற.*

**அளித்தாரை**

அளித்தாரை - *கொடுத்தவரை.*

அளி தார் ஐ-*குளிர்ந்த மாலையை அணிந்த தலைவன்.*

அளி தாரை - *வண்டுகளின் - ஒழுங்கு.*

**அளிபூத்தமலர்நாடும்**

அளிபூத்து அமலர் நாடும் - *அன்பு உண்டாகி மலமற்ற பெரியோர்கள் விரும்பும்.*

அளிபூத்த மலர் நாடும் - *வண்டுகள் மலர்ந்த மலர்களைத் தேடும்.*

**அளைவாரி உண்ணத்தினமும்**

அளைவாரி உள்நத்து இனமும் - *கலக்குதலையுடைய நீர்வழியில் சங்குக் கூட்டமும்.*

அளைவாரி உண்ண தினமும் - *தயிர் வெண்ணெய் எடுத்துத் தின்பதற்கு நாள்தோறும்.*

**அறமாவெற்றியதுகொளலால்**

அற மா எற்றி அது கொளலால்- *தொலையுமாறு விலங்குகளை அறைந்து அதனைத் தின்பதால்.*

அறமா வெற்றியது கொளலால் - *தரும முறையாக வெற்றியைக் கொள்வதால்.*

**அறுகால் நிறையும்**

அறுகால் நிறையும் - *அறுகம் புல்லினுல் நிறையும்.*

அறுகால் நிறையும் - *வண்டுகளால் நிறையும்.*

**அற்பகலையோரா**

அல் பகலை ஓரா - *இராவையும் பகலையும் அறியாத.*

அற்ப கலை ஓரா - *இழிந்த நூல்களைக் கல்லாத.*

**அற்பரவைக்கோடும்**

அல் பரவைக்கு ஓடும் - *கரிய கடலை நோக்கிச் செல்லும்.*

அற்பர் அவைக்கு ஓடும்-*இழிந்தவர் கூடிய சபைக்குச் செல்லாமல் விலகும்.*

**அனந்தங்குதிரையிடை வரலால்**

அ(ன்)னம் தங்கு திரை இடை வரலால் - *அன்னப் பறவைகள் தங்கியிருக்கிற பாற்கடலில் தோன்றுதலால்.*

அனந்தம் குதிரை இடைவரலால் - *எண்ணிலடங்காத குதிரைக் கூட்டங்கள் தன்னிடத்தில் வருதலால்.*

**அனந்தன்மிசை**

அனந்தன் மிசை - *ஆதிசேடன் மீது.*

அனம் தன் மிசை - *அன்னத்தின்மேல்.*

**அனுமறு**

அல் நாம் அற - *இருளில் அச்சம் நீங்க.*

அல் நாம் அற - *வறுமையில் இருந்து நாம் விடுபட.*

**அனையவிதம் புரிந்தான்**

அனைய விதம் புரிந்தான் - *அது போன்ற தன்மையை விரும்பிச் செய்தான்.*

அல் நைய இதம் புரிந்தான் - *நன்மைகள் அல்லாதவைகள் கெட்டொழிய நன்மை செய்தான்.*

**அன்னந்திகழும்**

அன்னம் திகழும் - *அன்னப் பறவைகள் விளங்கும்.*

அ நந்து இகழும்-*அழகிய சங்குகளைப் பழிக்கும்.*

**அன்னுகமேவும்**

அம் நாகம் மேவும் - *அழகிய விண்ணுலகத்தைப் பொருந்தும்.*

அம் நாகம் மேவும் - *அழகிய மலையைப்போல் விளங்கும்.*

அம் நாகம் மேவும் - *அழகிய புன்னை மரங்களைப் பெற்றிருக்கும்.*

அ நாகம் மேவும் - *அந்த நாகர் உலகுவரை செல்லும்.*

அம் நாகம் மேவும் - *அழகிய யானைகள் இருக்கும்.*

அம் நாகம் மேவும் - *அழகிய குரங்குகள் உலாவும்.*

அன்னுகம் - *அந்நாகம் : னகர நகர எழுத்துக்கள் பொருள் நயம் நாடி ஒத்து வந்தன,*

**அன்னங்காளமாதலினுல்**

அன்னம் காளம் ஆதலினுல் - *சோறு நஞ்சாகையினுல்.*

அன்னங்காள் அம் ஆதலினால் - *அன்னப்பறவைகளே! அழகாகையினால்.*

**அன்னமருளும்**

அன்னம் அருளும்-*உணவு கொடுக்கும்.*

அன்னம் மருளும் - *அன்னப் பறவைகள் மருட்கியை அடையும்.*

**ஆகத்தன்பினை**

ஆகு அத்தன் பின்ஐ - *பெருச்சாளியில் இவரும் ஆனைமுகக் கடவுளுக்குப் பின் பிறந்தவன்.*

ஆகத்து அன்பினை-*உடலிடத்து அன்புடையாய்.*

**ஆகத்திருத்தினன்**

ஆகத்து இருத்தினன் - *மார்பிலே வைத்தவர்.*

ஆக திருத்தினன் - *நலம்பெறுமாறு ஒழுங்கு செய்தவன்.*

**ஆகமங்கணாடும்**

ஆகம் அங்கண் ஆடும் - *உடல் அவ்விடத்திலே ஆடப்பெறும்*

ஆகமங்கள் நாடும் - *சிவாகமங்களை விரும்பிப் பார்க்கும்.*

**ஆகமத்தைக்கொள்ளும்**

ஆகமத்தை கொள்ளும்-*சிவாகமத்தைக் கைக்கொள்ளும்.*

ஆக மத்தை கொள்ளும் - *(மோர்) ஆதற்பொருட்டு மத்தைப் பெறும்.*

**ஆகமவித்தான்**

ஆகம் அவித்தான் - *(தக்கனுடைய) வேள்வியைக் கெடுத்தவன்.*

ஆகம வித்தான் - *ஆகமங்களுக்கு மூலகாரணன்.*

**ஆகுமிசையாரும்**

ஆகும் இசை ஆரும் - *உண்டாகும் புகழைப்பொருந்தும்.*

ஆகும் இசை ஆரும் - *நன்மையான இசையைப் பாடும்.*

ஆகு மிசை ஆரும் - *பெருச்சாளியின்மேல் ஏறும்.*

**ஆகுலமேயும்**

ஆகுலம் ஏயும் - *துன்பத்தைப் பொருந்தும்.*

ஆ குலம் மேயும் - *பசுக்கூட்டங்கள் மேய்தலைச்செய்யும்.*

**ஆக்கமருளும்**

ஆக்க மருளும் - *செய்வதற்கு மயங்கும்.*

ஆக்கம் அருளும்-*செல்வத்தைக் கொடுக்கும்.*

**ஆக்கமேந்து மமைதியினல்**

ஆக்கம் ஏந்தும் அமைதியினால்- *செல்வச் சிறப்பைப் பொருந்தும் தன்மையினால்.*

ஆக்கு அம் ஏந்தும் அமைதியினால் - *எல்லாவற்றையும் உண்டாக்கும் நீரைக்கொண்டிருக்கிறபடியினால்.*

**ஆக்குவித்தார்**

ஆ குவித்தார் - *ஆன் கூட்டங்களை ஒன்றுபடுத்தினர்.*

ஆக்குவித்தார் - *இயற்றச் செய்தார்,*

**ஆங்கருணையோடு**

ஆம் கருணையோடு - *அமைந்த பொரிக்கறியுடன்*

ஆம் கருணையோடு - *பொருந்திய அருளோடு.*

**ஆங்கலங்கள் மேவும்**

ஆம் கலங்கள் மேவும் - *அழகிய அணிகலன்கள் பொருந்தும்.*
ஆம் கலங்கள் மேவும் - *வேண்டிய ஏனங்கள் பொருந்தும்.*
ஆங்கு அலங்கள் மேவும் - *அவ்விடத்தே கலப்பைகள் பொருந்தும்.*
ஆம் கலங்கள் மேவும் - *தோணிகளானவை இயங்கும்.*

**ஆங்காரஞ் சாருதலால்**

ஆங்கு ஆரம் சாருதலால் - *அவ்விடத்தில் முத்து மாலையைப் பொருந்துகையால்.*
ஆம் காரம் சாருதலால் - *குணமாகிய உறைப்பைப் பொருந்துதலால்.*

**ஆங்காரந் துஞ்சும்**

ஆங்காரம் துஞ்சும் - *ஆணவம் கெடும்.*
ஆங்கு ஆரம் துஞ்சும் - *அவ்விடத்திலே மாலைகள் தொங்கும்.*

**ஆங்காளகண்டர்**

ஆம் காள கண்டர் - *நஞ்சு பொருந்திய கறுத்த கழுத்தை யுடையவர்.*
ஆங்கு ஆள் அகண்டர் - *அவ்விடத்திலே ஆட்கொள்ளுதலையுடையபரந்த வடிவினர்.*

**ஆங்குதருமஞ்சார்**

ஆங்கு தரு மஞ்சு ஆர் - *அவ்விடத்தில் மரங்களில் முகில்கள் பொருந்தும்.*
ஆங்கு தருமம் சார் - *நூலிற் கூறிய தருமநிலைகள் பொருந்தும்.*

**ஆங்குதிரைமேவும்**

ஆம் குதிரை மேவும் - *ஆகிற குதிரைகள் விளங்கும்.*
ஆங்கு திரை மேவும் - *அங்கு திரைச்சீலைகள் பொருந்தும்.*
ஆங்கு திரை மேவும் - *அவ்விடத்தில் அலைகள் பொருந்தும்,*
ஆம் குதிர் ஐமேவும் - *(நெல்) ஆகின்ற குதிரைச் சேரும்,*

**ஆங்குயர்ந்து நீறணிந்து**

ஆங்கு உயர்ந்து நீறு அணிந்து - *விண்வரைக்கும் உயர்ந்து சுண்ணந் தேய்க்கப்பட்டு.*
ஆங்கு உயர்ந்து நீறு அணிந்து - *ஆங்கு உயர்வடைந்து திருநீறு பூசி.*

**ஆங்கூர்மை சேருதலால்**

ஆம் கூர்மை சேருதலால் *பொருந்திய கூர் அமைதலால்.*
ஆங்கு ஊர்மை சேருதலால் - *விண்ணில் தவழும் முகில் பொருந்துவதால்.*

**ஆசாரத்தாக்கும்**

ஆசாரத்து ஆக்கும் - *ஆசாரத்தோடு செய்யும்.*
ஆசு ஆரத் தாக்கும் - *குற்றம் பொருந்தத் தாக்கும்.*

**ஆசிரியம்பாடும்**

ஆசிரியம் பாடும் - *ஆசிரியப் பாடல்கள் இயற்றும்.*
ஆசு இரிய அம்பு ஆடும் - *குற்றங்கெடுமாறு அம்புகள்செல்லும்.*

**ஆசுகமில்லை**

ஆ சுகம் இல்லை - *ஐயோ நன்மை இல்லை.*
ஆசுகம் இல்லை - *அம்பு இல்லை.*

**ஆசுகவி**

ஆசு கவி - *விரைவாக இயற்றப்படுஞ் செய்யுள்.*

ஆசு கவி - *குற்றம் பொருந்தப் பெற்ற.*

**ஆசைபடிந்திடலால்**

ஆசை படிந்திடலால் - *திசையைப் பொருந்துவதால்.*

ஆசை படிந்திடலால் - *காதல் அமைதலினால்.*

**ஆசை முத்த நல்கும்**

ஆசை முத்தம் நல்கும் - *திக்குகளிலெல்லாம் முத்துக்களை வீசும்.*

ஆசை முத்தம் நல்கும் - *அன்போடு இன்ப முத்தங்களை அளிக்கும்.*

**ஆசையகலும்**

ஆசை அகலும் - *மூவாசைகளும் ஒழியப்பெறும்.*

ஆசை அகலும் - *திக்குகள்வரை பரவும்.*

**ஆசையுடையார்**

ஆசை உடையார் - *அவாவுடையவர்கள்.*

ஆசை உடையார் - *திக்காடையை உடையவர்.*

**ஆடகமாடஞ்சேர்**

ஆடக மாடம் சேர் - *பொன் மாளிகையைச் சேருகிற.*

ஆடு அகமாடம் சேர் - *மேட ராசி வீட்டின் மாளிகை முடியைச் சேருகிற.*

**ஆடகமுருக்கும்**

ஆள் தக முருக்கும் - *ஆளழியுமாறு கொலை செய்யும்.*

ஆடகம் உருக்கும் - *பொன்னை உருகச் செய்யும்.*

**ஆடகமேசேர**

ஆடு அகமே சேர - *மேட ராசி பொருந்திய விண்ணிடத்தையே அடைய.*

ஆடகமே சேர - *தங்கமே பொருந்த.*

**ஆடகவாகத்தனே**

ஆள் தக வா கத்தனே - *தகுதியாக ஆளுவாயாக; வருவாயாக தலைவனே.*

ஆடக வாகு அத்தன் - *பொன்னணிகளை அணிந்த அழகிய தலைவன்.*

ஆடக ஆகத்தன் - *பொன் போன்ற உடலையுடையவன்.*

**ஆடம்பரமேவி**

ஆடு அம்பரம் மேவி - *மேட ராசி பொருந்திய விண்ணை அடைந்து*

ஆடம்பரம் மேவி - *ஆடம்பரத் தன்மையைப் பொருந்தி.*

**ஆடவரைக்கண்ணும்**

ஆடவரைக் கண்ணும் - *கணவர்களை நினைக்கும்.*

ஆட வரைக்கு அண்ணும் - *தோகை விரித்தாடுதற்கு மலையைச்சேரும்.*

ஆள் தவரை கண்ணும் - *முனிவர்களை எண்ணும்.*

**ஆடவரைச்சேலையுந்தலைமேலாக்கி**

ஆட வருஐ சேலை உந்து அலைமேல் ஆக்கி - *ஆடுதற்கு வருகின்ற அழகிய சேல்மீனை உந்தி வருகிற அலைமேலாகச் செய்து*

ஆட அரை சேலையும் தலைமேல் ஆக்கி - *ஆடுதற்கு இடையிலுள்ள புடைவையையுந் தலைமேலாகச்செய்து.*

**ஆடிக்களிப்பார்**

ஆடிக் களிப்பார் - ஆடுதலைச் செய்து மகிழ்பவர்கள்.
ஆடு இக்கு அளிப்பார் - அசைகிற கரும்பினைக் கொடுப்பார்.

**ஆடிக்குடத்தடையும்**

ஆடி குடத்து அடையும்-(எள்) செக்கிலாடி எண்ணெய்க் குடத்தையடையும்
ஆடி குடத்து அடையும் - (பாம்பு) பாம்பாட்டியால் ஆட்டப் பெற்றுப் பிறகு குடத்துக்குள் சேரும்.

**ஆடிவரும்**

ஆடி வரும் - ஆடிக்கொண்டு வரும்.
ஆடு இவரும் - ஆட்டையூரும்.

**ஆடுமயில்**

ஆடு மயில் - ஆடும் மயிலும்.
ஆடும் மயில் - ஆடுகிற மயில்.

**ஆடுமுன்னீர்**

ஆடு முந்நீர் - நீராடுகிற கடல்.
ஆடு முன் ஈர் - ஆடுமுதலியவற்றை அறுக்கிற.

**ஆடெடுத்தது**

ஆடு எடுத்தது - ஆடுதலை மேற்கொண்டது
ஆடு எடுத்தது - ஆட்டைத் தூக்கியது.

**ஆட்டானம்மானங்கை**

ஆட்டான் அம்மான் அங்கை - வெற்றியை உடையவன் உயிர்கட்கெல்லாந் தந்தையானவன்.
ஆட்டான் நமான் அங்கை - ஆட்டுர்தியை உடைய தியையும்சிறந்த மானையும் அழகிய கையில்.

**ஆட்டான்**

ஆட்டான் - ஆட்டையுடையவன். (முருகன், தீக்கடவுள்)
ஆட்டான் - அசைக்காதவன்.

**ஆட்டுக்கு**

ஆட்டுக் கு - கூத்தாடுவதற்கு.
ஆட்டுக்கு - ஆட் டுக்கு (தகருக்கு).

**ஆட்டைக்கலக்கும்**

ஆட்டைக் கலக்கும்-ஆட்டினை வருத்திக்கொல்லும்.
ஆட்டைக்கு அலக்கும் - ஆடுதலுக்கு மிக விரும்பும்.

**ஆட்டைவிட்டு**

ஆட்டைவிட்டு - ஆட்டத்தைப் பார்க்காமல் விட்டுவிட்டு.
ஆட்டை விட்டு - ஆடு என்கிற தகரை விட்டு.

**ஆணத்தமிழவேது**

ஆணத்து அமிழ ஏது - அன்புக் கடலில் அமிழ்தற்கு ஏதுவாகும்.
ஆண் அத்தம் இழவு ஏது - புருடார்த்தத்தை இழத்தல் எப்படி?

**ஆணவம்**

ஆள் நவம் - புதுமையை மேற்கொள்.
ஆண் அவம் - ஆண் வீணானவன்.
ஆணவம் - செருக்கு.

**ஆணிவரையுறலால்**

ஆணி வரை உறலால் - *யாலே செப்பஞ்செய்து அமைக்கப்படுவதால்.*

ஆணி வரையுறலால் - *எழுத்தாணியால் எழுதப்படுவதால்.*

**ஆண்டார்பண்பாடலார்**

ஆண்டார் பண் பாடலார்-*நம்பியாண்டாருடைய சிறப்புப் பொருந்திய பாடலை உடையவர்.*

ஆண்டு ஆர்பண்பு ஆடலார் - *அவ்விடத்திலே பொருந்திய பண்புமிக்க ஆடலை உடையவர்.*

**ஆண்டான்**

ஆண்டான்-*ஆட்கொண்டவன்.*

ஆண் தான்-*ஆண்தானே யானவன்.*

**ஆண்டுமுத்திக்கேயும்**

ஆண்டு முத்து இக்கு ஏயும்-*அவ்விடத்தில் முத்துக்கள் பொருந்திய கரும்பமையும்.*

ஆண்டு முத்திக்கு ஏயும் - *எல்லாவற்றையும் நுகர்ந்து வீடுபேற்றிற்குச் சாரும்.*

**ஆண்டுரகந்தேடும்**

ஆணதுரகம தேடும் - *ஆண் குதிரையைத் தேடுகின்ற.*

ஆண்டு உரகம் தேடும் - *அவ்விடத்திலே பாம்புகளைத் தேடுகின்ற.*

**ஆண்டுவரும்**

ஆண்டுவரும் - *அரசாட்சி செய்துவரும்.*

ஆண்டுவரும் - *அவ்விடத்திற்கு வரும்.*

**ஆதரங்கூரா**

ஆதர் அங்கு ஊரா - *அறிவில்லாதவர்கள் அவ்விடத்திலே செல்லாத.*

ஆதரம் கூரா - *அன்பு காட்டாத.*

**ஆதரிக்குமதனுல்**

ஆதரிக்கும் அதனுல்-*போற்றுகிற அத்தன்மையினுல்.*

ஆதர் இக்கு மதனுல் - *அறிவற்ற கருப்பு வில்லையுடைய காமனுல்.*

**ஆதவனங்கண்ணுன்**

ஆதவன் அம் கண்ணுன்-*கதிரவனை அழகிய கண்ணுகக் கொண்டவன்.*

ஆதவன் அங்கு அண்ணுன்-*கதிரவன் அங்கே நெருங்கமாட்டான்.*

ஆ தவன் நம் கண்ணுன் - *ஆ! வியப்பு, முனிவன் நம்முடைய கண்ணைப்போன்றவன்.*

**ஆதவனந்தர**

ஆதவன் அந்தர-*கதிரவன் அந்தரத்திலே.*

ஆ தவனம் தர - *பசுக்கள் துன்பத்தையடைய.*

**ஆத்திகரைத்தீர்க்கும்**

ஆத்திகரை தீர்க்கும் - *கடவுள் உண்டென்பவரை அப்புறப்படுத்தும்.*

ஆத்தி கரைத்து ஈர்க்கும்-*ஆத்தி மரத்தைக் கரைத்து இழுக்கும்.*

**ஆநந்தமண்டும்**

ஆநந்தம் அண்டும் *மகிழ்ச்சி நெருங்கும்.*

ஆ நந்த மண்டும் - *பசுக்கள் பயிர் வளருமாறு கூட்டமாகப் பொருந்தும்.*

**ஆந்தருமஞ்சாரும்**

ஆம் தருமம் சாரும் - *ஆகின்ற தருமம் பொருந்தும்.*

ஆம் தருமஞ்சு ஆரும்-*பொருந்திய மரத்தினிடத்திலே முகில் சேரும்.*

**ஆமருவி வீழும்**

ஆம் அருவி வீழும்-*பொருந்திய அருவிகள் விழும்.*

ஆ மருவி வீழும் - *ஆக்கள் பொருந்தி விரும்பும்*

**ஆமாவிரியும்**

ஆமாவிரியும் - *நெல்லிமரங்கள் பரவியிருக்கும்.*

ஆமா இரியும் - *காட்டுப் பசுக்கள் அஞ்சியோடும்.*

**ஆமாம்பழனங்குளத்துடனே**

ஆம் மாம்பழன் அம் குளத்துடனே - *சாறு நிறைந்த மாம்பழம் நல்ல வெல்லத்துடன்.*

ஆம் மா பழனம் குளத்து உடனே - *நீர் நிலையுள்ள பெரிய வயலிடத்தும் குளத்துடனும்.*

**ஆமை**

ஆமை-*ஆமை என்னும் பிராணி*

ஆ மை - *மாடு, ஆடு, எருமை.*

ஆம் ஐ - *அழகாகும்.*

**ஆமை மருவும்**

ஆ மை மருவும் - *ஆக்களும் ஆடுகளும் பொருந்தும்.*

ஆமை மருவும் - *ஆமைகள் பொருந்தியிருக்கும்.*

ஆமை மருவும்- *ஆகின்ற முகில்கள் பொருந்தும்.*

**ஆமைவடை**

ஆமை வடை - *ஒருவகைச் சிற்றுண்டி.*

ஆ மை வடு ஐ - *பசுவினது நெய்யாலாகிய மை பொதிந்த மாவடு போன்ற அழகு.*

**ஆமைவெள்ளைவாரணமூர்ந்து**

ஆமை வெள்ளை வாரணம் ஊர்ந்து-*ஆமையும் வெண்மையாகிய சங்கும் தவழ்ந்து.*

ஆம் மை வெள்ளை வாரணம் ஊர்ந்து - *நீரையுண்ட முகிலையும் வெள்ளை யானையையுஞ் செலுத்தி.*

**ஆமோதஞ்சாரும்**

ஆம் ஓதம் சாரும் - *ஆகின்ற நீரின் ஒலியைப் பொருந்தும்.*

ஆமோதம் சாரும் - *பரிமளத்தைப்பெறும்.*

ஆமோதம் சாரும் - *மகிழ்ச்சியைப் பொருந்தும்.*

**ஆம்பலஞ்சங்கத்து**

ஆம்பல் அம் சங்கத்து - *குமுத மலர்கள் அழகிய சங்கங்கள்.*

ஆம்பல் அஞ்சு அங்கத்து - *யானைகள் அஞ்சுதற்கேதுவாகிய உறுப்புக்களையுடைய.*

**ஆம்பல்வரிசைகளும்**

ஆம்பல் வரிசைகளும் - *உள்ள பல்லின் இருபக்க ஒழுங்குகளும்*

ஆம்பல் வரிசைகளும் - *ஆன பலவகைச் சிறப்புக்களும்.*

ஆம்பல் வரிசைகளும் - *அல்லியின் கூட்டங்களும்.*

**ஆம்பிரமரஞ்சேர்**

ஆம் பிரமரம் சேர் - *ஆகின்ற வண்டுகள் சேரும்.*

ஆம்பிர மரம் சேர்-*தேமாமரம் சேர்ந்துள்ள.*

**ஆம்பொருளையெண்ணும்**

ஆம் பொருளை எண்ணும்-*தேடுகின்ற பொருளை எண்ணுதல் செய்யும்.*

ஆம் பொருளை எண்ணும் - *(நூலிற்) பொருந்திய பொருளை எண்ணிப் பார்க்கும்.*

**ஆயத்தியங்கா**

ஆய தியங்கா - *ஆராய்தற்குக் கலங்காத.*

ஆயத்து இயங்கா - *மகளிர் கூட்டத்திலே போக்கு வரவு செய்யாத.*

**ஆயங்கவலவரும்**

ஆய் அங்க வலவரும் - *ஆராய்கின்ற ஆறங்கங்களில் வல்லவர்களும்.*

ஆயம் கவல வரும் - *பெண்கள் கூட்டம் வருந்துமாறு வரும்.*

**ஆயவலம்புரியார்**

ஆய் அவலம் புரியார் - *கெடுகின்ற துன்பத்தைச் செய்ய மாட்டார்.*

ஆய வலம்புரியார் - *இடைக் குலத்துப் பிறந்த (கண்ணனுக) சங்கத்தையுடையார்.*

ஆய வல் அம்பு உரியார்-*ஆகிய வலிய அம்பினை உடையவர்.*

**ஆய்ந்திட்டவித்தையடக்குதலால்**

ஆய்ந்திட்ட வித்தை அடக்குதலால்-*ஆராயப்பெற்ற கல்வி நுட்பத்தை உள்ளடக்கிக் கொண்டிருப்பதால்.*

ஆய்ந்திட்டு அவித்தை அடக்குதலால் - *ஆராய்ந்து தெரிந்து தெளிந்து மனமயக்கத்தைக் கெடுத்தலால்.*

ஆய்ந்து இட்ட வித்தை அடக்குதலால் - *தெரிந்தெடுத்து விதைத்த விதைகளைத் தன்னுட் கொண்டிருத்தலால்.*

**ஆரணங்கத்தன்**

ஆரணம் கத்தன் - *மறைகட்குத் தலைவன்.*

ஆரணங்கு அத்தன் - *உமாதேவியைப் பாதி உடலிற் கொண்டவன்.*

**ஆரணங்கைக்கொள்ளும்**

ஆரணம் கைக்கொள்ளும் - *மறையினைக் கைக்கொள்ளுகின்ற.*

ஆர் அணங்கைக் கொள்ளும் - *பொருந்திய பெண்களைக் கொள்ளும்.*

**ஆரணியத்தன்**

ஆரணியத்தன்-*காட்டில் இருப்பவன்.*

ஆர் அணி அத்தன் - *ஆத்தி மாலையை அணிந்த இறைவன்.*

**ஆரத்தினையே வித்திக் கதிர்விளைக்கும்**

ஆரத்தினையே வித்தி கதிர் [illegible]

*உண்டாக்கி ஒளியைச் செய்யும்.*

ஆர தினையே வித்தி கதிர் விளைக்கும் - *மிகுதியாகத் தினையையே விதைத்துக் கதிர்கள் விளையச் செய்யும்.*

**ஆரப்புரந்துவைத்தான்**

ஆர புரம் துவைத்தான்-*அழிவு சார உடலைத் துவைத்தான்.*

ஆர புரந்து வைத்தான் - *நன்றாகக் காப்பாற்றி வைத்தவன்.*

**ஆரமதில் மின்னும்**

ஆரம் அதில் மின்னும்-*பூமாலைகளிலே விளங்கும்.*

ஆர மதில் மின்னும் - *மிகுதியாக மதில்களில் விளங்கும்.*

**ஆரமுதிக்கும்**

ஆர்அமுது இக்கும் - (இனிமை) *பொருந்திய அமுதமும் கரும்பும்.*

ஆரம் உதிக்கும் - *முத்துக்கள் தோன்றும்.*

**ஆரமுதிரும்**

ஆரம் உதிரும் - *முத்துக்கள் உதிரும்.*

ஆர முதிரும்-*நன்றாக முற்றும்.*

**ஆரம்பரந்தடி**

ஆர் அம்பு அரம் தடி - *கூரிய அம்பையும் அரத்தையும் வெட்டும்.*

ஆரம் பரந்து அடி - *முத்துமாலை பரவப்பெற்று அடியிடம்.*

**ஆரம்பரவிய**

ஆரம் பரவிய - *முத்துக்கள் பரந்துள்ள.*

ஆர் அம்பர விய -*அரிய ஆடையினையுடைய மதிக்கத்தக்க.*

ஆர் அம் பரவிய - *ஆத்திமாலை அழகாகப் பொருந்திய.*

ஆர் அம்பு அரவிய-*பொருந்திய அம்பினாலே அராவப்பெற்ற.*

**ஆரம்பரிக்கும்**

ஆர் அம்பு அரிக்கும் - *பொருந்திய அம்பின் தன்மையைக் கெடுக்கும்.*

ஆரம் பரிக்கும் - *பூமாலையைத் தாங்கும்.*

**ஆரம்பிறைத்தடுக்கும்**

ஆர் அம்பு இறைத்து அடுக்கும் - *நிறைந்த நீரையும் இறைத்துச் சேரும்.*

ஆரம் பிறை தடுக்கும் - *சந்தன மரங்கள் பிறையையுந் தடுத்து நிற்கும்.*

**ஆரவாரம்மோது**

ஆரவாரம் ஓது - *மிகுதியாக வோதுகிற.*

ஆரவாரம் மோது - *பேரொலி மோதுகிற*

**ஆரவேய்நின்றிசைத்து**

ஆரவேய் நின்று இசைத்து - *அமைய வேய்ங்குழலை ஊதி.*

ஆர ஏய் நின்று இசைத்து - *முத்து வடங்களின் அழகு*

ஆராதனம் செய்து - *வழிபடுதலைச் செய்து.*

ஆராத நஞ்சு எய்து-*உண்ணத்தகாத நஞ்சு பொருந்திய.*

**ஆராய்ந்துரைசெய்**

ஆராய்ந்து உரை செய் - *ஆராய்ச்சி செய்து உரைத்துப் பார்க்கும்.*

ஆராய்ந்து உரை செய் - *நன்கு ஆராய்ந்தறிந்து பேசுகிற.*

**ஆரிடத்தைநாடும்**

ஆர் இடத்தை நாடும் - *நல்ல இடத்தைத் தேடும்.*

ஆரிடத்தை நாடும் - *மறையை விரும்பும்.*

**ஆரியமுகக்கும்**

ஆரியம் உகக்கும் - *வட மொழியை மகிழ்ந்துகொள் ளும்.*

ஆரிய முகக்கும் - *நன்கு பொருந்துமாறு அள்ளும்.*

**ஆருமஞ்சஞ்சாரும்**

ஆரும் அஞ்சு அஞ்சு ஆரும் - *எவரும் அச்சத்தையடையும். ஐங்கணைகள் பொருந்தும்.*

ஆரும் மஞ்சம் சாரும் *பொருந் திய படுக்கையிடத்தைச் சேரும்.*

ஆரும் அஞ்சம் சாரும் - *பெரு மை பொருந்திய அன்னப் பறவை சேரும்.*

**ஆருமணிகொண்டிடலால்**

ஆரும் அணிகொண்டிடலால் - *எவரும் அணிதலைச் செய்கிற படியினால்.*

ஆரும் மணிகொண் டிடலால் - *பொருந்திய மணியைத் தன் னிடத்துக் கொண்டிருப்ப தால்.*

**ஆருமயின்மானும்**

ஆரும் அயில் மானும் - *பொருந் திய வேலைப்போல் விளங்கும்*

ஆரும் மயில் மானும்-*பொருந் திய மயிலைப்போல் திகழும்.*

**ஆருமலைமகள்**

ஆரும் அலை மகள் - *பாற்கட லில் தோன்றிய திருமகள்.*

ஆரும் மலைமகள்-*இமயமலையில் தோன்றிய பார்வதி.*

**ஆரைவீட்டினார்**

ஆர் ஐ வீட்டினார் - *பொருந்திய அழகிய மோட்ச வீட்டை யுடையவர்.*

ஆரை வீட்டினார்-*முப்புர மதில் களை அழித்தவர்.*

**ஆர்க்குமளிகூர்**

ஆர்க்கும் அளிகூர் - *எல்லோ ருக்கும் அருள் செய்கின்ற.*

ஆர்க்கும் அளிகூர் - *ஆரவாரிக் கும் வண்டுகள் பொருந்து கிற.*

**ஆர்க்குமினம்போர்செயம்—**
**—படைக்க**

ஆர்க்கும் இனம் போர் செயம் படைக்க - *வெற்றி முழக்கஞ் செய்கின்ற மிகுதியான போ ரில் வெற்றிபெற.*

ஆர்க்கும் இனம் போர் செய் அம்பு அடைக்க-*ஒலிக்கின்ற கூட்டமாக மோதுகின்ற நீர் அலைகள் பெருக.*

**ஆர்மழைக்கங்காக்கும்**

ஆர் மழைக்கு அங்காக்கும் - *பெய்கிற மழைக்கு வாயைத் திறக்கும்.*

ஆர்மழை கம்காக்கும்-*பொருந் திய மழையின் நீரைக் காக் கும்.*

**ஆலங்குடியான்**

ஆலங்குடியான் - *ஆலங்குடி என்னும் ஊரையுடையவன்.*

ஆலம் குடியான் - *நஞ்சினைக் குடிக்காதவன்.*

**ஆலத்திகாணும்**

**ஆலத்தி காணும்** - *நிராஞ்சனத்தைப் பார்க்கும்.*
**ஆல் அத்தி காணும்** *ஆல் அத்தி முதலிய மரவகைகளைப் பார்க்கும்.*

**ஆலத்துமாந்தளிர்கண்டோம்**

**ஆலத்து மாந்தளிர் கண்டோம்** - *ஆலமரத்தின்மீது மாந்தளிரைப் பார்த்தோம்*
**ஆலத்து மாந்தளிர் கண்டோம்** - *நஞ்சைப்போன்ற கண்களின் மீது மாந்தளிரைப் போன்ற கைகளைப் பார்த்தோம்.*

**ஆலமண்டையோட்டத்தன்**

**ஆல் அ மண்டை ஓட்டு அத்தன்** - *அசையும் அந்த நான்முகன் மண்டையோட்டை ஏந்திய கையை உடையவர்.*
**ஆலம் அண்டு ஐ ஓட்டு அத்தன்** - *நஞ்சுண்ணுங்காற் பொருந்திய அழகிய ஓடு பொருந்திய கையை உடையவர்.*
**ஆலம் அண்டை ஓட்டு அத்தன்** - *கல்லால மரத்தடியில் ஓட்டிய கடவுள்.*

**ஆலமருந்தண்ணல்**

**ஆல் அமரும் தண்நல்** - *ஆலமரத்தடியில் எழுந்தருளும் குளிர்ச்சி பொருந்திய நல்ல.*
**ஆலம் அருந்து அண்ணல்**-*நஞ்சினை உண்ட சிவபெருமான்.*

**ஆலமாவடு**

**ஆலம் மா** - *நஞ்சு பெரிய தழும்பு.*
**ஆலம் மா வடு** - *ஆலமரமும் மாவடுவும்.*

**ஆலுங்கரும்பைமிதித்தேறி**

**ஆலும் கரும்பை மிதித்து ஏறி** - *படமெடுத்து ஆடுகின்ற கருநிறமுள்ள பாம்பை மிதித்து மேலேறி.*
**ஆலும் கரும்பை மிதித்து ஏறி** - *தோகைகள் அசைகின்ற கரும்புத் தோட்டத்தை உழக்கிச் சென்று.*

**ஆலைமருவும்**

**மருவும்** - *ஆலமரத்தை அடையும்.*
**ஆலை மருவும்** - *இயந்திரத்தைச் சேரும்.*

**ஆவலங்கொட்டும்**

**ஆவல் அங்கு ஒட்டும்** - *விருப்பத்தினை அவ்விடத்திலே வைக்கும்.*
**ஆவலம் கொட்டும்** - *களிக் கூத்தினை ஆடும்.*

**ஆவாகனத்தன்**

**ஆவா கனத்தன்** - *எழுந்தருளியவன்.*
**ஆ ஆ கனத்தன்**-*ஆ ஆ மிகுந்த பெருமையையுடையவன்.*
**ஆ வாகு அனத்தன்** - *வியக்கத்தக்க அழகிய அன்னப் பறவையையுடைய நான்முகன்.*

**ஆவானிகழும்**

**ஆவால் நிகழும்** - *ஆக்களால் நிரம்பியிருக்கும்.*
**ஆ வான் இகழும்** - *வியக்கத்தக்க முகிலைப் பழிக்கும்.*

**ஆவியோடவோடமாட்டாமல்**

**ஆவி ஓட ஓட மாட்டாமல்** - *உயிர் நிலை குறைய விரைந்து செல்ல முடியாமல்.*

**ஆவி ஓட ஓட மாட்டாமல்** - *நீராவி மேலெழுந்து செல்ல ஓட முடியாமல்.*

**ஆழிபெறுதலால்**

**ஆழி பெறுதலால்** - *கடல் ஈனு கையால்*

**ஆழி பெறுதலால்** - *உருளைப் படையைப் பெற்றிருத்தலால்.*

**ஆறச்சுழிமேவு**

**ஆறு அச்சு உழி மேவு** - *வழிகளில் அச்சின்கண் மேவும்.*

**ஆறு அ சுழிமேவு** - *ஆறுகள் அழகிய சுழிகளைப் பொருந்தும்.*

**ஆறிரண்டாக்காணும்**

**ஆறு இரண்டாக்காணும்** - *பன்னிரண்டாகப் பார்க்கும்.*

**ஆறு இரண்டாக் காணும்** - *(காவிரி கொள்ளிடம்) என ஆறுகள் இரண்டாகத் தெரியும்.*

**ஆறுகண்டு**

**ஆறு கண்டு** - *ஆறுகளானவை தெரிந்து*

**ஆறுகண்டு** - *வழி தெரிந்து.*

**ஆறுமுகங்கொண்டு**

**ஆறுமுகம் கொண்டு** - *ஆறு முகங்களைக்கொண்டு.*

**ஆறுமுகம் கொண்டு** - *ஆறுகளைத் தன்னிடத்திலே கொண்டு.*

**ஆறுமுகம் கொண்டு**-*வழிகள் தன்னிடம் அமையப்பெறறு.*

**ஆறுமுடிக்குமரன்**

**ஆறு முடிக் குமரன்** - *ஆறு திருமுடிகளையுடைய முருகக் கடவுள்.*

**ஆறுமுடிக்கும் அரன்** - *கங்கையை அணியுஞ் சிவன்.*

**ஆறுபார்ப்பார்**

**ஆறு பார்ப்பார்** - *ஆற்றைப் பார்க்கிறவர்கள்.*

**ஆறு பார்ப்பார்** - *ஆறு அந்தணர்கள்.*

**ஆற்றைக்கடக்கும்**

**ஆற்றைக் கடக்கும்** - *வழியைக் கடக்கும்.*

**ஆற்றைக் கடக்கும்**-*நீர்பொருந்திய ஆற்றினைக் கடக்கும்.*

**ஆற்றலைத்துகைக்கும்**

**ஆற்றலை துகைக்கும்** - *ஆற்றலைக் கெடுக்கும்.*

**ஆற்று அலைத்து உகைக்கும்** - *ஆற்றினிடத்திலே வருத்திச் செலுத்தும்.*

**ஆற்றலைமன்னும்**

**ஆற்றலை மன்னும்** - *வலிமையைப் பொருந்தும்.*

**ஆல்தலை மன்னும்** - *ஆலமரத்தின்மேல் தங்கும்.*

**ஆற்று அலை மன்னும்** *ஆற்றின் அலைகள் வீசும்.*

**ஆனகந்திளைக்கும்**

**ஆனகம் திளைக்கும்** - *ஆனகம் என்னும் வாத்தியம் ஒலிக்கும்.*

**ஆனகந்து இளைக்கும்** - *குதிரையின் முழுப்பாய்ச்சல் இளைக்கும்.*

**ஆனந்தனுடகத்தான்**

**ஆனந்தன் நாடகத்தான்**-*மகிழ்ச்சியை உடையவன் திருக்கூத்தைச் செய்பவன்.*

**ஆன் அந்தன் ஆடகத்தான்** - *காளையில் ஏறும் அழகன்; பொன்னையுடையவன்.*

**ஆல் நந்தன் நாடு அகத்தான்** - *ஆலிலையிற் பள்ளிகொள்ளும் சங்கேந்திய திருமாலால் விரும்பப்படுகிற இடத்தையுடையவன்.*

**ஆனுயனுரிசையார்**

**ஆனுயனுர் இசையார்** - *ஆனுயனாயனுர் பாடிய இசையைக் கொண்டவர்.*

**ஆனுயனுர் இசையார்** - *(திருமாலே) ஆனுகப்பெற்ற சீர்த்தியை உடையவர்.*

**ஆனையிலேறினுன்**

**ஆனையில் ஏறினுன்**-*யானையின் மீது ஏறினுன்.*

**ஆனையில் ஏறினுன்**-*அத்திமரத்தின்மீது ஏறினுன்.*

**ஆனைவளர்க்கும்**

**ஆன் ஐ வளர்க்கும்** - *பசுவை வளர்க்கும்.*

**ஆனை வளர்க்கும்** - *ஆனையை வளர்க்கும்.*

(I)

**இக்குச்சிலையான்**

**இக் குச்சிலை யான்** - *இந்தச் சிறு குடிசையை நான்.*

**இக்குச் சிலையான்** - *கரும்பு வில்லையுடைய காமன்.*

**இசையாரணங்கரியார்**

**இசை ஆரணங்கு அரியார்** - *சீர்த்திபொருந்திய மனைவியாகத் திருமாலை உடையவர்.*

**இசை ஆரணம் கரியார்** - *இசைக்கப்படுகிற மறைகளைச் சான்ருக உடையவர்.*

**இசையார் அணங்கு அரி ஆர்** - *சீர்த்தி பொருந்தியவர் வருத்து தலையுடைய பாம்பு மாலையாகப் பொருந்தப்பெற்றவர்.*

**இடக்கையான்**

**இடக்கையான்** - *தமருகத்தையுடையவன்.*

**இடகையான்** - *இடது கையை உடையவன்.*

**இடப்பாலையானனத்தான்**

**இடப்பால் ஐ ஆல் நல்நத்தான்**- *இடம் பொருந்திய பாற்கடலையும் அழகிய ஆலிலையையும் நல்ல சங்கையுமுடைய திருமால்.*

**இடப்பால் ஐ ஆனனத்தான்** - *இடப்பக்கத்தையும் ஐந்து திருமுகங்களையும் உடையவன்.*

**இடப்பாலையான் அனத்தான்** - *பாலை நிலத்தையுடையவன் அன்ன ஊர்தியை உடையவன்.*

**இடைதான்குறைந்தது**

**இடைதான் குறைந்தது** - *எடைதான் குறைந்துபோயிற்று.*

**இடைதான் குறைந்தது**-*இடையென்னும் நுசுப்புத்தான் குறைந்துபோய்விட்டது.*

**இடையரையராஞர்**

**இடை அரையர் ஆஞர்** - *(மதுரை) இடத்திலே அரசராஞர்.*

இக்காலமாயாற்று
இக்காலம் ஆயாற்று — இந்நாள்எழுந்தது.
இக்கு ஆலம் ஆயாற்று— கரும்பு நஞ்சாகஎழுந்தது

இடையர் ஐயர் ஆனுர் - *இடையர்களுக்குத் தலைவனான கண்ணன் ஆனுர்; இடையர்கள் அந்தணர்களானுர்கள்.*

இடையர் ஐயர் ஆனுர்-*நடுவில் இருக்கும் தலைவர் ஆனுர்.*

**இடையரைவாட்டினர்**

இடையரை வாட்டினர் - *இடைகளை வருந்தச் செய்தார்கள்.*

இடையரை வாட்டினர்-*இடைக் குலத்தினரைத் துன்புறுத்தினர்.*

**இடையர்பாற்குடங்களைத்—**
**—தாங்கினர்**

இடையர் பால் குடங்களைத் தாங்கினர் - *இடைச் சாதியினர் பாற்குடங்களைத் தூக்கினுர்கள்.*

இடையர் பாற்குடங்களைத் தாங்கினர் - *இடைகளானவை கொங்கைகளைத் தாங்கின.*

**இட்டமருந்தாரத்தர்**

இட்டமருந்து ஆர் அத்தர் - *பரிமாறிய அமுதத்தை யுடைய தலைவர்.*

இட்டம் அரும் தாரத்தர்-*விருப்பம் பொருந்திய அரிய மனைவியை உடையவர்.*

**இதவாரணங்கொடி**

இத ஆரணம் கொடி - *நன்மையைச் செய்கின்ற மறையினைக் கொடியாகக்கொண்ட*

இத வாரணம் கொடி - *இதம் பொருந்திய கோழிக்கொடி.*

**இதுவேதாசலம்**

இது வேதாசலம் - *இது வேதாசலம் என்பவன்; இது மறைமலை.*

இது ஏது ஆசலம்-*இஃது என்ன சங்கடம்.*

**இந்திரவில்வெளியாக்காட்ட**

இந்திரவில் வெளியா காட்ட - *வானவில்லானது வெளிப்படையாகத் தோன்ற.*

இந்து இரவில் வெளியா காட்ட- *இரவு நேரத்தில் நிலவானது நன்ருக விளங்க.*

**இந்துமண்டலத்தேஒருபாற்கர—**
**—னண்ணினுல்**

இந்து மண்டலத்தே ஒரு பாற்கரன் நண்ணினுல் - *திங்கள் மண்டிலத்தில் ஒரு கதிரவன் தோன்றினுல்.*

இந்து மண்டலத்தே ஒருபால் கரன் நண்ணினுல்-*திங்களைப் போன்ற முகத்திடத்தே ஒரு பக்கத்தில் கை தோன்றினுல்.*

**இமையவரையாளிடத்தார்**

இமயவரையாள் இடத்தார் - *இமயமலையில் தோன்றிய உமையை இடப்பாகத்திற் கொண்டவர்.*

இமையவரை ஆள் இடத்தார் - *தேவர்களை ஆளுகிற கயிலை மலையை உடையவர்.*

**இமையவர்**

இமையவர் - *தேவர்.*

இமையவர் - *இமைகளோடு கூடியவர்களாகிய கண்கள்,*

**இம்பர்ப்பிரிந்தார்தமக்குமுற்று—**
**—மிடரேபுரிந்து**

இம்பர் பிரிந்து ஆர் தமக்கும் உற்றும் இடரே புரிந்து - *இவ்வுலக நிலையில் வேறுபட்டு எல்லோருக்கும் உறவாக விருந்துங்கூடத் துன்பமே செய்து.*

இம்பர் பிரிந்தார் தமக்கு முற்றும் இடரே புரிந்து - இவ்வுலகிற் பிரிந்த காதலர்களுக்கு முழுவதுந் துன்பத்தையே செய்து.

**இயற்பகையார்பாலேற்ருர்**

இயற்பகையார்பால் ஏற்ருர் - *இயற்பகை நாயனுரிடத்தில் மனைவியை இரத்தல் செய்தவர்.*

இயல் பகு ஐயார், பால் ஏற்ருர்- *தற்போதம் நீங்கிய தலைவர், வெள்ளைவிடையை உடையவர்.*

இயல் பகையார் பால் ஏற்ருர் - *இயற்கையாகவே பகையுள்ளவர்களிடத்தில் வாங்கினர்.*

**இரக்கமுந்தியோடுற்ருர்**

இரக்கம் உந்தி ஓடுற்ருர்-*அருள் பொருந்துதலாலே ஓடியவர்.*

இரக்க முந்தி ஓடு உற்ருர்-*இரப்பதற்கு முன் காலத்திலே ஓட்டைக் கைக்கொண்டவர்.*

**இரங்காதமரவடியார்**

இரங்காது அமர அடியார் - *மனங்குழையாது தெய்வத் தன்மையுள்ள அடியவர்கள்.*

இரங்காது அமர அடி ஆர்-*ஒலி செய்யாமற்பொருந்துவதற்கு அடியிலே சேருகிற.*

**இரண்டூர்படைத்தீர்**

இரண்டு ஊர் படைத்தீர் - *இரண்டு ஊர்களை உடையவராக இருக்கிறீர்.*

இரண்டு (ஊர்) ஊருபடைத்தீர்- *இரண்டு தொடைகளை உடையவராக இருக்கிறீர்.*

**இரவலர்**

இரவலர் - *இரத்தல் தொழில் உடையவர்.*

இரவு அலர் - *இரவிலே மலரும் பூ.*

**இரவினைப்பிரியாமையால்**

இரவினைப் பிரியாமையால் - *இராக்காலத்தை நீங்காமையால்.*

இரவினைப் பிரியாமையால்-ஐய *மேற்றலை விடாமையால்.*

**இராமன்**

இராமன் - *இராமபிரான்.*

இரா மன் - *இரவுக்குத் தலைவனாகிய திங்கள்.*

**இராமேசுரத்திற்கேகினளே**

இராமே சுரத்திற்கு ஏகினளே - *வீட்டில் இராமல் பாலைவனத்திற்குச் சென்ருளே.*

இராமேசுரத்திற்கு ஏகினளே - *இராமேசுரம் என்னும் ஊருக்குப் போனுளே.*

**இராவணன்**

இராவணன் - *இலங்கையில் இருந்த இராவணன்.*

இரா வணன்-*இரவைப்போன்ற கருநிறமுடைய காமன்.*

**இருகாற்பணம்**

இரு கால்பணம் - *இரு காலின் மேலேயுள்ள பாம்பின் படம்.*

இருகால் பணம்-*அரைப்பணம், அரையிலுள்ள பாம்பின் படம் போன்ற அல்குல்.*

**இருகுடங்கொண்டரைப்பாம்-**
**-பாட்டுவதென்**

**இரு குடம் கொண்டு அரைப் பாம்பு ஆட்டுவது என் -** *இரண்டு குடங்களை வைத்துக்கொண்டு பாதிப்பாம்பை ஆட்டுவதென்ன?*

**இருகுடம் கொண்டு அரைப் பாம்பு ஆட்டுவது என் -** *இரு கொங்கைகளை வைத்துக்கொண்டு அரையிடத்துள்ள அல்குலை ஆட்டுவது என்ன?*

**இருக்குமறியான்**

**இருக்கும் அறியான் -** *இருக்கு மறையினாலும் அறியப்பெறாதவன்.*

**இருக்கும் மறியான் -** *இடக்கையில் எப்பொழுதும் இருக்கும் மான் கன்றையுடையவன்.*

**இருஞ்செங்கதையான்**

**இரும் செம் கதையான்-** *பெரிய செம்மையான கதாயுதத்தை யுடையவன்.*

**இரும் செம் கதையான்-** *நீண்ட அழகிய வரலாற்றையுடையவன்,*

**இருப்பாமஞ்சங்கிடைகாட்ட**

**இருப்பு ஆம் மஞ்சம் கிடை காட்ட-** *இருக்குமிடமான கட்டில் கிடக்க.*

**இரு உப்பு ஆம் அம் சங்கு இடை காட்ட -** *மிகுந்த உப்பு விளைய அழகிய சங்கினங்கள் அலைகளின் இடையில் தோற்ற.*

**இருப்புவணத்தார்**

**இருப்பு உவணத்தார் -** *இருத் தலையுடைய கருடனை ஊர்தியாக உடையவர்.*

**இருப்பு வணத்தார் -** *(காய்ந்த) இரும்பினைப்போன்ற நிறத்தினையுடையவர் (சிவன்).*

**இருமாதம்பயிற்சியுளேன்**

**இரு மாதம் பயிற்சி உளேன் -** *இரண்டு திங்கள் பழகியுள்ளேன்.*

**இரு மாது அம் பயிற்சியுளேன்-** *இரண்டு மாதர்களிடத்தில் நன்றாகப் பழகியுள்ளேன்.*

**இரும்படிதானேந்தலால்**

**இரும் படி தான் ஏந் தலால் -** *பெரிய படியைத் தான் ஏந்துகையால்*

**இரும்பு அடி தான் ஏந்தலால் -** *இரும்படியைத் தான் பெற்றிருத்தலால்.*

**இரும்படியும்**

**இரும் படியும்-** *உட்காரும் நூல்களைப் படியும்.*

**இரும்பு அடியும் -** *இரும்பினை அடித்து வேலை செய்யும்.*

**இரும்பலவின்செய்**

**இரும் பலவின் செய் -** *பெரிய பலா மரங்கள் பொருந்திய வயல்.*

**இரும்பு அல இன்செய்-** *இரும்பு அல்ல இன்பத்தைச் செய்கின்ற.*

**இரும்புவனத்தேர்**

**இரும் புவனம் தேர் -** *பெரிய பூமியே தேர்.*

இரும் புவனத்து ஏர் - *பெரிய நிலவுலகின் அழகு.*

இரும்பு வல் நத்து ஏர் - *இரும் பைப்போன்ற வலிய அவா வின் தன்மை.*

**இருவரும்பன்ன**

இருவரும் பன்ன - *இருவரும் கூற.*

இரு அரும்பு அன்ன - *இரண்டு அரும்புகளைப் போன்ற.*

**இருளர்**

இருளர்-*இருளரென்னுஞ் சாதி யார்.*

இருளர் - *கூந்தல்*

**இலக்கணஞ்சார்**

இலக்கணம் சார் - *இலக்கணம் பொருந்திய.*

இலக்கு அண் அஞ்சு ஆர் - *இலக்காகப் பொருந்திய ஐந்து கூரிய.*

**இலங்கங்குழைய**

இல் அங்கம் குழைய - *மனைவி யானவள் உடல் குழைய.*

இலம் கம் குழைய - *வீடாகிய சலம் இலைகளை உடைய.*

**இலங்கைக்கும்**

இலங்கைக்கும்-*இலங்கை என் னும் ஊருக்கும்.*

இலம் கைக்கும் - *இல்லறத்தை வெறுக்கும்.*

**இலங்கையனையப்படுத்தான்**

இலங்கையன் நையப் படுத் தான் - *இராவணன் நைந்து வலியழியுமாறு அமுக்கிவருத் தியவன்.*

இலங்கு ஐயன் நயப்பு அடுத் தான் - *விளங்குகிற தலைவன் விருப்பம் பொருந்தியவன்.*

**இலங்கையில்**

இலங்கு அயில் - *விளங்குகின்ற வேல்.*

இலங்கையில் - *இலங்கை என் னும் ஊரில்.*

**இலையம்பயிலும்**

இலை அம்பு அயிலும் - *தகட்டு வடிவாகிய அம்பையும் வேலை யும்.*

இலையம் பயிலும்-*ஒடுங்குதலைப் பழகும்.*

**இலையயிலங்கையர்**

இலை அயில் அம்கையர்-*இலைத் தொழில் அமைந்த வேலை யேந்திய அழகிய கையை உடையவர்.*

இலை ஐ இலங்கு ஐயர் - *இலை அழகு விளங்குகிற தலைவர்.*

**இவனல்லயோக்கியன்**

இவன் நல்ல யோக்கியன் - *இவன் சிறந்த தகுதியுடைய வன்.*

இவன் அல்ல யோக்கியன் - *இவன் நல்லவன் அல்லன்.*

**இறையாயவெள்ளங்கத்து**

இறை ஆய வெள்ளம் கத்து - *அரசராகிய வெள்ளமென் னும் எண்ணுடையோர் ஒலிக்கும்.*

இறை ஆயம் எள் அங்கத்து - *நிலத்தில் தங்கும் பெண்களு டைய இகழத்தக்க உடலி னிடத்தே.*

**இனற்கிளைப்பாற்று**

**இன்அல் கிளை பாற்று** - *இருட் கூட்டத்தைப் போக்கும்.*

**இனற்கு இளைப்பு ஆற்று** - *கதிர வனுக்குக் களைப்பைப் போக் கும்.*

**இனல் கிளைப்பு ஆற்று**-*துன்பப் பெருக்காகிய ஆற்றில்.*

**இனியவளம்பதி**

**இனிய வளம் பதி** - *இனிமை யமைந்த செல்வச் செழிப் புடைய ஊர்.*

**இனியவள் அம்பதி** - *இனிமை யானவளுடைய அழகிய கண வன்.*

**இன்சொற்றட்டான்**

**இன்சொல் தட்டான்** - *இனிய மொழிகளை மறுத்துப் பேசா தவன்.*

**இன்சொல் தட்டான்** - *இனிய சொற்களைக் கூறுந் தட்டா ரச் சாதியினன்.*

**இன்னந்தியங்கி**

**இன் அந்தி அங்கி** - *இனிதாகிய செவ்வானத்தையும் தீயை யும்.*

**இன்னம் தியங்கி** - *இனிமேலும் மயங்கி.*

**இன்றமிழ்தாலத்து**

**இன் தமிழ் தாலத்து** - *இனிய தமிழானது உலகத்தில்.*

**இன்று அமிழ்து ஆலத்து** - *இந் நாளில் அமிழ்தினை நஞ்சைப் போல.*

**இன்றுதரங்கம்**

**இன் தாது அரங்கம்** - *இனிய பொன்னம்பலம்.*

**இன்தாது அரங்கம்** - *இனிய மகரந்தப்பொடி ஆற்றிடைக் குறையாக.*

**இன்றென்றற்காற்றகிலர்**

**இன் தென்றற் காற்று அகிலர்** - *இனிய தென்றல் காற்றை யுடைய உலக முதல்வர்.*

**இன் தென்றற்கு ஆற்றகிலர்**- *இனியதென்றற் காற்றிற்கு ஆற்றமாட்டாதவர்.*

**இன்று என்றற்கு ஆற்றகிலர்** - *இப்பொழுது என்னை எதிர்க்கமாட்டாதவர்.*

**இன்னம்பரம்பரனே**

**இன் நம் பரம்பரனே** - *இனிய நம்முடைய மேலான கட வுளே!*

**இன்னம்பர் அம்பு அரனே** - *திரு வின்னம்பரில் எழுந்தருளிய கங்கையை அணிந்த கட வுளே!*

**இன்னம் பரம்பரனே** - *இனிமே லுஞ் சிவபெருமானே.*

**ஈசானசத்தத்தன்**

**ஈசான சத்தத்தன்**-*ஈசான சப்த வாச்சியப் பொருளாக இருப் பவன்.*

**ஈ சான சத்து அத்தன்** - *அன் பர்கட் கருளுகின்ற தியானப் பொருளாக இருக்கிற தலை வன். (சானம்-தியானம்.)*

**ஈதங்கமே**

**ஈ தங்கமே**-*பொன்னைக்கொடுத் தருள்வாயாக.*

**ஈது அங்கமே** - *இஃது உடலா கும்.*

**ஈயாதவனயனத்து**

ஈ ஆதவன் நயனத்து-ஈ யானது கதிரவனுடைய கண்ணிடத்து.

ஈயாதவன் அயனத்து-பொருளை இரப்பவர்க் கீயாதவன் நல்ல கதியிலே.

**ஈரமதிச்சடையார்**

ஈர மதிச் சடையார் - குளிர்ந்த திங்களைச் சடையிலே தாங்கியவர்.

ஈர மதிச்சு அடையார்-போக்குதற்கு ஒரு பொருளாக எண்ணிச் செல்லாதவர்.

**ஈரமிலையென்றிடலால்**

ஈரம் இலை என்றிடலால் - ஈரமில்லை என்று சொல்லுவதால்.

ஈரம் இலை என்றிடலால் - (உள்ளத்தில், இரக்கம் இல்லை என்பதால்.

**ஈரம்பட**

ஈர் அம்பு அட - இரண்டுகணைகள் வருத்த.

ஈரம் பட - நனைந்து ஈரமாக.

(உ)

**உகந்தவளை**

உகந்த வளை - விரும்பப்பட்ட சங்கு.

உகு அந்த வளை - கையினின்றுங் கழன்ற அழகிய வளையல்கள்.

**உகப்படருங்காலம்**

உகப்பு அடரும் காலம்-மகிழ்ச்சியை அழிக்குங் காலம்.

உக படரும் காலம் - (உயிர்) சிந்துமாறு வருகின்ற காலம்.

**உகவாதிகந்த**

உகம் ஆதி கந்த-உகங்களுக்கு முதல்வனை கந்தனே!

உகவாது இகந்த - விரும்பாமல் நீங்கிய.

**உகையானகத்தன்**

உகை ஆன் அகத்தன் - செலுத்துகின்ற ஆனேற்றினை உடையவன்.

உகு ஐ ஆன கத்தன் - மிகுந்த அழகு பொருந்திய தலைவனாக விளங்குபவன்.

**உடுக்கைபிடித்து**

உடு கை பிடித்து - வான்மீன்களை வரிசையாக உடன் சேர்த்துக்கொண்டு.

உடுக்கை பிடித்து - உடுக்கைக் கையிற் பிடித்து.

(1)

**உண்ணம்பலத்தார்**

உள் நம்பு அலத்தார்-நம்புதலையுடைய கலப்பையை ஏந்தியவர்.

உண் அம்பலத்தார் - உண்ணுகின்ற இனிய பழங்களையுடையவர்.

**உண்ணவனம்படைத்தீரில்லை**

உண்ண அனம் படைத்தீர் இல்லை - உண்பதற்குச் சோறு போட்டீர் இல்லை.

உண்ண வனம் படைத்தீர் இல்லை - நுகர்தற்கு அழகைப் பெற்றிருக்கவில்லை.

**உண்ணுமுலையுமை**

உண் ஆ முலை உமை - கன்றுகளுண்ணும் பசுக்களையுடை முல்லை நிலத்திற் கிறைவனாகிய கரிய.

**உள் நாம் உலையும் ஐ** - *மனத்துள்ள அச்சத்தைக் கெடுத்தருளும் இறைவன்.*

**உண்ணுமுலை உமை** - *உண்ணு முலை என்னும் பெயரையுடைய உமை (உண்ணுமுலையமை).*

**உண் ஆம் முலையும் ஐ** - *மிகுதியாகப் பெருகும் கற்புடைய அழகிய.*

## உண்ணீருறுங்கடிதடமும்

**உண் நீர் ஊறும் கடிதடமும்** - *உண்ணுகின்ற நல்ல நீரானது ஊறுகின்ற நல்ல இடமும்.*

**உள்நீர் ஊறும் கடிதடமும்** - *உள்ளே நீர் சுரக்கின்ற மறைவான இடமும்.*

## உண்மாதடுத்தார்

**உள் மா தடுத்தார்** - *உள்ளக் கருமையாகிய அஞ்ஞானத்தைப் போக்கியவர்.*

**உள் மாது அடுத்தார்** - *உடலின் ஒரு பகுதியுள் உமாதேவி பொருந்தப்பெற்றவர்.*

## உண்மையிலான்

**உள் மை இலான்**-*உள்ளத்திலே கறுப்பில்லாதவன்.*

**உண்மை இலான்** - *உண்மைத் தன்மை இல்லாதவன்.*

## உப்புமேலாடும்

**உப்பும் மேல் ஆடும்** – *உடல் பருக்கும் தலையைத் தூக்கி மேலே ஆடும்.*

**உப்பு மேல் ஆடும்** (*ஊறுகாய் போடும்போது*) *உப்பு மேலே போடப்பெறும்.*

## உப்புரிவலியையிருமலை

**உப்புரி வலியை இருமலை** - *உப்புரி நோயையும் இருமலையும்*

**உ புரி வல் இயை இரு மலை** - *இந்த விரும்புதற்குரிய சொக்கட்டான் காயை நிகர்த்த இரண்டு மலையைப் போன்ற கொங்கைகள்.*

## உயராசையம்பரமாகையால்

**உயர் ஆசை அம்பரம் ஆகையால்** - *உயர்ந்த திக்கு ஆடையாகையால்.*

**உயர் ஆசை அம்பரம் ஆகையால்** - *உயர்ந்த காதல் விண்வரை நீண்டிருப்பதால்.*

## உரங்கொண்டிருக்கும்

**உர் அம்கொண்டு இருக்கும்** - *"உர்" என்று உறுமிக் கத்துகிற தன்மையுடையதாக இருக்கும்.*

**உரம் கொண்டு இருக்கும்**-*மார்பிலே வைத்துக்கொண்டிருக்கும்.*

## உரலடிமீதுற்றான்

**உரல் அடி மீது உற்றான்** - *உரல் களைப்போன்ற கால்களையுடைய வெள்ளையானையின் மீது ஏறியவன்.*

**உரல் அடி மீது உற்றான்** - *உரலிலே கட்டப்பட்டுத் தன் மேல் அடிக்கப்பட்ட கண்ணன்.*

## உருகாவிதந்தனம்

**உருகா விதந்தனம்** - *உள்ளம் உருகிப் புகழ்ந்தோம்.*

**உருகு ஆவி தந்தனம்** - *அழிகிற உயிரைக் கொடுத்தோம்.*

**உருக்கங்கணத்தினன்**

**உருக்கம் கணத்தில் நான்** - *அன்பைக் கணப்பொழுதில் நான்*

**உரு கங் கணத்தினன்**-*அழகிய கங்கணத்தை உடையவன்.*

**உருக்குமணியான்**

**உருக்கு மணியான்** - *உருக்கு மணி என்னும் மனைவியை உடையவன்.*

**உருக்கும் அணியான்** - *உள்ளத்தை உருக்கும் அணி அழகை உடையவன்.*

**உருத்தழைக்கும்**

**உருத்து அழைக்கும்** - *சினந்து கூப்பிடும்.*

**உரு தழைக்கும்**-*வடிவமானது பொலிந்து விளங்கும்.*

**உருத்திகழுங்காலம்**

**உரு திகழும் காலம்** - *வடிவம் விளங்குகிற காலம்.*

**உருத்து இகழும்காலம்**-*சினந்து வைகிற காலம்.*

**உருத்திராக்கமுற்று**

**உருத்திராக்கம் உற்று** - *கண் மணி மாலை அணிந்து*

**உருத்து இரா கம் உற்று** - *சினந்து இரவு நேரத்தில் வானத்தில் தோன்றி.*

**உருத்தெரிப்பார்**

**உருத்து எரிப்பார்** - *எரித்தழிப்பார்.*

**உரு தெரிப்பார்** - *வடிவத்தைத் தெரியப்படுத்துவார்.*

**உருமுத்தலை**

**உருமுத்தலை** - *இடியிடத்து.*

**உரு முத்து அலை** - *அழகிய முத்தினை அலைத்து வருத்தும்.*

**உலையாநீட்டமெய்தலால்**

**உலையால் நீட்டம் எய்தலால்** - *உலைக்களத்தால் நீட்சியை எய்துகிறபடியால்.*

**உலையா நீட்டம் எய்தலால்** - *குறையாத கூட்டஞ்சேரப் பெறலால்.*

**உவளகமையத்து**

**உவளகம் மை அத்து** - *மதில்கள் முகிலைப்பொருந்தி.*

**உவளகம் மையத்து** - *தடாகத்தின் நடுவே.*

**உவள் அகம் ஐயத்து** - *இவளுடைய உள்ளம் ஐயத்தினால்.*

**உழலவைத்தவரை**

**உழல வைத்தவரை** - *என் மனஞ் சுழலவைத்த பேர் வழியை.*

**உழல வைத்தவரை**-*என் மனங் கலங்குமாறு செய்த மலை. (தனமலை).*

**உளமாதரத்தேம்**

**உளம் மா தரத்தேம்** - *மனஞ் சிறந்த பக்குவமடையப்பெற்றுள்ளேம்.*

**உளம் மா தரத்தேம்** - *என்றும் முள்ள யாம் அழகுஞ் சிறப்பும் உடையேம்.*

**உள்வாய் வெளுத்திருக்கும்**

**உள் வாய் வெளுத்து இருக்கும்**- *உள்ளிடத்தே வெண்மையாக இருக்கும்.*

**உள்வாய் வெளுத்து இருக்கும்**- *உள் வாயானது வெண்மையாக இருக்கும்.*

**உள்ளமிளகாயா**

**உள்ளம் இளகாயா**-*மனம் இளக மாட்டாயா?*

**உள்ள மிளகாயா**-*இருக்கிற மிள காயா.*

**உள்ளகலத்தைத்தந்தீர்**

**உள்ள கலத்தைத் தந்தீர்** - *உண் டாகியிருக்கிற கலத்தைக் கொடுத்தீர்.*

**உள் அகலத்தைத் தந்தீர்**-*உள்ள மார்பைக் கொடுத்தீர்.*

**உள்ளங்கைத்தேன்**

**உள்ளம் கைத்தேன்** - *உள்ளம் வெறுப்படைந்தேன்.*

**உள்ளங்கைத் தேன்** - *உள்ளங் கையில் உள்ள தேன்.*

**உள்ளமச்சமூரும்**

**உள்ள மச்சம் ஊரும்** - *இருக் கின்ற மீன்கள் ஓடிச்செல் லும்.*

**உள்ளம் அச்சம் ஊரும்** - *மன மானது அச்சத்தை அடை யும்.*

**உள்ளமுகந்தார்**

**உள் அம் முகந்தார்**-*(முடியின்) உள்ளே கங்கையை நிறைத் தவர்.*

**உள்ளம் உகந்தார்**-*மனம் மகிழ்ந் தவர்.*

**உள்ளம்பரத்தார்**

**உள்ளம் பரத்து ஆர்** - *மன மானது பரத்திலே பொருந் திய.*

**உள் அம்பரத்தார்** - *எல்லோரா லும் எண்ணப்பெறுகின்ற சிதம்பரத்தையுடையவர்.*

**உள்ளவரைமேவுதலால்**

**உள்ள வரை மேவுதலால்**-*இருக் கின்ற மலைகளிற் செல்லுத லால்.*

**உள்ளவரை மேவுதலால்** - *பொருள் உள்ளவர்களைச்சேர் தலால்.*

**உள்ளாறுகடந்து**

**உள் ஆறுகள் தந்து** - *உட்பிரிவு களான சிற்றாறுகளைக் கொடுத்து.*

**உள் ஆறு கடந்து** - *உள்ளத்தி லுள்ள காமக்குரோதம் முத லியவைகளைத் தாண்டி.*

**உள்ளீரங்காணலால்**

**உள் ஈரம் காணலால்**-*உள்ளே ஈரத்துடன் இருத்தலால்.*

**உள் ஈரம் காணலால்**-*உள்ளத் தில் அன்பு காணப்படுதலால்.*

**உறவாலங்காட்டீர்**

**உறுஅவ் ஆலங் காட்டீர்** - *பொருந்திய அவ்வாலங் காட் டில் எழுந்தருளியவரே,*

**உறவால் அம்காட்டீர்** - *உறவி னாலே அழகினைக் காட்டமாட் டீர்.*

**உறுகண்மருவுகையால்**

**உறுகண் மருவுகையால்** - *துன் பத்தைப் பொருந்துகையால்.*

**உறு கண் மருவு கையால்** - *பொருந்திய [illegible] கண்ணிற் சேர்ந்த கையினை உடைமை யால்.*

**உன்னும்மலைப்பால்**

**உன்னும் அலைப்பால்** - *கருது கின்ற அலையினால்,*

**உன்னும் மலைப்பால்** - *நினைக் கின்ற திகைப்பினால்.*

**ஊதியம்பொன்ருதுவளர்**

**ஊதி அம்பொன் தாதுவளர்** - *ஊதுதலைச்செய்து அழகிய பொன்போன்ற மகரந்தப் பொடியிலே கண்வளருகின்ற*

**ஊதியம் பொன்ருது வளர்**-*வருவாயானது குறைபாடல் மிகுகின்ற.*

**ஊரானை**

**ஊர் ஆனை** - *செலுத்துகிற யானை.*

**ஊரானை** - *ஊரையுடையவனை.*

**ஊரானை** - *செலுத்துதல் இல்லாதவனை.*

**ஊருடையான்**

**ஊர் உடையான்** - *ஊரினையுடையவன்.*

**ஊரு உடையான்**- *தொடையை உடையவன்.*

**ஊருவரம்பைநீதாங்கி**

**ஊர் உவர் அம்பை நீ தாங்கி** - *ஓடிவருகிற உப்பு நீரை நீ கொண்டு.*

**ஊரு அரம்பை நீ தாங்கி** - *தொடையாகிய வாழையை நீ சுமந்து.*

**ஊறுங்கேணி**

**ஊறும் கேணீ** - *நீர்ஊறுகின்ற கிணறே!*

**ஊறும் கேள் நீ** - *இடையூற்றை யும் நீ கேட்பாயாக.*

**எடுக்குங்கயமுங்குதிரையுங்—**
**—கொண்டு**

**எடுக்கும் கயமும் குதிரையும் கொண்டு** - *நிமிர்ந்து நிற்கின்ற யானைகளையும் குதிரைகளையும் தன்னுடன் வரப்பெற்று.*

**எடுக்கும் கயம் முங்கு திரையும் கொண்டு** - *மேலெழும்பியும் ஆழத்தில் செல்கின்றனவுமாய் மறைக்கச் செய்கின்ற அலைகளையும் உடையதாகி.*

**எட்டாநதிக்குடையார்**

**எட்டு ஆன திக்கு உடையார்** - *எட்டுத் திக்குகளாகிய ஆடையை உடையவர்.*

**எட்டா நதிக்கு உடையார்** - *எட்டாத கங்கையாற்றுக்கு உரிமையுடையவர்.*

**எட்டு**

**எள் து** - *எள்ளினை உண்.*

**எட்டு** - *எட்டு என்னும் எண் (அ).*

**எப்பணியுந்தூக்குதலால்**

**எ பணியும் தூக்குதலால்** - *எத்தகைய பாம்புகளையும் தூக்குகிறபடியால்.*

**எ பணியும் தூக்குதலால்**-*எத்தகைய அணிகலன்களையுங் களவு செய்தலால்.*

**எப்பொழுதுமழுகையார்ந்தோன்**

**எப்பொழுதும் அழுகை ஆர்ந்தோன்** - *எந்நேரமும் அழு உடையவன்.*

**எப்பொழுதும் மழு கை ஆர்ந்தோன்** - *எக்காலமும் மழுவைக் கையில் ஏந்தியவன்.*

**எம்மனை**

**எம் மனை** – *எம்முடைய வீடு, மனைவி.*

**எம் அனை** - *எம்முடைய தாய்.*

**எ மனை?** - *எவ் வீடு?*

**எழில்பாத்திரமுட்கொண்டு**

எழில் பா திரம் உட்கொண்டு - *அழகிய பாடல்களை உறுதியாக மனதிற்கொண்டு.*

எழில் பாத்திரம் உட்கொண்டு - *அழகிய ஏனங்களின் உள்ளே அமைந்து.*

**எழிற்பாயலையும்விரித்தமளி**

எழில் பாயலையும் விரித்து அமளி - *அழகிய படுக்கையையும் பரப்பி மெத்தை*

எழில்பாய் அலையும் விரித்து அமளி - *எழுதலையுடைய பாய்ந்து செல்லும் அலைகளையும் விரித்துப் பேரொலி செய்து.*

**எழுதுங்கரப்பரனூர்**

எழு துங்கர் அ பரனூர் - *எழுகின்ற மேலானவர் அழகிய இறைவனார்.*

எழுதும் கர பரனூர் - *எழுதும் கைகளையுடைய சிவனார்.*

**எற்கோவரையாகிவரலால்**

எல்கோவரை ஆகி வரலால் - *கதிரவன் மண்டலம் வரைக்கும் உயர்ந்து வருதலால்.*

எல் கோ வரை ஆகு இவரலால் - *விளக்கமாகிய கண்களையுடைய மலையை ஒத்த பெருச்சாளியில் ஏறுதலினால்.*

**என்பணியுமேற்றூர்**

என்பணியும் ஏற்றூர் - *என்னுடைய பணிவிடையையும் ஏற்றுக்கொண்டவர்.*

என்பு அணியும் ஏற்றூர்-*எலும்பு மாலையை அணியுங் காளையூர்தியை உடையவர்.*

**என்பரவமட்டார்**

என்பு அரவுமட்டு ஆர் - *எலும்பையும் பாம்பையும் தேன் பொருந்திய.*

என்பர் அவம் அட்டார்-*என்று சொல்லுகிறவர்களுடைய தீமையைக் கெடுத்தவர்.*

**என்பரவாமையே**

என்பு அரவு ஆமையே - *எலும்பும் பாம்பும் ஆமையுமே.*

என் பரவாமையே-*என்னுடைய போற்றுதல் இல்லாமையே.*

**என்பார்க்குமாகத்தன்**

என்பார்க்கு மா கத்தன்-*என்று சொல்லுகிறவர்களுக்குச் சிறந்த தலைவன்.*

என்பு ஆர்க்கும் ஆகத்தன் - *என்பு மாலையை அணிகின்ற மார்பை உடையவன்.*

**என்னத்தனையடி**

எல் நத்தனை அடி - *விளங்குகின்ற சங்கையுடைய திருமாலை அடிதேடுமாறு.*

என்ன தனை அடி-*என்று சொல்வித் தன்னடியை.*

**என்னந்தரங்கத்தர்**

என் அந்தரங்கத்தர் - *என்னுடைய உள்ளத்திலே எழுந்தருளியவர்.*

எல் நந்து அரங்கத்தர் - *கதிரவனும் ஒளிவிளங்குதல் குறையுமாறு விளங்குகிற பொன்னம்பலத்தை உடையவர்.*

---

என்ன வந்து அ(ண்)ணித்தான்- *என்று சொல்லுமாறு வந்து இனிமையருயினன்.*

என் அவம் தணித்தான் - *என் தீமையைக் குறைத்தவன்.*

**என்னுகராவணல்**

என் நாகு அரா அணல் - யாது இளம் பாம்புகள் பொருந்து தலை உடைய.

எல் நாகு அரா வள் நல் - ஒள் ளிய சங்கத்தையுடைய அரனே வளவிய நல்ல.

**என்னுவியந்தரன்**

என்னு வியந்து அரன் - என்று சொல்லிப் புகழ்ந்து சிவன்.

என் ? ஆவி அம்தரன் - யாது? பொய்கையில் நீரால் தாங்கப் பெற்றவன்.

எல் நா வியந்து அரன் - கதிர வன் நாவாற் புகழ்ந்து சிவ னுடைய.

**ஏகக்கோடநீந்து**

ஏக கோடு அடுத்து - ஒற்றைக் கொம்பைப் பெற்று.

ஏக கோடு அடுத்து - ஒரே உச் சியைக்கொண்டு.

**ஏகந்தவிருபஞ்சுதலையேந்தி**

ஏகம் தவிரும் அஞ்சுதலை ஏந்தி- ஒன்று நீங்கிய ஐந்து(நான்கு) தலைகளைப்பெற்று.

ஏகு அந்த இரு மஞ்சு ஏந்தி - ஓடுகின்ற அழகுள் ளவைகளான பெரிய முகில் கள் தன்மேற் படியப்பெற்று.

**ஏடுசேர்க்கும்**

ஏடு சேர்க்கும் - பலவகை நூல் ஏடுகளை ஒன்றுபடுத்தும்.

ஏடு சேர்க்கும் - இதழ்கள் பொருந்தியிருக்கும்.

**ஏடெழுதார்**

ஏடு எழுதார் - ஏடுகளை எழுது வதற்கு அறியாதவர்கள்.

ஏடு எழு தார் - இதழ்கள் விரிந்த மாலை.

**ஏதம்படியாய்**

ஏதம் படியாய் - குற்றத்தில் அமிழாதே.

ஏது அம்பு அடி ஆய் - கணை வேறு ஏது, திருவடியே யாகும் ஆராய்வாயாக.

**ஏதாயினுமினியாய்**

ஏதாயினும் இனி ஆய் - யாதா கிலும் இனிமேல் ஆராய்ந்து பார்.

ஏதாயினும் இனியாய் - ஏதாயி னும் இனிமையானவனே.

**ஏந்தலையந்தரத்தார்**

ஏந்தல் ஐ அந்தரத்தார் - மலை யில் எழுந்தருளிய இறைவர் விண்ணுலகத்தார்.

ஏந்து அலை அம்தரம் தார் - அலையை உடைய கங்கையை யும் தலைமாலை.

**ஏயுமடுப்புக்கு**

ஏயும் மடுபுக்கு - பொருந்திய மடுவிலே புகுந்து.

ஏயும் அடுப்புக்கு - அமைந்த அடுப்பில் வைத்து எரித்த

**ஏரகம்**

ஏரகம் - திருவேரகமென்னும்

ஏர் அகம் - அழகிய உள்ளம்.

ஏர் அகம் - ஏருள்ள வீடு.

**ஏர்பூட்டியோட்டுவார்**

ஏர் பூட்டி ஓட்டுவார் - ஏரைப் பூட்டி ஓட்டுவார்கள்.

ஏர்பு ஊட்டி ஓட்டுவார் - எழுச் சியை உண்டாக்கிக் களைப் பைப் போக்குவார்.

**ஏலும்படிக்கு**

ஏலும்படிக்கு - *பொருந்தும் வழியாக.*

ஏலும் படிக்கு - *கூடுதலுக்காக.*

**ஏழாயிரம்பண்ணையில்**

ஏழாயிரம் பண்ணையில் - *ஏழாயிரம் பண்ணை என்னும் ஊரில்.*

ஏழாய் இரு அம்பு அண்ணையில் - *பெண்ணே இருப்பாயாக அம்பு நெருங்குகையில்.*

**ஏறும்படியிருக்கையால்**

ஏறும்படி இருக்கையால்-*ஏறிச் செல்லும் படி அமைந்திருத்தலால்.*

ஏறும்படி இருக்கையால் - *ஏறு மாறுபடிந்துகொடுப்பதனால்.*

**ஏற்றமருந்து**

ஏற்று அமர் உந்து - *எதிர்த்துப் போர் செய்கின்ற.*

ஏற்ற மருந்து - *தகுந்த அமுதம்.*

**ஏற்றமருவார்**

ஏற்றம் மருவு ஆர் - *உயர்வு பொருந்திய ஆத்தி.*

ஏற்று அமருவார் - *காளையின் மீது ஏறுவார்.*

**ஏற்றுக்கொடியான்**

ஏற்றுக் கொடுயான்-*ஏற்றுக் கொண்டு நான்.*

ஏற்று கொடியான் - *இடபக் கொடியை உடையவன்.*

**ஏனமா**

ஏன் அமா - *ஏன் அம்மா.*

ஏனமா - *பன்றியாக.*

**ஐயக்கர**

ஐ அக்கர - *ஐந்து எழுத்துக் களையுடையவனே!*

ஐயம் கர - *ஐயக்கடிஞையைக் கையில் உள்ளவனே!*

**ஐயங்கொடுக்கும்**

ஐயம் கொடுக்கும்-*பிச்சையளிக்கும்.*

ஐயம் கொடுக்கும் - *(உண்டோ இல்லையோ என்னும்) ஐயப் பாட்டினை அளிக்கும்.*

ஐ அங்கு ஒடுக்கும் - *(மருத்துவர்கள்) கபத்தை அவ்விடத்திலே கெடுக்கும்.*

**ஐயஞ்சமையா**

ஐயம் சமையா - *ஐயம் உண்டாகாத.*

ஐ அஞ்சு அமையா - *இருபத்தைந்து பொருந்தாத.*

**ஐயமருந்திவை**

ஐய மருந்து இவை - *ஐயனே மருந்தாகும் இவைகள்.*

ஐயம் அருந்தி வை - *பிச்சை யுணவை உண்டுவைப்பாயாக.*

**ஐயம்பகர்**

ஐயம் பகர் - *பிச்சை போடு.*

ஐயம் பகர் - *சந்தேகத்தைக் கூறு.*

ஐ அம்பகர் - *அழகிய கண்களை யுடையவர்.*

**ஐயம்புகுவார்**

ஐ அம்பு உகுவார்-*காமனுடைய ஐங்கணைகளால் அழிபவர்.*

ஐயம் புகுவார் - *பிச்சைக்குச் செல்லுகிறவர்.*

**ஐயம்புகுக்கும்**

ஐயம் புகுக்கும் - *சந்தேகத்தை உண்டாக்கும்.*

ஐ அம்பு உகுக்கும் - *ஐந்து கணை களைச் சிந்தும்.*

**ஐயம்புதையார்**

ஐ அம்பு தையார் - *காமனது மலர்க்கணைகள் ஐந்துந் தைக் கப்பெறாதவர்.*

ஐயம் புதையார் - *ஐயங்களை (சந்தேகம்) என்னுள்ளத்தில் ஏற்படுத்தாதவர்.*

**ஐயம்பெய்து**

ஐயம் பெய்து - *இரப்பவர்கட்குப் பிச்சையிட்டு.*

ஐ அம்பு எய்து-*ஐங்கணைகளைச் செலுத்தி.*

**ஐயம்பொழியும்**

ஐயம் பொழியும் - *பிச்சையை மிகுதியாகக் கொடுக்கும்*

ஐ அம்பு ஒழியும்-*காமனுடைய ஐங்கணைகள் பொருந்தாதிருக் கப்பெறும்.*

**ஐயரவாவிட்டார்**

ஐயர், அவா விட்டார்-*தலைவர், அவாவினை நீக்கியவர்கள்.*

ஐ அரவு ஆ இட்டார் - *அழகிய பாம்பாக அணிந்து கொண்டவர்.*

**ஐவர்தெரியாமல்மச்சபுரத்திருக்க**

ஐவர் தெரியாமல் மச்ச புரத்து இருக்க - *பாண்டவர்கள் யாருக்குந் தெரியாமல் மச்ச புரத்தில் தங்கியிருக்க.*

ஐவர் தெரியாமல் மச்ச புரத்து இருக்க-*ஐவிரல்கள் பொருந்திய கைகள் மீன்களைப் போன்ற கண்களிடத்திலே இருக்க.*

**ஐவனமடிக்கும்**

ஐவனம் அடிக்கும் - *மலைநெல்லை அடித்தல் செய்யும்.*

ஐ வனம் அடிக்கும் - *அழகிய காட்டில் அடிக்கும்.*

**ஒருகோட்டானை**

ஒரு கோட்டானை - *ஓர் ஆந்தையை.*

ஒரு கோட்டு ஆனை-*ஒருகொம்பினையுடைய யானை (விநாகர்.)*

ஒரு கோள் தானை-*ஒரே கொள்கையை உடைய படை.*

**ஒருபாட்டில்தேனமைத்தேன்**

ஒரு பாட்டில் தேன் அமைத்தேன்-*ஒரு கண்ணுடிப் பாட்டிலில் தேனை நிறைத்தேன்.*

ஒரு பாட்டில் தேன் அமைத்தேன்-*ஒரு செய்யுளில் தேன் போன்ற மொழிகளை அமைத்தேன்.*

**ஒருமதிகெட்டாய்**

ஒரு மதி கெட்டாய் - *ஒரு திங்களை விட்டுவிட்டாய்.*

ஒரு மதி கெட்டாய் - *ஓர் அறிவற்றவன்.*

**க்காயா**

ஒரு பேச்சுரைக்காய் - *பேய்ச்சுரைக் கொடியினுடைய ஒரு காய்.*

ஒரு பேச்சு உரைக்காயா - *ஒரு மொழி கூறமாட்டாயா?*

**ஒருமாதங்கத்துரியார்**

ஒரு மாது அங்கத்து உரியார் - *ஒப்பற்ற உமா தேவியை உடலிலே உரிமையாகக் கொண்டவர்*

ஒரு மாதங்கத்து உரியார்-*ஒரு யானையின் தோலைப் போர்த்தவர்.*

**ஒருவாசவிசை**

ஒருவா சவி சை - *ஒருவனே ஒளிதங்கிய செல்வம்போன்றவனே!*

ஒருவாச இசை-*ஒப்பற்ற மணமுடையவனே! அருளுரை வழங்கு.*

**ஒளிமறைப்பரியார்**

ஒளி மறை பரியார்-*ஒளிபொருந்திய மறையைக் குதிரையாக உடையவர்.*

ஒளி மறைப்ப அரியார் - *சீர்த்தியானது மறைத்தலுக்கு அருமையாக உடையவர்.*

**ஒற்றியூர்**

ஒற்றியூர் - *திருவொற்றியூர்.*

ஒற்றி ஊர்-*ஒத்திவைக்கப்பட்ட ஊர். தழுவிச் செலுத்து.*

**ஓங்கல்விநாயகன்**

ஓங்கல் விநாயகன்-*உயர்ச்சியையுடைய யானைமுகக் கடவுள்.*

ஓம் கல்வி நாயகன்-*ஓம் என்று தொடங்கப்படுகிற கல்விக்குத் தலைவன்*

ஓங்கு அல் விநாயகன்-*மிகுந்த இருளிலே தலைவன்.*

**ஓங்காரத்தான்**

ஓங்கு ஆரத்தான்-*சிறந்து விளங்கும் முத்து மாலையை உடையவன்.*

ஓங்காரத்தான்-*பிரணவ வடிவமானவன்.*

**ஓடிடலால்**

ஓடு இடலால் - *ஓடுகள் வேயப்படுதலால்.*

ஓடி டலால் - *ஓடுதலைச் செய்கிறபடியினால்.*

**ஓடுமிருக்கும்**

ஓடும் இருக்கும் - *ஓடானது (தேங்காய்) அமையப்பெற்றிருக்கும்.*

ஓடும் இருக்கும்-*ஓடுதலைச்செ[illegible] யும் பிறகு ஓரிடத்தில் நி[illegible] யாக இருக்கும்.*

**ஓதப்படுக்கும்**

ஓது அப்பு அடுக்கும் - *சொ[illegible] லும் கங்கை அடுத்திரு[illegible] கும்.*

ஓ தட்பு அடுக்கும் - *ஓ தவ[illegible] உண்டாகும்.*

**ஓதம்படுத்தார்**

ஓதம்படுத்தார் - *நீரைச் சடையில் தாங்கியவர்.*

ஓது அம்பு அடுத்தார்-(*பகவ[illegible] கீதையைக்) கூறிய திரும[illegible] லாகிய அம்பையுடையவர்.*

**ஓதரியான்றந்திரத்தான்**

ஓத அரியான் தம் திரத்தால் - *சொல்லுதற்கு அருமையானவன், தம்முடைய உறுதியான அறிவினால்.*

ஓதரியான் தந்திரத்தான்-(*அடியவர்கட்கு இன்னல் உற)வோ அதனைப் பொறுக்கமாட்டான்;* **ஆகமங்களை உடையவன்.**

ஓதிக்குடையவனே
ஓதி குடையவனே-ஞானமாகிய குடையை உடையவனே!
ஓதிக்கு உடையவனே-கூந்தலை யுடையவளுக் குரிமையான வனே!
ஒ திக்கு உடையவனே-ஒ திசை களை ஆடையாக உடைய வனே!

ஓதிமங்குலாவிவரும்
ஓதிமம் குலாவி வரும் - அன் னங்கள் மகிழ்ச்சியுடன் திரி யும்.
ஓதிமங்குல் ஆ இவரும் - கூந் தல் இருளைப்போன்று விளங் கும்.

ஓதிமந்திரி
ஓதி மந்திரி - சொல்லி மந்திரிக் கின்ற.
ஓதிமம் திரி - அன்னப்பறவை கள் திரிகின்ற.

ஓதியமரக்கரத்தார்
ஓதி அமர் அ கரத்தார்-(மேரு) மலை வில்லாகப் பொருந்தப் பெற்ற அழகிய கையை உடையவர்.
ஓதி அமர் அக்கரத்தார் - உரைத்துப் பொருந்துகின்ற ஐந்தெழுத்துக்களை உடைய வர்.

ஓதுவதொழியேல்
ஓதுவது ஒழியேல் - படிப்பதை விடாதே.
ஓதுவது ஒழி ஏல் - படிப்பதை விடு, சொல்வதைக் கேள்.

ஓரரவங்காட்டினர்
ஓர் அரவம் காட்டினர் - ஓர் ஒலியை உண்டாக்கியவர்.
ஓர் அரவு அங்கு ஆட்டினர் - ஒரு பாம்பினை அவ்விடத் திலே ஆடச்செய்தவர்.

ஓரூசிமேலிருபம்பரமாட்டும்
ஓர் ஊசிமேல் இருபம்பரம் ஆட் டும் - ஓர் ஊசியின் மேல் இரண்டு பம்பரங்களை ஆடச் செய்யும்.
ஓர் ஊசிமேல் இரு பம்பரம் ஆட் டும் - ஓர் ஊசியைப்போன்ற இடையின்மேல் இரண்டு பம் பரங்களைப் போன்ற கொங் கைகளை ஆட்டும்.

ஓர்விசையன்பாற்பணித்தார்
ஓர் விசையன்பால் பணித்தார்- ஒப்பற்ற அருச்சுனனிடத் திலே கட்டளையிட்டவர்.
ஓர் விசை அன்பால் பணித்தார்- ஒருதடவை அ ன் பி ஞ லே பாம்புமாலையை அணிந்தவர். ஒரு முறை அன்பினாலே கட் டளையிட்டவர்.

கசுக் கேகைக்கு
ககக்கு ஏகைக்கு - அம்புக்கு ஒன்றுந் தன்மையை உடைய சத்திக்கு.
ககக்கு ஏகு ஐக்கு - விண்ணிற் குச் சென்ற அழகிற்கு.

கங்கங்கறுக்கும்
கங்கம் கறுக்கும் - சிப்புகள் கருமையை அடையும்.
கங்கு அங்கு அறுக்கும்-கரையை அவ்விடத்தே இடித்து அழிக் கும்.

கங்கணமண்டும்
கங்கணம் மண்டும் - கைவளை கள் பொருந்தும்.

**கம் கணம் மண்டும்** - *மூகிற் கூட்டங்கள் நெருங்கும்.*
**கங்கு அண்ண மண்டும்-***வரம்பைப் பொருந்த நிறைந்திருக்கும்.*

### கங்காசலமுறலால்

**கங்காசலம் உறலால்** - *கங்கை நீரைச் சடையில் வைத்திருத்தலால்.*
**கங்கு அசலம் உறலால்** - *கழுகு மலையில் எழுந்தருளுதலால்.*

### கங்காதரன்

**கங்காதரன்** - *கங்கையைத் தாங்கியவன்.*
**கம் காது அரன்-***தலையைக் கிள்ளிய சிவன்.*
**கங்கு ஆதரன்** - *கழுகினிடத்தில் விருப்பத்தையுடையவன்.*

### கங்காளமன்னும்

**கங்கு ஆளமன்னும்** - *கழுகுகள் ஆள விளங்கும்.*
**கங்காளம் மன்னும்-***முழு எலும்புகள் பொருந்தும்.*
**கம் காளம் மன்னும்** - *தலையையும் சூலத்தையும் பொருந்தும்.*
**கம் காளம் மன்னும்** - *நீரில் தோன்றிய நஞ்சைப் பொருந்தும்.*

### கங்குலவித்துய்க்கும்

**கங்குல் அவித்து உய்க்கும்-***இருளைக்கெடுத்து ஓட்டும்.*
**கங்கு உலவி துய்க்கும்-***பருந்துகள் உலாவிப் புசிக்கும்.*

### கங்குலாவி

**கங்குல் ஆவி** - *இரவில் உயிர்.*
**கங்கு உலாவி-***பருந்து உலாவி.*

### கங்கைமதியேற்றினர்

**கங்கு ஐ மதி ஏற்றினர்** - *கருடனை மதிக்கின்ற திருமாலை வாகனமாக வுடையவர்.*
**கங்கை மதி ஏற்றினர்** - *கங்கையையுந் திங்களையும் ஏற்றி வைத்தவர்.*

### கங்கையகலா

**கங்கை அகலா-***கங்கையாற்றை விட்டு நீங்காத.*
**கங்கு ஐ அகலா-***வரம்பிடத்தை விட்டு விலகாத.*

### கங்கையார் தங்கையார்

**கங்கையார் தங்கு ஐயார்-***கங்காதேவியாரானவர் தங்கப் பெற்ற அழகையுடையவர்.*
**கம் கையார் தம்கையார்** - *வீட்டின்ப ஒழுக்கம் அமையப் பெற்ற துறவிகள் தம் அடியவர்களாக அமையப்பெற்றவர்.*

### கங்கையில்ஆயவையானனத்தான்

**கங்கை இல் ஆய ஐ யானம் நத்து ஆன்** - *கங்கையை மனைவியாகக் கொண்ட ஐயன்; ஊர்தி விரும்புகிற காளையாகக் கொண்டவன்.*
**கம் கையிலாய ஐ ஆனனத்தான்** - *நீர்வளம் பொருந்திய திருக்கைலையில் எழுந்தருளிய ஐந்து திருமுகங்களையுடையவன்.*

### கங்கையேந்திமாதங்கங்கலந்து

**கம் கை ஏந்தி மாது அங்கம் கலந்து** — *தலையோட்டைக் கையிற் கொண்டு உமை வடிவத்தோடு கலந்து.*

கங்கை ஏந்தி மாதங்கம் கலந்து- *நீரை ஏந்தி யானையையுந் தன்னிடத்திற் கொண்டு.*

**கசகர்ணவித்தை**

கசகர்ண வித்தை - *வித்தை வகைகளில் ஒன்று.*
கச கர்ண வித்தை-*யானையைப் போன்ற தனங்கள் செய்யும் வேடிக்கை.*

**கசக்கவில்லை**

கசக்கவில்லை - *சுவை கெட வில்லை.*
கசக்கவில்லை - *கசக்கிப் பிழிய வில்லை.*

**கச்சங்கடக்கும்**

கச்சு அங்கு அடக்கும்-*கச்சினை அங்கு அடக்குதலைச் செய் யும்.*
கச்சம் கடக்கும் - *அளவினைத் தாண்டி மிகுதிப்படும்.*

**கச்சிருக்கையால்**

கச்சு இருக்கையால் - *இரவிக் கையிருத்தலால்.*
கச்சு இருக்கையால்-*வெறுத்து இருத்தலால்.*

**கச்சுப்பயோதரவண்ணப்பொன்-மாலை**

கச்சு பயோதரவண்ணம் பொன் மாலை - *வெறுத்து முகில் நிறத்தையுடைய, அழகிய கண்ணபிரானை.*
கச்சுப்பயோதர வண்ணம் பொன் மாலை - *வாரணிந்த தனத்தின் மீதுள்ள ஒளி பொருந்திய சொர்ணமாலை.*

**கச்சூரமுந்தும்**

கச்சூரம் உந்தும் - *கழற்சிக் காயைச் செலுத்தும்*
கச்சு ஊர முந்தும் - *கச்சானது புடைபெயர மேற்படும்.*

**கஞ்சங்குதிக்கும்**

கம் சங்கு உதிக்கும்-*வெண்மை யான சங்கு தோன்றும்.*
கஞ்சம் குதிக்கும் - *தாமரையில் குதிக்கப்பெறும்.*

**கஞ்சங்குலவு சிறப்பாலும்**

கஞ்சம் குலவு சிறப்பாலும் - *தாமரை மலரில் வீற்றிருக் கிற தன்மையாலும்.*
கம் சங்கு உலவு சிறப்பாலும் - *நீருஞ் சங்குகளும் செல்லு கின்ற பெருமையினாலும்.*

**கஞ்சத்தகத்து**

கஞ்சத்து அகத்து - *தாமரை மலரினிடையில்*
கம்சத்த கத்து - *நீரையுடைய ஒலிக்கின்ற.*

**கஞ்சமுருக்கும்**

கஞ்சம் முருக்கும் - *தாமரை மொட்டினைக் கெடுக்கும்.*
கஞ்சம் உருக்கும் - *வெண் கலத்தை உருகச் செய்யும்.*

**கஞ்சனேரக்கழல்கையுறும்**

கஞ்சம் நேர கழல்கை உறும் - *தாமரை மலருக்கிணையாகக் காலுங்கையும் பொருந்தும்.*
கஞ்சன் நேர் அக்கு அழல் கை உறும் - *உலோபிக்கு முன் கண் அழலுதலைப் பொருந் தும்.*
கஞ்சன் நேரக் கழல்கை உறும்- *நான்முகன் எதிர்ப்பட(கச்சு) நெகிழ்தலையுறும்.*

**கஞ்சனையைப்பார்க்கும்**

கஞ்சனையை பார்க்கும் - *கண்ணுடியைப் பார்த்திருக்கும்.*
கஞ்சம் நையை பார்க்கும் - *தாமரைப்பூ நைதலைப் பார்த்திருக்கும்.*

**கஞ்சனையொப்பாகும்.**

கஞ்சனை ஒப்பாகும் - *நான்முகனுக்கு ஒப்பாகும்*
கஞ்சனை ஒப்பாகும் - *கண்ணுடியைப் போன்றிருக்கும்.*

**கடமதயானை**

கட மதயானை - *கதுப்பையும் மதத்தையும் உடைய யானை.*
கடு அம் மத யானை-*கொடுமை பொருந்திய அழகிய மன்மதனது யானையாகிய இருள் (கூந்தல்).*

**கடமுறலால்**

கடம் உறலால் - *குடம் பொருந்துதலால்.*
கடம் உறலால் - *மதநீர் இருத்தலால்.*

**கடம்பணி**

கடம் பணி - *குடமானது அணிகலன்களை.*
கடம்பு அணி - *கடம்ப மலர் மாலையை அணிகிற.*
கடம் பணி - *குடமானது பணிகிற.*

**கடம்பமரமொய்த்திடத் தழைத்து**

கடம்பமரம் மொய்த்திட தழைத்து - *கடம்ப மரங்கள் நெருங்கச் செழிப்புற்று.*
கடம்பமரம் மொய்த்திட தழைத்து - *மத நீர்வண்டுகள் மொய்க்குமாறு மிகுதிப்பட்டு.*

**கடலையவலுடனீந்தால்**

கடலை அவலுடன் ஈந்தால் - *கடலையை அவலுடன் கலந்து கொடுத்தால்.*
கடலை அ வல்உடன் ஈந்தால் - *கடல் போன்ற கண்ணை அந்தச் சூதாடு கருவிபோன்ற தனத்துடன் தந்தால்.*
கடலை அவலுடன் ஈந்தால் - *கடலைக் குளத்தோடு தந்தால்.*

**கடவாரணம்**

கடவுஆரணம் - *செலுத்துகின்ற மறை.*
கட வாரணம் - *மதம் பொருந்திய யானை.*

**கடவுண்மறைத்தலையார்**

கடவுள் மறை தலையார் - *(மறைக்கடவுள்) தலையார் நான்முகனது தலைமாலையை உடையவர்.*
கடவு உள் மறைத்து அலையார்- *செலுத்துகின்ற உள்ளத்தை அஞ்ஞானத்தில் மறைத்து வருத்தாதவர்.*

**கடனிறவண்ணன்**

கடல் நிற வண்ணன் - *கடல் போன்ற நிறத்தையுடைய திருமால்.*
கடன் இற அண்ணன் - *மத நீரானது கலந்துபோக.*

**கடிதடம்**

கடிது அடம் - *விரைவாகப் பிடிவாத குணம்.*
கடி தடம் - *அல்குல்.*
கடி தடம் - *மணமுள்ள நீர்நிலை.*

**கடியவம்போய்**

கடிய அம்போய் ! - *கூரிய அம்பினையுடையவனே.*

கடி அவம் போய் - *வெறுக்கப் படுகிற வின் தொழிலை விட்டு.*

**கடினப்புரசையுடைத்தாகி**

கடின புரசை உடைத்து ஆகி - *வலிமையுள்ள புரசமரங்களை உடையதாகி.*

கடி இனபுரசை உடைத்து ஆகி- *சிறந்த முறுக்குள்ள கழுத்துக் கயிற்றை உடையதாகி.*

**கடுகத்தனை**

கடு கத்தனை - *நஞ்சினையுண்ட கடவுளை.*

கடுகு அத்தனை - *கடுகு அவ்வளவு.*

**கடுக்காய்ப்பூ**

கடுக்காய்ப்பூ - *கடுக்காயின் மலர்.*

கடுகாய்பூ - *நஞ்சு காய்க்கின்ற மலர் (கண்).*

**கடுக்கைகாட்டி**

கடுக்கை காட்டி - *கொன்றையைத் தன்னிடத்திலே காண்பித்து.*

கடு கை காட்டி - *நஞ்சைத் தன் கையிலே காட்டி.*

**கடைக்கணியார்**

கடைக்கு அணியார் - *தலைவாசலுக்கு அண்மையில் வந்தவர்.*

கடைக்கணியார்-*அருள் செய்ய மாட்டார்.*

**கடையாவஞ்சா**

கடையா வஞ்சா - கீழ்ப்பட்ட வஞ்சகனே !

கடையா அஞ்சு ஆ - *கடைந்து பஞ்ச தருக்களும் காமதேனுவும்.*

**கட்கருஞ் சுரும்பு**

கண் கரும் சுரும்பு - *கண்ணாகிய கரிய வண்டு.*

கட்கு அரும் சுரும்பு - *தேனின் பொருட்டு அருமையாகிய வண்டுகள்.*

**கட்கந்தந்துன்னும்**

கள் கந்தம் துன்னும் - *தேன் மணத்தைப் பொருந்தும்.*

கட்கம் தந்து உன்னும்-*வாளைத் தந்து நினைக்குமாறு செய்யும்.*

**கட்சிவந்துகூடும்**

கட்சி வந்து கூடும் - *கூட்டிலே வந்து சேரும்.*

கண் சிவந்து கூடும் - *கண்ணானது சிவக்கப்பெற்றுச் சேரும்.*

**கட்டங்கங்கையுடையார்**

கட்டங்கம் கை உடையார் - *மழுவைக் கையில் உடையவர்.*

கட்டு அம் கங்கை உடையார் - *அணிந்த நீரையுடைய கங்கையைத் தாங்கியவர். (அம் கங்கை - அழகிய கங்கை எனினுமாம்.)*

**கட்டங்கடக்கும்**

கட்டம் கடக்கும் - *துன்பங்களை நீக்கும்.*

கட்டு அங்கு அடக்கும் - *கட்டானது அவ் விடத்திலே அடக்கிக்கொள்ளும்.*

**கட்டங்கழித்திடார்**

**கட்டு அங்கு அழித்திடார்**-*மறை நெறியை அவ்விடத்தில் அழிக்காதவர்.*

**கட்டம் கழித்திடார்** - *துன்பத்தைப் போக்காதவர்.*

**கட்டங்கழிக்கும்**

**கட்டம் கழிக்கும்** *துன்பத்தைப் போக்கும்.*

**கட்டு அங்கு அழிக்கும்**-*களைந்து அவ்விடத்தே கெடுக்கும்.*

**கட்டப்படுத்தார்**

**கட்ட படுத்தார்** - *கட்டுவதற்காகப் படுத்தவர்.*

**கட்டப் படுத்தார்** - *துன்பப் படுத்தமாட்டார்.*

**கட்டமருந்திடலால்**

**கட்டம் அருந்திடலால்**-*கழிவுப் பொருளை உண்பதால்.*

**கட்ட மருந்திடலால்**-*ஆடவரை வசப்படுத்த மருந்து வைப்பதால்.*

**கட்டளைமாறு**

**கட்டளை மாறு** - *நிவந்தங்கள் மாறப் பெறுத.*

**கள் தளை மாறு** - *தேனின் கட்டுகள் மாறப் பெறுத.*

**கட்டளையினுடும்**

**கட்டளையில் நாடும்** - *(ஆசிரியருடைய) ஒழுங்கு முறையில் விருப்பங்கொள்ளும்.*

**கட்டு அளையில் நாடும்**-*வரம்பிலுள்ள வளைகளிற் செல்லும்.*

**கட்டாமரை**

**கள் தாமரை** - *தேன் பொருந்திய தாமரை.*

**கண் தாமரை** - *கள் பொருந்திய மாலையணிந்தவரை.*

**கட்டா மரை**-*பிணிக்கப்பெறுத மான் முதலியன.*

**கட்டாரிவரும்**

**கட்டாரி வரும்** - *வாளின்செயல் போன்ற செயல் நேரும்.*

**கள்தார் இவரும்**-*தேன்பொருந்திய மாலையானது தங்கியிருக்கும்.*

**கட்டியங்கூறும்**

**கட்டியம் கூறும்** - *கட்டியஞ் சொல்லும்.*

**கட்டி அங்கு ஊறும்** - *வெல்லக் கட்டியின் சாறு அங்கே சுரக்கும்.*

**கணக்காயன்**

**கணக்காயன்** - *ஆசிரியன்.*

**கண் அ காயன்** - *எண்ணுகிற அந்தப் பரமாகாயத்தை யுடையவன்.*

**கணப்போதில் செறி விலங்கை-**
**-மானிடமாக்கிவிட்டீர்**

**கணப்போதில் செறிவிலங்கை மானிடமாக்கிவிட்டீர்**-*கணப் பொழுதில் நெருங்கிய மிருகத்தை மானுட சாதியாக்கி விட்டீர்.*

**கண் அப்போதில் செறிவில் அம் கைமான் இடம் ஆக்கி விட்டீர்** - *கண்ணுகிய அந்தக் கருங்குவளை மலரின்மேல் மிகுதியாகிய ஒளியுள்ள அகங்கையாகிய தாமரை மலர் என்னும் திருமகள் இருப்பிடத்தைச் சேர்த்துவிட்டீர். (கை தாமரை மலருக்குவமை) (தாமரை மலர் திருமகள் இடம். மான் - திருமகள்.)*

**கணம்புரத்தை**

கணம் புரத்தை - *கூட்டமாகிய ஊர்களை.*

கண் அம்பு உரத்தை - *கண்களாகிய அம்பு மார்பினை.*

**கணிச்சித்திருக்கையான்**

கண் இச்சித்து இருக்கையான் *(அடியார்கள்) இடத்திலே விரும்பியிருத்தலையுடையவன்.*

கணிச்சி திருகையான்-*மழுவ யுதமேந்திய அழகிய கையை உடையவன்.*

**கண்டங்கடக்கும்**

கண்டு அங்கு அடக்கும் - *கற்கண்டின் சுவையை அவ்விடத்தே அடக்கிவிடும்.*

கண்டம் கடக்கும் - *கண்டங்களை (நாடுகளை) யெல்லாம் கடந்துசெல்லும்.*

**கண்டங்களிக்கும்**

கண்டம் களிகும - *கழுத்தானது களிப்பை யடையும்.*

கண்டு அங்கு அளிக்கும் - *பார்த்து அவ்விடத்தே கொடுக்கும்*

**கண்கட்டுவித்தை**

கண் கட்டு - *பார்ப்பவர்களுடைய கண்ணை மறைத்துச் செய்யும் வேடிக்கை.*

கண்கட்டு வித்தை - *கண்ணைக் கையினால் மறைத்துக்கொள்ளும் வேலை.*

**கண்டகரச்சாடும்**

கண்டகர் அச்சு ஆடும் - *பகைவர்களுடைய உடல் அழிந்து ஆடும்.*

கண் தகர சாடும் - *கணுக்கள் உடையும்படி ஒடிக்கும்.*

**கண்டங்கடியரவர்**

கண்டம் கடி அரவர் - *கழுத்திலே கடிக்கின்ற பாம்பு மாலையை அணிந்தவர்.*

கண் தங்கு அடியர் அவர் - *திருமாலின் கண் தங்கப்பெற்ற திருவடியை உடையவர்.*

**கண்டங்கரியன்**

கண்டம் கரியன் - *கழுத்துக் கருமையானவன்.*

கண் தங்கு அரியன் - *(என்) இடத்திலே தங்குகிற அருமையானவன்.*

**கண்டங்கரியார்**

கண்டம் கரியார் - *கழுத்துக் கருமையாக அமையப்பெற்றவர்.*

கண்டு அங்கு அரியார்-*பார்த்து அவ்விடத்திலே அரியாதவர்.*

கண்டு அங்கு அருமை செய்வேன் - *பார்த்து அவ்விடத்திலே [illegible]மைப் படுத்து*

கண்டம் கருமை செய்வேன் - *கழுத்தைக் கறுப்பாகச் செய்வேன்.*

**கண்டகனுவின்புற**

கண்ட கனு இன்புற - *கண்டகனுவை எண்ணி இன்பத்தை யடைய.*

கண்தக நா இன்புற - *கண் தகுதியாகக் காண நா இன்பத்தையடைய.*

**கண்டங்கறுத்தார்**

கண்டம் கறுத்தார் - கழுத்துக் கருமை நிறம் வாய்க்கப்பெற்றார்.

கண்டு அங்கு அறுத்தார் - பார்த்து அவ்விடத்திலே (வேள்விக் களத்திலே) அறுத்துப் போக்கினர்.

**கண்டங்கார்பூத்திருந்தார்**

கண்டம் கார் பூத்து இருந்தார்- கழுத்துக் கருமைநிறம் அமையப்பெற்று விளங்கினர்.

கண்தங்கு ஆர்பூ திருந்தார் - (தாமையி)னிடத்தில் உண்டாகிய பூவிற் பகையுடையவர்.

**கண்டத்தானம்புயத்தான்**

கண்டத்தான் அம்புயத்தான் - கழுத்தையுடையவன் நான்முகன்.

கண்டத்தான் அம் புயத்தான் - நாட்டை உடையவன் அழகிய தோளை உடையவன்.

**கண்டலங்கார**

கண்டல் அங்கு ஆர - தாழை அவ்விடத்திலே பொருந்த.

கண்டு அலங்காரம் - பார்த்து அலங்காரத்தை.

**கண்டவியப்பண்ணும்**

கண்டு அவியபண்ணும் - கற்கண்டின் சுவையைக் கெடுக்கும்.

கண்ட வியப்பு அண்ணும் - பார்த்த வியப்பினைப் பொருந்தும்.

கண்

டும் சோறும் பொருந்தும்.

கண்டு அனம் துன்னும் - பார்த்து அன்னப் பறவை பொருந்தும்.

கண் தனம் துன்னும் - கண்ணையும் கொங்கையையும் பொருந்தும்.

கண்டல் நந்து உன்னும்-தாழையையும் சங்குகளையும் எண்ணும்.

கண்டனம் துன்னும் - மறுப்புக்கள் பொருந்தும்.

**கண்டனையார்**

கண்டனை யார் - பார்த்தாய் எவர்?

கண்டு அனையார் - கற்கண்டைப் போன்ற இனிய மொழியை உடைய பெண்கள்.

கண்தனை ஆர் - கண்ணைப் பொருந்திய.

**கண்டழைக்குங்காலம்**

கண் தழைக்கும் காலம்-கணுக்கள் செழிக்குங் காலம்.

கண்டு அழைக்குங் காலம் - பார்த்துக் கூப்பிடுங் காலம்.

**கண்டிகையாரங்கூர்**

கண்டிகை ஆரம்கூர்-கண்டிகை மாலை மிகுந்திருக்கும்.

கண்திகை ஆரம்கூர் - கண்களைக் கூசச்செய்யும் முத்துக்கள் ஒளி வீசும்.

**கண்டிக்குமரன்**

கண்டி குமரன் - கண்டியில் எழுந்தருளிய முருகன்.

கண்டிக்கும் அரன் - தண்டிக்குஞ் சிவபெருமான்.

**கண்டிறந்தார்**

**கண்டு இறந்தார்** - *பார்த்து விட்டுச் செத்தார்.*

**கண் திறந்தார்** - *விழிகளைத் திறந்தார்.*

**கண்டிறவாமலிளநீர் கொடுத்தென்**

**கண் திறவாமல் இளநீர் கொடுத்து என்** - *நீரைக் குடிப்பதற்குக் கண்ணைத் திறவாமல் இளநீரைக் கொடுத்து என்ன பயன்?*

**கண் திறவாமல் இளநீர் கொடுத்து என்** - *கண்ணை மூடிக்கொண்டு இளநீர் போன்ற கொங்கைகளைக் காட்டியதனால் என்ன பயன்.*

**கண்டீரவங்கூர்**

**கண்டீரவம் கூர்** - *அரிமாவைப் போற் பொருந்தி யிருக்கும்.*

**கண்தீர அங்கு ஊர்** - *துன்பத்தைத் தவிர்க்கும்படி அங்கே செல்லுகின்ற (கண் - உறு கண்)*

**கண்டூதியாரும்**

**கண்டு ஊதி ஆரும்** - *பார்த்து ரீங்காரஞ் செய்து தங்கும்.*

**கண்டூதி ஆரும்** - *தினவு பொருந்தியிருக்கும்.*

**கண்டொன்று சொல்லார்**

**கண்டு ஒன்று சொல்லார்** - *ஒன்றைப் பார்த்து மற்றொன்றைச் சொல்லார்.*

**கண்டு ஒன்று சொல்லார்** - *கற்கண்டின் சுவை பொருந்திய சொல்லையுடைய பெண்கள்.*

**கண்ணப்பருக்கருள்வார்**

**கண்ணப்பருக்கு அருள்வார்** - *கண்ணப்ப நாயனருக்கு அருள்செய்வார்.*

**கண் அப்பர் உக்கர் உள்வார்** - *கண்ணையுடைய அப்பனாக உள்ளவர், காளையில் ஏறுபவர், நினைப்பவர்.*

**கண்ணாடி வீழும்**

**கள்நாடி வீழும்** - *கள்ளை நாடி மேலே விழுதலைச் செய்யும்.*

**கண்ணாடி வீழும்**-*கண்ணாடியை ஒத்திருக்கும்; கண்ணாடியைப் போல் விரும்பப்படும் எனினுமாம்.*

**கண்ணாரஞ்சிந்தும்**

**கண் ஆரம் சிந்தும்** - *கணுக்களில் இருந்து முத்தை வெளிப்படுத்தும்.*

**கண் நாரம் சிந்தும்** - *கண்களில் இருந்து இன்பக் கண்ணீரைச் சொரியும்.*

**கண்ணிக்குமாரன்**

**கண் இக்கு மாரன்** - *கணுக்களையுடைய கரும்பு வில்லையேந்திய காமன்.*

**கண்ணி குமாரன்** - *கொன்றை மாலையை அணிந்த சிவபெருமானுடைய மகன்.*

**கண்ணியரிப்பார்**

**கண்ணியர் இப்பார்** - *மாலையை உடையவர் இவ்வுலகில்*

**கண்ணி அரிப்பார்** - *(அஞ்ஞான) வலையைக் கெடுப்பவர்.*

**கண்ணிவந்த**

கண் நிவந்த - *கண்ணானது உயர்ச்சி பெற்ற.*
கள்நிவந்த-*தேன் மிகுதிப்பட்ட.*
கண்ணிவந்த - *மாலைகள் வந்தன.*
கண்ணி வந்த - *நினைத்து வந்தவை.*

**கண்ணிவாசஞ்செய்**

கண்ணி வாசம்செய் - *மாலை மணத்தினை உண்டாக்கும்.*
கண்ணி வாசஞ் செய் - *கருதி வசித்தலைச் செய்கின்ற*
கள் நிவாசம் செய் - *தேன் பொருந்தியிருக்கும்.*

**கண்ணீராறுங்கலந்திருப்பன்**

கண்ணீராறும் கலந்திருப்பன் - *கண் பன்னிரண்டைப் பொருந்தியிருப்பான்.*
கண்ணீர் ஆறும் கலந்திருப்பன்- *கண்ணீரை ஆறாகப் பொருந்தப் பெற்றிருப்பன்.*

**கண்ணோட்டஞ்செய்யும்**

கண்ணோட்டம் செய்யும் - *அருளைச் செய்யும்.*
கண் ஓட்டம் செய்யும்-*கண்கள் ஓடுதலைச் செய்யும்.*

**கதத்தானை**

கதத்து ஆனை-*சினத்தையுடைய ஆனை.*
கதத்தால் நை - *சினத்தால் வருந்துகிற.*
கதம் தானை - *சினத்தையுடைய படை.*

**கதிருடனெற்கோட்டையளந்து**

கதிருடன் நெல் கோட்டை அளந்து - *நெற்கதிர்களுடன் நெல்லைக் கோட்டையாக அளந்து.*
கதிருடன் எல்கோட்டை அளந்து - *ஞாயிற்றோடு திங்கள் மண்டிலம் அளவுசென்று.*

**கதிர்காமத்தோன்**

கதிர்காமத்தோன் - *கதிர்காமத்தில் எழுந்தருளியுள்ளவன்.*
கதிர் காமத்தோன் - *விளங்குகின்ற ஆசையை உடையவன்.*

**கத்தங்கொழிக்கும்**

கத்து அங்கு ஒழிக்கும் - *பிதற்றுதலை அங்கே கெடுக்கும்.*
கத்து அம் கொழிக்கும் - *ஒலிக்கின்ற நீர் (கரையில்) ஒதுக்கும்*

**கத்தர்கணிச்சிப்படையார்**

கத்தர் கணிச்சிப் படையார் - *தலைவர் மழுப்படையை உடையவர்.*
கத்தர்கண் இச்சிப்பு அடையார் - *போற்றாதவர்களிடத்தில் விருப்பங்கொள்ளாதவர்.*

**கத்திகையிற் சுற்றும்**

கத்திகையில் சுற்றும் - *மலர் மாலையில் சுற்றித் திரிதலைச் செய்யும்.*
கத்தி கையில் சுற்றும் - *கத்தியைக் கையிலே வைத்துக் கொண்டு சுற்றுகிற.*

**கத்தியுலவும்**

கத்தி உலவும் - *கத்தியானது விளங்கும்*
கத்தி உலவும் - *கத்திக்கொண்டு திரியும்.*

**கந்தங்கலைக்கும்**

கந்து அங்கு அலைக்கும் - கட்டுத் தறியை அந்த இடத்தில் அசைக்கிற.

கந்தம் கலைக்கும் - [illegible]து மணத்தைக் கலைத்துவிடுகிற.

**கந்தமாதனங் கண்டுவந்தேன்**

கந்தமாதனம் கண்டு வந்தேன் - கந்தமாதன மலையைப் பார்த்துவிட்டு வந்தேன்.

கந்த மா தனம் கண்டு உவந்தேன் - வாசனை பூசப்பெற்ற பெரிய கொங்கைகளைப் பார்த்து மகிழ்ந்தேன்.

**கந்தம் நுகர்ந்திடலால்**

கந்தம் நுகர்ந்திடலால் - மணத்தை முகர்வதனால்.

கந்தம் நுகர்ந்திடலால் - கிழங்குகளைத் தின்பதால்.

**கந்தரங்கண்டார்க்கும்**

கந்தரம் கண்டு ஆர்க்கும் - கழுத்தைப் பார்த்து ஆரவாரஞ் செய்து ஒலிக்கும்.

கந்தரம் கண்டு ஆர்க்கும் - முகிலைப் பார்த்து ஆரவாரஞ் செய்யும்.

கந்தர் அங்கு அண்டார்க்கும் - முருகக்கடவுள் அவ்விடத்திலே நெருங்காதவர்களுக்கும்.

**கந்தரத்தர்**

கந்தரத்தர் - கழுத்தையுடையவர்.

கந்தர் அத்தர் - முருகன் தந்தை.

**கந்தரங்கம் பணி**

கந்தர் அங்கம் பணி - முருகர் எலும்பைப் பணிந்த.

கந்தரம் கம்புஅணி - கண்டத்தில் சங்கினை யேந்திய.

**கந்தருவந்தேரூர்**

கந்தருவம் தேர்ஊர் - கந்தருவம் எனும் பண்ணைத் தேர்ந்து பாடி உலாவும்.

கந்தருவம் தேர்ஊர் - குதிரைகளையுந் தேர்களையுஞ் செலுத்துகின்ற

**கந்தனையா**

கந்தம் நையா - மணம் நீங்காத.

கந்தன் ஐயா - முருகக் கடவுளுக்குத் தந்தையே!

**கந்தனையேயொக்கும்**

கந்தனையே ஒக்கும் - முருகனையே ஒத்திருக்கும்.

கம் தனையே ஒக்கும் - முகிலையே ஒத்திருக்கும்.

**கந்தித்தலைசேர்**

கந்தித்து அலைசேர் - பரிமளித்து அலையொடு பொருந்தும்.

கந்தி தலைசேர் - கமுகின் உச்சியிற் பொருந்தும்.

**கந்துகந்தேரோட்டும்**

கந்துகத்து ஏர் ஓட்டும் - பந்தினது அழகை ஓடச்செய்யும்.

கந்துகம் தேர் ஓட்டும் - குதிரைகள் பூட்டப்பட்ட தேரினை ஓட்டும்.

**கந்துகமல்கும்**

கந்துகம் அல்கும் - பந்துகள் தங்கப்பெறும்.

கந்துஉக மல்கும் - கட்டுத்தறி சிதையுமாறு நிற்கும்.

**கபாலந்தரித்த கரத்தார்**

கப ஆலம்தரித்து அகரத்தார் - *கபமாகிய நஞ்சைச் சுமந்து கொண்டு ஊரில் உள்ளவர்கள்.*

கபாலம் தரித்த கரத்தார் - *மண்டையோட்டை யேந்திய கையை உடையவர்.*

**கப்பங்கொடுக்கும்**

கப்பு அங்கு ஒடுக்கும் - *கிளையை அவ்விடத்தே வளைத்துக் கொடுக்கும்.*

கப்பம் கொடுக்கும் - *திறை கொடுக்கும்.*

**கப்பணமன்னும்**

கப்பணம் மன்னும் - *கப்பணம் என்னும் ஆயுதம் பொருந்தியிருக்கும்.*

கப்பு அண மன்னும் - *கவர்ச்சி பொருந்த விளங்கும். (கப்பு - கவர்ச்சி)*

**கப்பந்தருவார்**

கப்பம் தருவார்-*கப்பம் கொடுப்பவர்கள்.*

கப்பு அம்தரு ஆர் - *கிளைகள் உடைய அழகிய மரம் பொருந்திய.*

**கப்பலைத்தடவி வாங்கும்**

கப்பலை தடவி வாங்கும்-*கப்பலை ஏற்றுத் தொட்டுத் தொட்டுத் திரும்பும்.*

கப்பு அலைத்த அடவி வாங்கும்- *கிளைகள் ஆடும் மரக் கூட்டங்களைக் கொண்டிருக்கும்.*

**கம்பத்தானைக்கடுத்தார்**

கம்பத்து ஆனைக்கு அடுத்தார் - *நடுக்கத்தை யடைந்த யானைக்கு அண்மையிற் சென்றார்.*

கம் பத்தானை கடுத்தார் - *தலை பத்துடைய இராவணனைச் சினந்து அழித்தார்.*

**கம்பத்திவரும்**

கம்பத்து இவரும் - *கம்பத்திலே ஏறும்.*

கம் பத்தி வரும் - *அலைகளின் வரிசை வரும்.*

**கம்பமாவோடும்**

கம்பம் ஆ ஓடும் - *நடுக்கமாகக் கெடும்.*

கம்பம் மா ஓடும் - *கம்பத்திற் கட்டுதற்குரிய யானைகள் விரைந்து செல்லும்.*

**கம்பலத்திலேறும்**

கம்பலத்தில் ஏறும் - *கம்பளத்தில் ஏறியிருக்கும்.*

(பூ) கம்பலத்தில் ஏறும் - *பாக்கு மரத்தின் குலைப் பழத்தில் ஏறியிருக்கும்.*

**கம்பலையோடூரும்**

கம் பலையோடு ஊரும் - *முழக்கத்துடன் செல்லும்.*

கம்பு அலையோடு ஊரும் - *சங்குகள் திரைகளுடன் தவழும்.*

**கம்புளிருக்கும்**

கம்புஉள் இருக்கும் - *கம்பங் கொல்லைக்குள் இருக்கும்.*

கம்புள் இருக்கும் - *சம்பங் கோழி தங்கியிருக்கும்.*

**கம்மிக்குலாவும்**

கம் மிக்கு உலாவும்-*நீர்மிகுந்து அசையும்.*

கம்மி குலாவும் - *நெருங்கிச் சஞ்சரிக்கும்.*

**கரங்குவித்தோர்**

**கரம் குவித்தோர்** - *கையைக் குவித்து வணங்கியவர்கள்.*

**கரம் குவித்தோர்** - *வரிப்பணத்தைக் குவித்தவர்கள்.*

**கரத்தனயனத்தன்**

**கரத்தன் அயன் அத்தன்** - *(சங்கேந்திய) கையை உடைய திருமாலுக்கும் நான்முகனுக்கும் தலைவன்.*

**கரத்த நயனத்தன்** - *ஒளி தங்கிய கண்களை உடையவன்.*

**கரத்திகிரியான்**

**கரம் திகிரியான்** - *ஒளி பொருந்திய ஆழிப்படையுடையவன்.*

**கர திகிரியான்** - *கையில் கோவர்த்தன மலையை உடையவன்.*

**கரந்தரித்தான்**

**கரந்து அரித்தான்** - *ஒளிந்து அழித்தவன்*

**கரம் தரித்தான்** - *கையிலே அணிந்தவன்.*

**கரந்துவைத்தவேணியார்**

**கரந்துவைத்த வேணியார்** - *மறைத்துவைக்கப்பட்ட கங்கையை உடையவர்.*

**கரந்துவைத்த வேணியார்** - *மறைத்துவைக்கப்பட்ட சடையை உடையவர்.*

**கரந்தைவரும்**

**கரந்தை வரும்** - *சிவகரந்தை என்னும்பச்சிலை உண்டாகும்.*

**கரம் தைவரும்** - *கையானது தடவுதலைச் செய்யும்.*

**கரவரை**

**கர வரை** - *கையை உடைய யானை.*

**கரவரை** - *கபடர்களை.*

**கரவாதவன்**

**கர ஆதவன்** - *ஒளியை உள்ள கதிரவன்.*

**கரவாதவன்** - *மறைக்காதவன்.*

**கரவில்**

**கரவில்** - *வஞ்சனையில்.*

**கரவில்** - *கையில் உள்ளவில்.*

**கரவு இல்** - *வஞ்சனை யில்லாத.*

**கரவீரமன்னும்**

**கரவீரம் மன்னும்** - *அலரியைப் பொருந்தும்.*

**கரம் ஈரம் மன்னும்** - *கை ஈரமாக இருக்கும்.*

**கரவு ஈர மன்னும்** - *(கொடையாளர்) ஒளித்தலாகிய கரத்தற் பண்புகெட விளங்கும்.*

**கரிக்குருவிகற்பித்தார்**

**கரி குருவி கற்பித்தார்** - *(மதுரையில்) கருங் குருவிக்கு அருள் உரைகளைப் போதித்தார்.*

**கரிக்கு உரு விகற்பித்தார்** - *யானைக்கு உருவம் வேறுபடச் செய்தார்.*

**கரித்தோலன்**

**கரித்தோலன்** - *கறுப்புத்தோலை உடையவன்.*

**கரித்தோலன்** - *யானைத் தோலைப் போர்த்தியவன்.*

**கரிமாவிழை**

**கரிமா இழை** - *எண்வகைச் சித்திகளுள் ஒன்றாகிய கரிமா என்பதைச் செய்கின்ற.*

**கரி மா விழை** - *யானையையுங் குதிரையையும் விரும்புகின்ற.*

**கரியமாலே**

கரிய மாலே - *கருமையான மாலைக்காலம்.*
கரிய மாலே - *கருநிறம் உள்ள திருமாலே.*

**கரியானகத்தியன்**

கரியான் அகத்துஇயல் - *திருமாலின் உள்ளத்திலே பொருந்திய.*
கரியான் அகத்தியன் - *சாட்சியான அகத்திய முனிவர்.*

**கருநையாதிவரப்பரிந்தே**

கருநை ஆதி வர பரிந்தே - *பொரிக்கறி முதலியன வரும்படியாக விரும்பி.*
கரு நையாது இவர பரிந்தே - *கருச் சிதையாமல் மேலே படர்ந்து ஓடி*

**கருப்பஞ்சிலேயை**

கருப்பு அம்சிலேயை - *கரும்பினால் ஆகிய அழகிய வில்லே.*
கருப்பு அம்சிலேயை - *கருநிற நீரின் ஒலியை.*

**கருப்புங்கலகமுமையம்புகலும்**

கருப்பும் கலகமும் ஐயம்புகலும் - *பஞ்சத்தையுங் கலகத்தையும் பிச்சை புகுதலேயும்.*
கருப்பும் கலகமும் ஐஅம்பு உகலும் - *கருப்பு வில்லும் அதனால் விளையும் காமப் போரையும் ஐங்கணைகள் சிந்துதலேயும்*

**கருமாமருப்பக்கம்**

கருமாமர் உப்பக்கம் - *கருமையை உடைய மாமனாகிய தக்கனது பின்பக்கம்.*
கரு மா மருப்பு அக்குஅம் - *பன்றிக் கொம்பும் சங்குமணியுங் கங்கையும்.*

**கருமான்**

கருமான் - *இரும்பு வேலே செய்யும் கொல்லன்.*
கருமான் - *யானே.*

**கருமை**

கருமை - *கரியநிறம்.*
கரு மை - *கரிய ஆடு.*

**கரும்பணிகளோங்கும்**

கரும் பணிகள் ஓங்கும் - *கருமையான பாம்புகள் மிகுதியாக விருக்கும்.*
கரும்பு அணிகள் ஓங்கும் - *கரும்புகளின் அலங்காரங்கள் தழைக்கும்.*

**கரும்பனே**

கரும் பனே - *கரிய பனேமரம்.*
கரும்பனே - *கரும்பு வில்லேயுடைய காமனே.*

**கரும்பிறை**

கரும் பிறை - *கரிய பிறைத திங்கள்.*
கரும்பு இறை - *கரும்பு வில்லேயுடைய காமன்.*

**கரும்புகையினுல்**

கரும் புகையினுல் - *கருமையான புகையோடு கூடியிருத்தலினுல்.*
கரும்பு கையினுல் - *கரும்பைக் கையிலே கொண்டிருக்கிறபடியால்.*

**கரும்புண்மலி**

கரும் புள் மலி - *வண்டுகள் மிகுந்துள்ள.*

கரும்பு உள் மலி - *கரும்பினுள்ளே சிறந்துள்ள.*
கரும் புன் மலி - *பெரிய புன் விளங்கப்பெறும்.*

**கரும்புருவமானார்**

கரும் புருவம் மானார் - *கரிய புருவத்தையுடைய மானைப் போன்ற பெண்கள்.*
கரும்பு உருவம் ஆனார் - *கரும்பு போன்ற இனிய வடிவமாக இருப்பவர்.*

**கருவரிகாட்டு**

கருவரி காட்டு - *கரிய வண்டுகளைக் காட்டுகிற.*
கரு அரி காட்டு - *கருமையான ரேகைகளைக் காட்டுகிற.*

**கருவேலை**

கரு வேலை - *கருவேல மரத்தை.*
கருவேலை - *பிறவிக்கடலை.*

**கரையுருவுமானதால்**

கரையும் உருவும் ஆனதால் - *தேய்ந்துபோகின்ற வடிவத்தையும் பெற்றபடியினால்.*
கரையும் உருவும் ஆனதால் - *இரைச்சலிடுகின்ற வடிவத்தையும் பெற்றுள்ளபடியால்.*

**கலக்கூழைக்கைக்கும்**

கலக்கு ஊழை கைக்கும் - *வருத்துகிற ஊழை வெறுக்கும்.*
கலம் கூழை கைக்கும் - *பாத்திரத்திலே* உள்ள *கூழைக் கசக்கும்படியான.*

**கலங்காமரிக்கு**

கலங்காம் அரிக்கு - *கலங்கமாட்டோம் நமனுக்கு.*
கலம் காமர் இக்கு - *ஆயுதம் காமனுடைய கரும்பு.*

**கலங்காமனந்தந்து**

கலங்கா மனம் தந்து - *கலங்காத உள்ளத்தைக் கொடுத்து.*
கலங்காமல் அம் தந்து - *கலக்கமுறாதவாறு அழகைக் கொடுத்து.*

**கலப்பையுள்ளான்**

கலப்பை உள்ளான் - *கலப்பை என்னும் கருவியைக் கொண்டவன்.*
கலப்பை உள்ளான் - *ஒன்று சேர்ந்திருத்தலை எண்ணாதவன்.*
கலம்பை-*கலம் அளவு கொள்ளுகிற பை.*
கல் அப்பை உள்ளான்-*கற்களை அழகிய பையிலே* உடையவன்.

**கலிக்கம்பனகத்தர்**

கலிக்கம்பன் அகத்தர் - *கலிக்கம்ப நாயனாரது உள்ளத்தில் இருந்தவர்.*
கலிக்கு அம்பு அன்ன கத்தர் - *வறுமையாகிய கலியை வெல்லுதற்கு அம்பைப் போன்ற தலைவர்.*

**கலிங்கவங்கம்**

கலிங்கம் வங்கம் - *கலிங்க நாடு வங்க நாடு.*
(ஆர்) கலிங்க அங்கம் - *ஆடையால் மூடுதற்கு உரிய உடம்பு.*

**கலிமுன்படைத்தான்**

கலி முன் படைத்தான் - *கலிகாலத்தை முன்பு படைத்தவன்.*
(ஆர்) கலிமுன்பு அடைத்தான்- *கடலை முன்பு அடைத்தவன்.*

**கலைகளவாகின்றது**

கலை களவாகின்றது - *ஆடை களவு போகின்றது.*

கலை களவாகின்றது - *கலைமான் சென்று கண் மறைவாகின் றது.*

**கலையாதவன்பால்**

கலை யாதவன்பால் - *அறிவு டையனிடத்தில்.*

கலை ஆதவன்பால் - *கலைகளைக் கற்ற சந்திரனிடத்தில்.*

கலையாத அன்பால் - *கெடாத அன்பினால்.*

கலை யாது அவன்பால் - *அவ னிடத்தில் கல்வியறிவு ஏது?*

**கலையினருமேதையகலாவிருக்கும்**

கலையின் அருமேதை அகலா இருக்கும் - *மானின் அரிய தோல் நீங்காதிருக்கப் பெறும்.*

கலையின் அருமேதை அகலா இருக்கும் - *நூல்களின் நுட் பமான அறிவு பரந்திருக்கப் பெறும்.*

**கலைவிதுவே**

கலை விதுவே - *கலைகள் நிறைந்த திங்களே.*

கலைவு இதுவே - *ஆடைகலைவு இதுவே.*

**கல்லணைகள் வைக்கும்**

கல் அணைகள் வைக்கும் - *கல் லால் அணைகளைக் கட்டும்.*

கல்லணைகள் வைக்கும் - *சேணங்களை எடுத்து வைக் கும்.*

**கல்லாரமாலை**

கல்லாரம் மாலை - *செங்கழுநீர் மாலை.*

கல் ஆரம் மாலை - *மணிகளும் முத்துக்களும் மாலைக் காலத் தில்.*

கல்லார் ஆ மாலை - *அழகிய திரு மாலை நினையார்.*

கல்லார் அ மாலை - *அந்த மயக்க உணர்வினைப் போக்க மாட் டார்கள்.*

**கல்லாலடிப்பிரியான்**

கல்லால் அடிப்பு இரியான் - *கல் லால் அடிபடுதற்கு அஞ்சாத வன்.*

கல்லால் அடி பிரியான் - *கல் லால மரத்தின் அடியிடத்தை விட்டு நீங்காதவன்.*

**கல்லாலடியுறலால்**

கல்லால் அடி உறலால் - *கல்லி னால் அடிக்கப்படுதலால்.*

கல்ஆல் அடிஉறலால் - *கல்லால மரத்தின்கீழே எழுந்தருளி யிருப்பதால்.*

**கல்லானைக்கிட்டார்**

கல் ஆனைக்கு இட்டார் - *கல்லி னால் ஆகிய யானைக்குக் கொடுத்தார்.*

கல்லானை கிட்டார் - *கல்வியறி வில்லாதவனை நெருங்கமாட் டார்.*

**கல்லுக்குடைகொளலால்**

கல்லுக் குடை கொளலால் - *கோவர்த்தன மலையைக் குடையாகக் கொள்ளுதலால்.*

கல்லுக்கு உடைகொளலால் - *கல்லினிடத்திலே உடைபடு தலால்.*

**கல்லோலம்மாரு**

கல் ஓலம் மாரு - பருக்கைக் கற்களின் ஒலி நீங்காத.

கல்லோலம் மாரு - அலைகள் நீங்காத.

**கல்விக்கிரகம்**

கல் விக்கிரகம் - கல்லாற் செய்த சிலை.

கல்வி கிரகம் - கல்விக்கு இருப்பிடம்.

**கல்விரவியேயும்**

கல்வி ரவி ஏயும் - கல்வியினலே கதிரவனை ஒக்கும்.

கல்விரவி ஏயும் - மணிகள் பரவிப் பொருந்தி விளங்கும்.

**கவடமதனல்**

கவடம் அதனல் - வஞ்சனையினல்.

கவடமதனல் - வஞ்சனையுள்ள காமனல்.

**கவடுபடான்**

கவடுபடான் - வஞ்சகக் குணத்தைக் கொள்ளமாட்டான்.

கவடுபடான் - கிளைகளை உடையவனுக மாட்டான்.

**கவலையின்று**

கவலை இன்று - மனத்துன்பம் இல்லை

கவ் அல் அயின்று - உள்ளத்தைப் பற்றுகிற அஞ்ஞான விருளைப் போக்கி.

**கவிகை மருவும்**

கவி கை மருவும் - குரங்குகளின் கையிற் பொருந்தும்.

கவிகை மருவும் - குடைகள் பொருந்தும், கொடுக்கக் குவிதலைப் பொருந்தும்.

**கவியமகந்திரிவா**

கவி யமகம் திரிவா - செய்யுட்களை யமகமாகவும் திரிபாகவும்.

கவியம் அகம் திரிவா - மனங் கலங்கிச் சேரோம்.

**கவியாமணியானும்**

கவி ஆம் அணியானும் - குரங்காகிய படையணியை உடையவனும்

கவியா மணியானும் - (மறு) இல்லாத கௌத்துப மணியை உடையவனும்.

**கவினத்தனே**

கவின் அத்தனே - அழகையுடைய தலைவனே!

கவி நத்தனே - பாடல்களை விரும்புபவனே!

**கவ்வியங்குலாவும்**

கவ்வி அங்கு உலாவும் - வாயில் பற்றிக்கொண்டு அங்கு உலாவுதலைச் செய்யும்.

கவ்வியம் குலாவும் - ஆனைந்து (பஞ்ச கவ்வியம்) விளங்கப் பெறும்.

**கவ்வையலைத்துள்ளும்**

கவ்வை அலைத்து உள்ளும் - துன்பத்தைக் கெடுத்து எண்ணும்.

கவவை அலை துள்ளும் - ஒலிக்கின்ற அலையினிடத்திலே தாவிப் பாயும்.

**கழலாதவஞ்செய்து**

கழலா தவஞ்செய்து - வீரக் கழலையணிந்தவனே! தவத்தைச் செய்து.

கழலாது அவம்செய்து - நீங்காமல் வீண் செயல்களைப் புரிந்து.

**கழுநீர்**

கழு நீர் அரிசி - கழுவப்பெற்ற நீர்.

கழுநீர் - ஆம்பல்.

**களங்கந்தரத்தன்**

களம் கந்தரத்தன் - கருமையைக் கழுத்திலே உடையவன்.

களங்கம் தரத்தன் - குற்றத்திற்குத் தகுதியானவன்.

**களங்கந்தரம்**

களம் கந்தரம் - கழுத்தானது முகிலைப் போன்றது.

கள் அங்கு அந்தரம் - தேன் அவ் விடத்திலே வெளிப்பட்டு.

**களங்கமுறு**

களங்கம்உறு - மறுப்பொருந்திய

கள் அம் கம்உறு - கள்ளாகிய அழகிய நீரைப் பொருந்திய.

களம் கம் உறும் - கள்ளத்தையும் காற்றையும் பொருந்தும்.

களம் கம் உறும் - கழுத்து முகிலைப்போல் விளங்கும்.

**களத்திரமன்னும்**

களத்திரம் மன்னும் - மனைவி பொருந்தும்.

கள் அத்திரம் மன்னும் - தேன் பொருந்திய மலர்க்கணை பொருந்தும்.

**களிப்பாக்கு**

களிப் பாக்கு - பாக்கில் ஒரு வகை.

களிப்பு ஆக்கு - மகிழ்ச்சியை உண்டாக்குவாயாக.

**களிப்பாலையில்**

களி பாலையில் - கள்ளிச் செடிகளையுடைய பாலைவனத்தில்.

களிப்பு ஆலையில் - களிப்பினால் ஏந்தும் கரும்பு வில்.

**களிப்பாவலரும் பாணிகொண்டு**

களிபாவலரும்பாணி கொண்டு - இன்பந்தரும் தமிழ்ப் புலவர்களும் அன்புற்று.

களிப்பு ஆ அலரும் பாணி கொண்டு - குளிர்ச்சியால் மலருகின்ற நீரையுடையதாகி.

**களிற்றினைவிட்டுக்கெண்டை-**
**-தான்பிடித்தாய்**

களிற்றினை விட்டுக் கெண்டை தான் பிடித்தாய் - யானையை விட்டுவிட்டுக் கெண்டை மீனைப் பிடித்தாய்.

களிற்றினைவிட்டுக் கெண்டை தான் பிடித்தாய் - தனங்களை விட்டுவிட்டுக் கண்ணை மறைத்துக் கொண்டாய்.

**கள்ளம்பயிலும்**

கள்ளம் பயிலும் - களவினைப் பழகும்.

கள் அம்பு அயிலும் - தேனாகிய நீரைக் குடிக்கும்.

**கள்ளம்பொழியும்**

கள்ளம் பொழியும் - களவுத் தனத்தைப் பொழியும்.

கள் அம்பு ஒழியும் - தேன் பொருந்திய மலர்க்கணைகளில் இருந்து நீங்கும்.

**கறைக்கண்டனைய**

கறைக்கண்டன் ஐய - கழுத்தில் கறையை உடைய ஐயனே.

கறை கண்ட அனைய - உரலைப் பார்த்தாற் போன்ற.

**கற்கடகமூரும்**

**கல் கடகம் ஊரும்** - *மணிக் கற்கள் பதிக்கப்பெற்ற வளையல்கள் பொருந்தியிருக்கும்.*

**கற்கடகம் ஊரும்** - *நண்டுகள் ஊர்ந்து செல்லும்.*

**கற்பகஞ்சேர்**

**கற்பு அகம் சேர்** - *கற்பு நெறி உள்ளத்தில் அமையப் பெற்ற.*

**கற்பகம் சேர்** - *கற்பக மரத்தைச் சேரப் பெறுகிற*

**கற்பகமேலோங்கும்**

**கற்டகம் மேல் ஓங்கும்** - *கற்பக மரத்தின் மேற் சென்று உயர்ச்சி பெற்றிருக்கும்.*

**கல் பக மேல் ஓங்கும்** - *கல்லும் பிளவுபட மேன்மையாகச் சிறந்து விளங்கும்*

**கற்பகநந்தா**

**கற்பு அகம் நந்தா** - *கற்புநெறி உள்ளத்திலே கெடுதல் இல்லாத.*

**கல் பகு அநந்தா** - *மலையைப் பிளந்த சுறிலாயே!*

**கற்ப கநம் தா** - *கற்பவைகள் மேன்மையடையச் செய்.*

**கற்பங்கழியா**

**கற்பு அங்கு அழியா** - *கற்பு அவ்விடத்தில் நீங்கப் பெறாத.*

**கற்பம் கழியா** - *கற்பம் என்னும் நிருமித்த வகையை விலக்காத.*

**கற்பமுறவாக்கும்**

**கல் பம் உற ஆக்கும்** - *கற்கள் பம்முதலுற உண்டாக்கும்.*

**கற்பம் உறவு ஆக்கும்** - *கற்பக தருவை உறவாக்கிக் கொள்ளும்.*

**கற்பனைய**

**கற்பனைய** - *கற்பனைகளை உடையவைகள்.*

**கற்பு அனைய** - *முல்லையரும்பைப் போன்றவைகள்.*

**கற்பனையத்தனை**

**கற்பு அனை அத்தனை** - *கற்பினையுடைய தாயாகிய உமாதேவிக்குத் தலைவனை.*

- *அவ்வளவு பொய்யாகும்.*

**கற்புடையார்**

**கல் புடையார்**-*கல்லைப் புடைக்க மாட்டார்கள்.*

**கற்பு உடையார்** - *கற்புத் தன்மை உடையவர்கள்.*

**கற்புரஞ்சேர்**

**கற்பு உரம்சேர்** - *கற்பு நெறியில் வலிமை பொருந்தப் பெற்ற.*

**கற்புரம் சேர்** - *பச்சைக் கற்பூரம் பூசப்பெற்ற.*

**கற்புழைவீறும்**

**கல் புழை வீறும்** - *கல்வெடிப்புக்களில் மிகுந்திருக்கும்.*

**கற்பு உழை வீறும்** - *கற்பினால் பெருமை பெற்றிருக்கும்.*

**கற்பூரநாறும்**

**கற்பு ஊர நாறும்** - *கற்புப் பொருந்தத் தோன்றும்.*

**கற்பூரம் நாறும்** — *பச்சைக் கற்பூரஞ் சேர்ந்த கலவைச் சந்தனம் மணக்கும்.*

### கற்பூரமணந்துன்னும்

**கற்பூரம் மணம் துன்னும்** - *கற்பூரத்தின் மணமானது பொருந்தும்.*

**கற்பு ஊர மணந்து உன்னும்** - *கற்புமிகக் கூர்ந்து மேன்மையாக உன்னும்.*

**கற்பு ஊர மணம் துன்னும்** - *கற்புத்தன்மை பொருந்த மணஞ் செய்யும்.*

### கற்றவரை மேவுகையார்

**கல்தவரை மேவு கையார்** - *பெருமலையாகிய வில்லைப் பொருந்திய கையை உடையவர்.*

**கற்றவரை மேவுகையார்** - *கல்வி யறிவுள்ளவர்களை விரும்புதலையுடையவர்.*

### கற்றளியோவா

**கற்று அளி ஓவா** - *நூல்களை ஒழியுணர்ந்து அதனால் அருள் மிகுந்து.*

**கல்தளி ஓவா** - *கல்லாற் செய்யப்பட்ட கோயில்கள் மிகுந்த.*

### கற்றார் மனம் புரத்தார்

**கல்தார் மன் அம்புரத்தார்** - *கல்லாகிய பூப்பொருந்திய அழகிய மேனியை உடையவர்.*

**கற்றார் மன்நம்பு உரத்தார்** - *கல்வியறிவுடையவர்கள் மிக நம்புகிற ஞானத்தை உடையவர்.*

### கற்றான்பின்சென்ற கருணைமால்

**கற்றான் பின் சென்ற கருணை மால்** - *கல்வியறிவு மிக்க புலவர்க்குப் பின்னே சென்ற திருமால்.*

**கற்று ஆன் பின் சென்ற கருணை மால்** - *கன்றையுடைய பசுவுக்குப் பின்னே சென்ற திருமால்.*

### கற்றையவையேறும்

**கற்றைய வை ஏறும்** - *தொகுதியாகிய வைக்கோல் மிகுதிப் படும்.*

**கற்று ஐ அவைஏறும்** - *கற்கப்பட்டு அழகு வாய்ந்த கற்றவர் அவையில் உயர்வுபெறும்.*

### கனகத்தியாகத்தார்

**கல்நகத்தி ஆகத்தார்** - *கல்லாகிய மலையிற் பிறந்த உமாதேவியை ஆகத்தில் உடையவர்.*

**கனக தியாகத்தார்** - *பொன்னைக் கொடையாக வழங்கியவர்.*

### கனகமுறைதரலால்

**கனகம் முறைதரலால்** - *பொருள்களை முறையோடு வழங்குதலால்.*

**கன கம் முறை தரலால்** - *பெரிய மழையைப் பொழிதலினால்.*

### கனகம் பொலிவாய்

**கனகம்பொலிவு ஆய்** - *பொன்னை மிகுதியாக.*

**கன கம் பொலிவு-ஆய்** - *மிகுதியான நீர் நிறைவுள்ளதாகி.*

### கனத்தகரமோர்பாற் பொருந்தி

**கனதகரம் ஓர்பால் பொருந்தி** - *பெரிய விலங்குகள் ஒருபக்கத்திற் சேர்ந்து.*

**கனத்த கரம் ஓர்பால் பொருந்தி** - *பெரிய தும்பிக்கையை ஒரு பக்கத்தில் பெற்று.*

**கனத்தேவரை முன்பரித்தலினால்**

கன தேவரை முன் பரித்தலினால் - *உயர்ந்த தேவர்களை அன்பு காத்த தன்மையினால்.*

கனத்தே வரைமுன்பு அரித்தலினால் - *மூங்கில் மரங்கள் பருத்து உரைசுதலால்.*

**கனமாப்பருப்பதில்**

கனமா பருப்பு அதில் - *மிக அதிகமாகப் பருப்பானது அதிலே.*

கனமாப் பருப்பதில் - *மிகப் பெரிதாகப் பெருப்பதில்.*

**கனமாமலைபெற்றிடலாலும்**

கனம் ஆம்அலை பெற்றிடலாலும் - *பெருமை பொருந்திய பாற்கடலாற் பெறப்பட்டமையாலும்.*

கன மாமலை பெற்றிடலாலும் - *பெரிய மலையில் இருந்து உண்டாவதாலும்.*

**கனமுறலால்**

கனம் உறலால் - *பாரத்தைப் பெற்றிருத்தலால்.*

கனம் உறலால் - *முகில்கள் அடையப் பெறுவதால்.*

**கனருசிமேவும்**

கனருசி மேவும் - *மின்னலைப் பொருந்தும்.*

கன ருசி மேவும் - *மிகு இனிமையைப் பொருந்தும்.*

**கனவானகத்தன்**

கனவான் அகத்தன் - *பெருமையை உடையவன், அறிவையுடையவன்.*

கனம்வான் நகத்தன் - *முகில் தவழுஞ் சிறந்த மலையை உடையவன்.*

கன வானகத்தன் - *சிறந்த தேவருலகையுடையவன்.*

**கனவிரதமேவும்**

கனவிரதம் மேவும் - *நீரைப் பொருந்தும்.*

கன இரதம் மேவும் - *பொன்னாலாகிய தேர் பொருந்தும்.*

கன விரதம் மேவும் - *பெரிய விரதத்தைப் பின்பற்றும்.*

**கனவில்**

கன வில் - *கனமுடைய வில்.*

கனவில் - *சொப்பனத்தில்.*

**கனிசெவ்வனமேற்கொளலாலும்**

கனி செவ்வனம் மேல்கொளலாலும் - *மிகுந்த செந்நிறமேனியைக் கொண்டிருக்கிறபடியினாலும்.*

கனி செவ்வனம் மேல் கொளலாலும் - *பழங்களுடன் மேலிடமெல்லாம் சிவந்த நிறங்கொண்டிருப்பதாலும்.*

**கனிபுணர்கையார்**

கனி புணர்கையார் - *கன்னிகையைச் சேருகின்றவர்.*

கல் நிபுணர் கையார் - *கற்றவர்களால் வெறுக்கப் படாதவர்.*

கனிபு உணர்கையார் - *கனிவுடன் அறியப்படுகின்றவர்.*

**கனிவாய்க்குஞ்சரிவேட்டு**

கனிவாய் குஞ்சரி வேட்டு - *கொவ்வைக் கனிபோன்ற வாயுடைய தேவயானையை மணந்து.*

கனி வாய்க்கும் சரி வேட்டு - *சுரங்கம் இருக்கின்ற சாரலில் வாழும் வேடர்கள்.*

**கன்மந்திரஞ்செய்**

கன்மம் திரம் செய் - *நாட்கடன்களை நிலையாகச் செய்கிற.*
கல் மந்திரம் செய் - *கல்வீடுகளைக் கட்டுகிற.*

**கன்றுதரிக்கும்**

கன்று ஆ தரிக்கும் - *கன்றுகளும் ஆக்களும் தங்கியுள்ள.*
கன்றுது அரிக்கும் - *துறையாமற் கெடுக்கும்.*

**கன்றுதொட்டு**

கன்று தொட்டு - *கன்றுக்குட்டியைத் தூக்கி.*
கன்று தொட்டு - *வளையலைப் பிடித்து.*

**கன்றுமறந்தீர்க்கும்**

கன்று மறந்து ஈர்க்கும் - *மறதியாக வேறொரு கன்று வந்து பால்குடிக்க இழுக்கும்.*
கன்று மறம் தீர்க்கும் - *வருத்துகிற தீவினையைப் போக்கும்.*

**கன்னலணி வீறும்**

கல் நல் அணி வீறும் - *மாணிக்கங்கள் பதித்த நல்ல அணிகள் மிகுதியாக இருக்கும்.*
கன்னல் அணி வீறும் - *கரும்புகளின் வரிசை மிகும்.*

**கன்னலம் போலாரும்**

கன்னல் அம் போல் ஆரும் - *கரும்பின் சாற்றைப்போல இனிமை பொருந்தியதாக இருக்கும்.*
கல் நலம் போல் ஆரும் - *மலையின் தன்மையைப்போல் உயர்ந்து பருத்திருக்கும்.*

**கன்னனிகராம்**

கன்னன் நிகர் ஆம் - *கன்னனுக்கு ஒப்பாக விளங்கும்.*
கன்னல் நிகர் ஆம் - *கரும்புக்கு ஒப்பாக இருக்கும்.*

**கன்னன்மணியேயும்**

கன்னல் மணி ஏயும் - *நாழிகையை உணர்த்தும் மணி பொருந்தியிருக்கும்.*
கன்னன் மணிஏயும் - *கன்னனையுஞ் சிந்தாமணியையும் ஒத்திருக்கும்.*

**கன்னிதானஞ்செய்**

கல் நிதானம் செய் - *கல்லை ஓர் அளவாக அமைக்கின்ற.*
கன்னி தானம் செய் - *கன்னிப் பெண்களைத் தானமாகக் கொடுக்கின்ற.*

**கன்னியரங்காடும்**

கன்னியர் அங்கு ஆடும் - *கன்னிப் பெண்கள் அவ்விடத்திலே நீராடுதலைச் செய்யும்.*
கன்னி அரங்கு ஆடும் - *அழிவில்லாத அரங்கத்தில் கூத்தாடுதலைச் செய்யும்.*

**காகா**

கா கா - *காக்கையின் கத்தல் ஒலி.*
கா கா - *காப்பாற்று காப்பாற்று.*
கா கா - *பொழில் பொழில்.*

**காக்கணங்களாரும்**

காக்கணங்கள் ஆரும் - *காக்கணம் பூக்களை ஒத்திருக்கும்.*
காக்கண் அம்கள் ஆரும் - *சோலையிடத்தில் அழகிய தேனை உண்ணும்.*

**காக்கைக்கு**

காக்கைக்கு - காகத்திற்கு.
கா கைக்கு - கற்பகதருவைப் போன்ற கைக்கு.

**காக்கைக்குளவிடை**

காக்கைக்கு உள விடை - உலகைக் காத்தற்குள்ள இடபம்.
கா கைக்கு உள்ள இடை - கற்பக தருவைப் போன்ற கைக்கு உள்ள வேளை.

**காக்கையினுளே வளரலால்**

காக்கையினுளே வளரலால் - காகத்தினுலே வளர்கிறபடியால்.
காக்கையினுளே வளரலால் - பாத்திரத்தால் வளருகிற படியால்.

**காசறையுட் கொட்டும்**

காசு அறையுள் கொட்டும் - பொற்காசுகளை அறையிலே கொட்டிக் குவிக்கும்.
காசறை உள் கொட்டும் - மயிர்ச் சாந்தைக் கூந்தலுக்குள்ளே அப்பும்.

**காசிநகரன்**

காசு இல் நகு அரன் - குற்றமில்லாது விளங்குகிற சிவபெருமான்.
காசிநகரன் - காசி நகரத்தில் எழுந்தருளியவன்.

**காசினியாயஞ் சேர்**

காசினி ஆயம் சேர் - நிலவுலகிலுள்ள பெண்கள் கூட்டம் அடைகின்ற.
காசு இல் நியாயம் சேர் - குற்றமில்லாத நீதிபொருந்துகின்ற.

**காஞ்சித் தலத்தையுஞ் சேவை-**

காஞ்சித் தலத்தையும் சேவை செய்து - காஞ்சிபுரம் என்னும் ஊரையுங் கண்டு வணங்கி.
காஞ்சித் தலத்தையும் சேவை செய்து - காஞ்சி என்னும் அணிகலம் அணியும் இடமாகிய நிதம்பத்தையும் பார்த்து.

**காஞ்சிபுரங் காட்டுதல்**

காஞ்சிபுரங் காட்டுதல் - காஞ்சிபுரம் என்னும் ஊரைக் காண்பித்தல்.
காஞ்சிபுரம் காட்டுதல் - காஞ்சியென்னும் அணியினை அணிந்த இடத்தினையுங் காண்பித்தல்.

**காஞ்சியிடையார்க்கும்**

காஞ்சியிடை ஆர்க்கும் - காஞ்சி மரத்தில் இருந்து ஆரவாரிக்கும்.
காஞ்சி இடை ஆர்க்கும் - எண்கோவை மணிவடத்தை இடையிற் கட்டும்.

**காட்டத் தெரியும்**

காட்ட தெரியும் - (ஆசிரியன்) காண்பிக்கத் தெரிந்துகொள்ளும்.
காட்டத்து எரியும் - சமிதையினுல் எரியும்.
காட்டத்து எரியும் - (இறந்த பின்) மயான விறகில் எரியும்.

**காட்டலரும்**

காட்டு அலரும் - காட்டிலே மலரும்.
காட்டல் அரும் - காட்டுதற்கு அருமையான.

**காட்டா மரையணி**

காட்டு ஆ மரை அணி - *காட்டுப் பசுவும் மரையென்னும் விலங்கும் ஒழுங்காக.*

காட்டாம் அரையணி - *காட்டமாட்டோம் அரையணியாகிய மேகலாபரணத்தை.*

**காட்டிக் களிக்கும்**

காட்டி களிக்கும் - *காட்டி மகிழும்.*

காட்டு இக்கு அளிக்கும் - *காட்டுக் கரும்பினைக் கொடுக்கும்.*

**காணத் தணியும்**

காணத்து அணியும் - *பொன்னாற்செய்து அணிந்துகொள்ளும்.*

காண தணியும் - *பார்க்க அடங்கும்.*

**காணம்பலமன்**

காணம் பல மன் - *பொன் பலவற்றைப் பொருந்தும்.*

காண் அம்பலம் மன் - *காணுகின்ற அம்பலம் பொருந்திய.*

**காணுதவாதனை**

காணுது அவாதனை - *பார்க்காமல் ஆசையை.*

காணுத வாதனை - *கண்டிராத துன்பம்.*

**காணியவந் தோயா**

காணிய வந்து ஓயா - *பார்க்கும் பொருட்டு வந்து நீங்காத.*

காணி அவம் தோயா - *காணியளவேனுந் தீமைபொருந்தப் பெறாத.*

**காண்ட முகந் தேறும்**

காண்டம் உகந்து ஏறும் - *குதிரையின்மீது மகிழ்ந்து ஏறும்.*

காண்டம் முகந்து ஏறும் - *தண்ணீரை மொண்டு கொண்டு ஏறும்.*

**காண்டீப மேந்தும்**

காண்டீபம் ஏந்தும் - *வில்லைப் பிடித்திருக்கும்.*

காண் தீபம் ஏந்தும் - *காணப்படும் சுடர்விளக்கை ஏந்தியிருக்கின்ற.*

**காதகந்தாடங்கம்**

கா தக தாள் தங்குஅம் - *தகுதியாகக் காப்பாற்று; திருவடியிலே தங்கும் சிறப்பை.*

காதகம் தாள் தங்கம் - *கொலைமுதலிய முயற்சியால் வரும் செல்வம்.*

காதகத்தாடங்கம் - *காதினிடத்தில் அணியுந்தாடங்கமாகிய அணிகலம்.*

**காதகமோடும்**

காது அகம் ஓடும் - *காதினிடமாகச் செல்லும்.*

காதகம் ஓடும் - *தீமை நீங்கும்.*

**காதஞ்சாரும்**

காது அம் சாரும் - *காதினிடத்திலே அழகாகப் பொருந்தும்.*

காதம் சாரும் - *காதத்தொலை சேரும்.*

**காதமருக்கூரும்**

காதம் மருகூரும் - *காத தூரம் மணத்தை வெளிப்படுத்துகின்ற.*

காது அமருக்கு ஊரும் - *கொல்லுகின்ற போருக்குச் செல்லும்.*

**காதரக்க பாலத்தார்**

காதரம் கபாலத்தார் - அச்சம்

காதா. அககம பாலததாா - [illegible]யுடையவர், கன்னை [illegible] உடையவர்.

**காதரனார் தீதரனார்**

காதரனார் தீ தரனார் - காத்தலைச் [illegible] திசை ஏந்திய வர்.

காத அரனார் தீது அரனார் - [illegible] அழிப்பவர்; [illegible] போக்குபவர்.

**காதலங் கண்ணப்பனார்**

காதல் அம் கண்ணப்பனார் - அன்பு பொருந்திய அழகிய கண்ணப்ப நாயனார்.

காதுஅல் அங்கண் அப்பனார் - [illegible] அகவிருளை யொழித்து அவ்விடத்திலேயே எழுந்தருளிய அப்பனாகிய இறைவனார்.

**காதலமரும்**

காது அலமரும் - காதிற் சுழலும்.

காதல் அமரும் - விருப்புடன் தங்கும்.

**காதலன்**

காதலன் - அன்பினையுடைய வன்.

காது அலன் - மோதுகிற துன் பன்.

**காதலையப்போடும்**

காது அலைய போடும் - காதில் அசையும்படி அணியும்.

காது அலை அப்பு ஓடும் - கரையை அழிக்கும் அலையை உடைய நீர் ஓடும்.

**காதலையினையே**

காதல் ஐயினையே - அன்போடு கூடிய அழகினையே.

கா தலையினையே - தலையையே காப்பாற்றுவாயாக.

காது அலையின் ஐயே - மோது கின்ற அலைபொருந்திய கட லின் தலைவனே!

**காதலையே**

காது அலையே - கரையை மோது கிற அலையே.

காதலையே - விருப்பத்தையே.

கா தலையே - காப்பாற்றுவாய் முதன்மையாக

காதல் ஐய - விருப்பம் அழகா னதே.

**காதலைவாரி**

காது அலைவாரி - மோதுகின்ற அலையை உடைய கடல்.

காதலை வாரி - ஆசையை அள்ளி.

**காதற் பரவை**

காதல் பரவை - காதலையுடைய பரவை நாய்ச்சியார்.

காது அற்பர் அவை - கொலைத் தொழிலையுடைய கீழோர் கூட்டம்.

காதல் பரவை - ஆசைக் கடல்.

**காதார நாகத்தார்**

காது ஆர் அ நாகத்தார் - கொலைத் தொழில் பொருந் திய அழகிய பாம்பை யணிந் தவர்.

கா தார நாகத்தார் - காத்தல் தொழிலையுடைய வெள்ளி மலையை உடையவர்.

**காதுவணத்தான்**

காது உவணத்தான் - *பகையை மோதுகின்ற கருடனை உடையவன்.*

காது வணத்தான் - *காதழகை யுடையவன்.*

**காதையுரைக்கும்**

காதை உரைக்கும் - *காதினைத் தைக்கும்.*

காதை உரைக்கும் - *கதை சொல்லும்.*

**காதோலை**

காது ஓலை - *மோதுகிற ஓலை.*

காது ஓலை - *காதில் அணியப் படுகிற ஓலையென்னும் அணி.*

**காத்திரவில் வாங்கும்**

காத்திரம் வில் வாங்கும் - *பெரிய வில்லை வளைக்கும்.*

காத்து இரவில் வாங்கும் - *(பகல் நேரமெல்லாம்) காத்திருந்து இரவில் வாங்குகிற.*

**காந்தம் படிக்கும்**

காந்தம் படிக்கும் - *கந்தபுராணத்தைப் படிக்கும்.*

காந்து அம்பு அடிக்கும் - *கொதிக்கிறபாணத்தைஅடித்துச் செய்யும்*

**காந்தாரம் பாடும்**

காந்தாரம் பாடும் - *காந்தாரம் என்னும் பண்ணைப்பாடும்.*

காந்து ஆர் அம்பு ஆடும் - *சுடுதலார்ந்த அம்புகள் பொருந்தும்.*

**காந்தாரியாய்**

காந்து ஆரியாய் - *விளங்குகிற ஆரங்களை யுடையதாகி.*

காந்தாரி ஆய் - *துரியோதனனுடைய தாயாகி.*

**காந்திமதி**

காந்திமதி - *நெல்லையில் எழுந்தருளிய காந்திமதியம்மை.*

காந்திமதி - *ஒளியோடு கூடிய திங்கள்.*

**காந்திமதியாகன்**

காந்து இம தியாகன் - *ஒளிவீசும் பனியைக் கொடுப்பவனாகிய திங்கள்.*

காந்திமதி ஆகன் - *காந்திமதியம்மையை உடலிற் கொண்டவன்.*

**காப்பணியாக் கொள்ளும்**

கா பணி ஆ கொள்ளும் - *கற்பகத்தை ஏவலாகக் கொள்ளும்.*

காப்பு அணி ஆ கொள்ளும் - *காப்பை அணிகலனாகக் கொள்ளும்.*

கா பணி ஆ கொள்ளும் - *பிறரைக் காத்தலைத் தொழிலாகக் கொள்ளும்.*

**காப்பரவப்பணி**

காப்பு அரவப்பணி - *காப்பாக அணிந்திருக்கும் பாம்பாகிய அணிகலம்.*

காப்பர் அவப்பணி - *காத்துக் கொள்வர் வீண்வேலைகளில் ஈடுபடாமல்.*

**காப்பவனத்தும்**

காப்பவன் நத்தும் - *திருமாலுடைய சங்கமும்.*

கா பவனத்தும் - *கற்பகதருவை யுடைய விண்ணுலகத்திலும்.*

**காப்பணகத்தினன்**

காப்பணகத்து இனன் - சோலை [illegible] லைகளி லும் [illegible].

காப்பண்ணகத்தினன் - காத்தலைச் செய்யும் பாம்புப் படுக்கை யில் உள்ள திருமால்.

காப்பண் அகத்தினன் - காத்தற் கருணையை உடையோன்.

**காப்பான் மருவ வரலாலும்**

காப்பான் மருவ வரலாலும் - காத்தற் தொழிலையுடைய திருமால் தழுவ வருவதாலும்

கா பால் மருவ வரலாலும் - சோலையில் உள்ள பால் முத லியன பொருந்த வருகிறபடி யாலும்.

**காமரம்பாடுற்ற**

காமர் அம்பு ஆடுற்ற - காமனு டைய கணை வெற்றி கொண்ட.

கா மரம் பாடு உற்ற - சோலை யில் உள்ள மரம் பெருமை பெற்ற.

காமரம் பாடுற்ற - காமரம் என் னும் பண்ணைப் பாடுற்ற.

**காமருடலம்படுத்தான்**

காமர் உடலம் படுத்தான்- காம னுடைய உடலை நெற்றித் தீயில் எரித்தவன்.

காமர் உடல் அம்பு அடுத்தான்- அழகிய உடலில் அமைந்த கங் கையைத் தாங்கியவன்

**காமருமப்பூதியார்**

காமரும் அப்பூதியார் - அழகு பொருந்திய அப்பூதி நாயனார்.

கா மருமப் பூதியார் - எண்ணு வரைக் காக்கின்ற மார்பில் திருநீற்றை உடையவர்.

**காமர் மதிவீழ்**

காமர் மதி வீழ் - காமனுடைய அறிவும் விரும்பும்.

காமர் மதி வீழ் - அழகிய திங்க ளும் விரும்பும்.

**காமர் வேதமார்க்கஞ் செறியும்**

காமர் வேத மார்க்கம் செறியும்- காமநூல் வழியைப் பொருந் தப் பெறும்

காமர் வேதம் ஆர்கம் செறியும்- அழகிய மூங்கில்கள் தமது நுனியால் விண்ணை நெருங் கப்பெறும்.

**காமவேதத்தினன்**

காமவேதத்தினன் - காமநூலை யுடைய காமன்.

காம ஏதத்தில் நான் - காமமா கிய குற்றத்திலே நான்.

**காமனைக்கண்முன்னட்டான்**

காமனை கண் முன் அட்டான் - காமனை முன் நெற்றிக்கண்ணி னாற் சுட்டெரித்தவன்.

கா மனைக்கண் முன் நட்டான் - (தேவலோகக்) காவின் பாரி சாத மரத்தை வீட்டுற்கு முன்பு நட்டவன்.

**காமன்**

காமன் - மன்மதன்.

கா மன் - கற்பகச் சோலைக்குத் தலைவனாகிய இந்திரன்.

**காமாவடுவன**

கா மா வடு அன - சோலையில் உள்ள மாவடுவைப் போன்ற.

காமா அடுவன - காமனே உன் னுடைய அம்புகள் கொல்லா நின்றன.

**காம்பீரமல்கும்**

ஈரம் காம்பு அல்கும் - *பச்சை மூங்கிலை உருவத்திற் சிறப் படுத்தும்.*
காம்பீரம் மல்கும் - *மருக்கம் பூவை ஒக்கும்.*

**காம்போதி யோதும்**

காம்போதி ஓதும் - *காம்போதி என்னும் இராகத்தைப் பாடும்.*
காம்பு ஓதி ஓதும் - *மூங்கிலையுடைய மலைக்கு ஒப்பு என்று சொல்லும்.*

**காயத் திரியும்**

காயத்து இரியும் - *விண்ணிற் பறக்கும்*
காய திரியும் - *பகைவரைக் கொல்லத் திரியும்.*

**காயமன்றடிக்கு**

காய் யமன் தாள் திக்கு - *சினங் கொள்ளும் நமனுடைய முயற்சி பொருந்திய தென் திசைக்கு*
காயம் மன்று ஆடிக்கு - *ஞான ஆகாயமாகிய தில்லைச் சபையில் ஆடுஞ்சிவபெருமானுக்கு.*

**காயமையான்**

காயம் மையான்- *உடற் குற்றம் பொருந்தியவன்.*
காய் அமையான் - *கொன்ற அழகினை யுடையவன்.*

**காயம் மருவி**

காயம் மருவி- *உடலைச் சேர்ந்து.*
காயம் மருவி - *பெருங்காயஞ் சேர்ந்து.*

**காயாவே யொக்கும்**

காயா ஏ ஒக்கும் - *காயாம் பூவையே ஒத்திருக்கும்.*
காயா வேய் ஒக்கும் - *பச்சை மூங்கிலைப் போன்றிருக்கும்.*

**காயான்**

காயான் - *காய்க்கமாட்டான்.*
காயான் - *சினங்கொள்ளமாட்டான்.*

**காரணக்கூ ழோங்கும்**

கார் அண்ணை கூழ் ஓங்கும் - *முகில்கள் பெய்தலால் பயிர்கள் செழித்து வளரும்*
காரணம் கூழ் ஓங்கும் - *எல்லாவற்றிற்கும் காரணமான பொன் மிகுந்திருக்கும்.*

**காரணத்த னாரணத்தன்**

காரணத்தன் ஆரணத்தன் - *உலகத் தோற்றத்திற்குக் காரணமாக இருப்பவன் மறைகளையுடையவன்.*
கார்அண் அத்தன்,நார் அண் அத்தன் - *(சடைக்கண்) நீர் பொருந்தப் பெற்ற தலைவன், உள்ளத்தின்கண் அன்பு பொருந்தப் பெற்றவர்கட்கு இறைவனாக இருப்பவன்.*

**காரணமல்கும்**

கார் அண மல்கும் - *முகிலை நெருங்குமாறு விளங்கும்.*
காரணம் மல்கும் - *காரணம் என்னும் பெயரையுடைய ஆகமம் திகழும்.*

**காரண்டந்தோயும்**

காரண்டம் தோயும் - *நீர்க் காக்கைகள் பொருந்தும்.*
கார் அண்டம் தோயும் - *முகில் வானத்தைச் சேரும்.*

**காரம்பரத்தம்பு**

கார் அம் பரத்து அம்பு-கரிய கடலின் நீர்.

கார் அம்பரத்து அம்பு - கார்காலத்தில் விண்ணிற் செல்லும் முகில்.

**காராதரிக்கும்**

கார் ஆதரிக்கும் - முகிலைக் கண்டுகளிக்கும்.

கார் ஆ தரிக்கும் - காராம்பசுவானது மேற்கொண்டிருக்கும்.

**காரிகைக்கொப்பென்னும்**

காரி கைக்கு ஒப்பு என்னும் - காரி என்னும் வள்ளலுடைய கைகளுக்கு ஒப்பானவன் என்னும்.

காரிகைக்கு ஒப்புஎன்னும் - திருமகளுக்கு நிகர் என்னும்.

காரிகை கொப்பு என்னும் - அழகிய கொப்பு என்னும் காதணியைப் பெற்றதென்னும்.

**காரிகையார்க்கும்**

காரி கையார்க்கும் - நஞ்சை வெறுக்காதுண்டவர்க்கும்.

காரிகை ஆர்க்கும் - கிளிகள் பக்கங்களில் ஒலிக்கும்.

**காரிகை யோதிவிட்டேன்**

காரிகை ஓதி விட்டேன் - யாப்பருங்கலக் காரிகை என்னும் நூலைப் படித்துவிட்டேன்.

காரி கைஓதி விட்டேன்-கருமையுடையதும் ஒப்பனையமைந்ததுமாகிய கூந்தலைப் பார்த்துவிட்டேன்.

**காரியம்**

காரியம் - வேலை.

காரி அம் - கரியமுகில்.

**காருணிய மீதூர்**

கார் உணிய மீதூர் - முகிலானது உண்ணும்பொருட்டு மேலே தவழுகிற.

காருணியம் மீதுஊர் - அருளானது மிகுதியாக மேம்படுகின்ற.

**காரைவிழையும்**

காரை விழையும் - காரைச் செடியை விரும்பும்.

காரை விழையும்-முகிலை விரும்பும்.

**கார்முகந்துண்ணென்னும்**

கார்முகம் துண் என்னும் - வில்லானது அச்சத்தை அடையும்.

கார் முகந்து உண் என்னும் - நீரை மொண்டு உண் என்று கூறும்.

**காலங்கழிக்கும்**

காலம் கழிக்கும் - காலத்தைப் போக்கும்.

கால் அங்கு அழிக்கும்-திருவடியானது அவ்விடத்தில் ஒழிக்கும்.

**காலஞ்சமின்னும்**

கால் அஞ்ச மின்னும் - நமனும் அஞ்சுமாறு விளங்கும்.

கால் அஞ்சம் மின்னும் - கால்களை உடைய அன்னப்பறவைகள் விளங்கும்.

**காலமளியேறும்**

கால் அமளிஏறும் - கால்களையுடைய படுக்கையில் ஏறியிருக்கும்.

காலம் அளிஏறும் - மலர்கின்ற காலத்தில் தேனை உண்ணுதற்கு வண்டுகள் உட்செல்லும்.

**காலனலம்பார்**

கால் அனல் அம் பார் - *காற்றும் நெருப்பும் நீரும், நிலமும்.*

காலல் நல் அம்பார் - *காலத்தில் இருள்போன்ற மிகுந்த அழகிய உரோகணி.*

காலன் அலம்பு ஆர் - *நமனைப் போல் வருத்துதலைச் செய்கின்ற.*

**காலாயிரத்தாற் கதிர்மணிச் சூட்டால்**

கால் ஆயிரத்தால் கதிர்மணி சூட்டால் - *ஆயிரங்கால்களாலும் ஒளிபொருந்திய மணிகள் பதித்த முடிகளாலும்.*

காலாயிரத்தால் கதிர்மணி சூட்டால் - *அளவில்லாத கால்களாலும் ஒளி பொருந்திய இரத்தினங்களையுடைய உச்சியினாலும்.*

**காலாலாடுதலால்**

காலால் ஆடுதலால் - *காற்றால் அசைதலினால்.*

காலால் ஆடுதலால் - *கால்களால் ஆடுகிறபடியால்.*

**காலாறுபாயும்**

கால் ஆறுபாயும் - *வாய்க்காலின் வழியாகப் பாயும்.*

காலாறு பாயும் - *ஆறுகால்களையுடைய வண்டுகள் குதிக்கும்.*

**காலாறுவண்டுவர**

கால் ஆறு வண்டுவர - *ஆறு கால்களையுடைய வண்டுகள் வர.*

காலால் துவண்டு வர - *காற்று எவ்வழியிலும் அசைந்து வர.*

**காலையிலுமாலையார்**

காலையிலும் மாலையார் - *காலை நேரத்திலும் மாலைப் பொழுதை உடையவர்.*

கால் அயிலும் மாலையார் - *காற்றை உணவாகக் கொள்ளும் பாம்பை மாலையாக வுடையவர்.*

**காலையுமாலையும்**

காலையும் மாலையும் - *காலைப் பொழுதிலும் மாலைப் பொழுதிலும்.*

காலையும் மாலையும் - *காற்றையும் ஆசையையும்.*

**காலோடிவரும்**

கால் ஓடி வரும்-*வாய்க்காலிலே ஓடிவரும்.*

காலோடு இவரும் - *காலோடு அமைந்திருக்கும்.*

**கால்காட்டி யாறுதலைகாட்டி**

கால காட்டி ஆறுதலை காட்டி - *தென்றலைக் கொடுத்து இளைப்பாறுதலைச் செய்து.*

கால்காட்டி ஆறுதலைகாட்டி - *திருவடிகளைக் காட்டி ஆறு திருமுகங்களைக் காட்டி.*

**காவணமேலோங்கும்**

காவணம் மேல் ஓங்கும் - *மணப் பந்தல் மேலாக விளங்கும்.*

கா அண்ண மேல் ஓங்கும் - *சோலையைப் பொருந்த மேலாகச் செல்லும்.*

**காவலராவரும்**

காவலர் ஆவரும் -*அரசர்களாக வருகின்ற.*

காவல் அரா வரும்-*காவலாகப் பாம்பு வரும்.*

**காவல் அராவரும்** - *காவலைக் கெடுக்கும்.*
**கா அலரா வரும்** - *பொழில் மலர்ந்து விளங்கும்.*

**காவலரைச் சூழும்**

**காவலரை சூழும்** - *காத்தலில் வல்லவர்களாகிய அரசர்களைச் சுற்றியிருக்கும்.*
**கா அலரை சூழும்** - *பொழிலில் உள்ள மலர்களைச் சுற்றும்.*

**காவளர் பூவைக் கரசு**

**கா வளர் பூவைக்கு அரசு** - *சோலையில் உறைகின்ற பூவைக்குத் தலைமையான வளைப் போன்றவளே!*
**காவளர் பூவைக் கரசு** - *கற்பகச் சோலையில் வாழ்கின்ற இந்திராணிக்குத் தலைவியைப் போன்றவளே!*

**காவள்ளுவர்**

**கா வள்ளுவர்** - *கற்பகதருவைப் போன்ற திருவள்ளுவர்.*
**கா அள்ளுவர்** - *காத்தற்றொழிலாகிய அரசபதவியை அடைவர்.*

**காவல் மிகுந்து**

**காவல் மிகுந்து** - *கட்டுப்பாடு மிகுதியாகி.*
**கா அல் மிகுந்து** - *பொழிலிலே இருள்நிறைந்து.*

**காவான்**

**காவான்** - *கற்பகச் சோலையை உடைய இந்திரன்.*
**காவான்** - *நம்மைக் காக்க மாட்டான்.*
**காவு ஆன்** - *பசு சிறு தெய்வப் பலியாயிற்று.*
**கா வான்** - *விண்ணைக் காப்பாயாக.*

**காவிக்கணந்தார்**

**காவிக்கண் நந்து ஆர்** - *குவளைப் பூவின்மேல் சங்குகள் தங்குகின்றன.*
**கா இக்கணம் தார்** - *கொடு இப்பொழுதே மாலையை.*

**காவியங்களாயும்**

**காவியங்கள் ஆயும்** - *நூல்களை ஆராய்ச்சி செய்யும்.*
**காவி அம்கள் ஆயும்** - *கருங்குவளை மலரில் உள்ள அழகிய தேனைத் தேடும்.*

**காவியங் கற்றவர்க்கே**

**காவியம் கற்றவர்க்கே** - *நூலினைப் படித்தவர்களுக்கே.*
**காவி அங்கு அற்றவர்க்கே** - *கருங்குவளையைப் போன்ற கண் இல்லாதவர்க்கே. இல்லாமல் மூடிக் கொண்டவர்களுக்கே.*

**காவிரிவாயாடும்**

**கா விரிவாய் ஆடும்** - *சோலையின் படர்ந்த இடத்திலே விளையாடும்.*
**காவிரிவாய் ஆடும்** - *காவிரியினிடத்திலே நீராடும்.*

**கானகத்தில்**

**கானகத்தில்** - *காட்டில்.*
**கால் நகத்தில்** - *காலில் உள்ள நகத்தில்.*

**கானக் கருங்குழலார்**

**கான் அ கரும் குழலார்** - *வாசனை தங்கிய அந்தக் கரிய கூந்தலையுடையவர்.*
**கான கரும் குழலார்** - *இசை பாடும் மூங்கிற் குழாயை உடையவர்.*

**கானஞ்சரிக்கும்**

கானம் சரிக்கும் - *காட்டிற் சுற்றும்.*

கால் நஞ்சு அரிக்கும் - *(பாம்பு) கக்குகின்ற நஞ்சைப் போக்கும்.*

**கானத்தப்பேடிவர**

கால் நத்து அப்பு ஏடு இவர - *சுறும் சங்குகள் பொருந்திய நீரில் ஏடு எதிரேற.*

கானத்து அப் பேடி வர - *காட்டின்கண்ணே அருச்சுனனாகிய பேடி வர.*

**கானத்து வந்தவர்**

கானத்து வந்தவர் - *காட்டில் வந்தவர்.*

கானத்து உவந்தவர் - *இசையினிடத்தில் மகிழ்ந்தவர்.*

**கானமுழக்கும்**

கானம் உழக்கும் - *காட்டைக் கலக்கி மிதிக்கும்.*

கானம் முழக்கும் - *இசைப் பாட்டினைப் பாடும்.*

**கானலெனக்காணும்**

கானல் என காணும் - *பேய்த் தேரைப்போல நிலையில்லாதது என்று அறியும்.*

கான் அல் என காணும் - இருட் *காடு என்று பார்க்கும்.*

**கானவரம்பாயும்**

கானவர் அம்பு ஆயும் - *வேடர்கள் அம்பினைத் தேர்ந்தெடுக்கும்.*

கான வரம்பு ஆயும் - *இசையின் எல்லையைத் தேடும்.*

**கானுலுயர்ந்தக் கால்வயங்க**

கானுல் உயர்ந்து அக் கால் வயங்க - *காடுகளினுல் உயர்ச்சிபெற்று அக் காட்டிடத்திலே விளங்க.*

கால்நால் உயர்ந்து அ கால் வயங்க - *நான்கு கால்கள் சேரப்பெற்று அக் காலில் பொருந்த.*

**கானுறு மேவும்**

கான் ஆறு மேவும் - *காட்டு ஆறுகளைப் பொருந்தும்.*

கால் நாறு மேவும் - *வாய்க்கால்களையும் நாற்றுக்களையும் பொருந்தும்.*

**கான்மணந்துவக்கும்**

கான் மணம் துவக்கும் - *மிகுந்த மணத்தைவீசத் தொடங்கும்.*

கால் மணந்து உவக்கும் - *இடமாகக் கலந்து மகிழ்ப்பெறும்.*

**கான் முளைகள் மாரு**

கால் முளைகள் மாரு - *தோன்றுகின்ற நெல்முளைகள் நீங்காத.*

கான் முளைகள் மாரு - *மக்கட் செல்வம் என்றும் நிறைந்துள்ள.*

**கான்றங்கிவரும்**

கான் தங்கி வரும் - *மணம் தங்கப் பெற்று வரும்.*

கான்று அங்கு இவரும் - *கக்கி அங்கே உலாவும்.*

**காழகமுற்றேர்கொள்**

காழ் அகம் உற்றுஏர் கொள் - *வைரம் உள்ளே முதிர்தலால் அழகைக் கொள்ளுகிற.*

காழகம் உற்று ஏர்கொள் - *புடவையைப் பொருந்தி அழகைக் கொள்ளும்.*

**காளமியம்பும்**

**காளம் இயம்பும்** - *நஞ்சு என்று சொல்லுமாறு விளங்கும்.*

**காளம் இயம்பும்** - *எக்காளம் ஒலிக்கும்.*

**காற்றாரமிசைந்து**

**காற்று ஆர மிசைந்து** - *காற்றினை நிறைய உண்டு.*

**காற்று ஆரம் இசைந்து** - *காற்றால் அசைகின்ற ஆத்திமரத்தைக் கொண்டு நின்று.*

**காற்றேர்கடாவும்**

**கால் தேர் கடாவும்** - *உருளை பொருந்திய தேரைச் செலுத்தும்.*

**காற்று ஏர்கள் தாவும்** - *தென்றற் காற்றினால் அழகுகள் பெருகும்.*

**கிளைவிட்ட**

**கிளைவிட்ட** - *உறவினர் பற்றை விட்ட.*

**கிளை விட்ட** - *கிளைகளை வெளி விட்ட.*

**கிள்ளை உடன்பொருந்த**

**கிள் ஐ உடன் பொருந்த** - *நகக்குறல் அழகாகச் சேர்ந்து திகழ.*

**கிள்ளை உடன் பொருந்த** - *கிளி உடன் அமைந்திருக்கவும்.*

**குசக்கலச மேவுதலால்**

**குச கலசம் மேவுதலால்** - *குயவன் செய்த கலயம் பொருந்துதலால்.*

**குச கலசம் மேவுதலால்**-*கொங்கையாகிய கலசம் பொருந்துதலால்.*

**குசவரிதை வெளியாக்கினர்**

**குசவர் இதை வெளி ஆக்கினர்**- *குயவர்கள் இதனை வெளிப்படுத்தினார்கள்.*

**குசவர் இதை வெளி ஆக்கினர்**– *தனங்கள் இதனை வெளிப்படுத்திக் கூறின.*

**குஞ்சரங் குலாவும்**

**குஞ்சரம் குலாவும்** - *யானைகள் உலாவுகின்றன.*

**குஞ்சர் அங்கு உலாவும்**-*குஞ்சுகள் அங்கே உலாவுகின்றன.*

**குடியானவன்**

**குடியானவன்** - *குடியாக இருப்பவன்.*

**குடியான் அவன்** - *குடிக்கமாட்டான் அவன்.*

**குடிலச் சடையார்**

**குடிலம் சடையார்** - *வளைவாகக் கட்டப்பட்ட சடையை உடையவர்.*

**குடில் அச்சு அடையார்** - *குடிலாகிய உடலில் இனிமேற் புகுத்தமாட்டார்.*

**குட்டங் கயந்தணிக்கும்**

**குட்டம் கயம் தணிக்கும்**-*குறை நோயையும் இருமல் நோயையும் போக்கும்.*

**குட்டம் கயம் தணிக்கும்**- *மடுக்களையும் குளங்களையும் தனக்குத் தணியச் செய்யும்.*

**குட்டி மறிக்க**

**குட்டி மறிக்க** - *தலையிலே குட்டிக் கொண்டு வணங்க.*

**குட்டி மறிக்க** - *ஆட்டுக் குட்டிகளை மறித்துத் திரும்ப.*

**குட்டையுடைத்துங் களம் புகுந்தும்**

குட்டை உடைத்தும் க(ன்)னம் புகுந்தும் - *கைவிலங்குகளைத் தகர்த்துடைத்தும் கன்னமிட்டுப் புகுந்தும்*

குட்டை உடைத்தும் கனம் புகுந்தும் - *குட்டநோயைக் கொண்டிருந்தும் முகிலினூடே நுழைந்தும்.*

**குணமாத்திரைக் கோலங்காட்டி**

குணமாத்திரை கோல் அங்கு ஆட்டி - *நன்மைக்குரிய மாத்திரைக்கோலை அவ்விடத்தே அசைத்து.*

குணமா திரை கோலம் காட்டி - *பண்பாக வளைவு கொண்டுள்ள தன் வடிவத்தைக் காணச் செய்து.*

**குண்டலங் கடந்திலகு**

குண்டலம் கடந்து இலகு - *விண்ணைக் கடந்து விளங்கும்.*

குண்டலங்கள் தந்து இலகு - *காதணியைக் கொடுத்து விளங்குகின்ற.*

**குண்டுமருந்தும்பொற் றேருந் தராமல்**

குண்டும் மருந்தும் பொன் தேரும் தராமல் - *குண்டையும் மருந்தையும் அழகிய தேரையுங் கொடுக்காமல்.*

குண்டும் மருந்தும் பொன் தேரும் தராமல் - *தனத்தையும் இதழமுதையும் அல்குலையுந் தராமல்.*

**குப்பாயமுந்து**

குப்பாயம் உந்து - *சட்டையைத் தள்ளுகிற.*

குப்பாய முந்து - *நிலைத்திலே பாய்வதற்கு முற்படும்.*

**கும்பகோணம்**

கும்பகோணம் - *திருக்குடந்தை.*

கும்ப கோணம் - *குடத்தைப் போன்ற வட்டவடிவாகிய கொங்கை.*

**கும்பத்தானைக் கடுக்கும்**

கும்பத்து ஆனைக்கு அடுக்கும் - *கும்பங்களையுடைய யானைகளோடு போர் செய்தற்குப் பொருந்தும்.*

கும்பத்தானை கடுக்கும் - *குடத்தில் தோன்றிய அகத்தியரை ஒக்கும்.*

**கும்பத்திவரும் காரணத்தால்**

கும்பத்து இவரும் காரணத்தால் - *குடத்தில் இருந்து தோன்றிய தன்மையினால்.*

கும்பு அத்தி வரும் காரணத்தால் - *யானைக் கூட்டம் வருகின்றபடியினால்.*

**கும்பமருவிடலால்**

கும்பம் மருவிடலால் - *குடத்தைப் பொருந்துதலால்.*

கும்பம் மருவிடலால் - *மத்தகத்தை உடைமையால்.*

**கும்பமுனிபரவும்**

கும்பம் முனி பரவும் - *மத்தகத்தை யுடைய யானைக் கன்றுகள் பரவியிருக்கப் பெற்ற.*

கும்பமுனி பரவும் - *அகத்திய முனிவர் பரவுகின்ற.*

**கும்பமுனி யாவணஞ்சேர்**

கும்பம் முனியா வண்ணம் சேர் - *குடம் சினம் கொள்ளாத வகையாகச் சேரப் பெற்ற.*

கும்பமுனி ஆவணம் சேர் - *அகத்தியர் தெருவிற் சேருகையுடைய.*

## குயத்தானுந் துயர் செய்வது

குயத்தானும் துயர்செய்வது - *கொடியவர்களுக்குத் துன்பத்தை உண்டாக்குவது.*

குயத்தானும் துயர்செய்வது - *கொங்கைகளிரண்டும் அல்லலை விளைப்பது.*

## குயவர்

குயவர் - *மட்கலஞ் செய்வோர்.*

குயவர் - *கொங்கைகள்.*

## குருகுபடர

குருகு படர - *பறவைகள் வந்து கூட*

குருகு படர - *அருவிகள் எங்கும் படர.*

## குருகுவளையார்

குருகு வளை ஆர் - *வளைகள் சூழப் பொருந்திய.*

குருகு வளை ஆர் - *பறவைகளும் சங்குகளும் ஒலிக்கின்ற.*

குரு குவளை ஆர் - *நிறம் பொருந்திய குவளை மலர் பொருந்தப் பெற்ற.*

## குருவிந்தமுமங் கடக்கியதால்

குருவிந்தமும் அங்கு அடக்கிய தால் *ஒளிமிக்க விந்தமலையை அவ்விடத்தில் அடக்கிவிட்டபடியால்.*

குருவிந்தமும் மங்க அடக்கிய தால் - *மாணிக்கக்கல் முதலியவற்றின் ஒளி மங்க அடக்கியுள்ள தன்மையால்.*

## குலவிப்பொதியங்குடி கொளலால்

குலவி பொதியம் குடிகொள லால் - *பொதிய மலையில் விளங்கிக் குடியாக இருத்தலால்.*

குலவி பொதி அம் குடி கொள லால் - *செடி கொடிகள் விளங்கிப் பூவரும்புகள் நிறைந்து அழகு குடிகொளலால்.*

## குலைதனக்கு நாணாது

குலைதனக்கு நாணாது - *குலையிலே யிருப்பதற்கு வெட்காது.*

குலைதனக்கு நாணாது - *குலைத்தலைச் செய்தற்கு அஞ்சாது.*

## குவலயங் காத்தளிக்கும்படி

குவலயம் காத்து அளிக்கும்படி- *பூமண்டலத்தைக் காக்கும்படி.*

குவலயம் காத்து அளிக்கும்படி- *கருங்குவளை மலர்போன்ற கண்ணை மறைத்து அருள் செய்யும்படி.*

## குவலையவம்பரம்

குவலையம் அம்பரம் - *நிலத்தினும் விண்ணினும்.*

குவலையம் அம்பு அரம் - *கருங் குவளையும் அம்பும் அரமும்.*

## குவளையின்மேல் வண்டேய் -கமலங் கண்டேன்.

குவளையின்மேல் வண்டுஏய் கமலங் கண்டேன் - *குவளை மலரின்மேல் வண்டு பொருந்திய தாமரைப் பூவைக் கண்டேன்.*

குவளையின்மேல் வண்டுஏய் கமலங் கண்டேன் - *குவளைமலர் போன்ற கண்ணின்மீது வளையல் பொருந்திய தாமரை மலரைப் போன்ற* கைகளைக் *கண்டேன்.*

குழனமக்கீதல்

குழல் நமக்கு ஈதல் - ஊதுகுழலை நமக்குத் தருதல்.

குழல் நமக்கு ஈதல் - கூந்தலை நமக்குக் காட்டுதல்.

குளக்கண்ணில் அடங்கி

குளக்கண்ணில் அடங்கி - குளத்திடத்திலே அமைந்து.

குளம் கண்ணில் அடங்கி - நெற்றிக் கண்ணிறல் ஒடுங்கி.

குளக்கண்ணுறுதலால்

குளக்கண் உறுதலால் - நெற்றிக் கண்ணைப் பெற்றிருத்தலால்.

குளக் கண் உறுதலால் - குளக்கரையினிடத்திலே எழுந்தருளி யிருத்தலால்.

குளத்தினடுக் கண்டாங்கியைக் -கிழித்தால்

குளத்தின் நடு கண்டாங்கியைக் கிழித்தால் - குளத்திற்கு நடுவே சேலையைக் கிழித்தால்.

குளத்தின் நடு கண் தாங்கியை கிழித்தால் - (இறைவனுடைய) நெற்றியின் நடுக் கண்ணாகிய தியைத் தாங்கும் (தீக்கடவுளைத் தாங்கும்) ஆட்டைக் கொலை செய்தால்.

குளமாறுடையவர்

குளம் ஆறு உடையவர் - குளத்தையும் ஆற்றையும் உடையவர்.

குளம் ஆறு உடையவர் - நெற்றி ஆறு உள்ளவர்.

குளவாய்தனில்

குளவாய்தனில் - குளத்தினிடத்தில்.

குளவாய் தனில் - நெற்றியிடத்தில்.

குறும்பலவன்புரி

குறும் பல வன்பு உரி - குற்றுகின்ற பலவாகிய வலியசெயல்களையுடைய.

குறும்பு அலவன்புரி - சிறுவிளையாடல்களை நண்டுகள் செய்கின்ற

குறும் பலவன் புரி - குறும்பலா மர நிழலில் எழுந்தருளிய இறைவனது மூறுக்கிய.

குறைமதியன்

குறைமதியன் - அற்ப அறிவினையுடையவன்.

குறைமதியன் - பிறைத் திங்களை அணிந்தவன்.

குற்றமலராதரிக்கும்

குற்றம் அலராது அரிக்கும் குற்றம் பரவாதபடி கெடுக்கும்.

குற்ற மலர் ஆதரிக்கும் - பறித்த பூக்களை அன்பு செய்யும்.

குற்றம்பலகழிக்கும்

குற்றம் பல கழிக்கும் - குற்றங்கள் பலவற்றை நீக்கும்.

குற்று அம்பு அலகு அழிக்கும் - குற்றுகின்ற அம்பின் அலகை அழிக்கும்.

குற்ருல வட்டமிடும்

குறு ஆலவட்டம் இடும் - சிறிய விசிறியாக வீசும்.

குற்று ஆலவட்டம் இடும் பறித்து அசைய மலர்களின் வட்டத்தை இடுகிற.

**குன்றங் கவிகை செய்தால்**

**குன்றம் கவிகை செய்தால்** - கோவர்த்தன மலையைக் குடையாகச் செய்தான்.

**குன்றம் கவி கை செய்தால்** - மலைபோன்ற தனத்தை மூடுகிற கையாகச் செய்தால்.

**குன்றத்தூர் வழி கூட்டி**

**குன்றத்தூர் வழி கூட்டி** - குன்றத்தூரின் வ ழி யா க ச் சேர்த்து.

**குன்றத்தூர் வழி கூட்டி** - குன்றத்தைப் போன்ற கொங்கையினிடத்தே சேர்த்து

**குன்றக் குடி**

**குன்றக் குடி** - குன்றக்குடி என்னும் முருகன் திருப்பதி.

**குன்றக் குடி** - குறைவில்லாத குடும்பம்.

**குன்றத் தனங் குவியும்**

**குன்று தனம் குவியும்** - சிறுமலையைப் போலக் கொங்கைகள் குவிந்துள்ள.

**குன்று தனம் குவியும்** - குறையாத செல்வம் சேரும்.

**குன்றன்**

**குன்றன்** - குறையாதவன்.

**குன்றன்** - சிறு மலையை உடையவன்.

**குன்று ஆன்** - குன்றைப்போன்ற இடபத்தை உடையவன்.

**குன்றினிறங் கவரும்**

**குன்றி நிறம் கவரும்** - குன்றிமணியின் நிறத்தைக் கவரும்.

**குன்றின் இறங்கவரும்** - மலையின் இடத்திருந்து இறக்கமாகச் செல்லும்.

**கூடகத்தை நீக்குதலால்**

**கூடு அகத்தை நீக்குதலால்** - சேர்ந்த தீவினையைப் போக்குவதால்.

**கூடகத்தை நீக்குதலால்** - வஞ்சனையை விடுதலால்.

**கூடத்தமிழ் தீட்டும்**

**கூட தமிழ் தீட்டும்** - மிகுதியாகத் தமிழ் மொழியை எழுதும்.

**கூடத்து அமிழ்து ஈட்டும்** - வீட்டுக் கூடத்திலே உ ண வு ப் பொருள்களைச் சேர்த்துவைக்கும்.

**கூட மதுவருந்தும்**

**கூட மது அருந்தும்** - உடனிருந்து தேனை உண்ணும்.

**கூடம் அது வருந்தும்** - மலையின் உச்சி வருந்தும் - இடமானது வருந்தும்.

**கூடலார் சங்கமெய்க்கும்**

**கூடல் ஆர் சங்கம் எய்க்கும்** - மதுரையிற் பொருந்திய சங்கத்தார்களும் இளைக்கும்.

**கூடலார் சங்கம் எய்க்கும்** - பகைவர்களுடைய கூட்டம் தோல்வியை அடையும்.

**கூடல் வளைக்கைவிடா**

**கூடு அல் வளைக்கை விடா** - கூடுதற்குரிய இரவில் வளையலணிந்த கையை நெகிழவிடாத.

**கூடல் வளைக்கை விடா** - கூடற்சுழி வளைத்தலை விடாத.

**கூடற் குடையவர்**

**கூடற்கு உடையவர்** - மதுரைக்குரியவர்.

**கூடற்கு உடையவர்** - புணர்ச்சிக்குரியவர்.

**கூடுமணங் காட்டும்**

**கூடும் மணம் காட்டும்** - *கூடிய தறல் உளதாகிய வாசனையைப் புலப்படுத்தும்.*

**கூடும் அணங்கு ஆட்டும்** - *சேர்ந்த தெய்வங்களை வருத்தும்.*

**கூடுமறு கூடடையா**

**கூடு மறு கூடு அடையா** - *சேருகிற மறு உடலைச் சேராத.*

**கூடு மறுகு ஊடு அடையா** - *பலருஞ் சேருகின்ற தெருவினிடத்தே அடையப் பெறாத.*

**கூடென்றேன்**

**கூடு என்றேன்** - *பறவைக் கூடு வேண்டுமென்று கேட்டேன்.*

**கூடு என்றேன்** - *என்னைச் சேர்வாயாக என்று சொன்னேன்.*

**கூடையுடையார்**

**கூடை உடையார்** - *கூடையை உடையவர்.*

**கூடு ஐ உடையார்** - *பொருந்திய அழகுடையவர்.*

**கூத்தரங்க மேவு**

**கூத்தர் அங்கம் மேவு** - *கூத்தர்களைப்போல் கூத்தாடுதலைச் செய்யும்.*

**கூ தரங்கம் மேவு** - *கூவுகின்ற அலைபொருந்தும்.*

**கூப்பிட்டு**

**கூப்பிட்டு** - *அழைத்து.*

**கூ பிட்டு** - *பூமியைப் பிளந்து கொண்டு.*

**கூப்பிட்டேன்**

**கூப்பிட்டேன்** - *அழைத்தேன்.*

**கூப்பு இட்டேன்** - *கையைக் குவித்து வணங்கினேன்.*

**கூம்புபடாமாலைமலர்**

**கூம்பு படாம் மாலை மலர்** - *கொடிஞ்சியில் சீலைகளும் பூமாலைகளும் மலரப்பெற்ற.*

**கூம்புபடா மாலைமலர்** - *குவிதலடையாமல் மாலைக் காலத்திலே மலர்கின்ற.*

**கூரரம்பை மேனகை செய்**

**கூர் அரம்பை மேனகை செய்** - *பொருந்திய அரம்பையும் மேனகையுஞ் செய்கிற.*

**கூர் அரம்பைமேல் நகைசெய்** - *சிறந்த வாழையை எள்ளி நகையாடுகின்ற.*

**கூர்களினால் வண்டிரைகூர்**

**கூர்களினால் வண்டு இரைகூர்** - *மிகுந்த கள்ளில் வண்டுகள் ஒலி செய்து கொண்டு உன்னைப் பொருந்துகின்ற.*

**கூர்களினால் வண் திரைகூர்** - *கூர்களால் தேனடை கிழியப் பெற்றுத் தேன் பெருகி வளவிய அலைகளை வீசுகிற.*

**கூலமறுகுதரும்**

**கூலம் மறுகு தரும்** - *தானியங்களைக் கடைத்தெருவானது தருகின்ற.*

**கூலம் மறுகுதரும்** - *நீர்க்கரையில் வருத்தத்தாற் சுழலும்.*

**கூவற் கயமுழக்கும்**

**கூவல் கயம் உழக்கும்** - *பள்ளத்தைதறையுடைய குளத்தைக் கலக்கும்.*

**கூவல் கயம் முழக்கும்** - *கூவு தலையுடைய யானையானது முழக்கத்தைச் செய்யும்.*

**கூவிளங்கா யிணையாம்**

**கூ விளங்கு ஆய் இணையாம்** - *நிலத்தில் விளங்குகிற தாய்க்கு ஒப்பாதும்.*

**கூவிளங்காய் இணையாம்** - *வில்வக்காய்கள் இரண்டைப் போன்று விளங்கும்.*

**கூழையெனக் களித்தீர்**

**கூழை எனக்கு அளித்தீர்** - *கூந்தலை எனக்குக் காட்டினீர்*

**கூழை எனக்கு அளித்தீர்** - *கூழ் உணவை எனக்குக் கொடுத்தீர்.*

**கூறினற்பா வந்தடுக்கும்**

**கூறு இனல்பா வந்து அடுக்கும்** - *கூறு கூறாகிய வசைப் பாடல்கள் வந்து பொருந்தும்.*

**கூறின் அல் பாவம் தடுக்கும்** - *சொல்லின் அஞ்ஞானமாகிய இருளையும் தீவினையையுந் தடுக்கும்.*

**கூறுதிரை வனஞ்சேர்**

**கூறு உதிர் ஐவனம் சேர்** - *கூறுகள் உதிர்ந்த மலைநெல் சேரப் பெற்ற.*

**கூறு திரைவனம் சேர்** - *சொல்லப்பெறுகிற அலைக்காட்டைச் சேர்கிற.*

**கூனத்தின முகக்கும்**

**கூன் நத்தினம் முகக்கும்**-*உடல் வளைந்த சங்கினங்கள் முகந்து செல்லும்.*

**கூன தினம் உகக்கும்** - *கூனிச் செல்வதற்கு நாள்தோறும் விரும்பும்.*

**கேதனத்தன் போதனத்தன்**

**கேதனத்தன் போதன் நத்தன்** - *கொடியை உடையவன், தாமரை மலரில் எழுந்தருளிய நான்முகன் சங்கேந்திய திருமால்.*

**(நி)கேதனத்தன் போதன் அத்தன்** - *கோயிலையுடையவன், நான்முகனுக்குத் தலைவன்.*

**கேளாமை யெய்த**

**கேள் ஆமை எய்த** - *கூட்டமான ஆமைகள் செல்ல.*

**கேள் ஆம் ஐ எய்த** - *நட்பின் தலைமைப் பாடு பெற.*

**கேளாமை எய்த** - *சொல்லுதலைக் கேளாத தன்மையை அடைய.*

**கைக்கவள மன்னும்**

**கை கவளம் மன்னும்** - *(துதிக்) கையால் எடுத்துண்ணக் கவளமாகப் பொருந்தும்.*

**கைக்க வளம் மன்னும்** - *வெறுக்கும்படியாகச் செல்வம் விளங்கும்.*

**கைக்களச்சாதி நெய்தலைக் -**

**ொண்டது**

**கைக்களச்சாதி நெய்தலைக் கொண்டது** - *கைக்கோளச் சாதி நெய்தற்றொழிலை மேற்கொண்டது.*

**கைக் களச்சாதி நெய்தலைக் கொண்டது** - *கையாகிய கள்ளச் சாதி (கைகள்) நெய்தற் பூவைக் கவர்ந்து கொண்டது. நெய்தல் கண்ணுக்குவமை.*

**கைக்கிளை பாராட்டும்**

**கை கிளை பாராட்டும்** - *கையில் கிளியை வைத்துக் கொண்டாடும்.*

**கைக்கிளைபாராட்டும்**-*ஒருதலைக் காமத்தைப் போற்றும்.*

கை கிளை பாராட்டும்-*கைக்கிளை என்னும் இராகத்தைப் பல கால் பாடும்.*

**கைக்குஞ்சரம்**

**கைக் குஞ்சரம்**-*கையை உடைய யானை.*

**கைக்கும் சரம்** - *வெறுக்கின்ற கணை.*

**கைச்சரிதுன்னும்**

**கைச்சரி துன்னும்** - *கைவளையல் பொருந்தும்.*

**கைச்சு அரி துன்னும்**-*வெறுத்து அரிமாக்களை அடையும்.*

**கைத் தனம்**

**கைத் தனம்** - *கையில் உள்ள பொருள்.*

**கைத்தனம்** - *வெறுத்துவிட்டோம்.*

**கைப்பவளம்**

**கை பவளம்** - *கையினிடத்திலே யுள்ள பவழம்.*

**கைப்ப வளம்** - *வெறுக்குமாறு செல்வம்.*

**கைம்மாறுகொள்ளா**

**கை மாறுகொள்ளா** - *ஒழுக்கம் மாறுபடாத*

**கைம்மாறு கொள்ளா**-*எதிர் உதவியை ஏற்றுக்கொள்ளாத*

**கைம்மை யுடையவர்**

**கை மை உடையவர்**-*கையிலே மையை உடையவர்.*

**கைம்மை உடையவர்** - *விதவைத் தன்மை உடையவர்.*

**கையடையாரும்**

**கையடை ஆரும்** - *அடைக்கலமாகப் பொருந்தும்.*

**கை அடை ஆரும்** - *மெய்ப்பவருடைய கையிலுள்ள தழையைத் தின்னும்.*

**கையரவப் பணியார்**

**கையர் அவம் பணியார்**-*கீழோராகிய பயனற்ற தொழிலையுடையவர்.*

**கை அரவம் பணியார்**-*கையிலே பாம்புவளையலை அணிந்தவர்.*

**கையராவாட்டினுர்**

**கை அரா ஆட்டினுர்** - *கையிலே பாம்பை ஆட்டியவர்.*

**கை அரா வாட்டினுர்**-*(தீ)யொழுக்கமாகிய பாம்பை நலியச் செய்தவர்.*

**கையாகத்த**

**கை யாகத்த** - *ஒழுக்கமுள்ள வேள்வித் தலைவனே!*

**கை ஆகு அத்த** - *கையிலுள்ள பொருளைப் போன்றவனே!*

**கையாந்தகரையும் நாடுவம்**

**கையாந் தகரையும் நாடுவம்** - *கையாந்தகரைக் கற்பத்தையும் இனிமேல் தேடுவோம்.*

**கைய அந்தகரையும் நாடுவம்** - *கையினிடத்து அடங்கியுள்ள நமனையும் (நமன்போன்ற விழியையும்) இனிமேற் பார்ப்போம்.*

**கையாறுமாறும்**

**கை ஆறும் ஆறும்** - *கைகள் பன்னிரண்டும்.*

**கையாறு மாறும்** - *ஒழுக்க நெறியிலே மாறுபடும்.*

**கையானரையானுன்**

**கையான் அரையானுன்** - *கையை உடையவன் இடுப்பையுடையவனுனவன்.*

கையான் நரை ஆனுன் - வெருதான், வெள்ளிய காளையை உடையவன்.

**கையுடையானை**

கை உடையானை - கையை உடையவனை.

கை உடை யானை - கையை உடைய யானை.

கை உடையானை - ஒழுக்கங் கெடாதவனை; உடையவனை.

**கைவந்தனம்**

கை வந்தனம் - கிட்டப்பெற்றோம்.

கை வந்தனம் - கையினால் வணக்கம்.

கை வந்த அனம் - கையில் கொண்டுவரப்பட்ட சோறு.

**கைவாரஞ் செய்யும்**

கைவாரம் செய்யும் - தவ ஒழுக்கத்துடன் அன்பும் செய்யும்.

கைவாரம் செய்யும் - கையைத் தட்டி ஒலி உண்டாக்கும்.

கை வாரம் செய்யும் - முறையாக வாரம் என்னும் பாடலைப் பாடும்.

**கைவேழமாடும்**

கை வேழம் ஆடும் - துதிக்கையை உடைய யானைகள் மூழ்கும்

கை வேழம் ஆடும் - கையிற் கரும்பு அசைக்கின்றது.

**கொக்குப் பலவனஞ்சூழ்**

கொக்கு பல அனம்சூழ் - கொக்கும் பல அன்னப் பறவைகளுஞ் சூழ்ந்த.

கொக்கு பல வனம்சூழ் - மாமரங்களும் பலா மரங்களும் காடாகச் சூழ்ந்துள்ள.

**கொங்கை முகந்திமிரும்**

கொங்கை முகந்து இமிரும் - தேனை மொண்டுகொண்டு ...

கொங்கை முகம் திமிரும் - கொங்கையினிடத்திலே பூசிக்கொள்ளும்.

**கொங்கை யெதிர்ந்துமுந்த**

கொங்கை எதிர்ந்து முந்த - கொங்கைகள் மேலோங்கி நிமிர்ந்து நிற்க.

கொங்கை எதிர்ந்து முந்த - மணம் மிகுந்து தோன்றி முற பட்டு நிற்க.

**கொங்கை யேற்றமுற**

கொங்கு ஐ ஏற்றம்உற - மணத்தையும் அழகையும் மிகுதியாகப் பொருந்த.

கொங்கை ஏற்றம்உற - தனமானது பருத்தலையடைய.

**கொங்கையைக் கண்டனன்**

கொங்கு ஐயைக் கண்டனன் - கொங்கு நாட்டினுடைய அழகைப் பார்த்தேன்.

கொங்கையைக் கண்டனன் - கொங்கைகளைப் பார்த்தேன்.

**கொடியவாய்**

கொடிய வாய் - தீயவாய்.

கொடி அவாய் - கொடிகளை விரும்பி.

**கொடியவிடமடக்கி**

கொடியவிடம் அடக்கி - கொடுமையான நஞ்சை உள்ளே அமைத்து.

கொடிய இடம் மடக்கி - கொடிகளை எல்லா விடங்களினும் நெருங்கக் கொண்டு.

**கொடியார்**

கொடியார் - கொடி போல்பவர்.
கொடியார் - பொல்லாதவர்.

**கொடுங்கூற்றையுங் கையமைத்-தீர்**

கொடும் கூற்றையும் கை அமைத்தீர் - *கொடிய யமனையுங் கையில் அடக்கினீர்.*
கொடும் கூற்றையும் கை அமைத்தீர் - *கொடிய கூற்றுப்பாட்டு கன்னையுங் கையால் அடக்கினீர்.*

**கொடுவந்தனம்**

கொடு வந்தனம் - *என்னிடம் கொடு வணக்கம்.*
கொடுவந்தனம் - *கொண்டுவந்தோம்.*

**கொட்டமிடு மஞ்சளுறும்**

கொட்டம் இடும் மஞ்சள் உறும் - *கொட்டாரம் இடப்பெறும் மஞ்சளும் பொருந்தும்.*
கொட்டிடும் மஞ்சு அள் உறும் - *விளையாடும் முகிலை அள்ளத் தொடங்கும்.*

**கொட்டாரப் பட்டடை சேர்**

கொட்டு ஆர் அம் பட்டு அடை சேர் - *கொட்டுதலார்ந்த அழகிய பட்டும் தளிர்களும் சேரப்பெற்ற.*
கொட்டாரம் பட்டடை சேர் - *கொட்டாரத்திலும் பட்டடையிலுஞ் சேரப்பெற்ற.*

**கொட்டிநெய்தலைக் காட்டும்**

கொட்டின் எய்தலைக் காட்டும் - *தோளைக் கொட்டுதலோடு அம்பு எய்தலைக் காட்டும்.*
கொட்டி நெய்தல் காட்டும் - *கொட்டிப் பூவையும் நெய்தற் பூவையுங் காட்டும்.*

**கொட்டுந் தருவிளைக்கும்**

கொட்டும் தரு இளைக்கும் - *கொடைப் பொருளைச் சொரியும் கற்பகதரு தோல்வியடையும்.*
கொட்டும் தரு விளைக்கும் - *கொட்டுதற்குரிய இசைப் பாடல்களை மேன்மேலும் உண்டாக்கும்.*

**கொண்டல் வரத்துதிக்கும்**

கொண்டல் வரத்து உதிக்கும் - *கீழ்க்காற்றின் வருகையினால் தோன்றும்.*
கொண்டல் வர துதிக்கும் - *கீழ்க் காற்று வருமாறு போற்றும்.*

**கொண்டாடுங் கந்துகம்**

கொண்டாடும் கந்துகம் - *எல்லோரும் பாராட்டுகிற குதிரைகள்.*
கொண்டு ஆடும் கந்துகம் - *கையிற்கொண்டு விளையாடும் பந்து.*

**கொண்டைக் கலர் முடிக்கும்**

கொண்டைக்கு அலர் முடிக்கும் - *மாட்டின் இமிலுக்குப் பழிமொழியை உண்டாக்கும்.*
கொண்டைக்குஅலர்முடிக்கும் - *கூந்தலின் முடிச்சுக்கு மலரைச் சூடிக்கொள்ளும்*

**கொத்தளவித் தாரமரும்**

கொத்து அளவி தார் அமரும் - *பூங்கொத்துகள் கலந்து மாலை தங்கப்பெற்ற.*

கொத்தள வித்தாரம் மரும் - கொத்தளம் என்றும் விரிவைப் பெற்றிருந்தன.

## கொப்புக் குழைதாவும்

கொப்பு குழைதாவும் - கொப்பென்றும் அணி பொருந்திய காதிடத்தில் பொருந்தும்.
கொப்பு குழைதாவும் - கொம்புகளில் உள்ள தளிரில் தாவும்.

## கொம்பார் நடந்தழைக்கும்

கொம்பார் நடந் தழைக்கும் - மரக் கொம்புகளில் கூத்தாடுதலைச் செய்யும்.
கொம்பார் நடந்து அழைக்கும் - பூங்கொம்பைப் போன்ற பெண்கள் எதிர்சென்று வரவேற்கும்.

## கொம்பிலையே தீனிதின்னும்

கொம்பு இலையே தீனி தின்னும் - கொம்பிலுள்ள இலைகளையே உணவாகக் கொள்ளும்.
கொம்பு இல்லையே தீனி தின்னும் - கொம்பு இல்லாததாகும். வைக்கப்பட்ட தீனி முதலியவைகளைத் தின்னும்.

## கொம்பு குறித்துவரும்

கொம்பு குறித்து வரும் - கொம்பென்னும் ஊதுகருவியை ஊதிக்கொண்டு வரும்.
கொம்பு குறித்து வரும் - மரக் கொம்புகள் தம் மேற்படாத படி பார்த்துக்கொண்டுவரும்.

## கொம்புருவ வேழமுறழ்

கொம்பு உருவ வேழம் உறழ் - (கற்பகம்) கொம்பை ஊடுருவ மூங்கில் மாறுபட்டுச் செல்லும்.
கொம்பு உருவ வேழம் உறழ் - கொம்பமைந்த வடிவம் பொருந்திய யானையைப் போன்ற.

## கொல்லத்தி

கொல்லத்தி - கொல்லச் சாதியில் தோன்றிய பெண்.
கொல் அத்தி - கொலை செய்யும் யானை.

## கொல்லிமலையத் திசைக்கும்

கொல்லி மலையத்து இசைக்கும் - கொல்லிமலை மலையையும் பொதியில் மலையையும் ஒத்திருக்கும்.
கொல்லி மலைய திசைக்கும் - கொல்லிப் பண்ணைப் பாடுவதற்குத் திகைப்பை யடையும்.

## கொழுதணிந்து செல்லும்

கொழுது அணிந்து செல்லும் - கொய்து சூடிக் கொண்டு போகும்.
கொழு தணிந்து செல்லும் - கொழு ஆழமாகப் பாய்ந்து செல்லும்.

## கொழுநருடனாடுவார்

கொழுநருடன் ஆடுவார் - கணவருடன் நீராடுகிறவர்கள்.
கொழுநர் உடன் நாடுவார் - சிறுவர்கள் உடனே தேடுவார்கள்.

## கொழுந்தடம்

கொழுதடம்-செழிப்பான தடாகம்.
கொழுந்து அடம் - இளமையானது தீமையைச் செய்கின்றது.

**கொள்ளிடத்து மேவுதலால்**

கொள்ளிடத்து மேவுதலால் - *கொள்ளிடம் என்றும் ஆற்றிற் கலத்தலால்.*

கொள் இடத்து மேவுதலால் - *மனங்கொண்ட இடத்திற் செல்வதால்.*

**கொற்றவராகத் துடங்கும்**

கொற்றவர் ஆகத் துடங்கும் - *அரசராகத் தொடங்கும். (துடங்கும் - தொடங்கும்.)*

கொல்தவர் ஆகத்து உடங்கும்- *கொல்லுகின்ற வில் உடம்பில் ஒன்றுபட்டு நிற்கும்.*

**..ன்றையனே**

..ன்றையனே - *கொன்றை மாலையை அணிந்தவனே!*

கொன்ற ஐயனே - *கொலைசெய்த தலைவனே!*

**கோகநகத்துறைவார்**

கோ கநகம் துறை வார்-*சிறந்த பொன்னைக் கொழிக்கும் துறைகள் நீண்டுள்ள.*

கோகநகத்து உறைவார் - *தாமரை மலரிலே உறைவார்கள்.*

**கோகர்ண வித்தை**

கோகர்ண வித்தை - *வித்தை வகைகளில் ஒன்று.*

கோ கர்ண வித்தை - *(மங்கையரின்) கண்ணுனது செய்கிற தொழில்.*

**கோக்குஞ் சரமழைக்கும்**

கோக்கும் சரம் மழைக்கும் - *நாணிற் கோக்கப்படும் அம்புகளை மழைபோலச் சொரியும்.*

கோ குஞ்சரம் அழைக்கும் - *தலைமையான யானையை அழைக்கும்.*

**கோடண்டலைமுன் பயின்றுளதால்**

கோள் தண்டு அலைமுன்பு அயின்று உளதால் - *யோகத் தன்மைக் கொண்டிருத்தலால், கடலை முன்பு குடித்திருப்பதால்.*

கோடு அண்டலை முன் பயின்று உளதால் - *உச்சியிடங்கொண்டிருப்பதை முன்பே பெற்றுள்ளமையால்.*

**கோடரங்கு மட்டெறியும்**

கோடு அரங்கு மட்டு எறியும் - *கோடாகிய அரங்கின் அளவில் எறியும்.*

கோடரம் குமட்டு எறியும் - *குரங்கு கக்குதலைச் செய்யும்.*

**கோடாமதிக் கலைகூர்**

கோள்தாம் மதி கலைகூர் - *ஒன்பான் மண்டலத்தில் தாவிச் செல்லுகின்ற திங்களது மானை விரும்புகின்ற.*

கோடா மதி கலை கூர்-*கோணுதலில்லாத அறிவு கல்வியில் தேர்ச்சி பெறுகிற.*

**கோடாமை நீரூரும்**

கோடு ஆமை நீர் ஊரும் - *சங்கும் ஆமையும் நீரிலே செலலப்பெறும்.*

கோடாமை நீர் ஊரும்-*உள்ளக் கோணல் உண்டாகாத தன்மையை நெஞ்சிடத்திலே பொருந்தும்.*

**கோடிப்படம் காட்டும்**

கோடிபடம் காட்டும் - *புதுமையான காற்றுடிகளைக் காட்டும்.*

கோடி படம் காட்டும்-*பலபடங்களைத் தன்னிடத்திலே தெரியச் செய்யும்.*

**கோடி வரம்படைக்கும்**

**கோடி வரம் படைக்கும்** - [illegible] வரங்க [illegible].

**கோடு இவர் அம்பு அடைக்கும்** - கரையில் [illegible] நீரை [illegible] அடைக்கும்.

**கோடியமராகத் திறஞ்செய்**

**கோடு இயம் ராகத்திறம் செய்** - [illegible] பாணரது ராகத்[illegible] கூறு பாட்டைச் செய்யும்.

**கோடியர் ஆகத் திறம் செய்** - கூத்[illegible] உடம்பி[illegible] ஆடல் [illegible].

**கோடீரத்தாரார்**

**கோடீரத்து ஆரார்** - சடையி [illegible] உடையவர்.

**கோள்தீர தாரார்** - குற்றம் நீங்க(த் [illegible]) கொடாதவர்.

**கோடீரத்தாளமர்வான்**

**கோடீரத்தான் அமர்வான்** - சடையை உடையவன் அமரும் விண்ணுலகம்.

**கோள் தீர தான் அமர்வான்** - குற்றம் நீங்குமாறு தான் எழுந்தருளியிருப்பான்.

**கோடீர மாதவஞ்செய்**

**கோள்தீர மாதவம் செய்** - குற்றந் தீரும்படி மிகுந்த தவத்தைச் செய்கின்ற

**கோடீரம் ஆதவம் செய்** - சடை வெயிலைச் செய்கின்ற.

**கோடுகடலைமருவி**

**கோடு கடலை மருவி** - வளைவுள்ள கடலைச் சார்ந்து.

**கோடுகள் தலைமருவி** - கொம்புகளைத் தன் தலையிற் கொண்டு.

**கோடுதவுமுத்தலை சேர்**

**கோடு உதவும் முத்தலை சேர்** - சிறு சிகரங்களை உதவும் மூன்று சிகரங்கள் சேரப் பெற்ற.

**கோடு உதவு முத்து அலைசேர்** - சங்கால் தரப்பெற்ற முத்து அலையினிடத்தே சேர்கின்ற.

**கோடேறித் தண்டலையூர்**

**கோடு ஏறி தண்டலை ஊர்** - மலைகளில் ஏறிச் சோலைகளில் மெல்லச் செல்லும்

**கோடு ஏறி தண்டு அலை ஊர்** - கரையில் ஏறி நீங்குகின்ற அலைகள் பரவப்பெற்ற.

**கோடைக்கு வாடைதரும்**

**கோடைக்கு வாடை தரும்** - கோடையின் வெப்பத்திற்கு வாடைக்காற்றைத் தரும்.

**கோடைக்கு வாடை தரும்** - (கதிரவன்) குதிரைக்குத் தெருவைக் கொடுக்கும்.

**கோட்டமிரவடையா**

**கோட்டம் இரவு அடையா** - மனக்குற்றமும் இரத்தற் றொழிலும் அடையப் பெறாத.

**கோட்டம் இரவு அடையா** - கோயில் இரவில் அடைக்கப் பெறாத.

**கோட்டலை வாரிப்புல்லும்**

**கோள் தலை வாரி புல்லும்** - ஒன்பான் கோள்களைத் தலையிலே யுடைய கூட்டத்தை அடையும்.

**கோடு அலை வாரி புல்லும்** - சங்குகளையுடைய கடலைச் சென்று தழுவும்.

## கோட்டானையங் கடல்செய்

**கோட்டு ஆனை அம் கடல் செய்**- *கொம்பையுடைய ஆனைகளால் அழகிய கடலைச் செய்கின்ற.*

**கோட்டு ஆனை அங்கு அடல் செய்** - *கொம்பையுடைய ஆனைகளை அங்கு வெல்லுகின்ற.*

**கோட்டானை அங்கு அடல் செய்** - *கோட்டான் என்னும் பறவையை அங்கே உறுத்துகிற.*

## கோட்டிக் கயம்பாயும்

**கோடு இக்கு அயம் பாயும்**-*வளைதலையுடைய கரும்பின் சாறு பொருந்தும்.*

**கோட்டி கயம் பாயும்** - *கூட்டமாகிய யானைகள் பாய்கின்ற.*

## கோட்டுக் குரங்குறையும்

**கோட்டு குரங்கு உறையும்** - *மரக்கிளைகளில் குரங்குகள் தங்கும்.*

**கோட்டுக்கு உரம் குறையும்** - *கரைக்கு வன்மை குறையப் பெறும்*

## கோட்டுக் குழையார்

**கோடு குழையார்** - *சங்கக் குண்டலங்களை அணிந்தவர்.*

**கோட்டுக்கு உழையார்** - *பூங்கொம்பைப்போன்ற உமா தேவிக்குப் பக்கத்தில் இருப்பவர்.*

## கோட்டு மறுகால் விலகும்

**கோட்டு மறுகால் விலகும்** - *கரையை உடைய வேறு வாய்க்கால்கள் குறுக்கே ஓடும்.*

**கோட்டும் அறுகால் விலகும்** - *வளைந்த ஆறு கால்களையுடைய வண்டுகள் விலகிச் செல்லும்.*

## கோட்டுவரையாடிவரும்

**கோட்டு வரை ஆடி வரும்** - *கொம்பையுடைய மலையைப் போன்ற யானைகள் ஆடி வரும்.*

**கோட்டு வரையாடு இவரும்** - *கொம்பையுடைய வரையாடுகள் ஏறும்.*

**கோள் துவர் ஐ ஆடி வரும்** - *ஒன்பது கோள்களைச் சார்ந்துள்ள சிவந்த அழகிய உத்திராட நாளும் வரும்.*

## கோட்டுவழி தேனிரைக்கும்

**கோட்டு வழி தேன் நிரைக்கும்**- *கிளைகளின் வழியே தேன் தொடர்பாக ஓடும்*

**கோட்டுவழி தேன் இரைக்கும்**- *தந்தத்தினிடத்தே அமர்ந்த வண்டுகள் மதமுண்ண ஒலிக்கும்.*

## கோட்டைபுகும்

**கோட்டை புகும்** - *நெற் கோட்டைக்குட் சேரும்.*

**கோட்டை புகும்** - *அரண் மனைக் கோட்டையை அடையும்.*

## கோணத்தான்

**கோணத்தான்** - *கோணவடிவத்திலே இருப்பவன்.*

**கோள் நத்தான்** - *கோள்களாற் பற்றப்படாதவன்.*

## கோணிலவை நாணேற்றும்

**கோண் இலவை நாண் ஏற்றும்**- *கோணிய இலவம் பூவிந்து நாணத்தை ஏற்றும்.*

**கோள் நிலவை நாண் ஏற்றும்** - *கோணிய நிலவை(ப் பிடித்து) நாணினை ஏற்றும்.*

## கோணையறத்திருத்தும்

**கோணை அறத் திருத்தும்** - *வழி தப்பி நடத்தல் அறும்படி திருந்தச் செய்யும்.*

**கோள்நை அறத்து இருத்தும்** - *குற்றங்கள் நைதற்குக் காரணமான அறத்தில் நிலை பெறச் செய்யும்.*

## கோதண்டபாணி நிகர்

**கோ து அண்ட பாணி நிகர்** - *காமதேனு உன்னுகின்ற விண்ணூற்றைப் போன்று விளங்கும்*

**கோதண்டபாணி நிகர்**- *வில்லைக் கையில் தாங்கிய இராமபிரானைப் போன்ற.*

## கோதுமலங்கனையும்

**கோதும் மலங்கு அனையும்** - *கோதுகின்ற மலங்கு என்னும் மீனை உண்பதற்குக் கலக்கும்.*

**கோது மலம் களையும்** - *குற்றம் பொருந்திய மும்மலங்களையும் போக்கும்.*

## கோதைக் கழுநீர்பெய்

**கோதை கழுநீர் பெய்** - *தீவினையைக் கழு நீராகப் பிரித்து ஓடச் செய்கிற.*

**கோதை கழுநீர் பெய்** - *செங்கழுநீர் மாலையைச் சூடுகின்ற.*

## கோதை யரங்கத்து

**கோதை அரங்கத்து** - *மாலையாகிய அவையிலே.*

**கோதையர் அங்கத்து** - *பெண்களுடைய உடலினிடத்து.*

## கோத்தும்பியூதியமாம்

**கோ தும்பி ஊதியம் ஆம்** - *சிறந்த யானைகள் பயனாகக் கிடைக்கிற.*

**கோத்தும்பி ஊதியம் ஆம்** - *சிறந்த வண்டுகள் ஊது வாத்தியம் ஆகிற.*

## கோப முருக்கறுக்கும்

**கோபம் முருக்கு அறுக்கும்** - *சினத்தின் கொடுமையைப் போக்கும்.*

**கோபம் உரு கறுக்கும்**-*இந்திர கோபத்தின் நிறம் கறுத்துத் தோன்றும்.*

## கோபாலனத்தனார்

**கோபாலன் நத்தனார்** - *கோபாலனாகிய சங்கையுடையவர்.*

**கோ பாலன், அத்தனார்**-*கண்ணை நெற்றியில் உடையவர், எல்லோருக்குந் தலைவனாக இருப்பவர்.*

**கோபாலன் அத்தனார்** *கோபாலனாகிய திருமாலின் தலைவரானவர்.*

**கோ பால் அனத்தனார்**-*தலைமை தங்கிய வெள்ளிய அன்னப் பறவையை உடையவர்.*

## கோபுரப் பொன் னாணி நிற்கும்

**கோ புரம் பொன் நாணி நிற்கும்**- *திருமாலின் உடலில் உள்ள திருமகள் வெட்கி நிற்கும்.*

கோபுரம் பொன் ஆணி நிற்கும்- *கோபுரத்திலே உள்ள பொன் ஆணிப் பொன்னாக நிற்கும்.*

**கோமழவு மேய்ந்துவரும்**

கோ மழவு மேய்ந்து வரும் - *பசுவின் கன்று மேய்ந்து வரும்.*

கோமழவு ஏய்ந்து வரும் - *தலைமையை உடைய இளமை பொருந்தி வரும்.*

**கோமேதகமேயும்**

கோ மேதக மேயும் - *பசுக்கள் சிறப்புப் பொருந்த மேயும்.*

கோமேதகம் ஏயும்- *கோமேதகம் என்னும் மணி பொருந்தும்.*

**கோலஞ்செய்தாடிவரும்**

கோல் அஞ்சு எய்து ஆடிவரும்- *ஐங் கணைகளை எய்து வென்று வரும்.*

கோலம் செய்து ஆடிவரும் - *அழகு செய்து கொண்டு கூத்தாடி வருகிறது.*

**கோலமருமத்தாணி**

கோல் அமரும் அத்தாணி - *செங்கோலோடு தங்கியிருக்கும் அரசிருக்கை யாகும்.*

கோலம் மருமத்து ஆணி - *அழகிய மார்பிற் குத்தப் படும் ஆணிபோலாகும்.*

**கோலமுழ விசைக்கும்**

கோலம் முழவு இசைக்கும் - *அழகிய முழவு என்னும் வாத்தியம் ஒலிக்கும்.*

கோலம் உழ விசைக்கும் - *பன்றிகள் உழும் பொருட்டு விரைவுகொள்ளும்.*

**கோலம்பலகாட்டும்**

கோலம் பல காட்டும்- *பலவகையான காட்சிகளைக் காட்டும்.*

கோல் அம்பு அலகு ஆட்டும் - *ஈர்க்கையுடைய அம்பினது நுனியை வருத்தும்.*

**கோல்வளையாரஞ்சலிக்கும்**

கோல் வளை ஆரம் சலிக்கும் - *பூங்கொம்பையும் சங்கையும் முத்தையும் அசையச் செய்யும்.*

கோல் வளையார் அஞ்சலிக்கும்- *வளைந்த வளையல்களை யணிந்த பெண்கள் வணங்கும்*

**கோவந்தீரக்கலக மிசைகொண்டு**

கோவந்து ஈர கல் அக மிசை கொண்டு - *வானத்தின்மேற் சென்று குளிர்ந்த மலையின் மேற் படிந்து.*

கோவம் தீர கலகம் இசை கொண்டு - *சினம் ஒடுங்கப் போரின்கண் சேர்ந்து.*

**கோவரிசை யேற்கவரும்**

கோவர் இசை ஏற்க வரும் - *இடையரது வேய்ங்குழலோசையை ஏற்றுக்கொள்ள வரும்.*

கோ வரிசை ஏற்க வரும் - *அரசர்கள் செய்யுஞ் சிறப்பைப் பெற வரும்.*

**கோவர்த்தன மிசைக்கும்**

கோ வர்த்தனம் செய்யும் - *அரசாட்சியின் வளர்ச்சியைச் செய்யும் (வர்த்தனம்— வளர்ச்சி)*

கோவர்த்தனம் இசைக்கும் - *கோவர்த்தனம் என்னும் மலையை ஒக்கும்.*

**கோவளம்**

கோவளம் - கோவளம் என்னும் ஊர்.

கோ வளம் - கண்ணின் சிறப்பு.

**கோவளர்தானத்தின் அம்கன்று சேர்கை**

கோவளர் தானத்தின் அம் கன்று சேர்கை - *பசு இருக்குமிடத்தில் அழகிய கன்று சேருதல்.*

கோவளர் தானத்தின் அம் கன்று சேர்கை - *கண்ணிருக்குமிடத்தில் அழகிய மையல் பொருந்திய நகை.*

கோவளர் தானத்தின் அம் கன்று சேர்கை - *கோபுரத்திலே அழகிய கன்று சேர்ந்திருத்தல்.*

**கோவா குளத்து**

கோவா குளத்து - *நெற்றியிலே கண்ணையுடையவனே!*

கோவா குளத்து - *அடையா வெல்லத்திடத்தும்.*

**கோவில் வலம்புரியும்**

கோ வில் வலம்புரியும் - *இந்திர வில் வெற்றியைச் செய்யும்.*

கோவில் வலம் புரியும் - *கோவிலை வலமாகச் சுற்றும்.*

**கோவூர் திவாகரனை**

கோவூர் திவாகரனை - *விண்ணில் நகரும் கதிரவனை.*

கோ ஊர்தி வாகு அரனை - *காளையூர்தியை உடைய அழகிய சிவனை.*

**கோவூர் முன் காட்டி**

கோவூர் முன் காட்டி - *கோவூர் என்னும் பெயருடைய ஊரை முன்னே காண்பித்து.*

கோ ஊர் முன் காட்டி - *கன்றாகிய ஊரை முன்னே தெரியச் செய்து.*

**கோவையணுகிடலால்**

கோவை அணுகிடலால் - *அரசரைச் சேர்ந்திருப்பதால்.*

கோவை அணுகிடலால் - *வில்லினை அணாவியிருப்பதால்.*

**கோவைவாய் முத்தமிடும்**

கோவை வாய் முத்தம் இடும் - *கோத்தல் பொருந்திய முத்து மாலையை அணியும்.*

கோவை வாய் முத்தமிடும் - *கோவைக்கனி போன்ற வாயினால் முத்தமிடுதலைச் செய்யும்.*

**கோழிக்கோனைப் பொருவும்**

கோழி கோனை பொருவும் - *கோழிக் கொடியை உடைய முருகக் கடவுளை ஒக்கும்.*

கோழ் இக்கோனை பொருவும் - *கொழுவிய கரும்பை வில்லாக வுடைய மன்மதனை ஒக்கும்.*

**கோள்வேங்கை தேக்கெறியும்**

கோள் வேங்கை தேக்கு எறியும் - *வலிமையுடைய வேங்கை மரத்தையும் தேக்கு மரத்தையும் வெட்டியெறியும்.*

கோள் வேங்கை தேக்கு எறியும் - *கொலைத் தொழிலையுடைய வேங்கைப் புலிகள் மான் முதலியவைகளைத் தின்று ஏப்பம் விடும்.*

**கோற்றேன் வழுக் கெடுக்கும்**

கோல் தேன் வழுக்கு எடுக்கும் - *கொம்புத்தேன் வழுக்குதலை உண்டாக்கும்.*

கோல் தேன் வழு கெடுக்கும் - *திரண்ட வண்டுகள் (சுருதியாக இருந்து) குற்றத்தை நீக்கும்.*

**சக்கரங் காட்டிடில்**

சக்கரம் காட்டிடில்-*முக்கோண சக்கரத்தைக் காட்டினால்.*

சக்கரம் காட்டிடில் - *அல்குலைக் காட்டினால்.*

**சக்கரத்தால்**

சக்கு அரத்தால் - *கன்றாகிய அரத்தினால்*

சக்கரத்தால் - *உருளைப் படையால்.*

**சக்கரத்தானத்தான்**

சக்கரத்தான் நத்தான்-*உருளைப் படையை உடையவன்; சங்கையுடையவன்.*

சக்கர தானத்தான் - *பெருமை வாய்ந்த நிலையிற் பொருந்தியவன்.*

**சக்கரம்**

சக்கரம் - *உருளைப்படை.*

சக்கு அரம்-*அரம்போன்றகண்*

**சக்கிரிபால்**

சக்கிரிபால் - *திருமாலிடத்தில்.*

சக்கிரிபால் - *அரசனிடத்தில்.*

சக்கிரிபால் - *குயவனிடத்தில்.*

சக்கிரிபால் - *செக்கானிடத்தில்.*

சக்கிரிபால் - *பாம்பினிடத்தில்.*

**சக்கிலியாயினர் பார்ப்பார்**

சக்கு இலி ஆயினர் பார்ப்பார் - *பார்ப்பார் கண்கள் இல்லாதவர்களானார்கள்.*

**சக்கிலியாயினர் பார்ப்பார்** - *சக்கிலியச் சாதியினராயினர் பார்ப்பாரச் சாதியினர்.*

**சங்கத்தமரன்**

சங்கத் தமரன் - *சங்க முழக்கத்தையுடைய திருமால்.*

சங்கத்து அமரன் - *சங்கத்தில் எழுந்தருளிய தேவன்.*

**சங்கத்திருக்கையார்**

சங்கம் திருக்கையார் - *சங்கைத் திருக்கையிலேந்திய திருமால்.*

சங்கத்து இருக்கையார் - *சங்கத்திலே புலவராக இருந்தவர்.*

**சங்கம் பதுமமென நிதியந்தழுவி**

சங்கம் பதுமம் என நிதியம் தழுவி - *சங்கநிதி பதுமநிதி என்று சொல்லப்பெறும் பொருள்களைப் பெற்று.*

சங்கம் பதுமம் என நிதியம் தழுவி - *சங்கநிதி பதுமநிதி என்று சொல்லுமாறு எல்லாப் பொருள்களையும் பெற்று.*

**சங்கம் பதுமம் வேண்டுமென்றே**

சங்கம் பதுமம் வேண்டும் என்றோ? - *சங்கநிதியும் பதுமநிதியும் வேண்டும் என்று விரும்பியோ?*

சங்கம் பதுமம் வேண்டுமென்றோ? - *வளையலுந் தாமரையும் வேண்டுமென்றோ!*

**சங்கம் பூசமதிற்சூழும்**

சங்கம் பூசம் அதில் சூழும் - *கூட்டம் பூச நாளில் வலம் வரும்.*

சங்கம் பூசு அம் மதில்சூழும் - *சங்கச் சுண்ணம் பூசிய அழகுள்ள மதில்கள் சூழும்.*

**சங்கராபரணம்**

சங்கராபரணம் - *சங்கராபரணம் என்னும் இராகம்.*

**சங்கர ஆபரணம்** - *சிவபெருமானுடைய அணிகலமாகிய பாம்பு.*

### சங்கவாவி நெருங்குதலால்

**சங்கு அவாவி நெருங்குதலால்** - *சங்கினங்கள் விரும்பிக் கூடியிருத்தலால்.*

**சங்க ஆவி நெருங்குதலால்** - *மிகப்பலவான உயிர்த் தொகைகள் வந்து கூடுதலால்.*

### சங்கிலிகாட்டும் பணியணிந்தாய்

**சங்கிலி காட்டும் பணி அணிந்தாய்** - *சங்கிலி நாய்ச்சியாரைக் காட்டும் தொழிலைப் பொருந்தினாய்.*

**சங்கிலி காட்டும் பணி அணிந்தாய்** - *சங்கிலி முதலியவைகளோடு கூடிய அணிகலன்களை அணிந்தாய்.*

### சங்கிலியேந்து மதமா

**சங்கிலி ஏந்தும் மதம்மா** - *சங்கிலியைத் தாங்கியுள்ள மதயானை.*

**சங்கிலி ஏந்தும் மதமா** - *பொற்சங்கிலி முதலியவைகளையணிந்துள்ள பெரிய கொங்கை.*

### சங்கை விடுத்து

**சங்கை விடுத்து** - *சங்கினங்களை மிதக்க விட்டு.*

**சங்கை விடுத்து** - *சங்கு வளையல்கள் கழலவிட்டு.*

### சட்டியில் மாவறுத்தல்

**சட்டியில் மா வறுத்தல்** - *சட்டியிலே மாவினை வறுத்தல்.*

**சட்டியில் மா அறுத்தல்** - *ஆறும் நாளில் மாமரமான சூரனைச் சேதித்தல்.*

### சத்தமா

**சத்தம் மா** - *ஏழு குதிரைகள்.*

**சத்து அம்மா** - *சத்துவத்தைத் தரும் இனிய திணைமா.*

### சத்தமிடுகையால்

**சத்தம் இடுகையால்** - *ஒலி செய்தலால்*

**சத்தம் இடுகையால்** - *கூலி கொடுத்தலினால்.*

### சத்தியத்தன்

**சத்தி அத்தன்** - *வேலேந்திய கையை உடையவன்.*

**சத்து இயத்தன்** - *நன்மையைப் புரியும் வாச்சியத்தையுடையவன்.*

**சத்தி அத்தன்** - *உமாதேவியைப் பாதிப் பாகத்தில் உடையவன்.*

### சத்தியம்

**சத்தியம்** - *உண்மை.*

**சத்தி அம்** - *வாளின் அழகு.*

### சத்திரமேதுக் கடைத்தது

**சத்திரம் ஏதுக்கு அடைத்தது** - *அறச்சாலை எதற்காக மூடப்பட்டது.*

**சத்திரம் ஏதுக்கு அடைத்தது** - *கண்ணை எதற்காக மூடினீர்?*

### சந்தனஞ்சாதி

**சந்தன் அஞ்சு ஆதி** - *அழகையுடையவன் ஐந்தெழுத்துக்கு முதல்வன்.*

**சந்தன் அஞ்சாதி** - *தூதனே! அச்சமுறுதே.*

**சந்தனம்**

சந்தனம் - சந்தனம் என்னும் மணப்பொருள்.

சந்து அனம் - தூதாகச் சென்ற அன்னப்பறவை.

**சந்தானமேலேறி**

சந்தானம் மேல்ஏறி - சந்தன மரத்தின்மீது ஏறி.

சந்தால் நம்மேல் ஏறி - தூதினால் நம்முடைய மேலே ஏறி.

**சந்தைப்பேட்டை**

சந்தைப்பேட்டை - சந்தைப் பேட்டை என்னுமிடம்.

சந்து ஐ பேடு ஐ - தூது செல்லுதற்குரிய அழகிய பெட்டை வண்டு (கண்).

**சந்தையிலு மேவுகையால்**

சந்து ஐயிலும் மேவுகையால் - சந்தனத்தையும் வேலையும் பொருந்துதலால்.

சந்தையிலும் மேவுகையால் - விற்குமிடத்தையுஞ் சேருதலால்.

**சமயத் தமிழ்தன்பால்வழங்கும்**

சமயத்து அமிழ்து அன்பால் வழங்கும் - வேண்டுஞ் சமயத்தில் அமுதினை அன்போடு கொடுக்கும்.

சமய தமிழ் தன்பால் வழங்கும்- தகுந்த தமிழ்மொழி தன்னிடத்திலே வழங்கப்பெறும்.

**சமரசமங்களம்**

சமர் அசம் அங்கு அளம் - சண்டைக்கு வந்த ஆடானது அங்கு நல்லறிவை.

சம்அரச மங்குஅளம் - வெற்றியைத் தரும் தலைவரே மங்கிய கூர்மை.

சம ரச மங்களம் - பொதுவான இனிமைபொருந்திய நன்மை.

**சமரசரவணவங்கண**

சமரசரவண வங்கண - போர் செய்கின்ற சரவணனே! நேயத்தை யுடையவனே!

சமரசர் அவண் அவம் க(ண்)ண - நடுவுநிலைமையுடையோர் அங்கு வினை என் செயலை என்ன.

**சமவாயம் புகு**

சமவாய் அம்பு உகு - போர்க்குரிய தவறாத அம்பு வீழும்.

சமவாயம் புகு - சபைகளிற் சேரும்.

**சம்பந்தரத்தர்**

சம்பந்தர் அத்தர் - திருஞான சம்பந்தருக்குத் தந்தையானவர்.

சம்பு அம் தரத்தர் - சம்புவென்னும் பெயரையுடையவர்; கங்கையைத் தரித்த மேலானவர்.

சம்பு அந்தரத்தர் - சிவனார், விண்ணுலகில் இருப்பவர்.

**சம்பந்த ராமையர்**

சம்பு அந்த ராமையர்- சிவபெருமான் அந்தத் திருமால்.

சம்பந்தர் ஆம்மையர் – அன்பினால் கட்டுப்பட்டவர்கள் நீருண்ட மேகநாதர்.

**சம்பந்தருக்களித்தார்**

சம்பு அம்தரு களித்தார் - நாவலாகிய அழகிய மரத்தை மகிழ்ந்தவர்.

சம்பந்தருக்கு அளித்தார் - திருஞானசம்பந்தருக்குக் கொடுத்தார்.

**சம்பந்தரை**

சம்பந்தரை - *திருஞான சம்பந்தரை.*

சம்பந்தரை - *அழகிய பந்து போன்ற கொங்கைகளை.*

**சரக்குப்பை**

சரக்குப் பை - *சாமான்கள் கட்டப்பட்ட பை*

சரக்குப்பை - *அம்புபோன்ற கண்.*

**சரக்கின்னரர் மதிக்க**

சர கின்னரர் மதிக்க - *மாலை யணிந்த கந்தருவர்கள் போற்ற.*

சரக்கு இல் நரர் மதிக்க - *உள்ள பொருள்களை மக்கள் கணக்கிட.*

**சரவணத்தானவன்**

சரவணத்து ஆனவன் - *சரவணப் பொய்கையில் தோன்றியவன்.*

சரம் வண்ணத்து ஆன் அவன் - *மாலையும் வளப்பமும் பொருந்திய சங்கும் உடையவனும் ஆன் கூட்டங்களை மேய்த்தவனும்.*

**சரிக்குமரிகள் விரும்பிமொய்ப்ப**

சரி குமரிகள் விரும்பிமொய்ப்ப - *வளையலணிந்த இளம்பெண்கள் விரும்பிச் சூழ.*

சரிக்கும் அரிகள் விரும்பி மொய்ப்ப - *ஓடித் திரிகின்ற தவளைகள் விருப்பத்துடன் வெளியே வந்து சுற்ற.*

**சரியுங்கலையும்**

சரியும் கலையும் - *சரிந்து விழும் ஆடையும்.*

சரியும் கலையும் - *வளையலும் கலந்துபோகும்.*

**சலந்தராகம்**

சலம் தரம் நாகம் - *கங்கையையும் தலை மாலையையும் பாம்பையும்.*

சலந்தரன் ஆகம் - *சலந்தரனுடைய உடல்.*

**சலமாறனை**

சலம் ஆறு அ(ன்)னை - *சினந் தணித்த தாய்.*

சலம் மால் தன்ஐ - *நீரில் எழுந்தருளிய திருமாலுக்குத் தலைவன்.*

**சாகரமாவினை**

சாகரம் மாவினை - *கடலில் தோன்றிய மாமரத்தை.*

சாகரம் ஆ வினை - *கடலளவாக வினையானது.*

**சாகைக்குந் தத்து**

சாகை குந்தத்து - *கிளைகளையுடைய குருந்த மரத்தில்.*

சாகைக்கும் தத்து - *இறப்பதற்கும் ஆபத்து.*

**சாட்சிகைப் பத்திரம்**

சாட்சி கைப்பத்திரம் - *சாட்சியின் கையால் எழுதப்பட்ட பத்திரமும்.*

ச அட்சி கைப் பத்திரம் - *கையாகிய மாந்தளிரால் மூடப்பட்ட கண்கள்.*

**சாதகமாவளி**

சாதகம் ஆவளி - *சோதிட நூலின் வரிசை.*

சாது அகம் ஆவளி - *அமைதி பொருந்திய மனம் ஆகுங் காற்று.*

**சாதனமாயவை**

**சாதனம் ஆயவை** - *பற்றுக் கோடுகளானவை*

**சா தனம் ஆய அவை** - *அழியுந் தன்மையுள்ள பொருள்களானவை.*

**சாந்தமலையத்தன்**

**சாந்த மலையத்தன்** - *சந்தன மரங்களடர்ந்த பொதியத்தில் உள்ள அகத்தியர்.*

**சாந்து அமலை அத்தன்** - *பொருமையை உடைய உமாதேவியாரைப் பாதி உடலாக உடையவர்.*

**சாம்பிராணியானேன்**

**சாம்பிராணி ஆனேன்** - *சாம்பிராணி என்கிற பொருளானேன்.*

**சாம்பிராணி ஆனேன்** - *இறக்கக்கூடிய உயிரானேன்.*

**சாயுச்சியந்தருவார்**

**சாய் உச்சி அம் தரு ஆர்** - *படிகின்ற உச்சியையுடைய அழகிய தருக்கள் பொருந்திய.*

**சாயுச்சியம் தருவார்**-*சாயுச்சிய பதவியைக் கொடுப்பார்.*

**சாரங்கஞ் சங்கரி**

**சாரங்கம் சங்கரி** - *மானும் உமாதேவியும்.*

**சாரங்கம் சங்கு அரி** - *சாரங்கம் என்னும் வில்லையும் சங்கையுந் தாங்கிய திருமால்.*

**சார் அங்கம் சங்கரி** - *பொருந்திய உடலைச் சங்கரித்து.*

**சாரங்கமங்கை**

**சாரங்க மங்கை** - *மான் வயிற்றிற் பிறந்த வள்ளிநாயகி.*

**சாரங்கம் அம்கை** - *சாரங்கமென்னும் வில்லைக் கையிலேந்திய.*

**சார் அங்கு அமங்கை** - *செல்வாயாக, அங்கு கெடுதலில்லாத.*

**சாரங்க மங்கையார்**

**சார் அங்கம் மங்கையார்**- *பொருந்திய உடலில் உமாதேவியை உடையவர்.*

**சாரங்கம் அம் கையார்** - *மானை அழகிய கையிலே உடையவர்.*

**சாரங்கவத்தத்தான்**

**சார் அங்க அத்தத்தான்** - *பொருந்தப்பெற்ற உடற்பாதியை உடையவன்.*

**சாரங்க அத்தத்தான்** - *சாரங்கமென்னும் வில்லையேந்திய கையை உடையவர்.*

**சாரங்கத்தான்**

**சாரங்கத்தான்** - *சாரங்கமென்னும் வில்லையுடையவன்.*

**சார் அங்கத்தான்** - *பொருந்திய உடலையுடையவன்.*

**சாரதமாவிசை**

**சாரதம் மா இசை** - *இனிய பண்ணை வண்டுகள் பாடும்.*

**சாரத மா இசை** - *திருவடித் தாமரை மலரையுடைய மிக்க சிர்த்திபொருந்திய.*

**சாரத்தனந்தனை**

**சாரத்து அனந்தனை** - *நல்ல சத்துள்ள சோறாகிய உணவினை.*

**சார தனந்தனை**-*பொருந்துமாறு செல்வத்தை.*

**சார தன்நந்தனை** - *பொருந்துமாறு தன்னுடைய மகனை.*

**சாரந்தரித்த**

சாரம் தரித்த - கருத்தினைக் கொண்ட.

சார் அந்து அரித்த - பொருந்திய அந்துப்பூச்சியால் கெடுக்கப்பட்ட.

**சாரம்படைக்கும்**

சாரம் படைக்கும் - பயனைக் கொண்டிருக்கும்.

சார்அம்பு அடைக்கும் - சேர்க்கையுள்ள நீரினை உட்கொண்டிருக்கும்.

**சாரம்பலமுறை**

சார் அம்பலம் உறை - பொருந்திய பொன்னம்பலத்திலே உறையும்.

சாரம் பல முறை - கருத்தினைப் பல தடவைகளில்.

**சாரம்புரிய**

சாரம் புரிய - கருத்தை விரும்ப.

சார் அம்பு உரிய - பொருந்திய கணைகளுக்கு உரிமையுடைய.

**சாராதவந்தனை**

சார் ஆதவந்தனை - அழகிய குடையை.

சாராது அவம்தனை - வீண்காரியங்களைப் பொருந்தாமல்.

**சாரிகைமா**

சாரிகைமா - நாகணவாய்ப் புள்ளையும் வண்டினையும்.

சாரி கைமா - உலாவரும் யானைகள்.

**சாருங்கோணமுகம்பொருந்த**

சாரும் கோண முகம்பொருந்த - பொருந்தியிருக்கின்ற வளைவுள்ள இடங்கள் ஒன்றுபட.

சாரும் கோண முகம்பொருந்த - சேர்ந்திருக்கின்ற கோணலையுடைய இருபக்கமும் ஒன்றுபட.

**சாலியனமுலை**

சாலி அனமுல்லை - அருந்ததியைப்போன்ற கற்பினையுடைய.

சாலி அனம் உலை - நெல்லரிசிச் சோற்றினை வருந்துகிற.

**சிக்கங்கறுத்துவிடும்**

சிக்கம் கறுத்துவிடும் - சிப்புக் கறுத்துவிடுகின்ற

சிக்கு அங்கு அறுத்துவிடும் - மனச் சிக்கல்களை அங்கு ஒழித்து விடுகின்ற.

**சிக்கலிலாத முதுகலை**

சிக்கல் இலாத முதுகலை - தவறுதல் இல்லாத பழைய நூல்களை.

சிக்கல் இல்லாத முதுகு அல்லை - சிக்குதல் இல்லாத முதுகின் பக்கமாகத் தொங்கும் இருள் போன்ற கூந்தலை.

சி[illegible] அத்தத்தை - இகழ்தற்கிடமாகிய குறைவுபடத்தக்க பொருளை.

சிக்குற தத்தை - சிக்கிக் கொள்ளக் கிளியை.

**சிங்கநாதம் படுக்கும்**

சிங்கநாதம் படுக்கும் - சிங்கநாதம் என்னும் அணியை அணியும்.

சிங்க நாதம் படுக்கும் - அரிமாவின் ஒலியும் கீழாமாறு பேரொலி செய்யும்.

**சிங்கமுஞ் சாயவருகரிப்போர்**

சிங்கமும்சாய வரு கரிப்போர் - *யானையும் விழுமாறு நெருங்கிற யானைப்போரில்.*

சிங்கமும் சாயவரு கரிப் போரில் - *இடை துவளுமாறு நெருங்கிற கொங்கைப்போரில்.*

**சிங்கர்புலிபொரு**

சிங்கு அம்புலி பொரு-*குறைந்த எட்டாம் நாட்பிறையை ஒத்திருக்கின்ற.*

சிங்கம் புலி பொரு - *அரிமாவையும் புலியையும் மோதுகின்ற.*

**சிங்காதனமடுக்கும்**

சிங்காது அனம் அடுக்கும் - *குறையாமல் அன்னப்பறவைகள் அடுத்திருக்கும்.*

சிங்க ஆதனம் அடுக்கும் - *அரியணையைப் பொருந்தும்*

**சிங்காரமாகவரும்**

சிங்கு ஆர மா கவரும் - *கொலை செய்யும் ஆரவாரத்தினையுடைய விலங்குகளை வேட்டையாடும்.*

சிங்காரம் ஆக வரும்-*அழகாக ஒப்பனை செய்து கொண்டு வரும்.*

**சிதையாவண்மை மேற்கொளலால்**

சிதையா அண் மை மேல்கொளலால் - *குறையாது பொருந்திய முகில்கள் மேலே படிந்திருப்பதால்.*

சிதையா வண்மை மேல் கொளலால் - *மாறாத வண்மைக் குணத்தை மேற்கொண்டிருத்தலால்.*

**சித்தசனங்கடல்**

சித்தம் சனம் கடல் - *சித்தர்கள் கூட்டம் கடலைப்போல.*

சித்தசன் அங்கு அடல் - *காமன் அவ்விடத்திலே போர் செய்தல்.*

**சித்தசனம் பயிலும்**

சித்த சனம் பயிலும் - *சித்தபுருடர்களோடு பழகும்.*

சித்தசன் அம்பு அயிலும் - *காமனது அம்பை உண்ணும்.*

**சித்தம் பரம்புரியும்**

சித்து அம் பரம் புரியும் - *சிதம்பரத்திற் செய்யும்.*

சித்தம் பரம் புரியும் - *உள்ளத்தில் மேன்மையான பொருளை விரும்பும்.*

**சித்தாந்தஞ் செய்யும்**

சித்தாந்தம் செய்யும்-*சித்தாந்த நூல் முடிவுகளைச் செய்கின்ற.*

ஆம் தஞ்சு எய்யும் - *சித்தாகின்ற பற்றுக்கோட்டைச் சேரும்.*

**சித்திரப்பாவைக் கூட்டும்**

சித்திரப்பாவைக்கு ஊட்டும் - *அழகிய பொம்மைக்கு உண்பிக்கும்.*

சித்திரப்பாவை கூட்டும் - *நாற்கவியுள் ஒன்றாகிய சித்திர கவியைச் சேர்க்கும்.*

**சிந்தனக்குன்றோங்கும்**

சிந்தனம் குன்று ஓங்கும் - *எண்ணங்கள் குன்றுகளைப்போல் மிகுதியாக விளங்கும்.*

அனம் குன்று ஓங்கும் - *சிந்துகிற சோறு சிறு மலையைப்போல் மிகுதிப்படும்.*

**சிந்தனையவங்கடக்கும்**

சிந்து அனைய அம் கள் தக்கும்- கடலைப்போல மிகுதியாகத் தேக்கப்பெறும்.

சிந்தனை அவம் கடக்கும் - சிறந்த எண்ணங்களை நீக்கும்.

சிந்து அல் கையை அங்கு அடக்கும் - மித்திர ஆணவ இருள் அழியுமாறு அங்கு மடக்கும்.

**சிந்தனையாகத்து**

சிந்தனை யாகத்து - எண்ணமாறாது வேள்வியிலே.

சிந்தனை ஆகத்து - வாமனரூப மெடுத்த திருமாலை உடலில்

**சிந்தாகுலந்தணிக்கும்**

சிந்தா ஆகுலம் தணிக்கும் - மனவருத்தத்தைக் குறையச் செய்யும்.

சிந்து ஆ குலம் தணிக்கும் - சிதறிய ஆன் கூட்டங்களை ஓடாமல் தடுக்கும்.

**சிந்தாகுலமாற்றும்**

சிந்து ஆகுலம் ஆற்றும் - கடலைப்போன்ற ஆரவாரத்தைச் செய்யும்.

சிந்தாகுலம் மாற்றும்-மனவருத்தத்தைப் போக்கும்.

**சிந்தாகுலம்**

சிந்தாகுலம் - மனவருத்தம்.

சிந்து ஆகுலம் - சிதறிய பசுக் கூட்டம்.

**சிந்தாமணிசேர்**

சிந்தாமணிசேர் - சிந்தாமணி என்னும் நூல் சேருகின்ற.

சிந்து ஆம் அணிசேர் - கடலைப் போல் விளங்கும் அணிகலன்கள் பொருந்திய.

**சிந்தாமணி மேகலையொண் கலம்பகம்**

சிந்தாமணி மேகலை ஒண்கலம் பகம் - சீவகசிந்தாமணி, மணிமேகலை ஒள்ளிய கலம்பகம்.

சிந்தாமணி மேகலை ஒள்கலம்பகம் - தேவமணியாலாகிய மேகலை என்னும் ஒள்ளிய அணிகலன் அணிந்த அல்குல். (பகம் - அல்குல்)

**சிந்தாகுலவரி**

சிந்தா குலவு அரி-கொடியாகக் கொண்டு விளங்குகிற பச்சை நிறம் பொருந்திய

சிந்தாகு உலவு அரி - வாமனமாகி யுலாவிய திருமால்.

**சிந்தாதந்தாவளஞ்சேர்**

சிந்து ஆதம் தாவளம் சேர்-சிதறிய ஆக்களைத் தமது இருப்பிடங்களிற் சேர்க்கின்ற.

சிந்தா தந்தாவளம் சேர் - சிதருத யானைகள் சேர்கின்ற.

**சிந்தாரப் பன்னகம்**

சிந்து ஆர் அபன்னகம் - கங்கையையும் ஆத்திமாலையையும் அந்தப் பாம்பினையும்.

சிந்தார் அப்பன் அகம் - வாமனனை திருமாலும் அப்பரும் இடமகன்ற.

**சிந்திதனந்திரியும்**

சிந்தி தனம் திரியும் - கிழிபடுதலால் கொங்கை அசையும்.

சிந்தித்து அனம் திரியும்-எண்ணி அன்னப் பறவை திரியும்.

**சிந்துரங்கள்**

சிந்துரங்கள் - யானைகள்.

சிந்து உரங்கள் - சிதறுகிற ஆற்றல்கள்.

**சிந்துரத்தந்தம்**

**சிந்துரத் தந்தம்** - *யானையினது தந்தம்.*

**சிந்துரத்து அந்தம்** - *செந்நிறத்தினது அழகு.*

**சிந்துரத்தந்தளம்**

**சிந்துரத்து அம்தளம்** - *யானைகளினது அழகிய படை.*

**சிந்து உரத்து அம்தளம்** - *அழிக்கின்ற பலத்தையுடைய அழகையும் கனத்தையுங் கொண்ட.*

**சிந்துரத்தவாறடுக்கும்**

**சிந்து ரத்த ஆறு அடுக்கும்** - *சிந்துகின்ற குருதியாற்றைப் பொருந்தும்.*

**சிந்துரத்த வால் தடுக்கும்** - *யானைகளுடைய வால்களானவை தடுக்கும்.*

**சிந்துரவித்தக**

**சிந்து உர வித்தக** - *பொடி செய்த வல்லவனே புதுமையுடையவனே.*

**சிந்து ரவி தக** - *கடலில் தோன்றும் கதிரவன் தகுதியாக.*

**சிந்தூரமங்காட்டும்**

**சிந்தூரம் அங்கு ஆட்டும்**-*யானைகளை அவ்விடத்தே முழுக்காட்டப் பெறும்.*

**சிந்தூரம் அம் காட்டும்** - *சிந்தூர திலகத்தால் அழகு காட்டப்பெறும்.*

**சிந்தைச் சுகம்பயிற்றும்**

**சிந்தை சுகம் பயிற்றும்** - *சிந்து என்னும் பாடலைக் கிளிக்குக் கற்பிக்கும்.*

**சிந்தை சுகம் பயிற்றும்** - *உள்ளத்தில் இன்பத்தைப் பயிலச் செய்கின்ற.*

**சிரங்கைக் கொண்டோன்**

**சிரங்கைக் கொண்டோன்**-*புண் நோயாகிய சிரங்கை யுடையவன்.*

**சிரம் கைக்கொண்டோன்**-*நான்முகனது மண்டையோட்டைக் கையிற் கொண்டவன்.*

**சிலபோதுலாவுதலால்**

**சில போது உலாவுதலால்** - *சில பூக்கள் விளங்கப் பெறுதலால்.*

**சில போது உலாவு தலால்**-*சில காலங்களில் திரிவதால்.*

**சிலீமுகங்காட்டா திருப்பதென்**

**சிலீமுகம் காட்டாது இருப்பது என்** - *அம்பைக் காட்டாது இருப்பது என்ன காரணம்.*

**சிலீமுகம் காட்டாது இருப்பது என்** - *மூலைக்கண்ணைக் காட்டாமலிருப்பதற்குக் காரணம் யாது?*

**சிலைமதனம்படு**

**சிலை மதன் அம்பு அடு** - *கரும்பு வில்லையுடைய காமனது மலர்க்கணை கொல்லும்.*

**சிலை மதம் நம்படு** - *ஆர்ப்பரிப்போடு ஆங்காரத்தை நம்மிடத்திலே.*

**சிலையாலடிக்கு வந்தார்**

**சிலையால் அடிக்கு உவந்தார்** - *வில்லினால் அடித்த அடிக்கு மகிழ்ந்தவர்.*

**சிலை ஆல் அடிக்கு வந்தார்**-*கல்லால மரத்தடியில் எழுந்தருளியவர்.*

**சில்லியந்தேரச்சடைக்கும்**

**சில்லி அம்தேர் அச்சு அடைக்கும்** - *உருளை அழுந்திய தேரின் இருசில் அடைக்கும்.*

**சில் இயம்தேர சடைக்கும்** - *சில பறையொலியைத் தேர்தலினாலே வருந்தப்படும்.*

**சிவசிவசங்கர**

**சிவ சிவ சம்கர** - *ஒரே பொருளான சிவனிடத்தில் தோன்றியவன் கையில்.*

**சிவசிவ சங்கர** - *சினத்துடன் எல்லாவற்றையும் அழிப்பவனே*

**சிறப்பாவகமும்**

**சிறப்பா அகமும்** - *சிறப்புடன் இடத்தையும்.*

**சிறப்பு ஆவகமும்** - *சிறப்பான அம்பையும்.*

**சிறப்புத்தருமுற்பலங்குவிய**

**சிறப்பு தரும் உற்பலம் குவிய** - *அழகுள்ள குவளை மலர்கள் வாட.*

**சிறப்பு,தரு முன் பலம் குவிய** - *சிறந்த மரங்களின் முன் பழங்கள் குவிந்து கிடப்ப.*

**சிறையுறலால்**

**சிறை உறலால்** - *இறகு பொருந்துதலால்.*

**சிறை உறலால்** - *காவற் சிறையிற் சேருகிற படியால்.*

**சிறைவரவாமையில்**

**சிறை வர வாமயில்** - *தோகையையும் மேன்மையையும் உடைய மயில்.*

**சிறை வர ஆமை இல்** - *கரையினில் குழப்பட்டு ஆமைக்கு இருப்பிடமுமாகிய.*

**சிற்பமறப்புரியும்**

**சிற்பம் அற புரியும்** - *சிற்பநூற் கலை மிகுதியாக விரும்பும்.*

**சிற்பம் அற புரியும்** - *சுருக்கமில்லாமல் (விரிவாகச்) செய்யும்.*

**சிற்றம்பலத்தை**

**சிற்றம்பலத்தை** - *சிதம்பரத்தை.*

**சில்-தம்ப-லத்தை** - *தகழியில் விட்டு ஆன்மாவுக்கு அருள்.*

**சில் தம்பலத்தை** - *சிலவாகிய பாக்கு வெற்றிலையை.*

**சிற்றாடைகட்டும்**

**சிறு ஆடை கட்டும்** - *சிறு உடையை அணியும்.*

**சில் தாள்தை கட்டும்** - *சிறிய கயிற்றை அழகாகக் கட்டிக் கொள்ளும்.*

**சிற்றாறுபாயும்**

**[illegible] பாயும்** - *சிறிய ஆறு செல்லும்.*

**சில் தாறு பாயும்** - *சிறிய தாற்றிலே சென்று படியும்.*

**சினத்தபனகந் தழுவியதால்**

**சினத்த பனகம் தழுவியதால்** - *சினமுள்ள பாம்புகள் சேரப் பெற்றிருப்பதால்.*

**சி(ன்)னத்த பல் நகம் தழுவியதால்** - *உறுப்புக்களாகிய பல நகங்களானவை பொருந்தியிருப்பதால்.*

**சின்னந்தினமே**

**சில்நந்து இனமே** - *சிறியவான சங்குக் கூட்டங்களே.*

**சின்னம் தினமே** - *அடையாளமானது நாள்தோறுமே.*

**சின்னந் துவைத்தார்க்கும்**

சில்நந்து வைத்து ஆர்க்கும் - *சில சங்குகளை வைத்து அணைத்துக் கொள்ளும்.*

சின்னம் துவைத்து ஆர்க்கும் - *திருச் சின்னத்தை ஊதி ஆரவாரிக்கும்.*

**சின்னம்படுக்கும்**

சின்னம் படுக்கும் - *ஒலிக்கருவிகளை முழக்கும்.*

சின்னம் படுக்கும் - *சிறுமைத் தன்மையைப் போக்கும்.*

சின்ன அம்பு அடுக்கும் - *சிறிய கணைகள் பொருந்தும்.*

**சின்னவடு கோதியிடும்**

சின்னம் வடு கோதியிடும் - *அடையாளமாகத் தழும்புகளைக் கீறிவிடும்.*

சின்ன வடு கோதியிடும் - *சிறிய மாம்பிஞ்சுகளைக் கிண்டியிடுகின்ற.*

**சீகரமங்கண் மேவும்**

சீகரம் அம்கள் மேவும் - *அழகும் இனிய தேனும் பொருந்தப்பெறும்.*

சீகரம் அங்கண் மேவும் - *திருமகள் பொலிவை அவ்விடத்திலே எய்தும்.*

**சீகரமங்காட்டும்**

சீகரம் அம் காட்டும் - *அழகிய கமண்டலத்தைக் காட்டும்.*

சீகரம் அம் காட்டும் - *திருமகள் கையின் அழகைப் புலப்படுத்தும்.*

**சீகரமாமாலையொக்கும்**

சீகரம் மா மாலை ஒக்கும் - *திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளுகின்ற திருமாலை ஒத்திருக்கும்.*

சீகரம் மா மாலை ஒக்கும் - *ஆற்றுத் திவலையின் பெருமை வாய்ந்த வரிசையை ஒத்திருக்கும்.*

**சீகரமுஞ் சார்ந்திடலால்**

சீ கரமும் சார்ந்திடலால் - *திருமகள் விலாசமும் பொருந்தியிருப்பதால்.*

சீ கரமும் சார்ந்திடலால் - *நீர்த் திவலையும் பொருந்தியுள்ளமையால்.*

**சீகாமரம்பாடும்**

சீ காமர் அம்பு ஆடும் - *இழித்துக் கூறப்படும் காமனுடைய கணைகள் ஆடுதலைச் செய்யும்.*

சீ காமர் அம்பு ஆடும் - *திருமகள் விரும்பும் மலர்பொருந்திய நீர் ஆடுதலைச் செய்யும்.*

சீ காமரம் பாடும் - *சீகாமரம் என்னும் பண்ணைப் பாடும்.*

**சீதமுறவாகமஞ்சார்**

சீதம் உற ஆகமம் சார்-*குளிர்ச்சி பொருந்த ஆகம முழக்கம் பொருந்தும்.*

சீ தம் உறவு ஆகஅம் சார் - *திருமகள் தம்முறவாக அழகுடன் விளங்கும்.*

சீதம் உறு அ வாக மஞ்சு ஆர்- *குளிர்ச்சியுடைய அந்த அழகிய முகில்கள் பொருந்தப் பெற்ற.*

**சீதனங்கோடு**

சீ தனம் கோடு - *திருமகளின் கொங்கையையுஞ் சங்கையும்*

சீதன் அம்கோடு - *திங்களை அழகிய கோணல் வடிவாக.*

சீதனம் கோடு - *வரிசையாகக் கிடைத்த கொம்பு.*

**சீதாரிவாசமுறும்**

**சீதாரி வாசம் உறும்** - *சீதாரி மரத்தின் மணத்தை வீசும்.*

**சீத அரிவாசம் உறும்** - *குளிர்ச்சி பொருந்திய பூமாலையின் மணத்தை வீசும்.*

**சீப்பிளாகஞ்செறிக்கும்**

**சீப்பு இன் அளகம் செறிக்கும்** - *சீப்பை இனிய கூந்தலிற் செருகிச் சிவுகின்ற.*

**சீப்பின் அளகம் செறிக்கும்** - *சீத்தலினால் சீரைச் சேர்க்கின்ற.*

**சீயங்கடுக்கும்**

**சீயம் கடுக்கும்** - *சிங்கத்தை ஒத்திருக்கும்.*

**சீ அங்கு அடுக்கும்** - *திருமகள் அவ்விடத்தில் பொருந்தியிருக்கும்.*

**சீயனம்போதி**

**சீயன் நம்போதி** - *இறைவன் நமக்குப் போதிப்பாயாக.*

**சீயன் அம்போதி** - *திருமால் பாற்கடல்.*

**சீரகங்கண்டு**

**சீரகம் கண்டு**-*சீரகம் கற்கண்டு என்னும் பொருள்கள்.*

**சீர் அகம் கண்டு** - *சிறப்புப் பொருந்திய உடலைப்பார்த்து.*

**சீரகத்தார்மணக்கும்**

**சீர் அகத்தார் மணக்கும்** - *சிறப்புப் பொருந்திய வீட்டையுடையவர்களைச் சேர்ந்திருக்கும்.*

**சீரகம் தார் மணக்கும்** - *சீரக மாலையை அணிந்து கொள்ளும்.*

**சீர் அகத்தார் மணக்கும்** - *சிறப்புப் பொருந்திய நன் மனம் உடையவர்களைச் சேரும்.*

**சீரகத்தார்மேவும்**

**சீர் அகத்தார் மேவும்** - *சிறப்புப் பொருந்திய உள்ளத்தையுடையவர்கள் அடையும்.*

**சீரக தார் மேவும்** - *சிறப்புப் பொருந்திய மாலை பொருந்தும்.*

**சீரகத்தைத் தந்தீரேல்**

**சீர் அகத்தைத் தந்தீரேல்** - *சிறப்புப் பொருந்திய வீடுபேற்றைத் தருவீரானால்.*

**சீரகத்தைத் தந்தீரேல்** - *சீரகம் என்னும் பொருளைக் கொடுப்பீரானால்.*

**சீரங்கத்தான்**

**சீர் அங்கத்தான்** - *சிறந்த திருமேனியை உடையவன்.*

**சீ ரங்கத்தான்** - *சீரங்கமென்னுந் திருப்பதியை உடையவன்.*

**சீரங்கராக**

**சீர் அங்கராக** - *சிறந்த சாந்தணிந்த.*

**சீ ரங்க ராக**-*சீரங்கத்தில் எழுந்தருளிய இசைவாணனே.*

**சீரங்கனுதரிக்கும்**

**சீர் அங்கனு தரிக்கும்** - *சிறப்புப் பொருந்திய திருமகள் தங்கியிருக்கும்.*

**சீரங்கன் ஆதரிக்கும்** - *திருவரங்கத்தில் எழுந்தருளிய திருமால் போற்றும்.*

**சீரங்குரம்படரும்**

**சீர் அங்குரம் படரும்** - *சிறந்த முளை படரும்.*

சீர் அங்கு உரம் படரும் - ஒலி யானது அங்கு மிகுதியாகப் பரவும்.
சீரம் குரம்பு அடரும் - கலப்பையை எல்லேயோடு இழுத்துக் கொண்டு செல்லும்

**சீரணவுத்தாரணஞ் செய்**

சீரண உத்தாரணம் செய் - சீரணோத் தாரணத்தைச் செய்கின்ற.
சீர் அணவு உத்து ஆரணம் செய் - சிறப்புப் பொருந்த மறை முழக்கம் செய்கின்ற.

**சீரலேவாய்**

சீர் அலேவு ஆய் - சிறப்பானது கெடுதலாகி.
சீர் அலேவாய் - திருச்செந்தூர்.

**சீரளவிலுடகநேர்**

சீர் அளவு இல்நாடு அகம்நேர் - கற்பின் சிறப்பை அளவில்லாமல் நாடுகின்ற மனதில் கொண்டிருக்கின்ற.
சீர் அளவின் நாடகம் நேர்-தாளஒத்தோடு ஒத்த நாடகத்தை ஒத்திருக்கின்ற.

**சீராகமஞ்சாரும்**

சீர் ஆ கமம் சாரும் - சிறப்புப் பொருந்திய ஆக்கள் நிறைவாகப் பொருந்தியிருக்கும்.
சீராக மஞ்சு ஆரும் - சிறப்பாக முகில்கள் பொருந்தும்.
சீர் ஆகமம் சாரும் - ஒலியுள்ள ஆகமங்கள் பொருந்தும்.

**சீராமராம**

சீ ராம ராம - திருமகள் தலேவனை அழகிய திருமால்.
சீரா மராம கவசம் மராமரம்.

**சீராமாவிலேகொள்**

சீர் ஆ மாவிலேகொள் - சிறப்புப் பொருந்திய பசுக்களே நல்ல விலேக்குக் கொள்ளும்.
சீர்ஆம் மாவிலேகொள் - சிறப்புடைத்தாகிய மாவிலேயைக் கொள்ளுகிற.

**சீராயசைநடைகூர்**

சீர் ஆய் அசை நடைகூர்-சிறும் நுணுக்கம்வாய்ந்த அசையும் (ஆற்றெழுக்கு முதலிய) போக்கும் பொருந்திய.
சீராய் அசை நடைகூர் - சிறப்பாய் அசைகின்ற நடைமிக்க.

**சீராயமகஞ்செய்**

சீர்ஆய மகஞ் செய்- சிறப்பான வேள்வியைச் செய்கிற.
சீராய் யமகம் செய் - சிறப்பாக யமகப் பாடல்களேப் பாடுகிற.

**சீராவணந்தேங்கும்**

சீரா வணம் தேங்கும் - கவசத்தின் அழகு நிறையும்.
சீர் ஆவள் நந்து ஏங்கும் - சிறப்பாக வளப்பம் பொருந்திய சங்கு ஒலிக்கும்.
சீர் ஆவணம் தேங்கும் - சிறப்புப் பொருந்திய கடைத்தெருவில் மிகுந்திருக்கும்.

**சீருத்திரமாடும்**

சீர் உத்திரம் ஆடும் - சிறப்புப் பொருந்திய உத்திராட நாளில் ஆடப்பெறும்.
சீ ருத்திரம் ஆடும் - சீர்மை பொருந்திய உருத்திர மந்திரத்தைச் சொல்லும்.

**சீரையரைச் சேர்க்கும்**

**சீர் ஐயரைச் சேர்க்கும்** - *சிறப்புப் பொருந்திய முனிவர்களைச் சேர்க்கும்.*

**சீரை அரைச்சு ஏர்க்கும்** - *சிறப்பைத் தழுவி விளங்கும்.*

**சீரை அரை சேர்க்கும்** - *மரவுரியை அரையிலே உடுத்தும்.*

**சீர்த்திக்களவுபடும்**

**சீர்த்திக்கு அளவுபடும்** - *மிகு புகழுக்கு ஓர் எல்லையாகின்ற.*

**சீர் திக்கு அளவுபடும்** - *மிகுபுகழானது எல்லைதோறும் உண்டாகின்ற.*

**சீர்முதலை மேவுதலால்**

**சீர்முதலை மேவுதலால்** - *பெரிய முதலைகள் பொருந்தியிருந்ததலால்.*

**சீர்முதலை மேவுதலால்** - *மிகுந்த மூலப்பொருளைப் பெற்றிருந்ததலால்.*

**சீர்வலாரி வருஞ் சிறப்பால்**

**சீர்வ(ல்)லார் இவரும் சிறப்பால்** - *செல்வர்கள் மேலேறித் தங்கியிருக்கிற சிறப்பால்.*

**சீர் வலாரி வரும் சிறப்பால்** - *சிறப்புள்ள இந்திரனிடத்தில் வந்திருக்கும் பெருமையால்.*

**சீலங்கனமுற்ற**

**சீலம் கனம் உற்ற** - *ஒழுக்கமும் பெருமையும் பொருந்திய.*

**சீ லங்கனம் முற்ற** - *இகழத்தக்க பசியானது மிகுதிப்பட.*

**சீவனசத்து**

**சீ வனசத்து** - *திருமகள் தங்குதலுடைய தாமரையில்.*

**சீவன் அசத்து** - *உயிரானது அசத்தாகிய.*

**சீவனமன்பாற் பயந்தாழ்**

**சீவன் நமன்பால் பயம் தாழ்** - *உயிர்கள் நமனிடத்தில் கொள்ளுகிற அச்சத்தை அழிக்கும்.*

**சீவனம் அன்பால் பயந்து ஆழ்** - *நீரை அன்போடு கொடுத்து ஆழமாகவுள்ள.*

**சீவனமுற்றேயும்**

**சீவனம் முற்று ஏயும்** - *நீர் முழுவதும் நிறையப்பெறும். (சீவனம் - நீர்)*

**சீ வனம் உற்று ஏயும்** - *திருமகளின் அழகு பொருந்தி விளங்கும்.*

**சீவித்தளவளவும்**

**சீவி தளவு அளவும்** - *கூந்தலைச் சீவி முல்லையை வைத்து முடியும்*

**சீவித்து அளவளவும்** - *(அழியாது) வாழ்ந்து கலந்து மகிழும்.*

**சீறூரரவமொக்கும்**

**சீறூர் அரவம் ஒக்கும்** - *சிற்றூரின் ஒலியை ஒத்திருக்கும்.*

**சீறு ஊர் அரவம் ஒக்கும்** - *சிறுகின்றதும் ஊர்ந்து செல்லுகின்றதுமாகிய பாம்பை ஒத்திருக்கும்.*

**சுகந்தருவாயோ**

**சுகம் தருவாயோ** - *இன்பசுகத்தைக் கொடுப்பாயோ ?*

**சுகம் தருவாயோ** - *கிளியைக் கொடுப்பாயோ ?*

**சுகந் திருவர்**

**சுகந்த இருவர்** - *தெய்வமணம் நிறைந்த இருவர்.*

**சு கந்திருவர்** - *இன்பமுடைய கின்னரர்கள்.*

**சுக்கில வங்கஞ் செய்**

**சுக்கில வங்கம் செய்** - *வெண்மையான வெள்ளியிலே செய்கிற.*

**சுக்கு இலவங்கம் செய்** - *சுக்கைக் கொண்டும் இலவங்கத்தைக் கொண்டுஞ் செய்கிற*

**சுங்கந்தந் தோயும்**

**சுங்கம் தந்து ஓயும்** - *திறைப் பொருள் கொடுத்து அடங்கும்.*

**சுங்கு அந்தம் தோயும்** - *மடிப்பின் அழகு பொருந்தும்.*

**சுத்தாங்கமோதும்**

**சுத்த அங்கம் ஓதும்** - *சுத்தாங்கமாகப் பாடும்.*

**சுத்த அங்கம் மோதும்** - *சுத்தமான உறுப்புக்களால் தாக்கும்.*

**சுத்தியோரஞ்சார்**

**சுத்தி ஓர் அஞ்சு ஆர்** - *தூய்மையானது ஒரைந்து பொருந்திய.*

**சுத்தி ஓரம் சார்** - *கிளிஞ்சல்கள் ஓரத்திலே அமைந்த.*

**சுபவாலிப மேற்கொண்டு**

**சுப வால் இபம் மேற்கொண்டு** - *நன்மையுள்ள வெள்ளையானை மேல் இருந்து.*

**சுப வாலிபம் மேற்கொண்டு** - *நல்ல இளமைத் தோற்றம் பொருந்தி.*

**சுப்பிரதீபஞ் சேர்**

**சுப்பிரம் தீபம் சேர்** - *ஒளி விளக்குகள் பொருந்திய.*

**சுப்பிர தீபம் சேர்** - *சுப்பிர திபம் என்னும் வடகிழக்குத் திசையானை சேருகிற.*

**சுருங்கி நிரம்புமுறை தழுவி**

**சுருங்கி நிரம்பும் உறைதழுவி** - *வற்றியும் நிரம்பியும் உறைந்திருந்து.*

**சுருங்கி நிரம்பும் முறை தழுவி** - *தேய்ந்தும் வளர்ந்தும் வருகின்ற முறைமையைக் கொண்டு.*

**சுற்றத்தவரெங்கணுநெருங்க**

**சுற்ற தவர்எங்கணும் நெருங்க** - *முனிவர்கள் எல்லா விடங்களினும் நெருங்கிச் சூழ.*

**சுற்றத்தவர்எங்கணும் நெருங்க** - *உறவினர்கள் எல்லா இடங்களினும் சேர.*

**சுற்றத்தார் வந்தேய்**

**சுற்றத்து ஆர்வம் தேய்** - *சுற்றத்து அன்பு கெடுகின்ற.*

**சுற்றத்தார் வந்து ஏய்** - *உறவினர்கள் வந்து பொருந்துகின்ற.*

**சுற்ற தார் வந்து ஏய்** - *அணிதற்கு மாலையானது வந்து பொருந்துகின்ற.*

**சுற்றத்தினஞ் சேர்**

**சுற்ற தினம் சேர்** - *வலம் வருதற்கு நாள்தோறும் அடைகிற.*

**சுற்றத்து இனம் சேர்** - *உறவினர்களின் கூட்டம் சேருகிற.*

**சூசிகையாரும்**

**சூசிகை ஆரும்** - *நூற்குறிப்புப் பொருந்தும்.*

**சூசி கை ஆரும்** - *ஊசியானது கையிலே பொருந்தும்.*

**சூடகங்கொண்டு விலை தோய்ந்—திடலால்**

சூடகம் கொண்டு விலை தோய்ந்திடலால் - வளையலை யணிந்து கொண்டு விலைக்குத் தழுவுவதால்.
சூடு அகம் கொண்டுஇலை தோய்ந்திடலால் - சூட்டைத் தன்னிடத்திலே கொண்டு இலையிற் பொருந்துவதால்.

**சூடகமாயும்**

சூடகம் ஆயும் - வளையல்களைத் தேர்ந்தெடுக்கும்.
சூடு அகம் மாயும் - உட்டணம் உள்ளத்தில் கெடப்பெறும்.

**சூடகமேவுகைக் கொண்டர்**

சூடு அகம் ஏவு கைக்கொண்டர் - சூட்டினைத் தன்னிடத்தே கொண்ட அம்பைக் கையிற் கொண்டர்.
சூடகம் மேவு கைக்கொண்டர் - வளையல் அணிந்த கையிடத்தே கொண்டர்.

**சூட்டன்ன மேயும்**

சூட்டு அன்னம் ஏயும் - சூட்டினை உடைய உணவு பொருந்தும்.
சூட்டு அன்னம் மேயும் - உச்சிக் கொண்டையை உடைய அன்னப் பறவை இரை தேடும்.

**சூதங்கொடுக்கும்**

சூது அங்கு ஒடுக்கும் - சூதாடு கருவியை அவ்விடத்தில் அடக்கிவிடும்.
சூதம் கொடுக்கும் - மாமரமானது தரும்.

**சூதமுனியென்னும்**

சூதமுனி என்னும் - சூதமுனிவர் என்று கூறும்.
சூதம் உனி என்னும் - சூதினை நினைத்துத்தான் என்று கூறும்.

**சூதம்பழிக்கும்**

சூதம் பழிக்கும் - வண்டினை இகழும்.
சூது அம்பு அழிக்கும் - சூதான அம்பினைக் கெடுக்கும்.

**சூதரைக்கொண்டு**

சூதரைக் கொண்டு - சூதுடையவர்களைக் கொண்டு.
சூதரைக் கொண்டு - சொக்கட்டான் காய்போன்ற தானங்களைக் கொண்டு.

**சூத்திரங்கடாவும்**

சூத்திரம் கடாவும் - சூத்திரப் பாக்களை வினவும்.
சூத்திரங்கள் தாவும் - கயிறுகளாலே தாவுதலைச் செய்யும்.

**சூரியமன் தாழும்**

சூரிய மன் தாழும் - கதிரவனாகிய இறைவன் தங்கும்.
சூர் இயமன் தாழும் - அச்சத்தைச் செய்யும் நமன் வணங்கும்.

**சூலந்தலையணிந்து**

சூலம் தலை அணிந்து - சூலப் படையைத் தன்னிடத்திலே கொண்டு.
சூல் அம் தலை அணிந்து - வெடிப்பாம் பிளவுகளை இடங்கடோறுங் கொண்டு.

**சூலமங்கையார் சேர்**

**சூலம் அங்கையார் சேர்** - *சூலாயுதத்தை அழகிய கையிலேந்தியவர் சேரும்.*

**சூல்அம் மங்கையார் சேர்**-*சூல் கொண்ட அழகிய மங்கையர் சேர்ந்திருக்கும்.*

**சூலி**

**சூலி** - *சூலாயுதத்தை உடைய சிவபெருமான்.*

**சூலி** - *சூல்கொண்ட பெண்.*

**சூழிக்கரிசேர்**

**சூழ் இக்கு அரிசேர்** - *சூழ்ந்து கரும்பும் நெல்லும் பொருந்திய.*

**சூழி கரி சேர்** - *முகபடாத்தையுடைய யானைகள் சேருகின்ற.*

**சூழியங்களார்க்கும்**

**சூழ் இயங்கள் ஆர்க்கும்** - *சூழ்ந்துள்ள வாத்தியங்கள் ஒலிக்கும்.*

**சூழியங்கள் ஆர்க்கும்** - *உச்சிக் கொண்டைகளைப் பொருந்தும்.*

**சூழ்கம்பளமும் பிரியாமல்**

**சூழ்கம்பளமும் பிரியாமல்** - *சுற்றி யணிந்துள்ள சிவந்த ஆடை கீழே நழுவாமல்.*

**சூழ்கம் ப(ள்)ளமும் பிரியாமல்**- *தன்னைச் சுற்றிப் பக்கத்தில் உள்ள பள்ளங்களையும் விட்டு நீங்காமல்.*

**சூழ்மாகவசந் தொட்டுநின்று**

**சூழ் மா கவசம் தொட்டு நின்று**- *சிறந்த மெய்க்கவசத்தை அணிந்து நின்று.*

**சூழ் மாக வசம் தொட்டு நின்று**- *சுற்றியுள்ள வானத்திடமெல்லாம் நெருங்கி நின்று.*

**சூழ்முத்திருக்குமருவி**

**சூழ் முத்திருக்கு மருவி** - *சூழ்ந்துள்ள முப்புரி நூல் பொருந்தப்பெற்று.*

**சூழ்முத்து இருக்கும் அருவி** - *சேர்ந்த முத்துக்கள் இருக்கின்ற அருவிநீர்.*

**சூழ்வாரை யேயும்**

**சூழ்வாரை ஏயும்** - *அமைச்சர்களைப் பொருந்தும்.*

**சூழ்வு ஆரைஏயும்** - *சூழ்தலையுடைய மதில் பொருந்தும்.*

**சூழ் வாரை ஏயும்** - *சுற்றிக்கட்டும் வாரினைப் பொருந்தும்.*

**சூளாமணியார்**

**சூள் ஆம்அணி ஆர்** - *சூளுரையாகிய அடுக்குமொழியைப் பொருந்தும்.*

**சூளாமணி ஆர்** - *முடிமணி பொருந்திய.*

**சூலுகிவரும்**

**சூல் நாகு இவரும்**-*கருப்பத்தையுடைய சங்குகள் தவழும்.*

**சூனு ஆகி வரும்** - *குழந்தையாகி வரும்.*

**செக்கணியாடிக் களிக்கும்**

**செக்கு அண்ணி ஆடி களிக்கும்** - *செக்கை நெருங்கித் தோகை விரித்தாடி மகிழும்.*

**செம் கணி ஆடு இக்கு அளிக்கும்** - *சிவந்த கணுக்களையுடையதாகிய அசைகின்ற கரும்பை வளர்க்கும்.*

**செக்கோலங்கொள்ளும்**

செ கோலம் கொள்ளும் - *செம்மையாக அழகு செய்து கொள்ளும்.*

செக்கு ஓலம் கொள்ளும் - *எள்ளினை யாட்டுஞ் செக்கு ஒலியைச் செய்யும்.*

**செங்கழுநீருண்ணும்**

செங்கழுநீர் உண்ணும் - *செங்குவளை மலரைத் தின்னும்*

செங்கழுநீர் உண்ணும் - *செம்மையான கழுநீரைக் குடிக்கும்.*

**செங்கற்படுக்கும்**

செம்மை கற்பு அடுக்கும் - *செவ்விய கற்புப் பொருந்தப் பெற்று விளங்கும்.*

செம்மை கல் படுக்கும் - *சிவந்த மணிகளைப் பதிக்கும்.*

**செங்கற்பட்டுயர்ந்த கழுக்குன்றம்**

செங்கற்பட்டு உயர்ந்த கழுக்குன்றம் - *செங்கற்பட்டுச்சிறப்புடைய திருக்கழுக்குன்றம்.*

செம்கல்பட்டு உயர்ந்த கழுக்குன்றம் - *செங்காவிப்பட்டை யணிந்து உயர்ந்து பருத்த கொங்கை.*

**செங்கீரையாடுதல்**

செங்கீரை ஆடுதல் - *செவ்விய சொற்களைப் பேசுதல்.*

செங்கீரை ஆடுதல் - *சிவந்த கீரைத் தண்டைப் போல அசைந்து ஆடுதல்.*

**செங்கையிடையார்க்கும்**

செம் கையிடை ஆர்க்கும் - *சிவந்த கையின் கண் பொருந்தும்.*

செங்கை இடை ஆர்க்கும் - *சிவந்த கையினிடத்தில் ஒலிக்கும்.*

**செங்கோல்தூக்கி**

செங்கோல் தூக்கி - *ஒழுங்கான மரத்திலே தூக்கப்பட்டு.*

செங்கோல் தூக்கி - *செங்கோலின்படி ஆராய்ந்து.*

**செச்சையாரத்தாழும்**

செச்சை ஆரத்து ஆழும் - *சிவந்த சந்தனக் குழம்பில் ஆழ்ந்து கிடக்கும்.*

செச்சை ஆர தாழும் - *ஆடுகள் தழைகளை உண்ணுமாறு தாழ்ந்திருக்கும்.*

**செட்டி பெண்டாட்டி**

செட்டி பெண்டாட்டி - *செட்டியினுடைய மனைவி.*

செட்டி பெண்டாட்டி - *முருகன் மனைவியாகிய வள்ளி.*

*(செட்டி - முருகன்.)*

**செத்த குரங்கு**

செத்த குரங்கு - *இறந்துபோன குரங்கு.*

செத்த குரங்கு - *சாமந்தி.*

*(செத்த - சா.)*

*(குரங்கு – மந்தி.)*

**செந்திலகத்தலர்**

செம் திலகத்து அலர் - *சிவந்த பொட்டினுற் பரந்த.*

செந்தில் அகத்து அலர் - *செந்தின்மா நகரிடத்திலே பழிச்சொல்.*

**செந்திலைமேவுதலால்**

செம் தில்லை மேவுதலால் - *சிறந்த தில்லை நகரைப் பொருந்துதலால்.*

செந்திலை மேவுதலால் - *திருச்செந்தூரை அடைதலால்*

**செந்தினகரனை நேர்**
செந்தில் நகரனை நேர் - *திருச்செந்தூரில் எழுந்தருளிய முருகனை ஒத்திருக்கும்.*

**செந்தினகரன் புரையும்**
செம்(மை) தினகரனை நேர் - *சிவந்த கதிரவனை ஒத்திருக்கும்.*
செம்(மை) தினகரன்புரையும் - *செம்மையான கதிரவனை ஒத்து விளங்கும்.*
செந்தில் நகரன் புரையும்-*திருச்செந்தூரில் எழுந்தருளிய முருகக் கடவுளை ஒத்து விளங்கும்.*

**செந்துவரைத் தண்ணளிகூர்**
செந்துவரை தண்அளி கூர் - *எல்லா உயிர்களிடத்தும் தண்ணிய அருள்மிகுந்திருக்கின்றது.*
செம் துவரை தண் அளிகூர் - *சிவந்த பவழத்திற்குக் குளிர்ந்த அன்பை உண்டாக்குகின்றது.*

**செப்பங்கடுக்கும்**
செப்பு அம் கடுக்கும் - *செப்பினது அழகை அவ்விடத்திலே ஒத்து விளங்கும்.*
செப்பு அங்கு அடுக்கும் - *சொற்களை அவ்விடத்திலே (நூலிடத்திலே) வரிசையாக அமைக்கும்.*

**செப்பத்தமதிலை**
செப்ப தமதுஇலை-*நடுவு நிலைமையால் தங்களுடைய மனைவியை.*
செப்பு அத்தமது இ(ல்)லை - *சொல்லப்படுகிற கையானது இல்லை.*

**செப்பாகமங்களங்கூர்**
செப்பு ஆகமங்கள் அங்கு ஊர் - *சொல்லப்பட்ட ஆகமநூல்களை அவ்விடத்தில் ஓதி மேம்பட்டிருக்கின்றது.*
செப்பு ஆக மங்களம் கூர்-*செப்புக் கிண்ணம்போல மங்களம் பொருந்தி யிருக்கின்றது.*

**செப்பாரமுதலை**
செப்பு ஆரமுதுஅல்ஐ - *சொல் பொருந்திய அமுதம் இருள் நிறமும் அழகும்.*
செப்பு ஆரமுது அலை - *செப்பு முத்து பழமையாகிய அலை கடல்.*
செ பாரமுதலை - *சிவந்த பெரிய முதலை.*
செப்பு ஆரமுதலை - *சொல்லானது பொருந்த மூலத்தை.*

**செப்பிடுவித்தை**
செப்பிடு வித்தை - *கண்கட்டு வித்தையைப் போன்ற ஒரு வித்தை.*
செப்பு இடு வித்தை - *செப்புக் கிண்ணத்தை (தனத்தை) வெளியே தெரியும்படியாகக் காட்டுகிற வித்தை.*

**செப்பினகிலத்தார்**
செப்பின் நகிலத்தார் - *செப்பினைப்போன்ற கொங்கைகளை உடையவர்கள்.*
செப்பின் அகிலத்தார்-*சொல்லுமிடத்து எல்லா உலகங்களையும் உடையவர்.*

**செப்புக் குடம் பழிக்கும்**
செப்புக்கு உடம்பு அழிக்கும் - *செப்புக் கிண்ணத்தினது வடிவழகைக் கெடுக்கும்.*

செப்புக்குடம் பழிக்கும் - *செப்புக் குடத்தை இகழும்.*

## செப்புங்கவ

**செ புங்கவ** - *காளையூர்தியை உடைய தேவனே.*

**செ புங்கவ** - *தோன்றிய உயர்ந்தோனே.*

## செப்பும் பரணியே

**செப்பும் பரணியே** - *சொல்லப் படுகிற பரணி நாளே.*

**செப்பு உம்பர் அணியே** - *செப்பின் மேல் அணிந்துள்ள உடர்ந்த அணிகலன்களே.*

## செம்பியன் மாட்டங் கடுக்கும்

**செம்பியன் மாட்டு அங்கு அடுக்கும்** - *சோழனிடத்திலே அங்குசேரும்.*

**செம்பு இயல்மாட்டு அங்கு அடுக்கும்** - *செம்பானியன்ற பொற்றகடு அங்கு பொருந்தும்.*

## செம்பிரசமுண்டெனச் செய்

**செம்பு இரசம் உண்டு எனச் செய்**-*செம்பானது இரசத்தை உண்டாற் பொன்னாதல் போலச் செய்கிற.*

**செம் பிரசம் உண்டு எனச் செய்** - *சிவந்த தேன் உண்டு என்னுமாறு செய்கிற.*

## செம்புதனையுட்குவிக்கும்

**செம்புதனை உள்குவிக்கும்** - *செம்பைத் தன்னுள்ளே சேர்க்கும்.*

**செம் புதனை உட்குவிக்கும்** - *செவ்விய புதனை நடுங்கச் செய்யும்.*

## செம்புதனை வெள்ளிதனை

**செம்புதனை வெள்ளிதனை** - *செம்பையும் வெள்ளியையும்.*

**செம்புதனை வெள்ளிதனை** - *அழகிய புதனையும் சுக்கிரனையும்.*

## செம்புலமேவிப் புரியும்

**செம்புலம் மேவி புரியும்**-*போர்க்களத்தை யடைந்து போர்புரியும்.*

**செம்மை புலம் மேவி புரியும்** - *செம்மையான அறிவை விரும்பிச் செய்யும்.*

## செம்புள்ளி வருமால்சேர்

**செம்புள் இவரும் மால்சேர்** - *கருடன்மீது ஏறுகின்ற திருமால் சேரும்.*

**செம்புள்ளி வரும் ஆல்சேர்** - *செவ்வையாகிய புள்ளிகள் வருகின்ற ஆலமரங்கள் சேரும்.*

## செம்பொன்னின் அம்பலம்சேர்

**செம்பொன்னின் அம்பலம்சேர்**- *செவ்விய பொன்னினாலாகிய அம்பலம் அமைந்துள்ள.*

**செம் பொன்னின் அம் பலம் சேர்** - *அழகிய திருமகளின் சிறந்த பலம்பொருந்தியிருக்கிற (அஃதாவது செல்வம் நிறைந்துள்ள.)*

## செம்போத்து மேவும்

**செம் போத்து மேவும்** - *சிவந்த பக்கக் கன்றுகள் தோன்றும்.*

**செம்போத்து மேவும்** - *செம்போத்து என்னும் பறவைகள் பொருந்தும்.*

**செம்மலைமாற்றத் தழைக்கும்**

**செம்மலை மாற்ற தழைக்கும் -** *பழம் பூக்களை ஒழிக்கச் செழிக்கும்.*

**செம்மல் ஐ மாற்றத்து அழைக்கும் -** *தலைவர்களை அழகிய சொற்களாலே கூப்பிடும்.*

**செம்மலையாரம் மடுக்கும்**

**செம் மலை ஆர் அம் மடுக்கும் -** *செம்மையான மலையைப் போல் அழகு பொருந்தப் பெறும்.*

**செம்மலை ஆர மடுக்கும் -** *குழந்தைகளுக்கு நன்றாக உணவினை ஊட்டும்.*

**செம்மலை ஆர மடுக்கும் -** *பழம் பூக்களைக் கீழே மிகுதியாக நிறைக்கும்.*

**செம்மலை ஆரம் அடுக்கும் -** *சிறந்த மலைகள் சந்தன மரங்களை வரிசையாகப் பொருந்தியிருக்கும்.*

**செம்மலையே**

**செம்மலையே -** *சிவந்த மலையே.*

**செம்மலையே -** *பழம் பூவையே.*

**செம்மலையே -** *பெருமையிற் சிறந்தவனையே.*

**செம்மலைவண்டு**

**செம்மலை வண்டு -** *சிவந்தமலை சங்கினங்கள்.*

**செம்மலை வண்டு-** *பழம்பூவைச் சங்கினங்கள்.*

**செம்மறிவாக்கும்**

**செம்மறி வாக்கும் -** *செம்மறியாடுகள் கொடுக்கும்.*

**செம்அறிவு ஆக்கும் -** *சிறந்த அறிவை உண்டாக்கும்.*

**செம்மாந் துணர்விலகும்**

**செம்மாந்து உணர்வு இலகும் -** *மேம்பட்டு அறிவு விளங்கும்.*

**செம் மா துணர் விலகும்-** *சிவந்த மாந்துளிரை விலக்கும்.*

**செம்மைக்கட்டங்கும்**

**செம்மைக்கண் தங்கும் -** *செந்நெறியிலே நிற்கும்.*

**செம்மை கள் தங்கும் -** *சிவந்த கள் பொருந்தியிருக்கும்.*

**செயதுங்கபத்திரி**

**செய துங்கபத்திரி-** *சிறந்த துங்கபத்திரி என்னும் ஆறு.*

**செய துங்கபத்திரி -** *வெற்றியை உடைய சுரபுன்னை இலை.*

**செயலங்கை வாளை**

**செயல் அம்கை வாள் ஐ -** *சேற்றில் தோன்றிய அழகிய ஒப்பற்ற, ஒளி பொருந்திய மேலான.*

**செயலங்கை வாளை -** *வெற்றி பொருந்திய இலங்கையின் அழகை.*

**செயுமாதவ மெத்திசையுமிக**

**செயும் மாதவம் எத்திசையும் மிக -** *செய்யப்படுகிற பெரிய தவம் எத்திக்கிலும் மிகுதிப் பட.*

**செயும் ஆதவம் எத்திசையும் மிக -** *உண்டாகிற வெப்பம் எல்லாத் திக்குகளிலும் மிகுதிப் பட.*

**செய்தகவஞ்சிக் காக்கும்**

**செய்தக வஞ்சிக்கு ஆக்கும் -** *வயல்களில் உள்ள தகுதியான வஞ்சிக்கொடிக்கு உண்டாக்கும்.*

செய்தகவு அஞ்சி காக்கும் - செய்கின்ற தன்மைக்குப் பயந்து காக்கும்.

**செய்யகட்டிலணையிற்சேர்**

செய்ய கட்டில் அணையில் சேர் - செப்பமான கட்டிலிட் மெத்தையிற் கூடுகின்ற.

செய் அகட்டில் அணையில் சேர் - கழனியின் நடுவிலும் கரையிலும் தங்கியிருக்கும்.

**செய்யகலங் காட்டும்**

செய்ய கலம் காட்டும் - செம்மையான அணிகலன்களைப் புலப்படுத்தும்.

செய் அகலம் காட்டும் - வயல்கள் விரிவைத் தம்மிடத்திலே காண்பிக்கும்.

**செய்ய கலம்பகத்தான்**

செய் அகல் அம்பகத்தான் - செம்மையான அகன்ற கண்ணையுடையவன்.

செய்ய கலம்பகத்தான் - சிறந்த கலம்பகம் என்னும் நூலை உடையவன்.

**செய்யகலாதனத்தன்**

செய் அகலாத நத்தன் - வயல்களைவிட்டு நீங்காத சங்குக் குழையுடையவர்.

செய்ய கல் ஆதனத்தன் - சிவந்த மேருமலையை இருப்பிடமாக உடையவர்.

செய்ய கலா தனத்தன் - சிறந்த கலைகளைப் பொருளாக உடையவர்.

**செய்யகாந்தாரமுறும்**

செய்ய காந்து ஆரம் உறும் - செம்மையான ஒளிதங்கிய அணிகலன் பொருந்தும்.

செய்ய காந்தாரம் உறும் - சிறந்த காந்தாரப் பண் பாடுதலையுறும்.

**செய்ய செந்தாமரை**

செய்ய செம்தாமரை - திணை விளை நிலத்தையுடைய ஒழுங்கான சிறுகுடி.

செய் அசெம் தா மரை - வயலில் காட்டாடுந் தாவுகின்ற மானும்.

செய்ய செந்தாமரை - அழகிய சிவப்புத் தாமரை.

**செய்யமகம் புரியும்**

செய் யமகம் புரியும் - செய்கின்ற யமகத்தைச் செய்யப்படும்.

செய்ய மகம் புரியும் - செம்மையான வேள்விகளைச் செய்யும்

**செய்யவளங் கொழிக்கும்**

செய்யவள் அங்கு ஒழிக்கும் - திருமகளால் அங்கு ஒழிக்கப்படுகின்ற.

செய்ய வளம் கொழிக்கும் - செப்பமான வளத்தைக் கொழிக்கின்ற.

**செய்யவளை**

செய்யவளை - திருமகளை.

செய்ய வளை - வயல்களில் உள்ள சங்கினங்கள்.

**செய்யாரளகமிகும்**

செய் ஆர் அளகம் மிகும் - வயல்களில் அரிய நீர் மிகுதிப்படும்.

செய்யார் அளகம் மிகும் - திருமகளை யொத்த மகளிர் காதல் மிகும்.

**செய்யாவரணஞ்சேர்**

செய் ஆவரணம் சேர் - செய்யப்பட்ட கோட்டை பொருந்திய.

செய்யா அரணம் சேர் - இயற்கை மதில் பொருந்திய. (ஆவரணம் அரணம் என்பவற்றிற்கு; மறைப்பு, சிலை, தடை : காவற்காடு, வேலி, கவசம், வேல், கதவு முதலிய பிற பொருள்களும் உள்ளன. ஏற்றவாறு கொள்ளலாம்.)

**செய்யான்**

செய்யான் - செய்யமாட்டான்.
செய்யான் - நிலத்துக்குரியான்.
செய் ஆன்-வயலில் மேயும் பசு.

**செய்யிற் கயலாரும்**

செய் இற்கு அயல் ஆரும் - கட்டப்பட்ட வீட்டிற்குப் பக்கத்தில் பொருந்தும்.
செய்யில் கயல் ஆரும் . வயல்களில் மீனைத் தின்னும்.

**செய்யுட் கிடைமறிக்கும்**

செய்யுள் கிடை மறிக்கும் - வயலில் மந்தையாகக் கிடக்கும்.
செய் உட்கிடை மறிக்கும் - வீட்டின் உள்ளிடத்தில் தடுத்து மூடி நிற்கும்.

**செய்யுள் மணமேவும்**

செய்யுள் மணம் மேவும் - வயல்களில் மணத்தை விரும்பும்.
செய்யுள் மணம் மேவும்-பாடல்களின் இன்பத்தை விரும்பும்.

**செய்யுளவை வழங்கும்**

செய்யுள் அவை வழங்கும் - செய்யுளாகிய அவைகட்குப் பொருளைக் கொடுக்கும்.
செய்யுள் அவை வழங்கும் - வயலில் கூட்டமாக (சங்குகள்) திரியும்.

**செய்யோனகற்றும்**

செய்யோன் அகற்றும் - வயலுக்குரியவன் போக்கும்.
செய்யோன் நகற்றும்-கதிரவன் ஒளியுடையதாக்கும்.

**செருக்கும்பராக**

செரு கும்ப ராக - போரினையும் மத்தகத்தையும் சினத்தையும் உடைய.
செருக்கும் பராக - இறுமாப்பையும் மலர்த் தாதுக்களையும் உடைய.

**செருப்புக்குத் தோல்வாங்கும்**

செரு புக்கு தோல் வாங்கும் - போருக்குப்போய்ப் பகைவர்களின் யானைகளைக் கைப்பற்றிக் கொள்ளும்.
செருப்புக்கு தோல் வாங்கும் - செருப்பு (மிதியடி) செய்வதற்குத் தோலினைப் பெறும்.

**செல்வந்தணியா வேறு**

செல்வம் தணியா ஏறு - செல்வந் தணியாமல் மிகுதிப்படுகின்ற.
செல்வந்து அணியா ஏறு-முகில்கள் வந்து வரிசையாக ஏறுகின்ற.

**செல்லம்புலியமரும்**

செல் அம் புலி அமரும் - அவ்விடத்தை யடைந்த அழகிய புலிக்கால் முனிவரால் விரும்பப்பெறும்.
செல் அம்புலி அமரும் - (மதிலைத் தாண்டிச்) செல்லுகிற திங்கள் தங்கியிருக்கும்.

**செல்லலையம்பொழில்**

செல் அலை அம்பொழில் - *முகிலலையசைக்கின்ற அழகிய பொழில்.*

செல்லல் ஐயம்பொழில் - *துன்பத்தையும் ஐயத்தையும் உலகில்.*

**செல்லாதவர்**

செல்லாதவர் - *போகாதவர்.*

செல் ஆ தவர் - *செல்லுகின்ற கதிரவர்.*

**செல்லாமை போக்கும்**

செல்லாமை போக்கும் - *வறுமையைப் போக்கும்.*

செலு ஆமை போக்கும்-*செல்லுகிற மாடு ஆடு முதலியவைகளை விரட்டும்.*

செல் ஆமை போக்கும்-*செல்லுகிற ஆமையைப் போகச்செய்யும்.*

**செல்லோடத் தேறும்**

செல்ஓட தேறும் - *செல் என்னும் பூச்சிகள் ஓடுமாறு தெள்ளும்.*

செல் ஓடத்து ஏறும் - *செல்லுகிற ஓடத்திலே ஏறும்.*

**செல்வங் குவிக்கும்**

செல்வம் குவிக்கும் - *செல்வத்தை மிகுதியாகச் சேர்க்கும்.*

செல் வங்கு விக்கும் - *செல்லுகிற வழியை நிரப்பும்.*

**செல்வந்தடுக்கும்**

செல்வந்து அடுக்கும்-*முகில்கள் வந்து அடுக்கப்பெறும்.*

செல்வம் தடுக்கும் - *(மறநெறியில் வரும்) செல்வத்தைத் தடுக்கும்.*

**செல்வந்தமருறவாம்**

செல்வம் தமர் உறவாம் - *செல்வமுஞ் சுற்றத்தாரும் உறவாகும்.*

செல்வந்து அமருற ஆம்-*முகில்கள் வந்து தங்குதலாலே விருத்தியாகிற.*

**செல்வந்திகழும்**

செல்வம் திகழும் - *செல்வம் விளங்கும்.*

செல் வந்து இகழும் - *முகிலானது வந்து எள்ளும்.*

**செல்வந்திடநேரும்**

செல் வந்திட நேரும்- *முகில்கள் வந்திட இடங் கொடுக்கும்.*

செல் வந்திட நேரும் - *இடி இடித்தலைக்கொண்டிருக்கும்.*

செல் வந்திட நேரும் - *போக்குவரவை அறிவிக்கும்.*

**செல்வந்திருந்திடலால்**

செல்வந்து இருந்திடலால் - *முகில்கள் வந்து பொருந்துதலால்*

செல்வம் திருந்திடலால் - *செல்வங்கள் நிறைதலால்.*

**செல்வா**

செல்வா - *செல்வத்தை யுடையவனே!*

செல் வா - *போ வா.*

**செல்விக்கினமடுக்கும்**

செல்விக்கினம் மடுக்கும் - *நூல்களில் வருகின்ற இடையூற்றை அழிக்கும்.*

செல்விக்கு இனம் அடுக்கும் - *திருமகளுக்கு இனமாகப் பொருந்துகிற.*

**செல்விதனமலை**

செல்விதனமலை - *மங்கையின் கொங்கைக் குன்று.*
செல் விதன மலை - *செல்லுகிற மந்தக் குன்று.*

**செவிக்குன்ற வாரணம்**

செவிக்கு உன் தவா ரணம் - *காதுக்கு உன் தவிராத உரிமையை.*
செ வி குன்ற வாரணம் - *தாமரையில் இருக்கும் பறவையாகிய ஆன்மா வருந்துகையில் கோழி.*
செ இக்குன்று அவா ரணம் - *பிறவிக்கு வித்தாகிய இம்மலை போன்ற அவா போர்புரிய.*

**செவ்வந்திப் போதடுக்கும்**

செம்மை அந்தி போது அடுக்கும் - *செம்மை பொருந்திய மாலை நேரத்தில் சேரும்.*
செவ்வந்திப்போது அடுக்கும் - *செவ்வந்தி மலர் பொருந்தியிருக்கும்.*

**செவ்வலரிப் பூமணக்கும்**

செம்மை அலரி பூ மணக்கும் - *செவ்விய அலரிப் பூக்கள் மணம் வீசும்.*
செம்மை அலரி பூ மண் நக்கும்- *சிவந்த அழகிய நிலத்திலுள்ள மண்ணை நக்கும்.*

**செவ்வழியங்காட்டும்**

செவ்வழி அங்கு ஆட்டும்- *செவ்வழிப் பண்ணை அவ்விடத்திலே வருத்தும்.*
செவ்வழி அம் காட்டும்- *சிறந்த வீடுபேற்றின் சிறப்பைத் தெரிவிக்கும்.*

10

**செவ்வழியின் பண்புணரும்**

செவ்வழியின் பண்பு உணரும் - *செவ்விய நெறியினது பண்பினைத் தெரிந்துகொள்ளுகிற.*
செவ்வழியின் பண்புணரும் - *செவ்வழி யென்னும் பண்ணைப் பாடுகின்ற.*

**செவ்வாய் வழுத்தடுக்கும்**

செவ்வாய் வழு தடுக்கும் - *செப்பமாய்க் குற்றங்களைப் போக்கும்.*
செவ்வாய் வழுத்து அடுக்கும் - *சிவந்த வாயில் போற்றி மொழிகளைப் பொருத்தும்.*

**செவ்வாம்பலங்கொடுக்கும்**

செம்மை ஆம்பலம் கொடுக்கும் - *சிறந்த இம்மை மறுமைப் பயனைக் கொடுக்கும்.*
செவ்வாம்பல் அங்கு ஒடுக்கும்- *செவ்வல்லி மலரை அவ்விடத்தே பெருமையழிக்கும்.*

**செவ்வாரணத் திசையார்**

செவ் வாரணத்து இசைஆர் - *செவ்விய சங்கின் இசை பொருந்தப் பெற்ற.*
செவ் வாரணத்து இசையார் - *சிவந்த கோழியின் இசை பொருந்திய.*
செவ்ஆரணத்து இசையார் - *செவ்விய மறையின் இசை பொருந்திய.*

**செவ்வாரணமெழுப்பும்**

**செம்மை வாரணம் எழுப்பும் -** *செவ்விய சேவல்கள் கூவிப் போகச் செய்யும்.*
**செம்மை ஆரணம் எழுப்பும் -** *செவ்விய மறையொலிகள் எழுப்பிவிடும்.*

**செவ்விதழைக்கவரும்**

செவ்வி தழைக்கவரும் - அழகு மிகுதியாய் வருகின்றது.

செம்மை இதழை கவரும் - செவ்விய இதழ் [illegible] கவருகின்றது.

**செவ்வியங்காதரிக்கும்**

செவ்வி தியங்காது அரிக்கும் - பருவ காலத்தில் வருந்தாமற் போக்கும்.

செவ் விதி அங்கு ஆதரிக்கும் - செம்மையான விதியை அவ்விடத்து [illegible] போற்றும்.

**செவ்வியமகமாற்றும்**

செவ்விய மகம் ஆற்றும் - சிறப்பான வேள்வியைச் செய்யும்.

செவ்வி யமகம் ஆற்றும் - செவ்வையான யமகங்களைப் பாடும்.

**செவ்வியரங்காற்றும்**

செவ்வியர் அங்கு ஆற்றும் - சிறப்புடையவர்கள் அவ்விடத்திற் சேரும்.

செவ்வி அரங்கு ஆற்றும் - அழகினையுடைய அவையிலே இயற்றப்பெறும்.

**செவ்வேணுவனத்தன்**

செவ்வேள் நுவல் கத்தன் - முருகக் கடவுள் கூறுகிற சங்கையுடையவன்.

செம்மை வேணு வனத்தன் - சிறப்புடைய மூங்கில் காடு என்னும் திருநெல்வேலியில் எழுந்தருளியவன்.

**செவ்வேளாண்மையமரும்**

செவ்வேள் ஆண்மை அமரும் - செவ்வேளின் ஆண்மையைப் பொருந்தும்.

செவ் வேளாண்மை அமரும் - செவ்விய கொடையை விரும்பும்

**செறிந்துமிகப்பல்கலைதோன்ற**

செறிந்து மிகப் பல்கு அலை தோன்ற - நிறைந்து மிகப் பெருகி வருகின்ற அலைகள் உண்டாக.

செறிந்து மிக பல்கலை தோன்ற - உட்பொதிந்து மிகுதியாகப் பலவகைக் கலைகள் உண்டாக

**செற்றத்தமர்வளர்க்கும்**

செற்றத்து அமர் வளர்க்கும் - சினத்தொடு போரைப் பெருக்கும்.

செற்ற தமர் வளர்க்கும் - நெருங்கிய சுற்றத்தாரைக் காப்பாற்றும்.

**செற்றலரையங்காட்டும்**

செற்றலரை அங்கு ஆட்டும் - பகைவர்களை அவ்விடத்திலே வருத்தும்.

செற்று அலரை அம் காட்டும் - நெருங்கிய மலர்களை அழகாகக் காட்டும்.

**செற்றைவரும்**

செற்றை வரும் - செற்றையென்னும் மீனினம் வரும்.

செற்று ஐ வரும் - கொன்று ஐந்து பேரும்.

செல் தைவரும் - முகில்கள் தவழ்ந்து செல்லும்.
செற்றை வரும் - தூதர்கள் வரும்.

**சென்மந்தரமலைக்கும்**
செல் மந்தரம் அலைக்கும்-முகில் படியும் மந்தர மலையை வருத்தும்.
சென்மம் தர மலைக்கும் - பிறவியைக் கொடுப்பதாய்த் துன்பம் அஞ்சும்.

**சென்னிக்கிசைத்தார்**
சென்னிக்கு இசைத்தார் - தலையிற் பொருத்தியவர்.
சென்னிக்கு இசைத்தார்- சோழனுக்குக் கூறியவர்.

**சென்னித்தலம்புகுக்கும்**
செல் நித்தல் அம்பு உகுக்கும் - முகில் நாள்தோறும் நீரைப் பொழியும்.
சென்னித்தலம் புகுக்கும்-தலையினிடத்தே செலுத்துகிறது.

**சென்னியமோகம்**
சென்னி அம் ஓகம்-தலையின்கண் சிறந்த ஆரவாரம்.
சென்னிய மோகம்- இசைபாடுந் திருமாலின் மயல்.

**சென்னியரைத் தண்மதிசேர்**
சென்னி அரை தண்மதி சேர் - விண்ணிலுள்ள தண்ணிய எண்ணாட் பிறையை ஒத்திருக்கின்றது
சென்னியரை தண்மதிசேர் - பாணரைக் குளிர்ந்த அறிவோடு சேர்கின்றது.

**சேகரங்கணாற்றும்**
சேகரம் கள் நாற்றும் - மிகுந்த கள்ளை வெளிப்படுத்தும்.
சேகர் அங்கண் ஆற்றும் - சிறந்தவர்கள் அவ்விடத்திலே செய்யும்.

**சேகரனார் மாகரனார்**
சேகு அரனார் மாகர் அனார் - வயிரம் பொருந்திய உள்ள முடைய சிவனார், தேவரைப் போன்றவர்கள்.
சேகரனார், மாகரனார் - சடைமுடியை உடையவர், மானேந்துகையை உடையவர்.

**சேகரவாரண**
சே-கரவா-ரண - காத்தலில் வஞ்சித்தலில்லாத வலிய.
சேகு அர ஆரண - வயிரத்தைக் கெடுப்பவனே மறை.

**சேகரித்து மெய்ப்புணர்த்தும்**
சேகு அரித்து மெய்ப்பு உணர்த்தும் - மனவயிரத்தை யொழித்து உண்மையை யுணர்த்தும்.
சேகரித்து மெய் புணர்த்தும் - தேடி உண்மையாகச் செய்யும்.

**சேகுலவாரம் பிரிக்கும்**
சேகுலம் வாரம் பிரிக்கும் - இடபத்தின் கூட்டத்தைப் பங்காகப் பிரிக்கும்
சேகுஉலகு ஆரம் பிரிக்கும் - வைரம் பொருந்திய முத்துக்களைத் தரமாகப் பிரிக்கும்.

**சேக்கிழார்க்கென் றோதும்**
சேக்கிழார்க்கு என்று ஓதும் - சேக்கிழார்க்கு என்று சொல்லப் பெறும்.

**சே கிழார்க்கு என்று ஓதும் -** *சே (இடபம்) அக்குரிய சிவ[illegible]க்கே [illegible]று சொல்லப் படு[illegible]*

**சேடிவணங்கு**

**[illegible] அணங்கு -** *அழகிய இந்த மங்கை.*

**சேடி வணங்கு -** *தோழிப் பெண் வணங்குகி[illegible].*

**சேட்டருக்கன்பாற்றிவரும்**

**சேடு அருக்கன்பால் திவரும் -** *பெருமை [illegible] ஞாயிறு மண்டலத்திடத்து விளங்கும்.*

**சேட்டருக்கு அன்பு ஆற்றி வரும்-** *தம் [illegible]லவருக்கு அன்பு செலுத்திவரு[illegible]*

**சேணந்தரத்திரியும்**

**சேண் அந்தரத்து இரியும் -** *(அந்தரத்து சேண் திரியும்) - விண்ணினது தூரத்தில் பறக்கும்.*

**சேணம் தர திரியும் -** *கல்லணையை இடச்சுமன்று வருகின்ற.*

**சேணந்தரமார்க்கும்**

**சேணம் தரம் ஆர்க்கும் -** *சேணத்தைச் சிறந்ததாக வைத்துக் கட்டும்.*

**சேண் அந்தரம் ஆர்க்கும் -** *தொலைவான விண்ணில் அசையும்.*

**சேணியரங்கடுக்கும்**

**சேணியர் அங்கு அடுக்கும் -** *வித்தியாதரர்கள் அங்கு வந்து சேரும்.*

**சேணி அரங்கு அடுக்கும் -** *சேணுயர்ந்த அரங்கிற் பொருந்தும்.*

**சேணியர் அங்கு அடுக்கும் -** *(துணிகளைச்) சேணியர்கள் மடித்து அடுக்குதலைச் செய்யும்.*

**சேணியன்**

**சேணியன் -** *துணி நெய்பவன்.*

**சேணியன் -** *இந்திரன்.*

**சேண்டிகுரனவிலும்**

**சேண்திக்கு உரன்நவிலும்-** *மிகு தொலைவரைக்கும் வலிமையை எடுத்துப் பேசும்.*

**சேண்டி குரல் நவிலும் -** *சேமக்கலத்தினது ஒலி முழங்கும்.*

**சேதகமொன்றும்**

**சே தகமொன்றும் -** *மைந்தனை தகுதியாக முழங்குகின்ற.*

**சேது அகம் ஒன்றும் -** *சிவந்த இருதயம் கூடும்.*

**சேதகம் ஒன்றும் -** *சேற்றினுள்ளே யாதும்.*

**சேதங்கடக்கும்**

**சேது அங்கு அடக்கும் -** *கரையை அவ்விடத்தே அடக்கி மேலெழும்.*

**சேதம் கடக்கும் -** *அழிவினைத் தாண்டிப் பெருகும்.*

**சேதம்பலமடுக்கும்**

**சேது அம்பலம் மடுக்கும் -** *(இருளை) சிவந்த பொன்னம்பலம் (தன்னொளியால்) உண்டு ஒழிக்கும்.*

**சே தம் பலம் அடுக்கும் -** *காளைகளினுடைய ஆற்றலைப் பொருந்தும்.*

**சேதநமன்பணிகொள்**

**சேத நமன் பணிகொள்** - *உயிர்களை அழிக்கின்ற நமனைப் பணிசெய்பவனாகக் கொள்கிற.*

**சேதநம் அன்பு அணிகொள்** - *சேதனத்தையும் அன்பையும் அணிகலனாகக் கொள்ளுகின்ற.*

**சேதனந் தந்துறை**

**சே தனம்தந்து உறு ஐ** - *அழகிய திருமுலைப்பால் ஊட்டிப் பொருந்திய ஐயனே.*

**சேது அனந்தம் துறை** - *சேது முதலிய எண்ணற்ற தீர்த்த நீர்த் துறை.*

**சேதாம்பலங்கொடுக்கும்**

**சேது ஆம் பலம் கொடுக்கும்** - *சேது தீர்த்தப் பலனைக் கொடுக்கும்.*

**சேது ஆம்பல் அங்கு ஒடுக்கும்** - *செவ்வல்லியை அவ்விடத்திலே அடக்கிவிடும்.*

**சேதாம்பலதுறை**

**சேதாம் பலதுறை** - *சேது முதலிய பல வகைத் திருத்த நீர்த் துறை.*

**சேதாம்பல் அது உறை** - *செவ்வாம்பல் பொருந்திய.*

**சேதாரம் பாடும்**

**சே தாரம் பாடும்** - *செவ்விய நாவினால் பாடும்.*

**சே தாரம் பாடும்** - *தேமாமரத்தில் இருந்து பாடும்.*

**சேதி மத்தரற் படுக்கும்**

**சேதி மத்தர், அல் படுக்கும்** - *மத்தவியல்பைச் சேதிக்கின்றவர், மாணவர் அகவிருளைப் போக்கும்.*

**சேதிமத்தர் அற்பு அடுக்கும்** - *கோயிற்பணியாளர்கள் அன்பு பொருந்தியிருக்கும்.*

**சேதுவையாள்**

**சேதுவை ஆள்** - *செம்மை நிறத்தை மேற்கொண்ட.*

**சேதுவை ஆள்** - *சேதுநாட்டை ஆளுகின்ற.*

**சேத்திரவாசஞ்செய்யும்**

**சேத்திர ஆசு அஞ்சு எய்யும்** - *உடற் குற்றங்கள் ஐந்தையும் அழிக்கும்.*

**சேத்திர வாசம் செய்யும்** - *நல்வினையின் பொருட்டுத் திருத்தல வாசத்தினை மேற்கொள்ளும்*

**சேந்தனலங்கெழும்**

**சேந்து அனல் அங்கு எழும்** - *சிவந்து தீயானது அங்கு எழப்பெறும்.*

**சேந்தன் நலம் கெழும்** - *முருகனைப்போல் அழகுடையவர்களாக விளங்கும்.*

**சேந்தனலம்படரும்**

**சேந்து அனல் அம்பு அடரும்** - *சிவந்து தீயைச் சொரிகின்ற அம்பை அழிக்கும்.*

**சேந்தன் நலம் படரும்** - *முருகனது அழகு வாய்க்கப்பெற்று விளங்கும்.*

**சேப்பாய் மருப்பொசிக்கும்**

**சே பாய் மருப்பு ஒசிக்கும்** - *இடபத்தினது பாய்கின்ற மருப்பை முறிக்கும்.*

**சேப்பாய் மரு பொசிக்கும்** - *செவ்வையாய் மணத்தை உண்ணும்.*

சேமங்கடவாத
சேமங்கள் தவாத - கெடாத.
சேமம் கடவாத - க[illegible] [illegible]கப்

சேமரவிக்கும்
சேம ரவிக்கு அம் - சிவந்த சூரியனுக்கு நீர்.
சே மரவிக்கம் - வயிரம் பொருந்திய மராமரத்தினால் உண்டான விக்கிரகத்தை.

சேயம்மை காவலர்
சேய் அமை கா அலர் - விசும்பிடத்துள்ள அந்த முகில் சோலையில் உள்ள மலர்.
சேய் அம்மை காவலர் - செவ்வாய்க்குத் தாயாகிய நிலத்தைக் காக்கும் அரசர்.

சேயவன்புந்தி
சேய அன்பு உந்தி - சிறந்த அன்பு மிகுதியாகி.
சேயவன் புந்தி - செவ்வாயும், புதனும்

சேய்மதலையம்புயத்தான்
சேய் மதலை அம்புயத்தான் - முருகனாகிய குழந்தை நான்முகனுடைய(சிறையைவிடப் பணித்தவன்).
சேய் மதலை அம்புயத்தான் - சிவந்த கொன்றை மலர் மாலையை அழகிய தோளில் அணிந்தவன்.

சேரக்குழையும் மணிமுடியும்
சேர குழையும் மணிமுடியும் - ஒன்றாகக் குண்டலமும் மணிமுடியும்.
சேர குழையும் மணிமுடியும் - ஒருசேர இலைகளும் அழகிய நாற்று முடியும்.

சேரப்பணைத்துவளர்
சேர பணைத்து வளர் - ஒன்றோடொன்று நெருங்கப் பருத்து வளருகிற.
சேர் அப்பு அணைத்து வளர் - சேர்ந்த நீரைப் பொருந்தி வளருகின்ற.

சேரப்பொருப்பு
சேர பொருப்பு - சேரனது கொல்லிமலை
சேர் அப்பு ஓர் உப்பு - அழியும்படி மோதுகின்ற ஒப்பற்ற உப்புக் கடல்.

சேரலரைக்கூழையிற்சூழ்
சேர் அலரை கூழையில்சூழ் - பொருந்திய பூக்களைக் கூந்தலிற் சூடுகிற.
சேரலரை கூழையில் சூழ் - பகைவர்களை முன்னணியில் வளைந்துகொள்கின்ற.

சேரலர் நாரானவிற்றும்
சேரலர் நாரால் நவிற்றும்-சேரமான்பெருமாள் நாயனார் அன்பினாற் பாடும்.
சேர் அலர் நாரால் நவிற்றும் - (மாலையை) சேர்ந்த மலரைக் கொன்றை நாரால் கட்டும்.
சேரலர் நாரால் நவிற்றும் - பகைவர்கள் குணமற்ற தன்மையாற் கூறும்.

சேரவண்டிக் கட்டிடலால்
சேர் அவண் டிக்கட்டு இடலால் - சேர வேண்டிய அவ்விடத்திற்குப் பயணச்சீட்டுக் கொடுத்தலால்.

சேர அண்டிக் கட்டிடலால் - சேர்ந்து ... நெருங்கிக் கட்டிப்பிடித்ததால்.

**சேராரையங் கலேக்கும்**

சேர் ஆர் ஐயம் கலேக்கும் - பொருந்திய அரிய ஐயங்களைப் ...

சேராரை அங்கு அலேக்கும் - பகைவர்களை அவ்விடத்திலே ...

**சேராரங்காட்டும்**

சேராரை அங்கு ஆட்டும் - பகைவர்களை அவ்விடத்திலே வருத்தும்.

சேர் ஆரை அம் காட்டும் - கீழுலகும் மேலுலகும் சேர்ந்த மதில் அழகாக விளங்கும்.

**சேரிக்குவடு**

சேர் இக்கு வடு - இசைந்த கரும் பும் மாவடுவும்.

சேரிக்கு வடு - குடியிருக்கும் இடத்திற்குக் குற்றம்.

சேரி நீ அடு - ஒழித்து உலகத்தை அழிக்கின்றாய்.

**சேருமோதி**

சேருமோது - சேருகிற இடத்தை ஓது.

சேரும் ஓதி - பொருந்தியிருக்கிற கூந்தல்.

**சேரரைப்பணம்**

சேர் அரைப்பணம் - ஒரு சேரின் விலை அரைப்பணம்.

சேர் அரைப்பணம் - அரையில் உள்ள பாம்பின் படத்தைப் போன்ற அல்குலைச் சேர்வாயாக.

**சேர்தராமோ**

சேர்தரல் ஆமோ - கூடலாமோ?

சேர் தரல் ஆமோ - ஒரு சேர் கொடுத்தல் கூடுமோ?

**சேர்பலகையிட்டு முட்டும்**

சேர் பலகை இட்டு முட்டும் - ...னுடைய கைகளால் தடுக்கப்பட்டபோது தலையினால் முட்டும்.

சேர் பலகை இட்டு முட்டும் - பலகைகளைச் சேர்த்துச் செய்யப்பட்டு ... தன்மையதாகும்.

**சேலங்கைக்கொண்டு**

சேலம் கைக்கொண்டு - சேலம் என்னும் ஊரைக் கைப்பற்றிக் கொண்டு.

சேல் அங்கை கொண்டு - சேல்மீன் போன்ற கண்களை அகங்கையில் ... கொண்டு.

**சேலேக்கொடி திகழும்**

சேலே கொடிது இகழும் - சேல் மீனைக் கொடுமையாகப் பழிக்கும்.

சேலேக்கொடி திகழும் - துணிகளால் ஆகிய கொடிகள் விளங்கும்.

**சேலே பூணக்கொடி திகழும்**

சேலே பூண் அக்கொடி திகழும் - சேலே பூண்ட அக்கொடிகளாடும்.

சேலே பூணகொடிது இகழும் - சேற்கெண்டையை ஒப்பிட மிகவும் இகழும்.

**சேலைமிகவே கொளலால்**

சேலை மிகவே கொளலால் - *புடைவைகளை மிகுதியாகக் கொள்ளுவதால்.*

சேலை மிகவே கொளலால் - *சேல்மீன்களை அதிகம் கொண்டிருத்தலால்.*

**சேலையங் கொடிதிகழும்**

சேலை அம்கொடி திகழும் - *சேலையினால் ஆகிய அழகிய கொடி விளங்கும்.*

சேலை அங்கு ஒடித்து இகழும் - *சேல் மீனை அவ்விடத்திலே மடக்கித் தாழ்த்தியிகழும்.*

**சேலைவளையும்**

சேல் ஐ வளையும் - *சேல்மீன்கள் வட்டமிட்டுச் சுற்றும்.*

சேலை வளையும் - *சேலையும் வளையலும்.*

**சேவகஞ்சேர்**

சேவகம் சேர் - *வீரத்தைப் பொருந்தியிருக்கிற.*

சேவகம் சேர் - *உறங்கும் இடத்தைச் சேருகின்ற.*

**சேவகத்திலே வழங்கும்**

சேவகத்தில் வழங்கும் - *யானை துயிலுமிடத்தில் செல்லுகின்ற*

சேவு அகத்திலே வழங்கும் - *வயிரத்தை மனத்திலே கொள்ளும்.*

**சேவகமன்ன**

சே அகமன்ன - *சிவந்த உள்ளத் தாமரையைப் போன்ற.*

சேவகம் மன்ன - *வீரம் பொருந்திய அரச!*

**சேவகமுற்றாடலுறும்**

சேவகம் உற்று ஆடல் உறும் - *வீரத்தன்மை பொருந்திப் போர் செய்யும்.*

சே அகம் உற்று ஆடல் உறும் - *இடபம் எழுதப் பெற்ற கொடி ஆடுதலைச் செய்யும்.*

**சேவடிக்கண்ணார்க்கும்**

சே அடிக்கண் ஆர்க்கும் - *எருதின் காலில் அகப்பட்டுக் கொண்டு கத்தும்.*

சே அடிக்கண் ஆர்க்கும் - *சிவந்த அடியினிடத்திலே ஒலிக்கும்.*

**சேவலங்கணாட்டும்**

சேவல் அங்கண் ஆட்டும் - *சேவற் போரினை அவ்விடத்திலே செய்யும்.*

சே வலம் கண் நாட்டும் - *இடபத்தின் ஆற்றலைத் தம்மிடத்தே காட்டும்.*

**சேவலமருஞ்சீர்**

சேவல் அமரும் சீர் - *காவலைப் பொருந்தும் சிறப்பினையுடைய.*

சேவல் அமரும் சீர் - *(அன்னச்) சேவலை விரும்புந் தன்மையினையுடைய.*

**சேவலனங்குடையும்**

சே வலன் அங்கு உடையும் - *இடபத்தினது வல்லமை அவ்விடத்தே தோற்றழியும்.*

சேவல் அன்னம் குடையும் - *ஆண் அன்னமும் பெண் அன்னமுங் குடைகின்ற.*

**சேவற்கொடியும்**

சேவற்கு ஒடியும் - *சிவபெருமானுக்கு முறியும்.*

சேவற்கொடியும் - சேவலெழுதப்பட்ட கொடியும்.

**சேவையர் கோமான் மேவும்**

சேவையர் கோமால் மேவும் - வழிபடுவோர் மிகுந்த அவாப் பொருந்தும்.

சே ஐயர் கோமான் மேவும் - காளையிலேறும் அந்தணர் தலைவராகிய பெருமான் பொருந்தும்.

**சேறடித்துச் செல்லும்**

சேல் தடித்துச் செல்லும் - சேல் மீன்களானவை மின்னல் போல் செல்லும்.

சேறு அடித்துச் செல்லும் - சேறாகச் செய்து கொண்டு போகும்.

**சேறற் கருமைய வாம்**

சேறற்கு அருமைய ஆம்-கிட்டுதற்கு அருமையுடையன வாகும்.

சேறு அல் கருமைய ஆம்-சேறாகு இருள்போன்ற கருமைய வாயிருக்கின்ற.

**சேறுவண்டு**

சேல் துவண்டு - சேல்மீன்கள் வளைந்தோடி.

சேறு வண்டு - செல்லும் சங்குகள்.

**சேறுவள மாற்கமிடும்**

சேறுவளம் மாற்கம் இடும்-சேற்றின் மிகுதியை வழியிற் செய்

சேல்துவள மால் கம் இடும் - சேல்மீன் துவளும்படி மயக்கத்தை நீரில் இடும்.

**சேற்றவளை யார்க்கும்**

சேல்தவளை ஆர்க்கும் - சேல் மீன்களையும் தவளைகளையும் தம்மிடத்து நிறைத்திருக்கும்.

சேற்ற வளை ஆர்க்கும் - சேற்றிலுள்ள வளைகளைக் கட்டும்.

**சேனந்தலைச் சேர்க்கும்**

சேனம் தலை சேர்க்கும்-பருந்து முதலியவைகளைத் தன்னிடத்திலே சேர்க்கும்.

சேல் நந்தலைச் சேர்க்கும்-சேல் மீன் அழியுமாறு செய்யும்.

**சேனந்துவண்டுலவும்**

சேனம் துவண்டு உலவும் - பருந்துகள் வட்டமிட்டுத் திரி

சேல் நந்து வண்டு உலவும் - சேல் மீன்களும் சங்குகளும் வண்டுகளும் உலவுதலைச் செய்யும்.

**சையமடங்கலை**

சையம் அடங்கலை - எல்லா மலைகளையும்.

சையம் மடங்கலை - சிறப்பினையுடைய சிங்கத்தை.

**சொக்கட்டாறுடும்**

சொக்கட்டான் ஆடும் - சொக்கட்டானுடுதல் என்னும் விளையாடலைச் செய்யும்.

சொக்கு அட்டான் நாடும் - அழகைக் கெடுத்த சிவனை நாடும்.

**சொக்கரை**

சொக்கரை - சொக்கலிங்கக் கடவுளை.

சொக்கு அரை - அழகிய அல்குல்.

சொல்மாதவரென்

சொல்மாது அவர் என் - கலைமாது [illegible] என்று கூறும்.

சொல்மாதவர் என் - சொல்லப்படுகிற மாதவர் என்று கூறும்.

சொல்லரிய மாப்புடைக்கத்-தோன்றுதலால்

சொல்லரிய மாப்புடைக்க தோன்றுதலால் - சொல்லுதற்கு அருமையான வலிமை அமைந்த [illegible] தோன்றியபடியால்.

சொல்லரிய மாப்புடைக்க தோன்றுதலால் - மிக வலிமை அமைந்த மாவினைப் புடைத்து [illegible] பெறுதலால்.

சொல்லிக் களிக்கும்

சொல் இக்கு அளிக்கும் - நெல்லையும் கரும்பையும் கொடுக்கும்.

சொல்லிக் களிக்கும் - சொல்லி மகிழும்.

சொற்குவடு வாயும்

சொல் குவடு வாயும் - நெல்மலை பானது பொருந்தப்பெறும்

சொற்கு உவடு ஆயும் - சொல்லிற் குற்றத்தை ஆராய்ந்து பார்க்கும்.

சொற்பவளமென்னும்

சொற்ப வளம் என்னும் - வளஞ் சிறியதே என்று சொல்லும்

சொல் பவளம் என்னும் - வாய் பவளம் என்று கூறும்.

சொற்றிரவாரஞ்சூழ்

சொல் திரவாரம் சூழ் - சொல்லப்பெறுகிற சனிக்கிழமையில் வலம்வரும்.

சொல் திரம் ஆரம்சூழ் - நெல்லும் உறுதியான முத்துஞ் சூழ்ந்திருக்கும்.

சொன்னங்கொழிக்கும்

சொன்னம் கொழிக்கும் - பொன்னைக் கொழிக்கும்.

சொல்நங்கு ஒழிக்கும் - பேசும் போது பழிச்சொல்லை நீக்கும்.

சொன்னவரையறிந்தோம்

சொன்னவரை அறிந்தோம் - கூறியவர்களைப் பார்த்தோம்.

சொன்ன வரை அறிந்தோம் - தங்கமலையை (தனம்) உணர்ந்தோம்.

சோதனை செய்யும்

சோதனை செய்யும் - ஆராய்ச்சி செய்யும்.

சோ தனை செய்யும் - மதிலானது அளவு செய்யும்.

சோதித் தலைசேர்

சோதி தலை சேர் - கதிரவனது இடத்தை அடையும்.

சோதித்து அலை சேர் - ஆராய்ந்து அலையிலே செல்லுகின்ற.

சோத்தந்திரஞ்செய்

சோத்தம் திரம்செய் - தோத்திரத்தை உறுதியாகச் செய்கிற.

சோ தந்திரம் செய் - மதிலிற் சிற்ப நூற் சூழ்ச்சித் திறன்களைப் புரிகிற.

சோத்திரமுட் கொள்ளும்

சோத்திரம் உட்கொள்ளும் - காதினிடத்திலே கேட்கும்.

சோ திரம் உட்கொள்ளும்-மதியின் அமுதத்தை மனதிற்கொள்ளும்.

**சோபனத்தைச் சேர்ந்து**

சோபனத்தைச் சேர்ந்து - படிகளைப் பொருந்தி

சோபனத்தைச் சேர்ந்து - நற்செயல்களைப் பொருந்தி.

**சோமகரமுந்தும்**

சோம கரம் உந்தும் - திங்களின் ஒளி பொருந்தும்.

சோ மகரம் முந்தும் - மதில் மகர ராசிக்கு மேலே செல்லும்.

**சோமராகஞ்சேர்**

சோமராகம் சேர் - சோமராகம் என்னும் பாலைப்பண் ஐந்தினொன்றைப் பொருந்தும்.

சோமம் ராகம் சேர் - கள்ளினிடத்து இச்சை பொருந்தும்.

**சோரமடக்கும்**

சோரம் அடக்கும் - களவுத் தொழிலை அடக்கிவிடும்.

சோர மடக்கும் - தளருமாறு மடக்கிவிடும்.

**ஞெண்டுடம்படுத்தணையும்**

ஞெண்டு உடம்படுத்து அணையும் - ஆண் நண்டு பெண் நண்டை உடன்படுத்திச் சேரும்.

ஞெண்டு உடம்பு அடுத்து அணையும்-கிளைக்குந் தன்மையுடைய உடம்பைப் பொருந்திச் சேரும்.

**தங்கவிலை**

தங்க இலை - தங்கத்தினால் செய்யப்பட்ட இலை.

தங்க இலை - தங்குவதற்கு விட்டை; இலைத்திருக்கவில்லை

தங்க விலை - தங்கத்தின் விலை.

**தங்கனகவில்லார்**

தம் கனகம் வில்லார் - தமது பொன்மலையையே வில்லாக உடையவர்.

தங்கு அனக இல்லார் - தங்கியிருத்தல் மாசற்ற கயிலை மலையாக உடையவர்.

**தங்குஞ்சிதபதத்தை**

தம் குஞ்சித பதத்தை - தம்முடைய தூக்கிய திருவடியை

தங்கும் சிதம் பதத்து ஐ - தங்கிய வெண்மையான சோற்றினையுடைய இறைவன்.

**தங்குதிரையார்**

தங்கு திரை ஆர் - தங்குகிற அலைகள் பொருந்திய.

தம் குதிரையார்-(மறைகளைத்) தமது குதிரையாகவுடையவர்.

**தங்கூடுவிட்டு மறுகூடடையும்**

தம்கூடு விட்டு மறுகூடு அடையும் - தம் உடலைவிட்டு வேறு உடலை அடையும்.

தம்கூடு விட்டு மறுகூடு அடையும் - தாம் தங்குங் கூட்டை விட்டுத் தெருக்களிற்சேரும்.

**தங்கை**

தம் கை - தம்முடைய கை.

தங்கை-தனக்குப் பிறகு பிறந்த பெண்.

தங்கு ஐ - பொருந்திய அழகு.

**தஞ்சங்கரியார்**

தஞ்சம் கரியார் - பற்றுக் கோடானவர் திருமாலுக்கு.

தம் சங்கரியார் - தம்பால் சங்கரியை உடையவர்.

**தடித்துவிஞ்சி**

தடித்து விஞ்சி - மின்னல் மிகுதிப்பட்டு.

தடித்து விஞ்சி - பருத்து வளர்ந்து.

**தட்டான்**

தட்டான் - நகை செய்யும் பத்தன்.

தட்டான்-மனம் வாக்குக் காயங்களுக்கு எட்டாத இறைவன்.

**தகவானிறையின் பணிதழுவும்**

தகவான் இறையின் பணி தழுவும் - இறைவனுடைய ஏவலை ஏற்று நிற்கும்.

தக வான் நிறை இன்ப அணி தவழும் - தகுதியாக வானுலகில் உள்ள இன்பச் சிறப்புக்களைக் கொண்டிருக்கும்.

**தகனத்தத்தன்**

தகல் நத்து அத்தன் - தகுதி வாய்ந்த சங்கையேந்திய திருமால்.

தகனத்து அத்தன் - எரித்தழித்த தலைவர்.

**தகுந்தவிலை முன்பெறலாலும்**

தகுந்த வி(ல்)லை முன் பெறலாலும் - தகுந்த கரும்பு வில்லைக் கொண்டிருக்கிறபடியாலும்.

தகுந்த விலை முன் பெறலாலும் - தக்க விலையை முன்னரே வாங்கிக் கொள்ளுகிறபடியாலும்.

தகுந்த இலை முன் பெறலாலும் - தகுந்த இலைகளை எங்கும் பெற்றிருக்கிறபடியாலும்.

**தகுமலைநின்றேவரலால்**

தகு மலைநின்றே வரலால் - தகுந்த மலையிலேயிருந்து வந்ததலால்.

தகும் அலைநின்றே வரலால் - தக்கதான அலைபொருந்திய கடலிலேயிருந்து வருதலால்.

**தக்ககலைதெரியறன்னல்**

தக்ககலை தெரியல் தன்னால் - தகுதியாகிய ஆடை மாலை ஆகியவைகளால்.

தக்ககலை தெரியல் தன்னால் - தகுந்த நூல்களை அறிந்துள்ளபடியால்.

**தக்கநலவாரணம்**

தக்க நல வாரணம் - தகுதி வாய்ந்த நல்ல யானை.

தக்க நல ஆரணம் - மேன்மை வாய்ந்த சிறந்த மறை.

**தக்கவர்முன்பாடுகையால்**

தக்கவர் முன்பு ஆடுகையால் - தகுந்தவர் முன்பு கூத்து ஆடுவதால்.

தக்கவர் முன் பாடுகையால் - செல்வர்கள் சமுகத்தில் இசைக் கச்சேரி நடத்துவதால்

**தங்கச்சினகரம்**

தங்கு அச்சின் அகரம் - பொருந்திய உயிர் எழுத்துக்களுக்குள்ளே அகர எழுத்து.

தம் கச்சி நகரம் - தம்முடைய காஞ்சிபுர ஊர்.

**தங்கத்தரத்தவரை**

தங்கம் தரம் தவர் ஐ பொன்மலையாகிய அழகிய வில்லையும்.

**தங்கம் தரத்து அவரை** - *தங்கத்தைப்போற் சிறப்புடைய அவரை.*

## தங்கத்தனுவுடையான்

**தங்கம் தனு உடையான்** - *பொன் மலையாகிய மேரு மலையை வில்லாக உடையவன்.*

**தங்கம் தனு உடையான்** - *தங்கத்தைப்போல் விளங்கும் உடலையுடையவன்.*

## தங்கத்தனங்கள்

**தங்கம் தனங்கள்** - *பொன் போன்ற (தேமலையுடைய) கொங்கைகள்.*

**தங்கு அம் தனங்கள்** - *தங்கியுள்ள அழகிய பொருள்கள்.*

## தங்கமலை

**தங்கமலை** - *தங்கத்தினாலான மலை.*

**தங்கு அமலை** - *பொருந்திய இறைவி.*

**தம் கமலை** - *தம்முடைய திருவாரூர். (திருமகள்)*

**தம் கம் அலை** - *தம் தலையிலே உள்ள அலை பொருந்திய நீர்.*

## தங்கமலைக்கும்

**தங்க மலைக்கும்** - *பொன் மலையாகிய மேருமலைக்கும்.*

**தம் கம் அலைக்கும்** - *தம்முடைய தலையை ஆட்டும்.*

## தங்கவிமானத்தார்

**தங்கு அவிமானத்தார்** - *பொருந்திய பற்று உடையவர்.*

**தங்க விமானத்தார்** - *தங்கத்திலாகிய விமானத்தை உடையவர்.*

## தணிகாசலத்து

**தணிகாசலத்து** - *திருத்தணிகை மலையில்.*

**தணி கா சலத்து** - *துன்பத்தைத் தணித்து என்னைக் காப்பாயாக.*

## தணியாதெதிர்ந்தார்கலியலற

**தணியாது எதிர்ந்தார் கலி அல் அற** - *வறுமை குறையாது வந்து கண்டவர்களின் வறுமையிருள் நீங்க*

**தணியாது எதிர்ந்து ஆர்கலி அலற** - *அலைகளொடுங்காது மேலெழுந்து கடலானது ஒலி செய்ய.*

## தண்டணிகைக்கரன்

**தண்டு அணி கை கரன்** - *தண்டு என்னும் படையை ஏந்திய கையை உடைய கரன்.*

**தண் தணிகைக்கு அரன்** - *குளிர்ச்சியை உடைய தணிகைமலையிற் சிவபெருமான்.*

## தண்டமிழைப்பாடுறுவான்

**தண்டம் இழைப்பாள் துறுவான்** - *தண்டனையளிக்கும் பொருட்டுப் பொருந்துமாறு.*

**தண் தமிழைப் பாடுறுவான்** - *குளிர்ந்த தமிழ்ச் செய்யுளைப் பாடுகிறவன்.*

## தண்டரங்கம்மால்

**தண்டு அரங்கம் மால்** - *தண்டாயுதத்தை ஏந்தித் திருவரங்கத்தில் எழுந்தருளிய திருமால்.*

**தண் தரங்கம் மால்** - *குளிர்ந்த அலைகளையுடைய பாற்கடலில் எழுந்தருளிய திருமால்.*

**தண்டாதரித்த**

தண்டு ஆதரித்த - தடிப்படையை விரும்பிப் பிடித்த.

தண்டாது அரித்த - ஒழியாமற் கொடுத்த

**தண்டுலம்வாங்க**

தண்டுலம் வாங்க - அரிசி வாங்க.

தண்டு உலம் வாங்க - தூண் போன்ற திரண்ட கல்லை யொத்த தோள்களால் தழுவ.

**தண்டுறல்**

தண்டு உறல் - கதைப் படையைத் தாங்குதல்.

தண்டு உறல் - நாடரைத் தன்னடைப் பொருந்துதல்.

**தண்ணருளான்**

தண்ணார் உள் ஆன் - அருளாளர்கள் உள்ளத்தில் எழுந்தருளியவன்.

தண் அருளான - குளிர்ந்த அருளை உடையவன்.

**தந்தகந்தரத்தார்**

தந்து அகம் தரத்தார் - நூலினிடத்ததாகிய தகுதியை உடைய பெரியோர்கள்.

தந்த கந்தரத்தார் - தந்தத் திருக் கண்டத்தையுடையவர்.

**தந்தகலத்தார்**

தந்த கலத்தார் - கொடுத்த ஏனத்தை உடையவர்.

தந்து அகலத்தார் - நூலை மார்பிலே உடையவர்.

**தந்தநயன்**

தம் தநயன் - தம்முடைய மகன்.

தந்த நயன் - கொடுத்த நன்மையை உடையவன்.

**தந்தவராகம்**

தந்த வராகம் - தந்தத்தை யுடைய பன்றி.

தந்தவர் ஆகம் - கொடுத்தவருடைய உடல்.

**தந்தவரை**

தந்தவரை - தந்தத்தையுடைய யானை.

தந்தவரை - கொடுத்தவரை.

**தந்தமலைக்கு**

தந்த மலைக்கு - தந்தத்தை யுடைய யானைக்கு.

தந்து அமலைக்கு - நூலைப் போன்ற இடையுடைய இறைவிக்கு.

தம்தம் அலைக்கு - தங்கள் தங்கள் துன்பத்திற்கு

**தந்தவிடஞ்சேருவதால்**

தந்த இடம் சேருவதால் - பொருள் கொடுத்த இடத்தை யடைவதால்.

தந்த விடம் சேருவதால் - பல்லின் நஞ்சு பொருந்துவதால்.

**தந்தவையாதரமே**

தந்தவை ஆதரமே - கொடுத்தவைகள் அன்பே.

தந்த ஐயா தரமே - கொடுத்த தலைவனே இவை சிறந்தவைகளே.

**தந்தனம்**

தம் தனம் - தம்முடைய கொங்கைகள்; தம்முடைய பொருள்.

தந்தனம் - கொடுத்தோம்

**தந்தனம்பாடல்**

தந்தனம் பாடல் - தந்தனப் பாட்டுப் பாடுதல்.

தந்தனம் பாடல் - ஏமாற்றுதல்.

**தந்திமுகங்கொளலால்**

தந்தி முகம் கொளலால் - யானையின் முகத்தைக் கொண்டிருக்கிற படியினால்.

தந்து முகம் கொளலால் - தந்தைக் கம்பியை முன்னே உடைத்தே பெற்றிருத்தலால்.

**தந்துளவஞ்சக்கரத்தார்**

தம் துளவம் சக்கரத்தார் - தம்முடைய துளபத்தையும் சக்கரத்தையும் உடைய திருமாலானவர்

தந்து உள அஞ்சம் கரத்தார் - நூல்களில் சொல்லப்படுகிற அன்னக்கொடியைக் கையில் தாங்கிய நான்முகனாக உள்ளவர்.

**தந்தையார்**

தந்தையார் - தகப்பனார்.

தந்து ஐ ஆர் - நூல் அழகாகப் பொருந்தப் பெற்ற.

தந்தை யார்? - தகப்பன் யார்?

**தமருகக்கையான்**

தமருகம் கையான் - உடுக்கை பொருந்திய கையை உடையவன்.

தமர் உக கையான் - அடியார்கள் கெடும்படி வெறுத்தவன்.

**தமனியநாகத்தவர்**

தமனிய நாகத்தவர் - பொன்மலையாகிய மேருமலையை வில்லாக உடையவர்.

தமன் இயல் நாகத்தவர் - தெய்வத் தன்மை பொருந்திய தேவலோகத்தவர்.

**தம்மேற்பன்னந்தழைத்துளதால்**

தம் ஏற்ப அன்னம் தழைத்து உளதால் - தம்மையேற்றுக் கொள்ளுமாறு அன்னப் பறவைகள் மிகுந்திருக்கின்ற படியால்.

தம்மேல் பன்னம் தழைத்து உ(ள்)ளதால் - தங்கிளைகளில் இலைகள் தழைத்திருப்பதால்.

**தரங்கமலம்**

தரம் கமலம் - சங்கநிதி பதுமநிதி.

தரங்கம் அலம் - அலை பொருந்திய நீர்.

**தரணியனைய**

தரணி அனைய - சூரியனைப் போன்ற.

தரணி அல் நைய - உலகத்து இருள் நைந்தொழியும்படி.

**தரமலையுங்கந்தரத்தன்**

தர மலையும் கந்தரத்தன் - கொடுக்க அதனை அணியும் கழுத்தையுடையவன்.

தர மலையும் கந்தர் அத்தன் - (சேனையை) மலையப் போர் செய்யும் முருகக் கடவுளுடைய தந்தை.

**தரிசனங்கண்டார்**

தரிசனம் கண்டார் - காட்சியைப் பார்த்தவர்கள்; காட்சியைக் கண்டார்கள்

தரிசு அனம் கண்டார் - தரிசு நிலங்களிலே அன்னப்பறவைகளைப் பார்த்தார்கள்.

**தரித்திரம்**

தரித்திரம் - வறுமை.

தரித்து இரம் - தங்கியிருக்க மாட்டோம்.

**தருக்கம்பல**

தருக்கு அம்பல - செருக்குடைய அம்பலவாணனே.

தருக்கம் பல-பல தருக்கங்கள்.

**தருக்காவலா**

தரு காவலா - கற்பக தருக் காவலையுடைய இந்திரனே.

தருக்கு ஆவலா-செருக்குகின்ற அவாவோடு.

**தருமச்சுவர்க்கம்பொருந்திநிற்கும்**

தரும சுவர்க்கம் பொருந்தி நிற்கும்-அறமுடைய வானுலகிற் சேர்ந்திருக்கும்.

தரும் அச்சுவர்க்கம் பொருந்தி நிற்கும் - உயிர்த் தொகைகள் பொருந்தியிருத்தற்கு இடங் கொடுக்கும்.

**தருமருக்கொன்றை**

தருமருக்கு ஒன்றை-அறத்தின் வழி நிற்பவர்களுக்கு ஒப்பற்ற வீடுபேற்றை.

தரு மரு கொன்றை-மணத்தைக் கொடுக்கும் கொன்றை மாலை.

**தருமனையங்கிரியால்**

தருமனை அம்கிரியால் - நமனைத் தமது திருவடியினால்.

தரும்மன் ஐஅம் கிரியால் - பெறப்பட்ட கடவுளும் அழகிய மூகில் நிறத்தையுடைய பன்றியால்.

**தருமாலையும்பெற்றுறலாலும்**

தருமாலையும்பெற்றுஉறலாலும்-காம மயக்கத்தைக் கொடுக்கும் தன்மையைப் பெற்றிருப்பதாலும்.

தருமாலையும் பெற்று உறலாலும் - மணந்தருகின்ற மாலையை அணிந்திருப்பதாலும்.

தருமாலையும் பெற்று உறலாலும் - மரங்களின் வரிசைகளைப் பெற்றிருப்பதாலும்.

**தருவார்**

தருவார் - கொடுப்பவர்.

தருவு ஆர் - மரங்கள் பொருந்திய.

**தருவாயான்மாதிடத்தான்**

தருவாயான் மாது இடத்தான் - கொடுத்த வாயை உடையவன், உமாதேவியை இடப் பக்கத்தில் கொண்டவன்.

தரு வாயான் மா திடத்தான் - கல்லால் நிழலிலே அமர்ந்தவன், மிகுந்த ஞானப் பேராற்றல் உடையவன்.

**தருவானகத்தார்**

தரு வான் அகத்தார் - ஐந்தருக்களையுடைய விண்ணுலகத்தவர்கள்.

தரு வால் நகத்தார் - கொடுத்த வெள்ளிமலையை உடையவர்.

**தருவானவன்**

தரு வானவன் - கற்பக தருவை யுடைய இந்திரன்.

தருவான் அவன் - கொடுப்பான் அவன்.

**தருவானெல்லையளந்திடலால்**

தருவால் நெல்லை அளந்திடலால் - கொடுக்கின்றவாறுள்ள (வெண்மையான) நெல்லை அளப்பதால்.

தரு வான்எல்லை அளந்திடலால் - மரங்கள் வான்முகட்டளவு உயர்ந்திருப்பதால்.

**தலைசாய்க்கும்**

**தலைசாய்க்கும்** - *தலைசாய்த்து நிற்கும்.*

**தலை சாய்க்கும்** - *இடங்களைப் பெயர்த்துத் தள்ளும்.*

**தலைச்சங்கப்பொற்பக்கர்**

**தலை சங்கம் பொற்பு அக்கர்** - *இடமகன்ற நெற்றியில் அழகிய கண்ணை உடையவர்.*

**தலைச் சங்கம் பொன்பக்கர்** - *தலைச் சங்கப் புலவரிடத்தும் கதிரவனிடத்திலும் விருப்பத்தையுடையவர்.*

**தலைச்சங்கம் பொற்பு அக்கர்** - *பெருமை பொருந்திய சங்கத்திரற் செய்த அழகிய அக்கு மணியினை உடையவர்.*

**தலைமேல் உதித்துவரலால்**

**தலைமேல் உதித்து வரலால்** - *நிலத்தினிடத்திலே தோன்றி வருதலால்.*

**தலைமேல் உதித்து வரலால்** - *தலைக்கு மேலாகத் தோன்றிச் செல்லுதலால்.*

**தலையரியக்கவலார்**

**தலை அரியக் கவலார்** - *தலையை அரிதற்கு வருந்ாதவராகிய.*

**தலையர் இயக்க வலார்**-*தலைமையாக இருந்து நடத்தவல்லவர்கள்.*

**தலையலங்காரமதி**

**தலை அலங்கு ஆர் அம்மதி**-*தலையில் அசைகின்ற திருவாத்தி மாலையும் கங்கையும் பிறையும்.*

**தலையல் அம்கார் அமதி**-*முதற் பெயலைப் பெய்துவிட்ட நீருண்ட முகில் அழகிய மதியை.*

**தலையிலம்**

**தலை இலம்** - *தலைமை பெற்ற இல்லம்.*

**தலை இலம்**-*தலையை உடையேம் அல்லேம்.*

**தலையில் அம்** - *தலையில் அழகு.*

**தலைவிதிவசம்**

**தலைவி திவசம்** - *தலைவிக்கு இறந்தநாட் கடன்.*

**தலை விதி வசம்** - *ஊழ்வினை.*

**தவத்தருக்காவணம்**

**தவத்தருக்கு ஆவணம்** - *தவமுடையாருக்கு உரிமை.*

**தவம் தருக்காவணம்** - *தவத்தினால் தருக்காதபடி.*

**தவத்தானவமணி**

**தவத்தான் அவம் மண்ணி**-*தவத்தினால் தீமையானவைகளைப் போக்கி.*

**தவத்தான் நவம் மணி** - *முல்லை நிலத்தவனாகிய புதுமையை உடைய கரிய.*

**தவவரைகண்டிகழ்**

**தவ வரை கண் திகழ்** - *உயர்ந்த மூங்கிலினது கணுக்களில் தோற்றிய.*

**தவவரை கண்டு இகழ்** - *தவத்தின் எல்லையைக் கண்டு உலக வாழ்வை இகழ்கிற.*

**தவழ்கூர்மந்தானிலம்புகலால்**

**தவழ் கூர்மம் தான் நிலம்புகலால்** - *தவழ்ந்து செல்லும் ஆமை நிலத்திற் புகுதலால்.*

**தவழ்கூர் மந்தானிலம் புகலால்**- *மெல்ல வருகின்ற தென்றற் காற்று நுழைந்து வருவதால்.*

**தழைக்குங்கிளையேந்துதலாலும்**

**தழைக்கும் கி(ள்)ளை ஏந்துதலாலும்** - *வளர்கின்ற கிளியை ஏந்துகின்றபடியாலும்.*

**தழைக்கும் கிளை ஏந்துதலாலும்** - *மிகுதிப்படுகிற உறவினரைக் காத்தலாலும்.*

**தழைக்கும் கிளை ஏந்துதலாலும்** - *மிகுதியான கிளைகளைக் கொண்டிருப்பதாலும்.*

**தழைக்குங்கோட்டைமுகங்காட்டும்**

**தழைக்கும் கோட்டைமுகம் காட்டும்** - *வளர்கின்ற கொம்பைத் தன்னிடம் புலப்படுத்தும்.*

**தழைக்கும் கோட்டை முகம் காட்டும்** - *செழிப்பு மிக்க அரண்களை முன்பாகக் காட்டிக்கொண்டிருக்கும்.*

**தழைக்குமரனோர்புறமேவி**

**தழைக்கும் அரன் ஓர்புறம் மேவி** - *சிறந்து விளங்கும் சிவபெருமான் ஒருபுறத்தில் மேவப்பெற்று.*

**தழைக்கும் மரன் ஓர்புறம் மேவி**-*தழைக்கின்ற மரங்கள் ஒருபக்கத்தில் அமையப் பெற்று.*

**தழைக்கும்பேரிக்குவளைவிஞ்ச**

**தழைக்கும் பேரிக்கு வளை விஞ்ச** - *மிக்க முரசத்தின் ஒலிக்குச் சங்கொலிகள் ஓங்க.*

**தழைக்கும்ப ஏரி குவளை விஞ்ச**- *செழுமையாய்ச் சுற்றி வளைந்த குளத்திலுள்ள செங்கழுநீர் பூப்ப.*

**தழைத்துவளத்தை யேந்தளகை-தாவென்று**

**தழைத்து வளத்தை ஏந்து அளகை தாவென்று** - *மேன்மைபெற்று வளமுடைய அளகைக்குப் பகையில்லாமல் வென்று.*

**தழைத்து வளத்தை ஏந்து அளகைதா என்று**-*பெருக்கமுற்று மரக்காலை எடு அளந்துகொடு என்று சொல்லி.*

**தழையணிகானத்தவர்**

[illegible] **கானத்தவர்** - *செழித்த அழகிய இசை வல்லார்.*

**தழையணி கானத்தவர்** - *தழைகளால் அலங்கரிக்கப்பட்ட குறிஞ்சி நிலத்தவர்.*

**தளராதண்டமடங்கலையும்**

**தளராது அண்டம் அடங்கலையும்** - *தளர்ச்சியடையாமல் உலகம் எல்லாவற்றையும்.*

**தளராது அண்டு அம் மடங்கலையும்** - *மிகுதியாக நெருங்குகின்ற அழகிய சிங்கங்களையும்.*

**தறித்தலைமுன்கொண்டிடலால்**

**தறித்தலை முன்கொண்டிடலால்** - *வெட்டித் தறிக்கப் பெறுதலை முன்னே கொள்ளுதலால்.*

[illegible] **முன்** [illegible] **லால்** - *தறியின் இடத்தை முன்பு பெற்றிருத்தலால்.*

**தனக்கலைமாதவன்**

**தனக்கலை மாதவன்** - *பொன்னுடையை அணிந்த திருமால்.*

தன்னக்கு அலேமாது அவன் - *தன்பால் விளங்குகின்ற கங்காதேவியை உடைய சிவ பெருமான்.*

தனம்கலே மாதவன் - *தனங்களே யுடைய கலேமகளைப் பொருந்திய நான்முகன்.*

## தனதடம்பத்தி

தன தடம்பத்தி - *தன்னுடைய பெரிதாகிய பத்தியை.*

தனதடம் பத்தி - *தனமாகிய கொங்கை மலையைப் பிடித்து. (பத்தி - பற்றி)*

## தனத்தாரிவ்வேதஞ்செயுந்துணிவு

தனத்தார் இவ்வேதம் செயும் துணிவு-*தனமுடையவர் இவ்வாறு மறையோதுலேச் செய்யும் முடிவு.*

தனத்தார் இவ் ஏதம் செயும் துணிவு - *கொங்கைகள் இத்துன்பத்தைச் செய்யும் முடிவு.*

## தனபாரத்துகிரும்

தனபாரத்து உகிரும் - *தனங்களின் மேலே நகக்குறியும்.*

தன் அபார துகிரும் - *தன்னிடமுள்ள மிகுதியான பவளங்களும்.*

## தனமாதர்

தனம் மாதர் - *கொங்கைகளே யுடைய பெண்கள்.*

தனம் மாதா-*பொருளும் மங்கையரும்.*

## தனமேகசக்குமென்று

தனமே கசக்கும் என்று - *தனங்களேயே பிடிப்பீராக என்று.*

தனமே கசக்கும் என்று - *பொருளே துன்பத்தை யளிக்குமென்று.*

## தனம்படைத்தீர்

தனம் படைத்தீர் - *பொருளேப் படைத்தீர்.*

தனம் படைத்தீர் - *கொங்கைகளே யுடையவராக இருக்கிறீர்.*

## தனிப்பாணியினுல்

தனி பாணியினுல் - *தனித் தனியான நீரினுல்.*

தனி பாணியினுல் - *தனியாக இருக்கும் தன்மையினுல்.*

## தனியனகன்பணி

தனியன் அகன்பணி - *செல்வத்தையுடையவன்; இருப்பிடமாகக் கொண்ட பாம்பு.*

தனி அல் நகன் பணி - *ஒப்பற்ற மதில் சூழ்ந்த மலேயை உடையவன் பணிகின்ற.*

## தனுக்கோடி

தனுகோடி - *உடல் வளைந்து.*

தனுக்கோடி-*தனுக்கோடி என்னும் ஊர்.*

## தனுக்கோடிவளேகடல் கண்டு

தனுக்கோடி வளேகடல் கண்டு- *தனுக்கோடி தீர்த்தமென்னும் பெயருடைய வளேந்த கடலைப் பார்த்து.*

தனுக்கோடி வளேகடல் கண்டு— *வில்லின் கடைபோன்ற புருவத்தால் வளேக்கப்பட்ட கண்ணேப் பார்த்து.*

## தாங்கியாண்டுமறைதிகழ்ந்து

தாங்கி ஆண்டு மறை திகழ்ந்து- *தாங்கிக் காத்துத் தோன்றுது காட்சியளித்து.*

தாங்கி யாண்டும் அறை திகழ்ந்து - கொண்டு எல்லா விடங்களினும் வெடிப்புகள் உண்டாகி.

**தாணுவிலேதோய்ந்திடலால்**

தாணுவிலே தோய்ந்திடலால் - தாணிலே தோன்றுதலினல்.
தாணு வில் ஏ தோய்ந்திடலால்- மேருமலையாகிய வில்லையே கொள்ளுதலால்
தாணுவிலே தோய்ந்திடலால் - கைலைமலையிலே பொருந்தி யிருத்தலால்.

**தாண்டவத்தார்**

தாண்டு அவத்தார் - தாண்டிக் குதிக்கின்ற வினைர்கள்.
தாண்டவத்தார் - திருக்கூடத்தை உடையவர்.

**தாண்டவத்தையாற்றுவான்**

தாண்டவத்தை ஆற்றுவான் - திருக்கூத்தைச் செய்கிறவன்.
தாண்டு அவத்தை ஆற்றுவான்- அவத்தைகளை யெல்லாம் தாண்டுமாறு செய்வான், வினை வேலைகளில் இருந்து விலகச் செய்வான்.

**தாமங்கழித்தளிப்பார்**

தாமம் கழித்து அளிப்பார் - மாலையை நீக்கி அருள் செய்வார்.
தாம் அங்கு அழித்து அளிப்பார்- தாம் ஊழிக்காலத்திலே மறைத்தருள் செய்வார்.
தாமம் கழித்து அள் இ பார் - மாலையைக் கழித்து நெருங்கிய இப் பூமியை.

**தாமதியார்**

தாமதியார்- காலந்தாழ்த்தமாட்டார்.
தாம் மதியார் - தாம் ஒரு பொருட்படுத்தலைச் செய்ய மாட்டார்.

**தாமத்தனை**

தாமம் தனை - கயிற்றினலாகிய கட்டு
தாமத்தனை - திருமகளை.

**தாமரைமாத்திரை**

தாமரை மாத்திரை - பதுமம் என்னுந் தொகையளவு.
தாமரை மாதிரை - மாலையை அணிந்தவரை; பெரிய திரைச் சீலை.

**தாமரைமேற்கொண்டுகுவளை - யிருத்தல்கண்டேன்**

தாமரைமேல் கொண்டு குவளை யிருத்தல் கண்டேன்-தாமரை மலரின்மேற் குவளை மலர் இருத்தலைப் பார்த்தேன்.
தாமரைமேற்கொண்டு குவளை யிருத்தல் கண்டேன்-தாமரை மலரைப் போன்ற கையை மேலாகக் கொண்டு குவளை மலரைப் போன்ற கண்கள் இருத்தலைப் பார்த்தேன்.

**தாமரையான்**

தாமரையான் - நான்முகன்.
தா மரை ஆன் - தாவுகின்ற மரையென்னும் விலங்கும் பசுவும்.
தாமரை யான் - மலையை உடையவரை நான்.

**தாமனே**

தாமனே - *மாலையை அணிந்தவனே.*

தாம் அனே - *தாங்கள் தாயைப் போன்றவர்கள்*

தா மனே - *விடு முதலியவை களைக் கொடுப்பாயாக.*

**தாமாசுகங்காட்டிடலாலும்**

தாம் ஆசுகம் காட்டிடலாலும்- *தாம் பூவாளியைத் தெரியுமாறு கொண்டிருந்தலாலும்.*

தாம் மாசுகம் காட்டிடலாலும்- *தாமே பெரிய இன்பத்தைக் கொடுத்தலாலும்.*

தா மாசுகம் காடு இடலாலும்- *வன்மையுள்ள பெரிய இன்ப மிகுதியைச் செய்தலாலும்.*

**தாமோதரனுர்**

தாம உதரனுர் - *வயிற்றிற் கயிறு பொருந்திய கண்ணன்.*

தாம் ஓது அரனுர் - *தாங்கள் புகழ்ந்து பாராட்டுகின்ற சிவனர்.*

**தாயவலஞ்சுழியான்**

தாய அல் அஞ்சு உழியான் - *தாவுகிற ஆணவ இருள் அஞ்சும்படியான இடத்தை உடையவன்.*

தாய வலஞ்சுழியான் - *உரிமை மிக்க வலஞ்சுழி என்னும் ஊரையுடையவன்.*

**தாரகத்த னேரகத்தன்**

தார கத்தன் நேர் அகத்தன் - *மாலையை அணிந்த தலைவன், நேர்மையான உள்ளத்தில் எழுந்தருளியிருப்பவன்.*

தாரகத்தன் ஏரகத்தன்-*பிரணவ வடிவன், திருவேரகத்தில் எழுந்தருளியவன்.*

**தாரகத்தானத்தன்**

தாரக தானத்தன் - *தாரகத்தினிடத்திலே வீற்றிருப்பவன் .*

தாரகத்தான் அத்தன் - *தாரகத்தனுக்குத் தலைவனாக இருப்பவன்.*

**தாரகன்**

தாரகன் - *தாரகன் என்னும் அவுணன்.*

தார் அகன் - *மாலையை அணிந்தவன்.*

**தாரணி**

தார் அணி - *மாலையை அணிந்துள்ள.*

தார் அணி - *படை வகுப்பு.*

**தாரணிமகிழ்ட்டு**

தாரணி மகிழ் இட்டு-*உலகத்திலுள்ளோர் களிப்புற உணவு தந்து*

தார் அணி மகிழ் இட்டு-*அழகிய மகிழம் பூமாலையை அணிந்து.*

**தாரமாவென்ருர்**

தாரம் ஆ என்ருர் - *தேவியைப் பசுவாகுக என்ருர்.*

தார்அ மா வென்ருர் - *மாலையணிந்து வந்த அழகிய யானையை வென்றவர்.*

**தாரம்பாகத்தான்**

தார் அம்பு ஆக தான்-*மாலையாகவும் அம்பாகவும் தான்.*

தாரம் பாகத்தான்-*மனைவியைப் பாகத்தில் உடையவன்.*

**தாரவாரத்தார்**

தாரம் வாரத்தார் - *மனைவியை பக்கத்தில் உடையவர்.*

தார் அ ஆரத்தார் - *மாலையை அந்த ஆத்தியாகவுடையவர்.*

**தாராதரம்**

**தார் ஆதரம்** - *மாலையை அன்பு கூர்ந்து.*
**தாரா தரம்** - *மனைவியை உடையவபிர மேன்மையாக.*
**தாரா தரம்**-*குருகுகளும் நாரைகளும்.*

**தாரார்**

**தாரார்** - *மாலையை அணிந்தவர்*
**தாரார்** - *கொடாதவர்.*

**தாரான்தரப்பணியான்**

**தாரான் தரம்பணியான்** - *மாலையை அணிந்தவன் மேலான பாம்புகளை அணிகலன்களாகக் கொண்டவன். (தரம் - மேன்மை)*
**தாரான், தரம் பணியான்** - *கொடுக்காதவன், தலைகளைப் பணியாக அணிந்தவன் (தரம்-தலை)*

**தாரையைக்காட்டிடும்**

**தாரையைக் காட்டிடும்** - *வழியைக் காட்டுங்கள்.*
**தாரையைக் காட்டிடும்** - *கண் மணியைக் காட்டுங்கள்.*

**தாலமதில்**

**தாலமதில்** - *பனைமரத்தில்.*
**தாலமதில்** - *உலகத்தில்.*

**தாலம் படைத்து**

**தாலம் படைத்து** - *உலகத்தைப் படைத்து.*
**தாலம் படைத்து** - *பனைமரத்தைத் தன்னிடத்திலே கொண்டு.*

**தாவளம்**

**தாவளம்** - *நல்ல இடம்.*
**தா வளம்** - *துன்பம் வளப்பம்.*
**தாவளம்** - *தருவாயாக செல்வத்தை.*

**தாவானவரதப்பா**

**தாவா நவரதப் பா** - *கெடாத நவரசங்களமைந்த பாடல்.*
**தா வானவரது அப்பா**-*கெடாத வலிபொருந்திய தேவர்களுடைய தந்தை.*
**தாவு ஆன வர தப்பா** - *திமைகளானவை வருதற்குத் தவற மாட்டா.*

**தாவிவரப்பண்ணினான்**

**தாவிவரப்பண்ணினன்** *தாண்டி வருமாறு செய்தான்.*
**தா இவரப் பண்ணினன்** - *கேடு சூழுமாறு செய்தான்.*
**தாவி வரப்பு அண்ணினன்** - *தாண்டு தலைச் செய்துவரப்பைச் சேர்ந்தான்.*

**தாளத்தனத்தத்தை**

**தாளம் தனம் தத்தை** - *தாளம் போன்ற கொங்கை; கிளி.*
**தாளத்தன் அத்தத்து ஐ** - *திருவடிகளையுடையவன் கையிலே ஐந்து. (அழகிய)*

**தானக்கமண்டலமேசார்ந்திடலால்**

**தான் நக்க மண்டலமே சார்ந்திடலால்** - *தான் ஒளிவட்டத்தையே அடைந்திருப்பதால்.*
**தானக் கமண்டலமே சார்ந்திடலால்** - *தான பாத்திரமாகிய கமண்டலத்தில் நிறைக்கப் படுவதால்.*

**தானங்கடுத்தாய்**

**தானம் கடுத்தாய்** - *இடத்தை வெறுத்தாய்.*
**தான் அங்கு அடுத்தாய்**-*நீ அவனிடஞ் சேர்ந்தாய்.*

**தானங்குலவுதலால்**

**தானம் குலவுதலால்** - *மதநீர் உள்ள தன்மையினால்.*

**தான் அங்கு உலவுதலால்** - *தான் அவ்விடத்திலே திரிவதால்.*

**தானவகையிலுயர்ந்து**

**தான வகையில் உயர்ந்து**-*இடத்திற் றன்மையாற் சிறப்புற்று.*

**தான வகையில் உயர்ந்து** - *கொடை வகையால் மேன்மை பெற்று.*

**தானவரைமுன்பரித்தார்**

**தானவரை முன்பு அரித்தார்** - *அசுரர்களை முன் காலத்தில் கொன்று தொலைத்தவர்.*

**தான வரைமுன் பரித்தார்** - *மதமலையாகிய யானையை முன்பு காத்தவர்.*

**தான் அவரை முன் பரித்தார்** - *தாம் அவர்களை முன்பு தாங்கினர்.*

**திகழ்வடையப்பழம்பணியாரங்கள்**

**திகழ்வடைய பழம்பணி ஆரங்கள்** - *விளக்கமாகுமாறு பழைய அணிகலன்கள் முத்துமாலைகள்.*

**திகழ் வடைஅ பழம் பணியாரங்கள்** - *விளங்குகின்ற வடை அழகிய பழம் பணியாரம் என்னுஞ் சிற்றுண்டிகள்.*

**திகிரிவலம்புரி**

**திகிரி வலம் புரி** - *உருளைப் படையை வலக்கையில் தாங்கிய.*

**திகிரி வலம்புரி** - *மூங்கிலானது நந்தியாவட்டத்தை.*

**திகைப்படங்க**

**திகைப் பன் தங்க** - *மயங்குவள் உயிரோடு தங்க.*

**திகைப்பு அடங்க** - *திகைத்தலானது தணிய.*

**திக்கந்தரம்பரவும்**

**திக்கு அந்தரம் பரவும்** - *திக்கிலும் பிறவிடங்களிலும் பரவப்பெறும்.*

**திக்கம் தரம் பரவும்** - *இளயானைகள் சிறப்போடு பரவப் பெறும். (திக்கம்-இளயானை)*

**திக்கயமஞ்சும்**

**திக் கயம் அஞ்சும்** - *திக்கு யானைகள் வெருவும்.*

**திக்கு அயம் மஞ்சும்** - *இகழத்தக்க இரும்பாற் செய்த பணிகள்.*

**திக்காரங்கண்டிவரும்**

**திக்காரம் கண்டு இவரும்** - *இழித்துத் தாழ்த்துதல் செய்து விளங்குகிற.*

**திக்கார் அங்கு அண்டிவரும்** - *திக்கில் உள்ளவர்களெல்லாரும் அங்கு நெருங்கி வரும்.*

**திடம்படுகத்தும்**

**திடம் படு உகத்தும்** - *உறுதி நிலை அழிகின்ற யுகமுடிவிலும்.*

**திடம்படு கத்தும்** - *வலிய தலைகளிலும்.*

**திட்டாந்தரந்தெரியும்**

**திட்டு ஆம் தரம் தெரியும்** - *மேடாகவுள்ள தலைகள் காணப்பெறும்.*

திட்டாந்தரம் தெரியும் - மேற்கோள் நூல்களை அறியும்.

**திட்டுறும்**

திட்டுறும் - திடலைப் பொருந்தும்.

திட்டு உறும்-வைதலைப்பெறும்.

**திண்ணகக்கையாலாற்றும்**

திண் அக கையால் ஆற்றும் - திண்ணிய மனத்துடனும் ஒழுக்கத்துடனும் செய்யும்.

திண்ணகம் கையால் ஆற்றும்- திண்ணகம் என்னும் கருவி பிடித்த கையோடு செய்யும்.

**திண்ணகத்தினுடலமர்**

திண் நகத்தின் ஆடல் அமர் - திண்ணிய மலையின் ஆற்றல் அமைந்த.

திண் அகத்தில் ஆடல் அமர் - திண்ணிய உள்ளத்தில் விளையாடலை விரும்பும்.

**திண்ணத்தறனிறைக்கும்**

திண்நத்து அறல் நிறைக்கும் - திண்ணிய சங்குகளையும் கருமணலையும் (கரையில்) நிறைக்கும்.

திண்ணத்து அறன் இறைக்கும்- உறுதியோடு தருமத்தை வழங்கும்.

**திண்ணைக்குறடேர்**

திண்ணை குறடு ஏர் - திண்ணையும் வாயிற்படியும் அழகு.

திண் ஐ குறள் தேர் - திண்ணிய அழகிய திருக்குறளை ஆராயும்.

**தித்தித்துவைப்பார்க்கும்**

தித்தித்து வைப்பு ஆர்க்கும் - இனித்து இடங்கள்தோறும் நிறைந்திருக்கும்.

—— துவைப்பு ஆர்க்கும் - தித்தித்தென்கிற ஒலியோடு நிறைந்திருக்கும்.

**திரண்ட முளரிவாய்விடுப்ப**

திரண்ட முளரி வாய் விடுப்ப - கூட்டமான தாமரைகள் மலர.

திரண்ட முளரிவாய் விடுப்ப - திரண்ட நெருப்புச் சுடர்விட்டெரிய.

**திரவியக்கந்த**

திரவியம் கந்த - செல்வத்தைப் போன்ற முருகனே.

திர இயக்கு அந்த - உறுதியுடையவனே! உயிர்களை இயக்குகின்ற அழகனே.

**திரளக்கரக்கர்**

திர ளக்க ரக்கர் - உறுதியையுடைய லட்சக்கணக்கான அரக்கர்.

திரள் அக்கர் அக்கர் - பல கண்ணையுடைய இந்திரன், உருத்திராக்கமுடைய சிவன்.

**திரிபுடை**

திரிபுடை - ஏழு தாளங்களில் ஒன்று.

திரிபுடை - மூன்று பகுப்பாக்கிப் பின்னப்பட்ட கூந்தல்.

திரிபு உடை - மாறுபாட்டை உடைய.

**திரிமூர்த்தி**

திரிமூர்த்தி - மூன்று கடவுளர்கள்.

திரிமூர்த்தி - வீணாகத் திரிகின்ற சோம்பேறி.

**திருக்கச்சூர்**

திருக்கச்சு ஊர் - அழகிய கச்சானது பொருந்துகின்ற இடம்.

திருக்கச்சூர் - *திருக்கச்சூர் என்னுஞ் சிவப்பதி.*
திருக்கு அச்சு ஊர் - *கன்று னது அழகாகப் பார்க்கின்ற.*

**திருக்கண்ட**

திருகண்ட - *செல்வத்தை அல்லது அழகைப் பார்த்த.*
திருக்கு அண்ட - *குற்றம் நெருங்க.*

**திருக்கண்புதைத்தமெய்யன்**

திருக்கண் புதைத்த மெய்யன் - *(தேவியாரால்) திருக்கண் மூடப்பெற்ற மெய்ப்பொருளானவர்.*
திருக்கு அண்பு தைத்த மெய்யன் - *கண்கள் நெருங்கித் தைக்கப்பெற்ற உடலையுடையவர்.*

**திருக்கமலத்தான்**

திரு கமலத்தான் - *நாபிக்கமலத்தை உடையவன்.*
திருக்கு அமலத்தான் - *திருக்கண்கள் தூய்மையாக அமையப் பெற்றவன்.*

**திருக்காஞ்சியுள்ளீர்**

திருக்காஞ்சி உள்ளீர் - *அழகிய காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கின்றவரே.*
திருக்காஞ்சி உள்ளீர் - *அழகிய காஞ்சி எனனும் அணிகலனை எண்ணமாட்டீர்.*

**திருக்காவிரிக்கும்**

திரு கா விரிக்கும் - *அழகிய சோலைகளை வளரச் செய்யும்.*
திரு காவிரிக்கும் - *சிறப்புப் பொருந்திய காவிரியாற்றிற்கும்.*

**திருக்குற்றாலமாந்தலம்**

திருக்குற்றாலம் ஆம் தலம் - *திருக்குற்றாலம் என்னும் பெயரையுடைய சிவப்பதி.*
திருக்கு உற்று ஆலம் ஆம் தலம் - *திருக்கு (கண்) என்னும் பெயரைப் பொருந்தி நஞ்சுபோல்வதாகிய இடம்.*

**திருக்கோயில்**

திரு கோயில் - *(இறைவனிருப்பிடமாகிய) அழகிய கோயில்.*
திருக்கு ஓயில் - *(உள்ளத்திலுள்ள) மாறுபாடு கெட்டால்.*

**திருக்கோவையம்பாவரை**

திருக்கோ ஐயம் பாவரை - *மாறுபாட்டுணர்ச்சியோ ஐயமானது தீயவர்களை.*
திருக்கோவை அம் பா வரை - *திருக்கோவையினுடைய அழகிய பாடல்களை எழுதிய.*

**திருத்தகையா**

திரு தகு ஐயா - *அழகிய தகுதி பொருந்திய ஐயனே!*
திருத்த கையா - *நேர்மையான ஒழுக்கத்தையுடையவனே!*

**திருத்தமாகமதிலுளதால்**

திருத்த மாக மதில் உளதால் - *குறைபாடில்லாமல் சுவர் கொண்டிருப்பதால்.*
திருத்தமாகம் அதில் உளதால் - *அழகிய விண்ணுலகில் இருப்பதால்.*

**திருத்தவளப்பங்கயம்பொலிய**

திரு தவளப் பங்கயம் பொலிய - *அழகிய வெண்தாமரை மலர் விளங்க.*

திருத்த வளப்ப கயம் பொலிய - *சிறந்த செழிப்புள்ள குளம் விளங்க.*

**திருத்தாதடிமை**

திருத்தா தடி மை - *தீர்த்தத்தை யுடையாய்; மின்னலையுடைய முகில்கள்.*

திருத்தாது அடிமை - *சீர்ப்படுத் தாமல் அடியேன்.*

**திருத்துவரையான்**

திரு துவரையான் - *அழகிய துவாரகாபுரியை உடைய வன்.*

திருத்து வரையான் - *புல்லாங் குழலாகத் திருத்தப்பட்ட மூங்கிலை உடையவன்.*

**திருத்துளவார்**

திருத்துளவார்-*துளசி மாலையை அணிந்த திருமால்.*

திருத்து உள ஆர் - *திருத்துதற் குரியவர் யார்?*

**திருந்தார்கட்டரியார்**

திருந்து ஆர் கட்டரியார் - *திருத்தமாகிய கட்டாரி என் னும் படையை உடையவர்.*

திருந்தார்கண் தரியார் - *மனந் திருந்தாதவர்க ளிடத்திலே பொருந்தியிருக்காதவர்.*

**திருப்பங்கையத்தன்**

திரு பங்கயத்தன் - *அழகிய தாமரை மலரில் எழுந்தருளி யவன்.*

திருப்பு அம்கை அத்தன் - *திருப்புகிற அழகிய கையை உடைய தலைவன்.*

**திருப்பரங்குன்றம்**

திருப்பரங்குன்றம் - *திருப்பரங் குன்றம் என்னும் ஊர்.*

திரு பரம் குன்றம் - *செல்வத் தின் மிகுதி சிறுமலையைப் போன்றது.*

**திருப்பாடலாரத்தர்**

திருப்பாடல் ஆரத்தர் - *தேவா ரத் திருப்பாடல் முதலியவை களை மாலையாக உடையவர்.*

திருப்பு ஆடல் ஆர் அத்தர் - *திருப்புகின்ற ஆடல் பொருந் திய தலைவர்.*

**திருப்பாடல்**

திருப்பு ஆடல் - *மாறியாடுதல்.*

திருப் பாடல் - *அழகிய பாடல்.*

**திருப்பாப்பரசிஞர்**

திரு பாப்பு அரசிஞர் - *அழகிய பாம்புமாலையை அணிந்தவர்.*

திருப்பா பரசிஞர் - *திருப்பாத மழுப்படையை உடையவர்.*

**திருப்பாற்கடலார்**

திருப்பாற்கடலார் - *திருப்பாற் கடலில் எழுந்தருளிய திருமால்.*

திருப்பாற்கு அடலார் - *உள்ளத் தைத் தன்பால் திருப்பாதவ னுக்குத் தீமையைச் செய்ப வர்.*

**திருப்பேரையான்**

திரு பேர் ஐ ஆன் - *மேன்மை யான பேரழகை உடையவன்.*

திருப்பேரையான் - *திருப்பேரை யென்னும் திருப்பதிக்குரிய வன்.*

**திருமாலையுந்தாங்கி**

திருமாலையும் தாங்கி - *நாரா யணனையுஞ் சுமந்து.*

திருமாலையும் தாங்கி - *அழகிய மாலையையும் அணிந்து.*

**திருமால்**

திருமால் - *நாரணன்.*
திரு மால் - *அழகிய மேகம்.*

**திருவம்பல**

திருவம்பல-*செல்வங்களாயுள்ள பலவும்.*
திரு அம்பல - *திருவம்பலத்துள்.*

**திருவரங்கா**

திரு அரங்கா - *திருமகள்தான் வசித்தற்குரிய இடமாக.*
திரு அரங்கா - *திருவரங்கத்தில் எழுந்தருளியவனே.*

**திருவாசகம்**

திரு வாச அகம் - *திருமகள் வாழ்கின்ற மார்பு*
திருவாசகம் - *திருவாசகம் என்னும் நூல்.*

**திருவாவிநன்குடி**

திருவாவி நன்குடி - *பழநி.*
திரு வாவி நன்குடி - *திருமகள் தாவிவந்து நன்கு குடிகொள்ளும்.*

**திருவாரூர் கமலத்தடம்**

திருவாரூர் கமலத்தடம் - *திருவாரூரில் உள்ள கமலாலயம் என்னும் குளம்.*
திரு ஆர்ஊர் கமலத்தடம் - *அழகு நன்கு பொருந்திய தாமரையரும்புகள்(கொங்கைகள்) உள்ள இடம்.*

**திருவாலங்காட்டினுய்**

திருவாலங்காட்டினுய் - *திருவாலங்காடு என்னும் பதியில் எழுந்தருளிய இறைவனே.*
திரு ஆலம் காட்டினுய் - *(நீ நின்னுடைய கண்டத்திலே) அழகிய நஞ்சைக் காண்பித்தாய்.*

**திருவாவடுதுறையிற்சேர்க**

திருவாவடுதுறையில் சேர்க - *திருவாவடுதுறை என்னும் ஊரை அடைக.*
திரு ஆ அடுதுறையில் சேர் - *விடுபேற்றுச் செல்வத்தைப் பெறப் பாசத்தைக் கெடுக்கும் நல்வழியிற் சேர்க.*

**திருவாவிநன்குடி**

திருஆவி நன்குடி - *திருமாலுஞ் சிவபிரானும்.*
திருஆவி நன்குடி - *பழநிமலை அடிவாரத்துள்ள முருகர்பதி.*

**திருவிடந்தைக்கும்மயிலே**

திருவிடந்தைக்கும் மயிலே-*திருவிடந்தைக்கும் மைலாப்பூருக்கும்.*
திருவிடம்தைக்கும் மயிலே-*அழகிய நஞ்சுத் தன்மை பொருந்திய மீன் போன்ற கண்.*

**திருவும் பிறையும் முன்தோன்ற**

திருவும் பிறையும் முன்தோன்ற- *திருமகளும் பிறைத்திங்களும் முன் காலத்தில் தோன்ற.*
திருவும் பிறையும் முன்தோன்ற- *அழகும் நெற்றியும் முன்னே தோன்றவும்.*

**திரைக்குள்ளே**

திரைக்கு உள்ளே - *திரைச்சீலையின் உள்ளிடத்தில்.*
திரைக்கு உள்ளே - *அலைகளுக்குள்ளே.*

**திவளுமணியாழ்கைசிறப்ப**

திவளும் அணி யாழ்கை சிறப்ப- *அசைகின்ற அழகிய யாழானது கையிடத்து விளங்க.*

திவளும் மணி ஆழ்கை சிறப்ப- *அசைந்து வருகின்ற அலைகளால் மணிகள் ஆழ்ந்து சிறந்து விளங்க.*

**திறம்பாடுவர்**

திறம்பாடுவர் - *வெற்றியைப் பாடுவர்.*

திறம் பாள் துவர் - *நீங்காதவளது பவழம் போன்ற.*

**தினமயல்**

தினம் அயல் - *நாள்தோறும் பக்கத்தில்.*

தின மயல் - *மையலானது தின்னுமாறு.*

**தினமுமணமேபெறுதலினுல்**

தினமும் மணமே பெறுதலினுல்- *நாள்தோறும் மணமே கமழ்ந்துகொண்டிருப்பதால்.*

தினமும் மணமே பெறுதலினுல்- *நாள்தோறும் மணம் முதலியன நடைபெறுதலால்.*

**தீக்கட்பாலன்**

தீக்கண் பாலன் - *கொடிய கண்ணுடைய பையன்.*

தீக்கண் பாலன்-*நெருப்புக்கண் அமைந்த நெற்றியை உடையவன்.*

**தீக்கைக்கனல் வழங்கும்**

தீக்கை கனல் வழங்கும் - *தீத்தலையுடைய அனலைச் சொரியும்.*

தீக்கைக்கு அனல் வழங்கும் - *மாணவர்களின் தீட்சையின் பொருட்டு வேள்வித்தியை வழங்கும்.*

**தீக்கையினிதமரும்**

தீக்கை இனிது அமரும் - *தீக்கையை இனிதாக விரும்பும்.*

தீக்கையில் நிதம் மருவும் - *வேள்வித் தியானது ஒழுக்கத்திற்கு நாள்தோறும் பொருந்தும்.*

**தீங்கவியார்**

தீம் கவியார் - *இனிய பாடல் களை உடையவர்.*

தீங்கு அவியார் - *தீமையைப் போக்கமாட்டார்.*

**தீங்களவாசஞ்செறியும்**

தீம் களவாசம் செறியும்-*இனிய களாப் பூக்களின் மணம் நெருங்கியிருக்கும்.*

தீ களவு ஆசு அஞ்சு எறியும் - *கொடிய வஞ்சனையுங் குற்றமும் ஐம்புலன்களும் ஆகியவைகளை ஒழிக்கும்.*

**தீங்குழலாவாய்த்தேறும்**

தீம் குழலாக வாய்த்து ஏறும் - *இனிய புல்லாங்குழல்போலப் பொருந்தி உயரும்.*

தீங்கு உழலா வாய் தேறும் - *தீங்கில் திரியாதவைகளாகி உயர்வையடையும்.*

**தீண்டாமைபோக்கும்**

தீண்டாமை போக்கும் - *தொட்டுக்கொள்ளாமையைப் போக்கித் தொட்டுக்கொள்ளும்.*

தீண்டு ஆமை போக்கும் - *தொடுகிற ஆடுமாடு முதலியவைகளை விரட்டும்.*

**தீதாவசவு**

தீதா வசவு - *பொல்லாங்காகிய இகழ்ச்சி.*

தீதாவு அசவு - *திக்கடவுள் ஏறுகிற ஆடு.*

**தீதில்படியளக்கும் பெருங்காலன்**

**தீது இல் படி அளக்கும் பெருங் காலன்** - *தீதில்லாமல் நிலத்தையளந்த பெரிய காலையுடையவன்.*

**தீது இல் படி அளக்கும் பெருங் காலன்** - *நன்மையுற அமுது படியளக்கும் நீண்ட வாறுளையுடையவன்.*

**தீதினவந்தடுக்கும்**

**தீது இன் அவம் தடுக்கும்** - *தீமையின் குற்றங்களைச்சேராமற் செய்யும்.*

**தீ தின்ன வந்து அடுக்கும்** - *நெருப்பை உண்ணும் பொருட்டு வந்து சேரும்.*

**தீத்தன்பரவை**

**தீத்தன் பரவு ஐ** - *கதிரவன் சுற்றுகின்ற அழகிய.*

**தீத்து அன்பர் அவை** - *ஒழித்து அடியார்களுடைய கூட்டம்.*

**தீம்பருவப்பாகிவரும்**

**தீம் பருவம் பாகு இவரும்** - *இனிய பக்குவத்தையுடைய வெல்லப் பாகு நிறைந்திருக்கும்.*

**தீ பருவம் பாகு இவரும்** - *கொடிய இளமையையுடைய பாகரால் ஏறி நடத்தப் பெறும்.*

**தீயரவமாலை**

**தீயர் அவம் மாலை** - *கொடியவர்களால் உண்டாக்கப்பட்ட மனக்கலக்கத்தை.*

**தீ அரவ மாலை** - *தீ போன்ற நஞ்சினையுடைய பாம்புமாலை.*

**தீயவரவங்கடுக்கும்**

**தீயவர் அவம் கடுக்கும்** - *கொடியோர் தீமையைச் சினந்து போக்கிக்கொள்ளும்.*

**தீய அரவம் கடுக்கும்** - *கொடிய பாம்பு கண்டு சினக்கும்.*

**தீயவழுக்கறுக்கும்**

**தீய அழுக்கு அறுக்கும்** - *கொடிய அழுக்காகிய குற்றங்களைப் போக்கும்*

**தீய வழு கறுக்கும்** - *கொடிய குற்றங்களைச் சினக்கும்.*

**தீரத்தவம்பயிலும்**

**தீரத்த அம்பு அயிலும்** - *கரையிற் பொருந்தியவாய் நீரைக் குடிக்கும்*

**தீர தவம் பயிலும்** - *தீவினைகள் தீரத் தவத்தைச் செய்யும்; வன்மையான தவத்தைச் செய்யும் எனினுமாம்.*

**தீரத்தனம்பெயரா**

**தீரம் தனம் பெயரா** - *கரைகளில் பொன் நீங்காத.*

**தீரத்து அனம் பெயரா** - *கரைகளில் அன்னப் பறவைகள் நீங்கப்பெறுத.*

**தீரத்தனம் பெயரா** - *வீரத் தன்மை நீங்காத.*

**தீரத்தானத்தர்**

**தீரத்து ஆன் அத்தர்** - *தீரத் தன்மை பொருந்திய திருமாலை ஊர்தியாகவுடைய அத்தர்.*

**தீரம் தானத்தர்** - *கரையை இடமாகக் கொண்டவர்.*

**தீரத்திடமுநீங்காமல்**

**தீர திடமும் நீங்காமல்** — *வீர வலிமையுங் கெடாமல்.*

**தீரத்து இடமும் நீங்காமல்**-*நீர்க் கரை ஓர இடத்தையுங் கடந்து செல்லாமல்.*

## தீரத்துவமகலும்

**துவம் தீர அகலும்**-*இரண்டற்ற தன்மை நீங்க அறிவு பெருகப் பெறும்*

**தீரத்துவம் அகலும்** - *தீரத் தன்மையானது நீங்கப் பெறும்; விசாலிக்கப்பெறும்.*

## தீருணையத்தரார்

**தீர் அருணை அத்தரார்**-*தீர்தலையுடைய அருணைக்குத் தலைவர்.*

**தீரர் உள் நையத்தரார்**-*சிறப்பு மிக்கவர் மனம் வருந்தச்செய்யாதவர்*

## தீர்த்தங்கொடுக்கும்

**தீர்த்தம் கொடுக்கும்** - *தீர்த்தங்களைக் கொடுக்கின்ற.*

**தீர்த்து அங்கு ஒடுக்கும்** - *ஒழித்து அவ்விடத்தில் தலையெடுக்காமற் செய்யும்.*

## தீர்த்தப்படிந்தேறும்

**தீர்த்தம் படிந்து ஏறும்** - *திருத்த நீரிலே மூழ்கிக் கரையேறும்.*

**தீர்த்து அம் படிந்து ஏறும்**-*(குற்றங்களை) நீக்கி அழகு பொருந்தி உயரும்.*

## தீவகங்கணேயமுறும்

**தீவகங்கள் நேயம் உறும்** - *பார்வை விலங்குகள் அன்பு பொருந்தும்,*

**தீவகங்கள் நேயம் உறும்** - *விளக்குகளிலே நெய் பொருந்தியிருக்கும்.*

## தீவகத்தின்சாந்தமுறும்

**தீவகத்தின் சாநதம் உறும்** - *தீவிலுள்ள சந்தனக் கட்டைகள் தங்கும்.*

**தீவு அகத்தின் சாந்தம் உறும்** - *பொருமையழிந்த மனத்தில் சாந்தகுணத்தைச் சேரும்.*

## தீவனமாகத்தாக்கும்

**தீவனம் ஆக தாக்கும்**-*தீக்காடு உண்டாகுமாறு மோதும்.*

**தீ வனம் ஆகத்து ஆக்கும்** - *கொடிய துவாரத்தை மார்பில் உண்டாக்கும்.*

## தீவிரதரங்காட்டும்

**தீவிரதரம் காட்டும்** - *தீவிரதர பக்குவத்தைப் புலப்படுத்தும்.*

**தீ விரதர் அங்கு ஆட்டும்** - *தீயைப்போன்ற தூய விரதர்களால் அங்கு ஆட்டிவருத்தப் படுத்தப்படும்.*

## தீவிலங்கங்கை

**தீவிலம் கங்கை** - *தீயையும் வில்வத்தையும் கங்கையையும்.*

**தீ விலங்கம் கை** - *தீவினையின் தொடர்ச்சியை ஒழிக்கவேண்டும்.*

## தீவினையங்காட்டும்

**தீவினை அங்கு ஆட்டும்** - *தீவினையை அவ்விடத்திலே வருத்தும்.*

**தீ வில் நயம் காட்டும்** - *தீயானது ஒளியின் மேன்மையைப் புலப்படுத்தும்.*

## தீவினையற்ற

**தீ வினை அற்ற** - *தீய்ந்துபோகும் செய்கையில்லாத.*

**தீவினை அற்ற**-*கொடிய செய்கை யில்லாத.*

**தீனந்தினத்து**

**தீ நந்து இனத்து**-*அறிவு கெட்ட கூட்டத்தாரில்.*

**தீனம் தினத்து**-*வறுமையானது நாடோறும்.*

**தீன் நந்தின் அத்து** - *இனிய சங் கின் எல்லை.*

**துகளின்றியவான்தனிலுதித்து**

**துகள் இன்றிய ஆன் தனில் உதித்து** - *குற்றமற்ற தன் மையை உடைய பசுவினிடத் திலே தோன்றி.*

**துகள் இன்றிய வான்தனில் உதித்து** - *குற்றமற்ற விண் ணிடத்தில் தோன்றி.*

**துங்கவிடமருவி**

**துங்க இடம் மருவி** - *உயர்ந்த இடத்தைப் பொருந்தி.*

**துங்கவிடம் மருவி** - *மிகுந்த நஞ்சு பொருந்தி.*

**துணைத்தோணிவந்து-பொன்னேந்த**

**துணை தோள் நிவந்து பொன் ஏந்த** - *இரண்டு தோள்களும் பூரித்து அழகு தோன்ற.*

**துணைத்தோணி வந்து பொன் ஏந்த**-*பெரிய படகுகள் வந்து பொருள்களைக் கொள்ள.*

**துண்டங்கடுக்கும்**

**துண்டு அங்கு அடுக்கும்** - *(பிறைத்) திங்கள் அவ்விடத் தில் நெருங்கும்.*

**துண்டம் கடுக்கும்**-*மூக்கானது ஒத்து விளங்கும்.*

**துதிக்கவரிமாவிசைகாட்ட**

**துதிக்க வரிமா இசை காட்ட** - *வணங்க வரியை உடைய வண்டுகள் இசைப்பாட்டுகள் பாடி உணர்த்த.*

**துதி கவரிமா விசைகாட்ட** - *வாலின் மயிரையுடைய கவரி மான்கள் விரைவாக ஓடு தலைக் காட்ட.*

**துதிக்கைகொடு**

**துதிக்கை கொடு** - *வணங்கு தலைக் கொண்டு.*

**துதிக்கைகொடு** - *தும்பிக்கை யைக் கொண்டு.*

**துதிக்கைவெம்போர்**

**துதிக்கை வெம்போர்** - *தும்பிக் கையிநாற் செய்கின்ற கொடிய போர்.*

**துதி கை வெம் போர்** - *போற்று தற்குரிய கையினது கொடிய போர்.*

**துத்தியங்கூறும்**

**துத்தி அங்கு ஊறும்** - *தேமல் அவ்விடத்திலே மிகும்.*

**துத்தியம் கூறும்** - *புகழ்மொழி களைச் சொல்லும்.*

**துப்பாரஞ்சாயும்**

**துப்பு ஆர் அஞ்சு ஆயும்** - *வலிமை பொருத்திய ஐம் புலன்களைக் கெடுத்துவிடும்.*

**துப்பு ஆரம் சாயும்** - *பவளமும் முத்துங் கீழ்ப்படும்.*

**தும்புருவாக்கும்**

**தும்பு உரு ஆக்கும்** - *கயிற்றி னது வடிவத்தைச் செய்யும்.*

**தும்புரு ஆக்கும்** - *தும்புரு என் னும் வாத்தியத்தைச் செய் யும்.*

**துய்யமலரோவா**

துய் அமலர் ஓவா - சூடும் அழகிய மலர் ஒழியாத.

துய்ய மலர் ஓவா-சிறந்த மலர் குறையாத.

**துரியோதனமாற்பெற்றுக்காட்டி**

துரியோதன மால் பெற்றுக் காட்டி - துரியோதனனாகிய பெருமையுடையோனை ஈன்று காட்டி.

துரியம் தனமால் பெற்றுக் காட்டி - தாங்குகிற பெரிய தனத்தைக் கொண்டு காட்டி.

**துல்லியமாவோடும்**

துல்லியம் ஆ ஓடும் - தூய்மையாக ஓடும்.

துல்லியம் மா ஓடும் - சரியாகக் குதிரைகள் செல்லும்.

**துற்றயமகஞ்செய்**

துற்று அயமகம் செய்-நெருங்கி அசுவமேத யாகத்தைச் செய்கிற.

துற்ற யமகம் செய் - நெருங்குமாறு யமகப் பாட்டைப் பாடுகின்ற.

**துன்பந்திரியும்**

துன்பம் திரியும் - துன்பமானது மாறுபட்டுக் கெடும்.

துன் பந்து இரியும் - தைக்கப்பட்ட பந்தானது தோற்று விடும்.

**துன்னம்பயிலும்**

துன் அம்பு அயிலும் - பொருந்திய நீரைக் குடிக்கும்.

துன்னம் பயிலும் - தைத்தல் தொழிலைப் பழகும்.

**துன்னரம்பையாக்கும்**

துன்னர் அம்பை யாக்கும் - தையற்காரர் அழகிய பையைத் தைக்கும்.

துன் நரம்பை யாக்கும்-பொருந்திய நரம்பைக் கட்டும்.

துன் அரம்பை ஆக்கும்-பொருந்திய வாழையை நட்டுப் பயிரிடும்.

**துன்னலரைச்சாடும்**

துன்னலரைச் சாடும் - பகைவர்களை வருத்தும்.

துன் அலரைச் சாடும்-தன்மீது போடப்பட்ட மலர்களை இழுத்து செல்லும்.

**துன்னவரசங்கூர்**

துன்ன அரசு அங்கு ஊர் - பொருந்துமாறு அரசமரம் அவ்விடத்திலே உள்ள.

துன் நவரசம் கூர் - பொருந்திய ஒன்பான்வகை இனிமைகளும் அமைந்த.

**துன்னற்கடந்தாழியிற்புகுந்து**

துன் நல்கடம் தாழியில் புகுந்து- நன்மை மிக்க குடத்திலும் பானையிலுஞ் சென்று.

துன் அல் கடந்து ஆழியில் புகுந்து - நெருங்கிய இருளை விலக்கிச் சென்று கடலில் நுழைந்து.

**துன்னாரம்பாயும்**

துன் நாரம் பாயும்-பொருந்திய தண்ணீர் பாயும்.

துன்னார் அம்பு ஆயும் - பகைவர்கள் அம்பினைத் தேர்ந்தெடுக்கும்.

**துன்றுறுகால்சேர்**

**துன் ஆறுகால் சேர்** - *பொருந்திய வண்டு சேரும்.*

**துன் ஆறு கால்சேர்** - *நெருங்கிய ஆறும் வாய்க்காலும் பொருந்தும்*

**துன்னிச்சயங்கொள்**

**துன்னி சயம்கொள்** - *நெருங்கி வெற்றியைக் கொள்ளுகிற.*

**துன் நிச்சயம்கொள்** - *திய உறுதியை மேற்கொள்ளுகிற.*

**தூக்கணங்குலாவும்**

**தூக்கணம் குலாவும்**-*தூக்கணங்குருவிகள் விளங்கும்.*

**தூக்கு அணங்கு உலாவும்** - *பாடன்மகளிர்கள் பொருந்தும், கலைமகள் விளங்குமெனினும் ஆம்*

**தூக்கணிதந்தேரும்**

**தூ கணிதம் தேரும்** - *சிறந்த கணிதத்தை உணரும்.*

**தூ கள் நிதம் தேரும்** - *நல்ல தேனை நாளுந் தேடும்.*

**தூக்கந்தமேவும்**

**தூ கந்தம் மேவும்**-*சிறந்த நல்ல வாசனையைப் பொருந்தும்.*

**தூக்கு அந்தம் மேவும்**-*பாடலானது அழகாகப் பொருந்தியிருக்கும்*

**தூக்கந்தனைநேர்**

**தூ கந்தனை நேர்** - *அழகிய முருகனுக்கு ஒப்பாக விளங்கும்.*

**தூக்கந்தனைநேர்** - *உறக்கத்தை உண்டாக்குகின்ற.*

**தூக்கம்பாராட்டும்**

**தூ கம்பு ஆராட்டும்** - *தூய்மையான சங்குகள் தாலாட்டும்.*

**தூக்கம் பாராட்டும்** - *உறக்கத்தை மேற்கொள்ளும்.*

**தூக்காவியஞ்சேர்**

**தூ காவியம்சேர்**-*நல்ல நூல்கள் பொருந்தும்.*

**தூ காவி அம்சேர்**-*நல்ல காவிக்கல்லின் அழகு பொருந்திய.*

**தூக்கிக்கலைக்கும்**

**தூக்கு இக்கு அலைக்கும்** - *தூக்கப்பட்ட கரும்பினை ஆலையிலிட்டு ஆட்டும்.*

**தூக்கிக் கலைக்கும்** - *ஆராய்ந்து பார்த்துப் போக்கும்.*

**தூக்கொன்றைவீசும்**

**தூ கொன்றை வீசும்** - *சிறந்த கொன்றை மரம் (மணத்தை) வெளிப்படுத்தும்.*

**தூக்கு ஒன்றை வீசும்** - *ஒரு தூக்கு அளவு கொடுக்கும்.*

**தூங்கப்பாடென்னும்**

**தூங்க பாடு என்னும்** - *உறங்குவதற்குத் தாலாட்டுப் பாடுவாயாக என்று கூறும்.*

**தூங்கு அப்பு ஆடு என்னும்** - *அசைகின்ற நீரிலே ஆடுவாயாக என்று கூறும்.*

**தூசுதங்கத்தாக்கும்**

**தூசு தங்கத்து ஆக்கும்** - *ஆடையைப் பொன்னுற் செய்யும்.*

**தூசு தங்க தாக்கும்** - *குற்றமுடைமையினுல் தாக்குதலைச் செய்யும்.*

**தூச்சுழிகுளஞ்சேர்**

**தூ சுழிகுளம் சேர்** - *நல்ல சுழி குளம் என்னும் அழகு பொருந்திய.*

**தூ சுழி குளம்சேர்** - *தூய்மை யான நீர்ச் சுழிகளையுடைய குளம் பொருந்திய.*

**தூணியன்மன்னும்**

**தூணி அல் மன்னும்** - *(அம்புக்) கூட்டில் இரவிலே தங்கும்.*

**தூண் இயல் மன்னும்** - *தூணின் இலக்கணத்தைப் பொருந் தும்.*

**தூணிவரக்கார்முகந்தழுவி**

**தூண் இவர கார்முகம் தழுவி** - *தூண்கள் மேலோங்கலால் முகில்களைப் பொருந்தி.*

**தூணிவர கார்முகம் தழுவி** - *அம்பறாத் தூணி பொருந்த வில்லைத் தாங்கி.*

**தூண்டாவென்றேத்தும்**

**தூண்டு ஆ என்று ஏத்தும்** - *தூண்டப்படும் பசு உரு வென்று அன்பர் போற்றும்.*

**தூண் தா என்று ஏத்தும்** - *தூணை னது கொடுப்பாயாக என்று வாழ்த்தும்.*

**தூதுவந்தாரும்**

**தூது வந்து ஆரும்** - *தூது வந்து பொருந்தும்.*

**தூது உவந்து ஆரும்** - *பருக் கைக் கற்களை மகிழ்ந்து உண் ணும்.*

**தூமந்திரஞ்சேர்**

**தூமம் திரம் சேர்** - *புகை நன் றாகப் பொருந்தும்.*

**தூ மந்திரம் சேர்** - *தூய்மையான மந்திரம் பொருந்தியிருக்கும்.*

**தூயமலையேத்தும்**

**தூய மலை ஏத்தும்** - *சிறந்த மலை யானது போற்றும்.*

**தூய் அமலை ஏத்தும்** - *தூவி இறைவியை வணங்கும்.*

**தூயவரும்புங்கவருமொய்ப்ப**

**தூயஅரும்பும் கவரும் மொய்ப்ப** - *தூய்மையுள்ள அரும்புகளும் கிளைகளும் நிறைய.*

**தூயவரும்புங்கவரும் மொய்ப்ப** - *தூய நெறியை விரும்பும் முனிவர்களும் தேவர்களும் நிறைந்திருக்க.*

**தூயவானைமுகமேந்தி**

**தூய ஆனை முகம் ஏந்தி** - *தூய் மையான யானையின் முகத் தைத் தாங்கி.*

**தூய வானை முகம் ஏந்தி** - *நல்ல முகிலைத் தன்னிடத்திலே பெற்று.*

**தூவச்சிரஞ்சேர்**

**தூவ சிரம் சேர்** - *(மலர்) தூவு தலைச் செய்ய அது திருமுடி யைச் சேருகின்ற.*

**தூ வச்சிரம் சேர்** - *நல்ல வச்சி ரம் பொருந்திய.*

**தூவனலங்கண்ணும்**

**தூவல் நலம் கண்ணும்** - *இறகி னது நன்மையைக் கருதும்.*

**தூ அனல் அங்கு அண்ணும்** - *தூய்மையான தீ அங்கு பொருந்தும்.*

**தூவிரதியாரென்**

**தூ விரதியார் என்** - *தூய்மை யான விரதங்களையுடையவ ரென்று சொல்லப்பெறும்.*

**தூ இரதி யார் என்** - *அழகிய இரதியார் என்று கேட்கும்.*

## தூளனஞ்செய்யும்

**தூள் அனம் செய்யும்** - *தூளாக அன்னப் பறவையானது செய்யும்.*

**தூளனம் செய்யும்** - *திருநீற்றை உத்தூளனமாகப் பூசும்.*

## தூறப்படுக்கும்

**தூற படுக்கும்** - *இகழ்ந்தமைக் காகக் கொள்ளும்*

**தூறு அப்பு அடுக்கும்** - *தூறு காலில் நீர் சேரும்.*

## தெண்டன்

**தெண்டன்** - *வணக்கம்.*

**தெண்டன்** - *தடியை உடையவன்.*

**தெண்தன்** - *தெளிந்த தன்னுடைய.*

## தெய்வமணம்புணர்

**தெய்வம் மண் அம்பு உணர்** - *தேவர்களையும் நிலத்தையும் நீரையும் அறிகின்ற.*

**தெய்வ மணம் புணர்** - *தெய்வ மணமாகக் கொண்டருளிய.*

## தெரிவையங்கடி

**தெரிவு ஐயம் கடி** - *ஆராயக் கூடிய ஐயப்பாடுகளைப் போக்கும்.*

**தெரி வையம் கடி** - *பார்க்கப் படுகிற உலகத்தார் நீக்கும்.*

**தெரிவை அங்கு அடி** - *பெண்ணனவள் அவ்விடத்திலே அடிகளை.*

## தெளிதருமுத்தமிழ்

**தெளிதரு முத்தமிழ்** - *ஆராயப் படுகிற முத்தமிழ்.*

**தெளி தரு முத்து அமிழ்** - *மாசற்ற குற்றால மரத்தின்கீழ் முந்தி எழுந்தருளிய.*

## தெளிவானவரும்படிகமுந்த

**தெளிவு ஆன அரும்படிகம் உந்த** - *களங்கமற்ற அரிய பளிங்கு மாலை புரள.*

**தெளிவானவரும் படி கம்முந்த** - *தெளிந்த தேவர்களும் நீராடுதற்குரிய தண்ணீர் செல்ல.*

## தெள்விளியாலங்கடுக்கும்

**தெள்விளியால் அங்கு அடுக்கும்** - *தெள்விளி என்னும் இசையைப்போல் அங்கு விளங்கும்.*

**தெள்விளி ஆலம் கடுக்கும்** - *உறுதியான சாக்காட்டை உண்டு செய்யும் நஞ்சைப் போல் விளங்கும்.*

**தெள்விளியால் அங்கு அடுக்கும்** - *தெளிவான கூப்பாடுகளோடு அங்கு விளங்கிக் கொண்டிருக்கும்.*

## தெற்றித்தலையசைக்கும்

**அசைக்கும்** - *நெருங்கித் (களிப்பினால்) தலையை ஆட்டும்.*

**தெற்றித் தலை அசைக்கும்** - *திண்ணைகளிடத்தில் கட்டப் பட்டு அசையும்.*

## தெற்றியமராவுந்தும்

**தெற்றி அமரா உந்தும்** - *திண்ணைகளில் வைக்கப்பெற்றுச் சிறந்து விளங்கும்.*

**தெற்றி, அமர் ஆ உந்தும்** - *நெருங்கி, விரும்பப்படுகிற ஆக்கள் செல்லும்.*

**தென்கலைமானம்பரிக்கும்**

தென்கலை மானம் பரிக்கும் - *தமிழினது பெருமையை மிகுதிப்படுத்தும்.*

தென் கலைமான் அம்பு அரிக்கும் - *அழகிய கலைமானையும் அம்பையும் அரித்தொழிக்கும்.*

**தென்மலையவெற்புருக்கும்**

தென்மலைய வெற்பு உருக்கும் - *தெற்குத் திக்கில் உள்ள பொதியமலையை உருக்குகின்ற.*

தென்மலைய என்பு உருக்கும் - *தேன் மயங்கும்படி என்பையும் உருக்குகின்ற.*

**தென்றலைமணந்துவக்கும்**

தென்தலை மணந்து உவக்கும் - *தெலைநாட்டைச் சேர்ந்து மகிழும்.*

தென்றலை மணம் துவக்கும் - *தென்றலால் மணத்தைத் தொடங்கும்.*

**தென்றலையம்பு**

தென் தலை அம்பு - *அழகிய தலையின்கண் கங்கையை.*

தென்றல் ஐயம்பு - *தென்றலும் மலர்க்கணைகள் ஐந்தும்.*

**தென்றலையானைக்கடுக்கும்**

தென்றலை ஆனை கடுக்கும் - *தென்றலையும் ஆனையும் சினக்கும்.*

தென்தலையானை கடுக்கும் - *தெற்குத் திக்கினையுடையானாகிய இயமனைச் சினக்கும்.*

**தென்னமலையனிகர்**

தென்னன் மலையன்நிகர்-*பாண்டியனையும் அகத்திய முனிவனையும் ஒப்பாயிருக்கும்.*

தென்ன மலையம் நிகர்-*தெற்குத் திக்கிலுள்ள பொதியமலையை ...க்கும்.*

**தென்னம்பலம்வீழும்**

தென் அம்பலம் வீழும்-*அழகிய பொன்னம்பலத்தை விரும்பும்*

தென்னம் பலம் வீழும்-*தெங்கின் நெற்றுக்கள் உதிரப்பெறும்.*

**தென்னன்மருகனார்**

தென்நல் மருகல் நார்-*அழகிய நல்ல மருகல் என்னும் பதியினிடத்தில் அன்புடையவர்.*

தென்னன் மருகனார் - *பாண்டிய மன்னனுக்கு மருமகனாகிய வர்.*

**தேகங்கடக்கும்**

தேகம் கடக்கும் - *பிறவிப் பிணியைப் போக்கும்.*

தே கங்கு அடக்கும் - *தேன் வரப்பினையடக்கி மேலெழும்.*

**தேகாந்தியங்கெடுக்கும்**

தேக அந்தியம் கெடுக்கும் - *தேக முடிவைக் கெடுக்கும்.*

தே காந்தி அங்கு எடுக்கும் - *தெய்வ ஒளியை அங்கு மிகுதியாக வீசும்.*

**தேக்கமரப்பூம்பணைபாய்**

தேக்கமரம் பூபணைபாய்-*தேக்க மரத்தினது பூக்களையுடைய கிளைகள் பரவுகிற.*

தேகமர் அ பூபணைபாய் - *தேனைப் பிளப்பினையுடைய அந்த அழகிய வயல்களில் பாய்ச்சுகிற.*

**தேக்கமலமாக்களமர்**

**தேக்கு அமல மாக்கள் அமர்** - *மிகுந்து நெருங்குகிற தூயோர்களால் விரும்பப் படும்.*

**தே கமலம் மாகள் அமர்**-*தேன் பொருந்திய தாமரை மலர் களை வண்டுகள் தேனின் பொருட்டு விரும்புகிற.*

**தேக்கமலமென்றிருக்கும்**

**தேங்கு அமலம் என்று இருக் கும்** - *நிறைந்த தூய இடம் என்று கருதித் தங்கும்.*

**தே கமலம் மென்று இருக்கும்**-*தேன் பொருந்திய தாமரை இதழை மென்றுகொண்டு இருக்கும்.*

**தேங்கமலங்களையும்**

**தேம் கமலம் களையும்** - *தேன் பொருந்திய தாமரைப் பூக் களைப் பறிக்கும்.*

**தேங்கு அமலம் களையும்**-*(மூழ்கு வோரது) நிறைந்த அந்த ஆணவ மலத்தை ஒழிக்கும்.*

**தேங்காதரமடுக்கும்**

**தேங்கு ஆதரம் அடுக்கும்** - *மிகுந்த அன்பைப் பொருந் தும்.*

**தேம் காதர மடுக்கும்** - *தேனைச் சோலை தர உண்ணும்.*

**தேங்காவனம்**

**தேம் காவனம்** - *இனிய பூஞ் சோலை.*

**தேம் காவல்நம்** - *தேசத்தைக் காவல் புரிவது நம்முடைய.*

**தேங்கா அனம்** - *அன்னப் பற வையுந் திகைத்து.*

**தேசங்கெடுத்திடலால்**

**தேசம் கெடுத்திடலால்** - *நாடு களைக் கெடுப்பதால்.*

**தேசு அங்கு எடுத்திடலால்** - *ஒளியை அவ்விடத்தில் மிகுதி யாகக் காட்டுவதால்.*

**தேசத்தினைநிகர்க்கும்**

**தேசத்தினை நிகர்க்கும்** - *தங்கள் தேசத்தையே ஒத்திருக்கும்.*

**தேசத்தினை நிகர்க்கும்** - *அறி வினை ஒத்திருக்கும்.*

**தேசமடுக்கும்**

**தேசு அம் அடுக்கும்** - *தெளிந்த நீரைப் பொருந்தும்.*

**தேசம் அடுக்கும்** - *ஒளியைப் பொருந்தும்.*

**தேசம் அடுக்கும்** - *நாடுகள் தோறுஞ் செல்லும்.*

**தேசமருந்தூணினர்**

**தேசு அமரும் தூணினர்** - *ஒளி பொருந்திய தூணிடத்தே தோன்றியவர்.*

**தேசம் அருந்து ஊணினர்** - *உல கங்களையெல்லாம் உண்கின்ற உணவாக உடையவர்*

**தேசம்பலமருவும்**

**தேசு அம் பலம் மருவும்** - *ஒளி யையும் அழகையும் பலத்தை யும் பொருந்தும்*

**தேசம் பல மருவும்** - *பலநாட் டில் உள்ளவர்களும் வந்து பொருந்தும்.*

**தேசம்புகல**

**தேசம் புகல** - *நாட்டைக் கூற.*

**தேசம்பு கல** - *தெய்வமாகிய சிவனை சேர்.*

**தேசிகனேயங்கடக்கும்**

**தேசு இகல் நேயங்கள் தக்கும் -** *சிறந்திமிக்க நேயங்கள் தங்கும்.*

**தேசிகனே அங்கு அடக்கும் -** *ஆசிரியனே அவ்விடத்தில் அடக்கிவிடும்.*

**தேடிக்கொளும்படை**

**தேடிக்கொள் தும்பு அடை -** *ஆராய்ந்துகொள் பாசத்தைப் பொருந்திய.*

**தேள் திக்கொடும் படை-** *தேள் ராசி முதலியவைகளைத் திக்கோடு படைத்தலைச் செய்த.*

**தேமல்கனங்காட்டும்**

**தே மல்கு அனம் காட்டும் -** *தெய்வத்தன்மை மிக்க அன்னப் பறவை பொருந்தப் பெற்ற.*

**தேமல் கனம் காட்டும் -** *தேமலானது பொன்னிறமாக விளங்கும்.*

**தேமருவிநாறும்**

**தேம் அருவி நாறும் -** *இனிய அருவிகள் தோன்றும்*

**தே மருவி நாறும் -** *தெய்வங்கள் பொருந்தி விளங்கும்.*

**தேமினிதாமெய் அமலை**

**தேம் இனிது ஆம்மெய் அமலை-** *தேன்போல இனிதாகிய உண்மையுள்ள தூயவள்.*

**தேம் இனிது ஆம்மெய் அமலை-** *மணத்தாலினிதாகிய மார்பிலுள்ள அழகிய கொங்கையாகிய மலை.*

**தேமொழியத்தம்**

**தேமொழி அத்தம் -** *இனிய சொல்லுடையவளைப் பாதி. (கை)*

**தேம் ஒழியதம் -** *நன்மைகெடத் தங்களுடைய.*

**தேம்பலாவின்பலமார்**

**தேம்பல் ஆ இன்பு அலம் ஆர் -** *பழம் பூக்களை ஆக்கள் இன்பு மிக உண்ணுகின்ற.*

**தேம் பலாவின் பலம் ஆர் -** *இனிய பலாவின் பழங்களை உண்ணுகின்ற.*

**தேம்பலா இன்பலம் ஆர்-** *இளைக்காத இனிய பலத்தைப் பெற்றுள்ள.*

**தேம்பானலங்கடக்கும்**

**தேன் பானல் அங்கு அடக்கும்-** *தேன் பொருந்திய கருங்குவளையை அவ்விடத்திலே அடக்கிவிடும்.*

**தேம்பு ஆல் நலம் கடக்கும் -** *(கிளைகள்) நிறைந்த ஆல் இலையின் அழகை வென்று விடும்.*

**தேயத்தியங்கி**

**தேயத்து இயங்கி -** *நாடுகளிலே சுற்றி.*

**தேய தியங்கி -** *தேய்ந்துபோக வருந்தி.*

**தேயம்பலதிரியா**

**தேயம் பல திரியா -** *பலநாடுகளிலும் அலைந்து.*

**தேய் அம்பு அல திரியா -** *தேய்ந்துபோன அம்புகளல்ல வேறுபடாத.*

## தேயுத்தரமாற்றும்

தேய் உத்தரம் மாற்றும்-(ஐயம்) *தேய்தற்குக் காரணமான மறு மொழிகளால் ஒழிக்கும்.*

தேயு தரம் ஆற்றும் - வேள்வித் *தீயை ஆசிரம நிலைக்குத் தக்க வாறு மாற்றியமைக்கும்.*

## தேராதவருமுறும்

தேராதவரும் உறும் - *அறநூற் களைக் கற்றுப் பயனையறியா தார்களும் செல்லுகின்ற.*

தேர் ஆதவரும் உறும் - *தேரை பற்றி நின்று கதிரவர் களும் தங்கும்.*

## தேராதல்படுக்கும்

தேராத அல்படுக்கும்-*அறிவின் மையாகிய இருளைக் கெடுக் கும்.*

தேர் ஆதவன் படுக்கும்-*தேரை யுடைய கதிரவனையுங் கிழா கச் செய்யும்.*

## தேராவூரும்

தேரா ஊரும்-*தேராகக்கொண்டு செலுத்தும்.*

தேரா ஊரும் *தெரிந்துகொள்ள மாட்டாரர்கள் ஊரில் உள்ள வர்களும்.*

## தேருங்கயமும்பலபடையும்

தேரும் கயமும் பலபடையும் - *தேர்ப்படையும் யானைப் படையும் மற்றும் பலவகைப் படைகளும்.*

தேரும் கயமும் பலபடையும் - *தெளிகின்ற தண்ணீரும் பல வகைக் கலப்பைகளும்.*

## தேரைவிடப்பணி

தேரை விட பணி-தேரை *அச்சு முறியச் செய்து.*

தேரை விட பணி - *தேரை நஞ்சையுடைய பாம்பு.*

## தேர்வானினைவீட்டும்

தேர் வானினை வீட்டும் - *தேரா னது விண்ணுலகத்தைமுட்டி யழிக்கும்.*

தேர்வான் நினைவு ஈட்டும் - *தேர்தலினாலே அறிவைப் பெருக்கும்.*

## தேவரிசைப்பாடலார்

தேவர் இசைபாடலார் - *தேவர் கள் பாடுகின்ற இசைப்பாடல் களையுடையவர்.*

தே வரிசை பாடலார் - *இனிமை பொருந்திய வரிசையான புகழ்ப் பாடல்களையுடைய வர்.*

## தேவாரப்பண்பாடும்

தேவாரப்பண் பாடும்-*தேவாரப் பண்ணைப் பாடும்.*

தே ஆர் அ பண்பு ஆடும் - *கட வுளின் அரிய அந்த எண் குணங்களும் பொருந்தப் பெறும்.*

## தேவாரம்பாடும்

தேவாரம் பாடும் - *தேவாரத் தைப் பாடுதல் செய்யும்.*

தே வார் அம்பு ஆடும் - *நல்ல நீண்ட அம்புகள் ஆடும்.*

## தேவாரம் போற்றும்

தே வாரம் போற்றும் - *தெய்வ உரிமையினால் போற்றுகின்ற.*

தேவாரம் போற்றும் - *தேவாரம் என்னும் அருட்பாடல்களைப் பாராட்டுகின்ற.*

**தேவாலையங்காட்டும்**

தே ஆலை அங்கு ஆட்டும் - *தேன் பொருந்திய கரும்பை அவ்விடத்தே ஆலையிலிட்டு ஆட்டும்.*

தே ஆலயம் காட்டும் - *திருக் கோயில்களைத் தோற்றுவிக்கும்.*

**தேறலோடப்புளலம்ப**

தேறு அல்லோட புள் அலம்ப-*மிக்க இருள் நீங்க, பறவைகள் இரைச்சலிட.*

தேறலோடு அப்புஉள் அலம்ப - *தேன்களோடு கலந்த நீர் உள்ளே சிதற*

**தேறல்வாய்க்கொண்டுலவும்**

தேறு அல்வாய் கொண்டு உலவும் - தேறுகொண்டு அல் வாய் உலவும் - *தெளிதலைப் பெற்று இராப்பொழுதில் உலவித் திரியும்*

தேறல்வாய்கொண்டு உலவும் - *தேனை உண்டு திரிகின்ற.*

**தேறன்மலரகஞ்சார்**

தேறல் மலர் அகம்சார் - *தேனை மலரினிடத்திலே பொருந்தப் பெற்ற.*

தேறல் மலர் அகம்சார் - *தெளி வாய் விரிந்த உள்ளம் பொருந்திய.*

**தேனறுகால்பாயும்**

தேன் ஆறுகால் பாயும்-*தேனாறு வாய்க்காலாகப் பாயும்.*

தேன் ஆறுகால் பாயும்-*வண்டு களின் ஆறுகால்கள் பாயப் பெறும்.*

**தேனுவளமேய்ந்துறையும்**

தேன் உவள மேய்ந்து உறையும் - *தேன் பாயப் (பூக்களை) மேய்ந்து தங்கும்*

தேனு வளம் ஏய்ந்து உறையும்-*பசுக்களால்வளம்பொருந்தித் தங்கப்பெறும்.*

**தை**

தை - *தைத்திங்கள்.*

தை - *துணி முதலியவைகளைத் தையென்னேவல்.*

**தையலிடந்திகழ்ந்து**

தையல் இடம் திகழ்ந்து - *தைக்கப்பெறும் இடம் விளங்கி.*

தையலிடம் திகழ்ந்து-*பெண்களிடம் அமைந்து.*

**தையனலத்தை**

தையல் நலத்தை - *பெண்ணினுடைய நன்மையை.*

தையல் நல் அத்தை - *பெண் நல்ல அத்தையாவள்.*

**தொக்கவிதானஞ்செய்**

தொக்கு அவிதானம் செய்-*ஒன்றாகக் கூடி அவிக்கொடை செய்யும்.*

தொக்க விதானம் செய்-*தொகுதியான மேற்கட்டிகளைச் செய்கின்ற.*

**தொங்கறைவந்தண்ணும்**

தொங்கல் தைவந்து அண்ணும்-*மாலையானது தடவிப் பொருந்தும்.*

தொங்கு அறை வந்து அண்ணும்-*தொங்குகிற அறைக்கு வந்து சேரும்.*

**தொடருந்தானவரையடக்கி**

**தொடரும் தானவரை அடக்கி-** *அடுத்துள்ள இடவெல்லையைத் தம்முட்படுத்தி.*

**தொடரும் தானவரை அடக்கி-** *போரில் தொடருகின்ற அசுரர்களை அடக்கி.*

**தொடர்கற்பகத்தாருடன்மலிய**

**தொடர் கற்பகம்தார் உடல் மலிய-** *கட்டப்பெற்ற கற்பக மலர்மாலை உடலில் மிகுதிப்பட.*

**தொடர் கற்பு அகத்தார் உடன் மலிய -** *பொருந்திய கல்வியறிவு படைத்தவர்கள் உடனிருக்க.*

**தொடுத்தவாரங்கடவாமல்**

**தொடுத்த வாரம் கடவாமல் -** *தான் சார்ந்துள்ள கரையை விட்டுத் தாண்டாமல்.*

**தொடுத்த ஆரம் கடவாமல் -** *கட்டப்பெற்ற மாலை விலகாமல்.*

**தொடுத்தற்கானமலர்பொலிய**

**தொடுத்தற்கு ஆன மலர் பொலிய -** *கட்டுவதற்கான பூக்கள் விளங்க.*

**தொடுத்து அல்கானம(ல்)லர் பொலிய -** *சேர்ந்து கரிய நிற மலைக்குறவர்கள் குடியிருக்க.*

**தொடைகாட்டும்பூங்குழலார்**

**தொடைகாட்டும் பூங்குழலார்-** *மாலையாகக் கட்டப்பெற்ற பூவினையணிந்த கூந்தலையுடையவர்கள்.*

**தொடை காட்டும் பூங்குழலார்-** *தொடையைக் காட்டுகிற பெண்கள்.*

**தொட்டிலொளிரும்**

**தொட்டில் ஒளிரும் -** *(குழந்தைகள்) தொட்டிலில் விளங்கும்.*

**தொட்டு இல் ஒளிரும் -** *தொடுத்து விடானது விளங்கும்.*

**தொட்டிற்களிக்கும்**

**தொட்டில் களிக்கும் -** *தொட்டிலினிடத்தே மகிழும்.*

**தொட்டு இற்கு அளிக்கும் -** *தோண்டி விட்டிற்குக் கொடுக்கும்.*

**தொண்டரதனஞ்சேர்**

**தொண்டு அரதனம் சேர் -** *ஒன்பது வகை மணிகள் பொருந்தும்.*

**தொண்டரது அனம் சேர்-** *அடியார்களுடைய உணவு சேர்ந்திருக்கும்.*

**தொண்டைநாடு**

**தொண்டை நாடு -** *தொண்டை வளநாடு.*

**தொண்டைநாடு -** *கொவ்வைக் கனி போன்ற.*

**தொண்டைநாடு** *பணியை -* *விரும்பு.*

**தொத்தரையப்பரைக்கண்டேன்**

**தொத்தரை அப்பரைக் கண்டேன் -** *தொண்டர்களையுந் திருநாவுக்கரசரையும் பார்த்தேன்.*

**தொத்தரை அப்பரைக் கண்டேன் -** *பூங்கொத்துக்களையுடைய நீருள்ள முகில் போன்ற கூந்தலைப் பார்த்தேன்.*

**தொத்தாரப்பண்ணும்**

தொத்து ஆர் அப்பு அண்ணும்- கொத்தான ஆத்தி மாலேயும் கங்கை நீரும் பொருந்தும்.

தொத்து ஆர பண்ணும் - அடிமைத் தொழிலை நன்றாகச் செய்யும்.

**தொய்யிற்புதுக்கும்**

தொய்யில் புதுக்கும் - சந்தனக் கோலத்தைப் புதிதாக எழுதும்.

தொய் இல்புதுக்கும்-தொய்தலுடைய வீட்டைப் புதுக்கும்.

**தொலேயாசங்கந்திரண்டுவர**

தொலேயா சங்கம் திரண்டுவர - தொடர்ந்து வருகின்ற மக்கட் கூட்டம் நெருங்கி வர.

தொலேயா சங்கம் திரண்டுவர- கெடாத சங்குகளும் சேர்ந்து மேல்வர.

**தொலேயாவடிவாளிகள்படைத்து**

தொலேயா வடிவ ஆளிகள் படைத்து - நீலேயான சிங்க வடிவங்களேத் தம்மிடம் ஏற்று.

தொலேயா வடிவாளிகள் படைத்து - அளவற்ற கூர்மையான அம்புகளேக்கொண்டு.

**தொல்காப்பியனேர்**

தொல்காப்பியன் நேர் - தொல் காப்பியனேப் போன்ற.

தொல் காப்பு இயல்நேர் - பழமையாகிய காத்தல் இலக்கணத்தை வழங்கும்.

**தொல்லுருவகங்கொள்**

தொல் உருவு அகம்கொள் - பழமையான வடிவங்களே மனதிற் கொண்டிருக்கும்.

தொல் உருவகம் கொள் - பழைய உருவக அணியை அமைக்கின்ற.

**தொன்மரங்கண்மேவும்**

தொன்மரங்கள் மேவும் - ஆலமரங்கள் அமைந்திருக்கும்

தொன்மர் அங்கண்மேவும் - பழமையானவர்கள் அவ்விடத்திலே பொருந்தும்.

**தொன்மையுறவாற்றும்**

தொல்மை உறவு ஆற்றும் - பழமையான முகில் உறவு கொண்டாடும்.

தொன்மை உற ஆற்றும் - பழமை பொருந்தச் செய்யும்.

**தொன்னேவளமாக்கும்**

தொன்னே வளம் ஆக்கும் - தொன்னேயை வளப்பமாகச் செய்யும்.

தொல் நைவளம் ஆக்கும் - பழமையான நைவளப்பண்ணேப் பாடும்.

**தோகையரங்காடும்**

தோகை அரங்கு ஆடும் - மயில் அவையில் ஆடுதலேச் செய்யும்.

தோகையர் அங்கு ஆடும் - பெண்கள் அவ்விடத்திலே கூத்தியற்றுதலேச் செய்யும்.

**தோடங்கழியும்**

தோடம் கழியும் - குற்றமானது நீங்கும்.

தோடு அங்கு அழியும்-தொகுதியானது அவ்விடத்திலே கெடும்.

**தோடந்துடைக்கும்**

தோடம் துடைக்கும் - *குற்றத்தைப் போக்கும்.*

தோள் தந்து உடைக்கும் - *தம்முடைய தோளாற்றலால் போக்கும்*

**தோடிவரல்மாரு**

தோடி வரல் மாரு - *தோடிராகம் வருதல் நீங்காது.*

தோடு இவரல் மாரு - *பூவிதழ் பொருந்துதல் நீங்காது.*

**தோடையம்பாடும்**

தோடையம் பாடும்-*தோடையம் என்னும் இசைப் பாட்டைப் பாடும்.*

தோடு ஐ அம்பு ஆடும் - *இதழ்களையுடைய ஐங்கணைகள் பொருந்தும்.*

**தோட்டிக்குமாரும்**

தோடு இக்கும் ஆரும் - *பூவிதழில் உள்ள கள்ளும் ஆருகப் பெருகும்.*

தோட்டிக்கு மாறு ஆம் - *அங்குசத்திற்கு மாறுபடுதலை உடைய.*

**தோணிவந்துடங்கும்**

தோணி வந்து உள் தங்கும் - *தோணியானது வந்து உள்ளே தங்கும்*

தோள் நிவந்து உடங்கும் - *தோளானது உயர்ந்து சேரும்.*

**தோயத்தவிரும்**

தோயத்து அவிரும் - *நீரிலே விளங்கும்.*

தோய தவிரும் - *மூழ்கினால் நீங்கிவிடும்.*

**தோயுங்கனம்**

தோயும் கனம் - *சேருகின்ற பெருமை.*

தோயும் கனம் - *சாருகின்ற முகில்கள்.*

**தோலாவஞ்செய்யும்**

தோல் ஆவம் செய்யும் - *தோலினாலே அம்பறாத் தூணியைச் செய்யும்.*

தோலா அஞ்சு எய்யும் - *தோல்வியடையாத ஐங்கணைகளைச் செலுத்தும்.*

**தோற்கச்சிரிக்கும்**

தோற்க சிரிக்கும் - *தோல்வியடையும்போது நகைக்கும்.*

தோல் கச்சு இரிக்கும் - *அழகிய கச்சைக் கெடுக்கும்.*

**தோற்புரையாக்கும்**

தோல்புரை ஆக்கும் - *கேடகத்தைத் தொளையாக்கும்.*

தோற்பு உரையாக்கும் - *தோல்விச் சொல்லைக் கட்டிவிடும்.*

**தோற்றங்குடையும்**

தோற்றம் குடையும் - *பிறப்பினைப் போக்கும்.*

தோற்று அங்கு உடையும் - *தோல்வியடைந்து அவ்விடத்திலே நீங்கும்.*

**தோற்றநீரில்புல்வாய்க்கவியா**

தோற்ற நீரில் புல்வாய்க்கு அவியா-*கானல் நீரில் மானுக்குத் தணியாத.*

தோற்ற நீரில் புல் வாய் கவ்வி ஆ - *தோல்வியடைந்த தன்மையிலே புல்லைவாயினிடத்துக் கௌவியாகும்.*

**தோற்றந்தமேவும்**

தோல் தந்தம் மேவும் - *யானைத் தந்தமானது பொருந்தும்.*

தோற்று அந்தம் மேவும்-*தோல்வியை அடைந்து இறுதியைச் சேரும்.*

**தோற்றந்திகழும்**

தோல் தந்து இகழும் - *அழகிய நூலைப் பழிக்கும்.*

தோற்றம் திகழும் - *அழகாகக் காட்சியளிக்கும்.*

**தோற்றவரங்கண்ணும்**

தோற்றவர் அங்கு அண்ணும் - *தோல்வியுற்றவர்கள் அவ்விடத்தை அடையும்.*

தோற்ற வரம் கண்ணும் - *பிறப்பதற்கு வரத்தினை எண்ணும்.*

**தோற்றேன்மே லேற்றார்**

தோற்றேன்மேல் ஏற்றார்-*தோற்றவன்மேற் செலுத்தமாட்டார்.*

தோல் தோல்மேல் ஏற்றார் - *யானையின் தோலைத் தம்மீது ஏற்றுக்கொண்டவர்.*

**தோன்றலுலாவும்**

தோன்று அல் உலாவும் - *தோன்றுகிற இருள் மிகுந்து விளங்கும்.*

தோன்றல் உலாவும் - *மகன் திரியும்.*

**தோன்றியங்கடங்கும்**

தோன்றி அங்கு அடங்கும் - *காந்தள் மலர் அவ்விடத்திலே அடங்கிவிடும்.*

தோன்று இயங்கள் தங்கும் - *தோன்றுகிற வாத்தியங்கள் பொருந்தும்.*

**தோன்றிவளமை**

தோன்றி வளமை - *செங்காந்தளும் வளப்பம் பொருந்திய முகில்களும்.*

தோன்றி வளமை-*பிறந்து சிறப்புடைமை.*

**நகமுண்டகம்**

நக முண்டகம் - *முண்டமாகிய தலை எள்ளி நகையாட.*

நக முண்டகம் - *மலைச்சுனையில் உண்டாகிய தாமரை.*

**நகைக்கடையார்**

நகைக்க அடையார் - *பிறர் இகழுமாறு நடக்கமாட்டார்கள்.*

நகைக்கடையார் - *அணிகலன்கள் விற்கும் கடையை உடையவர்கள்.*

**நங்காயாவன்னவில்**

நங்காய் யாவன் நவில் - *பெண்ணே யாவனென்று கூறுவாயாக.*

நம் காய்ஆவன் நவில் - *அவன் நமக்கு உண்ணமுடியாத காய் போல்வன்.*

நம் காயா அன்ன வில் - *நமது காயாம் பூவைப்போன்ற ஒளியுடைய.*

**நங்கைக்கரிய**

நம் கைக்கு அரிய - *நம்முடைய கைக்கு அருமையான.*

நங்கைக்கு அரிய - *பெண்ணுக்குக் கிட்டுதற்கரிய.*

**நங்கையலரின்**

நங்கை அலரின் - *நங்கையானவள் பழிச் சொல்லினால்.*

நம் கை அலரின் - *நம்முடைய கையிலே உள்ள மலரினால்.*

**நச்சுப்பொய்கைத்தலத்து - ஐவரைமீட்டிடின்**

நச்சுப் பொய்கைத் தலத்து ஐவரை மீட்டிடின் - நச்சுப் பொய்கையிடத்திலே உள்ள பாண்டவர்களை மீட்டுவிட்டால்.

நச்சுப் பொய்கைத் தலத்து ஐவரை மீட்டிடின் - நச்சுப் பொய்கையைப் போன்ற கண்ணினிடத்திலேயுள்ள ஐந்து விரல்களையும் எடுத்துவிட்டால்.

**நஞ்சிருக்குந்தோலுரிக்கும்**

நஞ்சு இருக்கும் தோல் உரிக்கும் - நஞ்சுடையதாக இருக்கும் சட்டையைக் கழற்றிக் கொள்ளும்.

நஞ்சு இருக்கும் தோல் உரிக்கும்-நைந்துபோய் இருக்கும் தோல் உரித்தெறியப்பெறும்.

**நஞ்சுவிடும்**

நஞ்சுவிடும் - நஞ்சை வெளிப்படுத்தும்.

நஞ்சுவிடும் - நைந்து தளர்ந்து போகும்.

**நடுகன்னல்வெட்டும்**

நடு கன்னல் வெட்டும் - நடுகிற கரும்பினை வெட்டும்.

நடுகல் நல் வெட்டும் - வீரர்களுக்கு நடுகல்லை நன்றாக வெட்டும்.

**நடுங்கையர்**

நடும் கையர்-நடுகின்ற கையை உடையவர்கள்.

நடுங்கு ஐயர் - அஞ்சி நடுங்குகிற பெரியோர்கள்.

**நட்டராகந்தான்**

நட்டர் ஆகதான் - நட்டத்தை (கேட்டை) உடையவராக தான்.

நட்டராகத் தான் - நட்டராகம் என்னும் பண்ணையுடையவர்.

**நந்தமரங்களை**

நந்து அமர் அங்களை - வளையலையணிந்த பெண்,

நம் தம் அரங்களை - நம்முடைய திருவரங்கநாதனை.

**நந்தவனம்வேரோடலைத்தீர்க்கும்**

நம் தவனம் வேர் ஓடலை தீர்க்கும் - நமது தாகம் நிலைத் திருத்தலை நீக்கப்பெறும்.

நந்தவனம் வேரோடு அலைத்து ஈர்க்கும் - பூம்பொழிலில் உள்ள மரங்களை வேரோடு அசைத்து இழுக்கப்பெறும்.

**நந்தனம்**

நந்தனம் - பூம்பொழில்.

நந்து அனம் - சங்கும் அன்னப் பறவையும்.

நம்தனம்-நம்முடைய செல்வம்.

நம் தனம் - நம்முடைய கொங்கை.

**நந்தாண்டவத்தன்**

நந்து ஆண்ட அத்தன்-சங்கினை ஆட்சி கொண்ட கையினை உடைய திருமால்.

நம் தாண்டவத்தன்-நம்முடைய கூத்தப்பிரான்.

**நம்பந்தராகத்தை**

நம் பந்த ராகத்தை-நம்முடைய பற்றினால் வரும் அவாவை

நம்பு அந்தம் ராகத்தை - விருப்பத்தையும் அழகினையும் சிவப்பினையும்.

**நம்பரத்தரம்பரத்தர்**

**நம் பரத்தர் அம்பர் அத்தர்** *நம்முடைய பரவெளியாக உள்ளவர், அம்பர் என்னும் தலைத் தலைவர்.*

**நம்பு அரத்தர் அம்பரத்தர்** - *விரும்பத்தக்க செந்நிறத்தையுடையவர், திசையாகிய ஆடையை உடையவர்.*

**நம்பர் அத்தர் அம் பரத்தர்**-*யாவராலும் நம்பப்படுகிற தலைவர் நீராகிய பாரத்தை உடையவர்.*

**நம்பனையன்றி**

**நம்பனை அன்றி**-*நம்பனாகிய சிவபெருமானையல்லாமல்*

**நம்பு அ(ன்)னை அன்றி** - *விரும்புகிற தலைவும் தாயைத் தவிர.*

**நம்பினன்றாவரனே**

**நம்பினன் தா வரனே** - *நம்பினேன் வரத்தைக் கொடுப்பாயாக.*

**நம்பி நன்று ஆவர் அ(ன்)னே** - *தாய்போல்வானே ! நம்பி நல்லவராவர்.*

**நம்பினன் தா அரனே** - *நம்பினேன் கொடுப்பாயாக சிவனே.*

**நயனத்திலம்போது**

**நயனத்தில் அம்போது** - *நல்ல சங்கின்மேல் நீர் ஓடுகின்றது.*

**நயனத்தில் அம்பு ஓது** - *கண்களிடத்தில் அம்பிருக்கிறதென்று சொல்.*

**நரகந்தரம்**

**நரகு அந்தரம்** - *நரகம் சுவர்க்கம்.*

**நர கந்தரம்** - *நரனுடைய*

**நரையான்மேல்**

**நரை ஆன்மேல்** - *வெள்ளிய காளையின்மேல்.*

**நரையான் மேல்** - *மீன் குத்திப் பறவையின் மீது.*

**நல்லகதிரினையே**

**நல்ல கதிரினையே** - *நல்ல ஒளியையே.*

**நல்ல கதிரினையே**-*(நெல் முதலியன நல்ல விளைவுடைய) கதிர்களையே.*

**நல்லதோர்குடும்பன்**

**நல்லது ஓர் குடும்பன்** - *நல்லதாகிய ஒரு குடும்பத்தில் தோன்றியவன்.*

**நல்லது ஓர் குடும்பன்** - *நல்லதான குடும்பன் என்னுஞ் சாதியில் தோன்றியவன்.*

**நல்லபணங்கொளலால்**

**நல்ல பணங்கொளலால்** - *நல்ல பணமாகப் பார்த்துப் பெறுதலால்.*

**நல்ல பணம் கொளலால்**-*நன்கு படம் எடுத்து ஆடுதலைச் செய்தலால்.*

**நல்லவன்னம்படைத்து**

**நல்ல அன்னம் படைத்து**-*நல்ல உணவு பரிமாறி.*

**நல்ல வன்னம் படைத்து** - *நல்ல அழகு பெற்று.*

**நல்லவாகைகாட்டி**

**நல்ல வாகை காட்டி** - *சிறந்த வெற்றியைக் காணச்செய்து.*

**நல்ல ஆகை காட்டி**-*நல்ல பசுக்களை ஒழுங்காக மேய்த்து.*

### நல்லாடையிசைந்திடலால்

**நல் ஆடை இசைந்திடலால் -** *நல்ல ஆடையைக் கட்டுகிற படியால்.*

**நல்லாடை இசைந்திடலால் -** *நல்ல பாலாடை பொருந்துகையால்.*

### நவநீதமின்பால்வாய்க்கவரும்

**நவம் நீதம் இன்பால் வாய்க்க வரும் -** *புதுமையாகிய அறநெறி இன்பத்தோடு வாய்க்கப்பெறும்.*

**நவநீதம் இன்பால் வாய்க்க வரும் -** *வெண்ணெயை இன்பத்தோடு வாயினிடத்திலே கவரும்.*

### நளிராவிமாசத்தி

**நளிர் ஆவி மாசு அத்தி-** *செறிந்த உயிர்களின் பாசவிருளைச் செற்றலுடைய.*

**நளிர் ஆவி மாசத்தி -** *குளிர்ந்த தடாகமாகிய பெரிய சத்தியென்னும்.*

### நளினாதனத்தன்

**நளின ஆதனத்தன் -** *தாமரை மலரை இருக்கையாகவுடைய நான்முகன்.*

**நளி நாதநத்தன் -** *குளிர்ந்த ஒலி தரும் சங்கினை உடையவன்.*

**நள்இன் நாதன் அத்தன் -** *நடுவிலுள்ள தலைவன் இறைவன்.*

### நள்ளாறுதிக்கும்

**நள்ளாறு திக்கும் -** *நடுவிற் பொருந்திய ஆறு திக்குகளும்.*

**நள்ளாறு உதிக்கும் -** *நள்ளாறு என்னும் பதியில் தோன்றும்.*

### நள்ளிருளம்பரம்போனாய்

**நள் இருள் அம்பரம் போனாய் -** *நடு இரவிலே விண்ணிற் சென்றாய்.*

**நள் இருள் அம்பரம் போனாய் -** *நள்ளிரவிலே ஆடை நீங்கப் பெற்றாய்.*

### நறவாரிலம்பையங்கோட்டூர்

**நறவு ஆர் இலம்பையங்கோட்டூர் -** *தேன் பொருந்திய திருவிலம்பையங் கோட்டூர்.*

**நறு அவார் இல் அம்பு ஐயம் கோடு ஊர் -** *நன்மையாகிய அந்தக் கச்சுக்கு இருப்பிடமும் அம்பானது ஐயங்கொள்ளும் யானைக் கொம்பு போன்றுள்ள கொங்கையாகிய இடம்.*

### நறுங்குவளைமேவும்

**நறும் குவளை மேவும்-** *நறுமணம் பொருந்திய குவளை மலர்கள் பொருந்தும்.*

**நறுங்கு வளை மேவும் -** *நொறுங்கிய சங்குகள் செல்லும்.*

### நற்கலைகற்பிக்கும்

**நல் கலை கற்பிக்கும் -** *நல்ல கலையைப் போதிக்கும்.*

**நற்கு அலை கற்பிக்கும் -** *நன்றாக அலையானது காட்டும்.*

### நற்றையலார்ந்திடலால்

**நல் தையல் ஆர்ந்திடலால் -** *நல்ல தையல் பொருந்தியிருப்பதால்.*

**நல் தையல் ஆர்ந்திடலால் -** *நல்ல பெண் சேர்ந்திருப்பதால்.*

**நன்காக்கம்புட்கலம்மல்கும**

நன்கு ஆக்கம் புட்கலம் மல்கும் - *நன்றாகச் செல்வம் நிறைந்து விளங்கும்.*

நன்கா கம்புள் கலம் அல்கும் - *நன்றாகச் சங்கு அணிபோலத் தங்கும்.*

**நன்னாரி**

நன்னாரி - *நன்னாரி என்னும் மூலிகை.*

நல் நாரி - *நல்ல பெண்.*

**நன்னீர்ச்சைவலக்கணமேய்**

நல்நீர் சைவலம் கணம் ஏய் - *நல்ல நீரிலுள்ள பாசிக் கூட்டத்தை ஒத்திருக்கும்.*

நல் நீர்சைவ லக்கணம் ஏய் - *நல்ல தன்மையை உடைய சைவ சமயத்தின் இலக்கணத்தைப் பொருந்தும்.*

**நன்னூலையுணர்வது**

நன்னூலை உணாவது-*நன்னூல் என்னும் இலக்கண நூலைப் படிப்பது.*

நன்னூலை உணர்வது - *நல்ல நூலைப் போன்ற இடையைத் தெரிந்துகொள்வது.*

**நாகத்தருக்கும்**

நாகத் தருக்கும் - *விண்ணுலகத் தருக்கும்.*

நாகு அ தருக்கும் - *இளமையும் அந்தக் களிப்பும்.*

**நாகமீதுபயின்று**

நாகம் மீது பயின்று - *திருக் கயிலை மலைமேல் எழுந்தருளி.*

நாகம்மீது பயின்று - *பாம்புப் படுக்கையின்மீது பொருந்தி.*

**நாகம்மறைத்து**

நாகம் மறைத்து - *பாம்பை மறைத்து.*

நாகம் மறைத்து-*(பாம்புப்படம் போன்ற) அல்குலை மறைத்து.*

**நாகைக்காரோணத்தார்**

நா கைக்கார் ஓணத்தார் - *நா வெறுப்பு அடையாதவர், திருமால்.*

நாகைக்காரோணத்தார் - *திருநாகைக்காரோணம் என்னும் பதியை உடையவர்.*

**நாடகத்தன்**

நாடகத்தன் - *கூத்தினைச் செய்பவன்.*

நாடு அகத்தன் - *விரும்புகிற உள்ளத்தை உடையவன்; விரும்புகிற இருப்பிடத்தையுடையவன்.*

நாள் தக தன் - *நாள் தக்கதாகத் தன்னுடைய.*

**நாடகப்பாவையைக்காட்டும்**

நாடகம் பாவையை காட்டும் - *நாடகம் ஆடுகிற பெண்ணைக் காட்டுங்கள்.*

நாடு அகப் பாவையைக் காட்டும்-*பார்த்தற்குரியதாய் உள்ளிருக்கிற கண் பாவையைக் காட்டுங்கள்.*

**நாடுபுரஞ்சுட்டபித்தன்**

நாடுபுரம் சுட்ட பித்தன்-*விரும்புகிற ஊரைக் கொளுத்திய பைத்தியக்காரன்.*

நாடு புரம் சுட்ட பித்தன் - *முப்புரங்களையும் எரித்த இறைவன்.*

**நாடுமேடுநனைக்குமது**

**நாடும் ஏடும் நனைக்கும் மது** - *விரும்பும் இதழ்களை ஈரஞ் செய்கின்ற தேன்.*

**நாடும் மேடும் நனைக்கும் அது**- *மருத நிலங்களையும் மேட்டு நிலங்களையும் ஈரம்படச் செய்கின்ற அது.*

**நாமறக்காமக்கோட்டத்தி**

**நாம் அற காம கோட்டத்தி** - *அச்சம் நீங்குமாறு காமக் கோட்டத்தில் எழுந்தருளிய இறைவி.*

**நாம் மறக்காம் அக்கோள் தத்தி** - *அக் கொள்கை தவறி நாம் மறக்கமாட்டோம்.*

**நாமுறவிடிக்க**

**நாம் உற இடிக்க** - *அச்சமுண் டாகுமாறு இடியிடிக்க.*

**நாம் உறவு இடிக்க** - *நாம் உற வினர் இடித்துப் பேச.*

**நாரங்கிளைத்துச்சுற்ற**

**நார் அங்கு இளைத்து சுற்ற**-*நாரா னது அங்கு சிறியதாகச் சுற்ற.*

**நாரம் கிளைத்து சுற்ற** - *மக்கட் கூட்டம் மணலைத் தோண்டிச் சூழ்ந்து நிற்க.*

**நாரமடங்கலை**

**நாரம் மடங்கு அலை** - *நீரில் மடங்குகிற அலை.*

**நாரம் அடங்கலை** - *அன்பு முழு வதையும்.*

**நார் அம் அடங்கலை** - *அன்பு அழகு முதலிய எல்லாவற் றையும்.*

**நாலாம்வருணத்தர்**

**நாலாம் வருணத்தர்** - *நான்கா வது சாதியினர்.*

**நால் ஆம் வருணத்தர்** - *முத்து மாலைகள் முதலியன தொங் கப் பெற்ற ஒளியை உடை யவர். (தனம்)*

**நாலுபுறமுமுகந்தங்கும்**

**நாலு புறமும் முகம் தங்கும்** *நான்கு பக்கங்களினும் முகத் தைக் கொண்டிருக்கும்.*

**நாலு புறமும் உகந்து அங்கும்** - *நான்கு பக்கங்களினு மகிழ்ந்து அவ்விடங்களிலெல் லாம்.*

**நாவலன்**

**நாவலன்** - *கல்வியறிவிற் சிறந் தவன்.*

**நாவலன்** - *நாவல் மரத்தடியில் எழுந்தருளியவன்.*

**நாவாயசைக்கவரும்**

**நாவாய் அசைக்க வரும்**-*கப்பல் களை அசைக்க முயலும்.*

**நா வாய் அசைக்க அரும்** *நாவை யும் வாயையும் அசைத்துப் பேச முடியாமற் போகும்.*

**நாவாயார்**

**நா வாயார்** - *நாவையும் வாயை யும் உடையவர்.*

**நாவாயார்**-*மரக்கலத்தை உடை யவர்.*

**நிச்சத்தபோதனஞ்செய்**

**நிச்ச தபோதனம் செய்** - *நாள் தோறும் தவமாகிய செல்வத் தைத் தேடும்.*

**நிச்சத்த போதனம் செய்** - *பேரொலி யில்லாமல் அரு ளுரையை வழங்கியருளு கின்ற.*

**நிச்சந்தேகப்பயன்கொள்**

நிச்சம் தேகம் பயன் கொள் - *நாள்தோறும் உடலின் பயனைக் கொள்ளுகிற.*

நிச்சந்தேகப் பயன்கொள் - *ஐயமில்லாத உறுதியான பயனைக் கொள்ளுகிற.*

**நிச்சலத்தியானமுறும்**

நிச்சல தியானம் உறும் - *மனச் சலனமில்லாத யோகத்தைப் பொருந்தும்.*

நிச்சல் அத்தி யானம் உறும் - *நாள்தோறும் யானையும் சிவிகையும் பொருந்தியிருக்கும்.*

**நிதம்பத்தை**

நிதம்பத்தை - *அல்குலை.*

நிதம் பத்தை - *நாள்தோறும் பத்து என்னும் அளவை.*

**நித்தமருவியமைவிளங்க**

நித்தம் மருவி அ(ம்)மை விளங்க-*நாள்தோறும் ஒன்றுபட்டு உமாதேவியார் இருக்க.*

நித்தம் அருவி அமை விளங்க - *நாள்தோறும் அருவி நீரும் மூங்கிலும் விளங்க.*

**நித்தனித்தனஞ்செய்துறும்**

நித்தன் நித்தனம் செய்து உறும்- *இறைவன் கூத்தாடுதலைச் செய்து பொருந்தும்.*

நித்தல் நித்தல் நஞ்சு எய்துறும்- *நாள்தோறும் நாள்தோறும் நஞ்சைப் பொருந்தும்.*

**நித்தனைந்தெழுந்தேயும்**

நித்தன் ஐந்து எழுத்து ஏயும் - *இறைவனுடைய ஐந்தெழுத்துக்கள் பொருந்தியிருக்கும்.*

நித்தல் நைந்து எழு தேயும் - *நாள்தோறும் வருந்தித் தூறுனது (வருந்தும்) அழியும்.*

**நிமிர்கந்தரமாலங்காட்ட**

நிமிர்கந்தரம் ஆலம் காட்ட - *உயர்ந்த கழுத்து கரிய நஞ்சின் நிறத்தைத் தெரிவிக்க.*

நிமிர் கந்தரம்மால் அம்காட்ட- *உயர்ந்த முகில்கள் மழை பொழிந்து நீரைக்காட்ட.*

**நிர்த்தனத்துமாதரமாம்**

நிர்தனத்தும் ஆதரம் ஆம் - *பொருளில்லாமை யிடத்திலும் அவாவைக்கொள்ளும்.*

நிர்த்தனத்து மாதர் அம் ஆம் - *நாடகப் பெண்களாகிய விலைமகளிரது அழகும் பலருக்கும் பயன்படும்.*

நிர்த்தனத்தும் ஆதரம் ஆம் - *கூத்திலும் விருப்பங்கொள்ளும்.*

**நிர்மித்துருவாக்கும்**

நிர் மித்துரு ஆக்கும் - *நண்பர்கள் இல்லாமற் செய்யும்.*

நிர்மித்து உரு ஆக்கும்-*ஏற்பாடு செய்து உருவத்தை உண்டாக்கும்.*

**நிர்வாகனன்புணரும்**

நிர்வாகன் அன்பு உணரும் - *கணவர்களுடைய அன்பைத் தெரிந்துகொள்ளும்.*

நிர்வாகனன் புணரும் - *கால் நடையாகச் செல்வோர் (காலை) சேரும்.*

**நிர்வாணதீக்கையரென்**

நிர்வாண தீக்கையர் என் - *நிர்வாண தீட்சையுடையவரென்று சொல்லப்பெறும்.*

நிர்வாண தீகையர் என்-ஆடையில்லாத தீய ஒழுக்கமுடையவர் என்று சொல்லப் பெறும்.

**நிலவாய்விளங்குதலால்**

நிலவாய் விளங்குதலால் - *நிலத்தினிடத்திலே சிறந்திருப்பதால்.*

நிலவு ஆய் விளங்குதலால் - *இனிமையமைந்த நிலாவாக விளங்குகிறபடியால்.*

**நிலையாமை**

நிலை ஆம் ஆமை - *நிலைத்திருக்கின்ற ஆமைகள்.*

நிலையா மா மை - *செல்கின்ற கருகிற முகில்கள்.*

**நிறைகூடைதாங்கி**

நிறைகூடை தாங்கி - *பொருளால் நிறைகின்ற கூடையைச் சுமந்து.*

நிறை கூடு ஐ தாங்கி - *கலை நிறைகின்ற அழகைப் பெற்று.*

**நிறைவாய்ச்சங்கக்குழைதவழ**

நிறைவாய்ச் சங்கக் குழை தவழ - *அழிவற்றதாகச் சங்கக் குண்டலங்கள் காதில் அசைய.*

நிறைவு ஆய் சங்கம் குழை தவழ- *மிகுதியாகிக்கோடானுகோடி மரங்களின் தழைகள் அசைய.*

**நிற்காமுறுவலெனும்**

நிற்கு ஆம் உறுவல் எனும் - *நினக்கு உண்டாகும் துன்பம் என்று சொல்லும்.*

நிற்கா முறுவல் எனும் - *நிலை பெறுது நகைப்பு என்று கூறும்.*

நிற்காமுறுவல் எனும் - *உன்னை விரும்புவேன் என்று கூறும்.*

**நிற்குணசைவந்துறும்**

நிற்குணசைவம் துறும் - *நிர்க்குண மூர்த்தியாக உபாசிக்கும் சைவம் நெருங்கும்.*

நிற்கு உண்நசை வந்துறும் - *உனக்கு உணவினிடத்தில் விருப்பம் உண்டாகும்.*

**நினையான்**

நினையான் - *எண்ணமாட்டான்.*

நினையான் - *உன்னை நான்.*

நினை ஆன் - *எண்ணப் பெறுகிற பசு.*

**நின்மலையங்கங்கடுக்கும்**

நில்மலை அங்கம் கடுக்கும் - *நிற்கின்ற மலையாகிய உறுப்பைப் போன்றிருக்கும்.*

நின்மலை அங்கு அங்கு அடுக்கும் - *நிர்மலையாகிய இறைவி ஆங்காங்குப் பொருந்தும்.*

நின் மலையம் கங்கு அடுக்கும் - *உன்னுடைய பொதியமலை வரம்பாகப் பொருந்தும்.*

**நின்னில்விடனில்லென்னும்**

நின்னில் விடன் இல் என்னும் - *நின்னைப் பார்க்கினும் காமுகன் இல்லையென்று கூறும்*

நில்நில் விடன் நில் என்னும் - *நிற்பாயாக நிற்பாயாக விடமாட்டேன் நிற்பாயாக என்று கூறும்.*

**நீக்கமுன்னினைந்திடும்**

நீக்கம் உன்னி நைந்திடும் - *பிரிவை நினைத்து வருந்தும்.*

நீக்க முன் நினைந்திடும் - *துறப்பதற்கு முன்னுக எண்ணும்.*

**நீடமதுவைப்பொழியும்**

**நீள் தமது வைப்பு ஒழியும்** - *நீல மான மேக இருப்பிடத்தை நீங்கும்.*

**நீட மதுவைப் பொழியும்** - *மிகுதி யாகத் தேனைச் சொரியும்.*

**நீடமுதுகாற்றுறும்**

**நீட முதுகாற்று உறும்** - *மிகவும் நீண்ட பெருங்காற்று அடிக் கும்*

**நீடு அமுது காற்றுறும்** - *நெடும் பொழுது நீரை வெளிப் படுத்தும்.*

**நீடருந்துதிக்கையமேய்**

**நீள்தரு உந்து திக்கயம் மேய்** - *உயர்ந்த மரங்களைத் தள்ளும் திக்கு யானைகள் கு[illegible]ந்தும்.*

**நீடு அரும் துதிக்கை அம் ஏய்** - *நெடுங்காலம் அருமையான புகழையும் அழகையும் பொருந்தும்.*

**நீள்தரும் துதிக்கை அம்ஏய்** - *நீண்ட யானைத் துதிக்கையின் அழகை ஒக்கும்*

**நீடு அருந்துதிக்கு ஐயம் ஏய்** - *(புகழ்) நீடிய அருந்ததிக்கு அவள் புகழில் ஐயத்தை உண்டாக்கும்.*

**நீடவம்படர்ந்திடும்**

**நீட வம்பு அடர்ந்திடும்** - *நீளு மாறு கச்சுப் பொருந்தும்.*

**நீள் தவம் படர்ந்திடும்** - *நீண்ட தவத்தன்மையானது பொருந் தியிருக்கும்.*

**நீடவளவனஞ்சேர்**

**நீள் தவள அன்னம் சேர்** - *நீண்ட வெண்மையான அன்னங்கள் சேர்ந்திருக்கப்பெறுகிற.*

**நீட வள வனம் சேர்** - *மிகுந்த வளம் பொருந்திய காடுசேரப் பெற்றுள்ள.*

**நீடாகமங்கடக்கும்**

**நீடு ஆகமம் கடக்கும்** - *நீண்ட ஆகமங்கட்கு மேலாக விளங் கும்*

**நீள் தாகம் அங்கு அடக்கும்** - *நீண்ட நீர்வேட்கையினை அவ் விடத்திலே அடங்கச் செய் யும்.*

**நீடாக்கணங்கடுக்கும்**

**நீடா கணம் கடுக்கும்** - *நீளுத லில்லாமல் கணப்பொழுதைப் போன்றிருக்கும்.*

**நீள் தாக்கணங்கு அடுக்கும்** - *பெருமையை உடைய திரு மகள் சேர்ந்திருக்கும்.*

**நீடாம்பிரபலஞ்சேர்**

**நீள் தாம்பிர பலம் சேர்** - *மிகுந்த செம்பாகிய பலனைச் சேரு கின்ற.*

**[illegible] ஆம் பிரபலம் சேர்** - *நெடுங் காலம் நிலைநிற்பதாகிய பெரு மையை அடையும்.*

**நீடு ஆம்பிர பலம்சேர்** - *நீண்ட மாம்பழங்களைப் பொருந்தி யுள்ள.*

**நீட்டித்துறக்கமுற்றும்**

**நீட்டித்து உறக்கம் முற்றும்** - *நீண்ட நேரம் உறக்கத்தில் பொருந்தும்.*

**நீட்டி துறக்க முற்றும்** - *நீண்டு விண்ணுலகத்தை அடையும்.*

**நீதம் கையாய் என்னும்** - *அற நெறியை வெறுக்காதே என்று கூறும்.*

நீ தங்கை ஆய் என்னும் - நீ தங்கையாகவும் தாயாகவும் கொள் என்று கூறும்.

**நீதாதாவாவென்னும்**

நீ தாதாவா என்னும் - நீ கொடையாளியா என்று சொல்லி இகழும்.

நீ தா தா வா என்னும் - நீ கொடு கொடு கொடுப்பதற்கு வா என்று கூறும்.

**நீதிகைப்பற்றுறுகென்**

நீதி கைப்பற்றுறுக என் - அறிநெறியைக் கைக்கொள்ளுவாயாக என்னும்.

நீ திகைப்பு அற்று உறுக என் - நீ மயக்கம் நீங்கி விளங்குக என்னும்.

**நீத்தவரையேய்க்கும்**

நீத்தவரை ஏய்க்கும் - இல்லறம் நீத்தவரை மீண்டும் அதிற் பொருந்தச் செய்யும்.

நீத்தவரை ஏய்க்கும் - வெள்ளங்களையுடைய மலைக்கு ஒப்பாக விருக்கும்.

**நீத்துவல்லார்வந்தடுக்கும்**

நீத்து வல் ஆர்வம் தடுக்கும் - துறந்து கடினமான ஆசைகளைத் தடுக்கும்.

நீத்து வல்லார் வந்து அடுக்கும் - நீந்துவதிலே வல்லவர்கள் வந்து பொருந்தும்.

**நீபத்தாகத்தாவென்**

நீ பத்தா கத்தா என் - நீ கணவன் கடவுள் என்று சொல்லும்.

நீபத்து ஆகத்தா என் - கடப்பமாலையை அணிந்த மார்பையுடையவனே என்கிற.

நீ பத்து ஆக தா என் - நீ பத்தாகக் கொடு என்னும்.

**நீராவியென்றுமுறுஉம்**

நீர் ஆவி என்றும் உறூஉம் - தண்ணீர் பொருந்திய தடாகத்தை எப்பொழுதும் பெற்றிருக்கும்.

நீர் ஆவி என்றும் உறூஉம் - நீங்கள் உயிராவீர் எனவும் கூறிப் பொருந்தும்.

**நீராம்பலியையுறும்**

நீர் ஆம்பல் இயையுறும் - நீரிலுள்ள ஆம்பல் மலரைப் போன்றிருக்கும்.

(செந்) நீர் ஆம்பலியை உறும் - குருதியாகிய பலியைப் பெறும்.

**நீரினுரைநேர்விரெனும்**

நீரின் நுரை நேர்விர் எனும் - நீரின் நுரையைப் போல இழிந்தவர்களாவீர்கள் என்று கூறும்.

நீர் இன் உரை நேர்விர் எனும் - நீங்கள் இனிய உரை கூறுவீர்களாக என்று சொல்லும்.

**நீர்க்கார்மணற்கடுக்கும்**

நீர் கார் மணல் கடுக்கும் - தண்மையை உடைய கரிய மணலை ஒத்திருக்கும்.

நீர்க்கார் மணற்கு அடுக்கும் - நீரையுண்ட முகில் அலங்கரித்தற்கு அடுத்ததுபோல அடுக்கும்.

**நீர்க்கிரீடிக்குறுஉம்**

நீர் கிரீடிக்குறும் - நீர் விளையாடலுக்குப் பொருந்தும்.

நீர் கிரீடிக்கு உறும் - நன்னீர்மையுடைய அரசனுக்குப்பொருந்தும்.

**நீர்க்கொண்டலலையுறும்**

**நீர்க்கொண்டு அல்லலை உறும்** - *நீர்க்கோவை கொண்டு துன் பத்தை அடையும்.*

**நீர்க்கொண்டல் அலையுறும்** - *நீர் கொண்ட முகில் அலையும்.*

**நீர்பிரியமாள்வுறுமென்**

**நீர் பிரியம் ஆள்வுறும் என்** - *நீங்களை எம்மிடத்தில் விருப் பத்தைக் கொண்டருளுங்கள் என்று கூறும்.*

**நீர் பிரிய மாள்வு உறும் என்** - *குருதி நீர் நீங்க எங்களுக்குச் சாவு வரும் என்கிற.*

**நீர்வேட்கைமிக்கீரென்**

**நீர்வேட்கை மிக்கீர் என்** - *தண் ணீர்த் தாகம் அதிகம் உடை யவராக இருக்கிறீர் என்னும்.*

**நீர் வேட்கு ஐ மிக்கீர் என்** - *நீர் காமனைப் பார்க்கிலும் அழகு மிகுந்தவராக இருக்கிறீர் என்று கூறும்.*

**நீலங்கையினும்**

**நீல் அம்கையினும்** - *கருநிற நீரைக் கையிறைலும்.*

**நீலம் கையினும்** - *நீலப் பூவைக் கையிறைலும்.*

**நீ லங்கையினும்** - *நீ இலங்கை யென்னும் ஊரினும்*

**நீலங்கையேந்தல்**

**நீ லங்கை ஏந்தல்** - *நீ இலங்கா புரியின் அரசன்.*

**நீலம் கை ஏந்தல்** - *நீலத்தைக் கையில் ஏந்தாதொழிக.*

**நீலத்தையுற்று**

**நீலத்தை யுற்று** - *கருங்குவளை மாலையைப் பொருந்தி.*

**நீ லத்தையுற்று** - *நீ அருள் கொண்டு.*

**நீலமணிவானந்தேய்**

**நீலம் அணிவால் நந்து ஏய்** - *நீல மலரில் அழகிய வெள்ளிய சங்குகள் பொருந்தியிருக் கின்ற.*

**நீலமணி வானம் தேய்** - *நீலநிறத் தையுடைய அழகிய விண் ணைத் தேய்க்கிற.*

**நீலவணனேர்வையெனும்**

**நீலவணன் நேர்வை எனும்** - *திருமாலுக்கு ஒப்பாவாய் என்று கூறும்.*

**நீ லவணம் நேர்வை எனும்** - *நீ முதலிலே உப்பை வைப்பா யாக என்று கூறும்.*

**நீவாரமேய்தரும்**

**நீ வாரம் மேய்தரும்** - *நீவாரம் என்னும் நெல்லை மேயும்.*

**நீவு ஆரம் ஏய்தரும்** - *கழிக்கப் பட்டமுத்துமாலைகள் பொருந் திக் கிடக்கும்.*

**நீழலென்றும்பெயரா**

**நீழல் என்றும் பெயர்ஆ** - *நீழல் என்றும் பெயர் பொருந்திய.*

**நீழல் என்றும் பெயரா** - *நிழல் எக்காலத்தினும் அதனை விட்டு நீங்காத.*

**நீளாசலமருஉம்**

**நீள் ஆசு அலமருஉம்** - *மிகுந்த குற்றத்தைத் தாங்கமாட்டா மல் வருந்தும்.*

**நீளாசலம் மருஉம்** - *நீலமலை போல் பொருந்தும்.*

**நீளாதேவிக்கடுக்கும்**
நீளாது விக்கு அடுக்கும் - *உயிர் நீண்ட நேரம் இல்லாமல் விச்சுலைப் பொருந்தும்.*
நீளாதேவி கடுக்கும் - *நீளா தேவியை ஒத்திருக்கும்.*

**நீளுமரவந்தலைபொருந்த**
நீளும் அரவம் தலைபொருந்த - *நீண்ட பாம்பு முடியில் இருக்க.*
நீளும் அரவம் தலைபொருந்த - *குறையாத பேரொலி இடமெங்கும் அமைய.*

**நீள்வான்படிந்து**
நீள்வான் படிந்து-*நீண்ட முகிலினிடத்திற் பொருந்தி.*
நீள் வான் படிந்து - *நீண்ட விண்ணிடத்திற்றங்கி.*

**நீறட்டிப்பாலனநேர்**
நீல்தட்டி பால் அன்னம் நேர் - *கூழைத் தடுத்துப் பாற்சோற்றைக் கொடுக்கின்ற.*
நீறு அட்டிப்பால் அன்னம் நேர்- *திருநீற்றை மிகுதியாகப் பூசி வெள்ளிய அன்னத்தைப் போல் விளங்கும்.*

**நீறுக்குமம்பகத்தன்**
நீறு ஆக்கும் அம்பகத்தன் - *(காமனை) நீறுக்கிய கண்ணை யுடையவன்.*
நீல்தாக்கும் அம்பு அகத்தன் - *நீலநிறந் தாக்கப்பெற்ற திருமாலாகிய அம்பைத் தம்மிடத்திலே உடையவர்.*

**நீறுதையலர்குளத்தேய்**
நீல் துதை அலர்குளத்து ஏய் - *நீலநிறம் நெருங்கிய பூவைக் குளத்திலே பொருந்திய.*
நீறு தையலர் குளத்து ஏய்-*திருநீறு பெண்களுடைய நெற்றியிலே பொருந்தப் பெறுகிற.*

**நீறுபட்டுடையுறூஉம்**
நீறுபட்டு உடை உறூம் - *திருநீற்றையும் பட்டாடையையும் உடையவர்களாக இருக்கும்.*
நீறுபட்டு உடையுறூஉம்-*நீருகி உடைந்தழியும்.*

**நீறுளிப்பூசித்துவக்கும்**
நீறு உள்ளி பூசி துவக்கும் - *திருநீற்றை மதித்துப் பூசிப் பூசையைத் தொடங்கும்.*
நீல் துள்ளிப் பூசித்து உவக்கும்- *துன்பு நீங்கி மகிழ்ந்து துள்ளிப் பூசித்துக் களிக்கும்.*

**நீற்றிற்சுவர்க்கநல்கும்**
நீற்றில் சுவர்க்கம் நல்கும் - *திருநீற்றினல் விண்ணுலகப் பேற்றைக் கொடுக்கும்.*
நீற்றில் சுவர்க்கு அம் நல்கும் - *சுண்ணும்பினல் சுவருக்கு அழகு கொடுக்கும்.*

**நுதற்றனவனிகர்**
நுதல் தானவன் நிகர் - *சொல்லப்படும் அசுரனை யொத்த.*
நுதல் தானம் வல்நிகர் - *நெற்றியாகிய இடம் சூதாடு கருவியைப் போன்ற.*

**நூலளவிட்டு**
நூல் அளவிட்டு - *நூலினல் அளவு செய்யப்பட்டு.*
நூல் அளவு இட்டு - *மறை முதலிய நூல்களை ஆராய்ந்தறிந்து.*

**நூல்புகலால்**

**நூல் புகலால்** - *நூலிற் புகழ்ந்து பேசப்படுகிறபடியால்.*
**நூல் புகலால்** - *நூலானது நுழைக்கப்படுதலால்.*

**நெஞ்சத்துருக்கன்**

**நெஞ்சத்து உருக்கன்** - *உள்ளத்திலே உருக்கம் உடையவன்.*
**நெஞ்சம் துருக்கன்** - *நெஞ்சத்தையுடைய முகமதியன்.*

**நெடியவானந்தொடுமேயும்**

**நெடிய வால் நங்தொடு மேயும்**- *நெடிய வெள்ளிய சங்குகளோடு மேய்கின்றன.*
**நெடிய வானம் தொடும் ஏயும்**- *நீண்ட வான வெளியளவு உயர்ந்து பொருந்தியிருக்கும்.*

**நெடுமாலாகினன்**

**நெடு மால் ஆகினன்** - *நீண்டு வளர்ந்த திருமால் ஆனன்.*
**நெடுமால் ஆனன்**-*மிகுந்த காம மயக்கம் உடையவனானன்.*

**நெடுமாலையடைந்தேன்**

**நெடுமாலை அடைந்தேன்** - *நீண்ட மாலையை அடைந்தேன்.*
**நெடுமாலை அடைந்தேன்**-*நீண்டு வளர்ந்த திருமாலைச் சேர்ந்தேன்.*

**நெட்டுருப்பண்ணவரா**

**நெடு உரு பண்ணவர் ஆ** - *நீண்ட உடலையுடைய திருமாலாக.*
**நெட்டுரு பண்ண வரா** - *மனப்பாடஞ் செய்தற்கு வராத.*

**நெய்குழல்வாய்ப்பெய்திடும்**

**நெய் குழல்வாய் பெய்திடும்** - *நெய்யைக் கூந்தலினிடத்தே சொரிந்திடும்.*
**நெய்குழல் வாய்ப்பு எய்திடும்** - *நெய்தற்குப் பயன்படும் குழல் கிடைக்கப்பெறும்.*

**நெய்தலைக்கணெய்தலுறும்**

**நெய் தலைக்கண் எய்தல் உறும்**- *நெய்யானது தலையிலே பொருந்தப்பெறும்.*
**நெய்தல ஐகண் எய்தல் உறும்** - *நெய்தல் மலரைப் போன்ற அழகிய கண்கள் அம்புபோல் எய்தலை அடைகின்றன.*
**நெய்தலைக்கண் எய்தலுறும்** - *நெய்தல்தொழில் செய்யுமிடத்தை அடையும்.*

**நெய்தனிலத்தியாழுறும்**

**நெய்தல் நிலத்து யாழ் உறும்** - *நெய்தல் நிலத்து யாழும் பொருந்தியிருக்கும்.*
**நெய்தனில் அத்தி ஆழுறும்** - *நெய்யில் யானை முழுகும்.*

**நெய்த்தோராணமையேய்**

**நெய்த்து ஓர் ஆணமை ஏய்** - *எண்ணெய் தடவப்பெற்று ஒப்பற்ற நீங்காத முகிலையொத்த.*
**நெய்த்தோரால் நாமை ஏய்** - *குருதிக் கறையினால் பார்ப்பவர்கட்கு அச்சத்தை உண்டாக்கும்.*

**நெய்யரியிற்கோதையுறும்**

**நெய் அரி இன்கோதை உறும்** - *நெய்யையும் வண்டுகளையும் உடைய கூந்தலைப் பெற்றிருக்கும்.*

நெய்யரியிற் கோதை உறும் - *பன்றுடையைப்போலச் சக் கையைப் பற்றிக்கொள்ளும்.*

### நெய்வார்த்தெரித்திடும்

நெய் வார்த்து எரித்திடும்-*நெய் யூற்றி எரிக்கப்பெறும்*

நெய்வார் தெரித்திடும் - *நெய் கின்றவர்களைத் தெரியுமாறு செய்திடும்.*

### நெருங்குவகையாலநடநீடு-நிலையால்

நெருங்கு உவகையால் நடம் நீடுநிலையால் - *மிகுந்த களிப் பினால் கூத்தாடுதலில் மிகுதி யான தன்மையால்.*

நெருங்கு வகையால் நட நீடு நிலையால் - *நெருக்கமுற்றிருக் கும் தன்மையால் நடப் பெற்று நீண்டு நிலைத்திருப் பதால்.*

### நெல்லிக்காய்மேன்மையுறூஉம்

நெல்லிக்காய் மேன்மை உறூம்- *நெல்லிக்காயின்மேல் முகில் தவழ்ந்து செல்லும்.*

நெல் இக்கு ஆய் மேன்மை உறூ உம் - *நெல் கரும்பைப்போல் உயர்ந்து வளர்ந்து சிறப்படை யும்.*

### நெற்றிகழலுறூஉம்

நெற்று இகழல் உறூம்-*முற்றிய காயைப் பழிக்கும்.*

நெற்றி கழல் உறூஉம் - *நெற்றி யில் அடி பொருந்தப்பெறும்.*

நெல் திகழல் உறூஉம்-*நெல் விளங்கப்பெறும்.*

### நெற்றிக்கண்முத்தனண்ணும்

நெற்றிக்கண் முத்தன் அண் ணும் - *நெற்றியிற் கண்ணை யுடைய முத்தனாகிய இறை வன் பொருந்தும்.*

நெற்றிக்கண் முத்தம் நண்ணும்- *உச்சியிடத்தே முத்துப் பொருந்தும்*

### நென்னற்பழனத்தா

நென்னல் பழம் நத்தா-*நேற்றுப் பழத்தை விரும்பாத.*

நெல் நல் பழனத்து ஆ - *நெல் லானது வயலிலே விளைகின்ற.*

### நேசிக்கப்பாப்பாடும்

நேசிக்க பாப் பாடும் - *விரும்பு மாறு செய்யுளைப் பாடும்.*

நே சிக்க பாப்பு(பாம்பு)ஆடும் - *அன்பு சிக்கப் பாம்பு ஆடும்.*

### நேமவுணர்வைப்படுக்கும்

நே மவுணர் வைப்பு அடுக்கும்- *அன்பினையுடைய கணவர் இருப்பிடத்தைச் சேரும்.*

நேம உணர்வைப் படுக்கும் - *ஒழுங்கு பொருந்திய அறி வைக் கெடுக்கும்.*

### நேமித்திடர்

நேமி திடர் - *கடலாகிய மேட் டிடம்*

நேமித்து இடர் - *அமைத்துத் துன்பம்*

### நேமிநாதம்படியா

நேமி நாதம் படியா - *கடலின் ஒலி சேரப்பெறாத.*

நேமிநாதம் படியா-*நேமிநாதம் என்னும் இலக்கண நூலைக் கற்காத.*

நேமி நாதம் படியா-*உருளையின் ஒலி பொருந்தாத.*

**நேயமனமடுக்கும்**

**நேயம் மனம் அடுக்கும்** - *நட்பினை மனத்திலே கொள்ளும்.*

**நேயம் அனம் மடுக்கும்** - *நெய்யினை உணவானது பொருந்தப்பெறும்*

**நேரங்கஞ்சப்பூக்கும்**

**நேர் அங்கு அஞ்சு அம்பு ஊக்கும்** - *நேரே அவ்விடத்தில் ஐந்து கணைகளைச் செலுத்தும்*

**நேரம் கஞ்சம் பூக்கும்** - *காலை நேரத்தில் தாமரை மலரும்.*

**நேரமுதுகிட்டிடும்**

**நேர முதுகிட்டிடும்** - *எதிர்க்க முதுகுகாட்டியோடும்.*

**நேர் அமுது கிட்டிடும்** - *(சேர்க்கையில்) நேரானபோது அமுதபானத்தைப்பெறும்.*

**நேரமுன்னையுற்றிடத்தாழ்**

**நேரமும் ஐ உற்றிட தாழ்** - *(எந்)நேரமும் தளர்வுற்றிடத் தாழ்கிற.*

**நேரமுன்னை உற்றிட தாழ்** - *(வெந்நேர) (முதுகைக்) காட்ட முன்னை நிலையடையுமாறு கணவர் வணங்குகிற.*

**நேரம்பிடிக்கையுறும்**

**நேர் அம்பிடிக்கை உறும்** - *ஒழுங்கான உவமானமாக அழகிய பெண்யானையின் துதிக்கை பொருந்தும்*

**நேரம் பிடிக்கை உறும்**-*(மாலை) நேரத்திலே பிடிக்கப்பெறும்.*

**நேர் அம்பு இடிக்கை உறும்** - *நேரான அம்பு தாக்குதலைப் பொருந்தும்.*

**நேராதவம்பொழியும்**

**நேராத வம்பு ஒழியும்** - *நேர்மையல்லாத வம்புச் செயல்களை நீங்கும்.*

**நேர் ஆதவம் பொழியும்** *மிகுந்த வெயிலைப் பொழியும்.*

**நேராத்தராசேறுடையார்**

**நேரா தராசு ஏறுடையார்** - *தராசு நேராதற்காக ஏறுதலுடையார்.*

**நேர் ஆத்தர் ஆசுஏறு உடையார்** - *நேரான ஆப்தர் (நண்பர்) விரைவாகச் செல்லும் எருதை உடையவர்.*

**நேராரணியங்கூர்**

**நேரார் அணி அங்குஊர்**-*பகைவர்களுடைய படை அவ்விடத்திற் செல்லுகிற.*

**நேர் ஆரணியம் கூர்** - *நேரான காடு மிகப்பெற்ற.*

**நேரானிலயமேய்**

**நேர் ஆன் நிலயம் ஏய்** - *நேராக நந்தியின் இருப்பிடம் பொருந்திய*

**நேர் ஆனிலயம் ஏய்** - *நேருகிற துனப ஒடுக்கத்தைப் பொருந்தப்பெறுகிற.*

**நேரிசைவெண்பாவைதுறும்**

**நேர் இசைவு எண் பாவை துறும்** - *உடன்பாடாகவே என்னுகிற பெண் மனைவியாகப் பொருந்தும்.*

**நேரிசை வெண்பா ஐது உறும்** - *நேரிசை வேண்பா அழகாகப் பொருந்தும்.*

**நேரியலைப்பொருவும்**

**நேரியல் ஐப்பு ஒருவும்** - *மாது துன்பத்தை நீக்கும்.*

நேரியனே பொருவும் - சோழனுக்கு நேராக விளங்கும்.

**நேரிழையார்க்கடுக்கும்**

நேரிழையார் கடுக்கும் - *செம்மையான அணிகலன்களை அணிந்த பெண்களை ஒத்திருக்கும்.*

நேர் இழையார்க்கு அடுக்கும் - *நேரான காரியங்களைச் செய்யாதவர்களுக்கு உண்டாகும்.*

**நேரினிலாத்தோற்றிடூஉம்**

நேரில் நில்லா தோற்றிடூஉம் - *நேரில் நிற்க முடியாமல் தோற்றுப்போகும்.*

நேர் இல் நிலா தோற்றிடும் - *ஒப்பற்ற திங்கள் தோன்றும் படி செய்யும்.*

**நேரேடுவாசிக்கும்**

நேரேடு வாசிக்கும் - *நாவற்பூவிதழ் மணக்கும்.*

நேர் ஏடு வாசிக்கும் - *நேரான ஏட்டைப் படிக்கும்.*

**நேர்கண்ணடியுறும்**

நேர் கண்ணடி உறும் - *கண்ணடிக்கு ஒப்பாக விளங்கும்.*

நேர் கண் அடி உறும் - *கண்ணுக்கு அடியிலே நேராகப் பொருந்தியிருக்கும்.*

**நேர்கந்துகத்தாக்கும்**

நேர் கந்து உக தாக்கும் *எதிரில் உள்ள கட்டுத்தறி சிதறுமாறு மோதும்.*

நேர் கந்துகத்து ஆக்கும் - *உவமையைப் பந்தினிடத்திலே செய்யும்.*

**நேர்கனவில்வந்தழைக்கும்**

நேர் கனவில் வந்து அழைக்கும் - *உண்டாகின்ற சொப்பனத்தில் வந்து கூப்பிடும்.*

நேர் கன வில்வம் தழைக்கும் - *ஒப்பாக மிகுந்த வில்வம் உண்டாகும்.*

**நேர்காற்றுவசமுறும்**

நேர்கால் துவசம் உறும் - *நேரும்பொழுது கொடி பொருந்தியிருக்கும்.*

நேர் காற்று வசமுறும் - *எதிரடிக்கிற காற்று வசமாகப் பொருந்தியிருக்கும்.*

**நேர்சொல்லிக்காக்குறும்**

நேர் சொல்லி காக்குறும் - *சரியானதைக் கூறிக் காப்பாற்றும்.*

நேர் சொல் இக்கு ஆக்குறும் - *நெற்பயிரைக் கரும்புபோல வளர்க்கும்.*

**நேர்நரைவாட்டாக்கழிக்கும்**

நேர்நரை வாள்தாக்கு அழிக்கும் - *எதிர்ப்படுகிறவர்களை வாளினது தாக்குதல் அழிக்கும்.*

நேர்நரை வாட்டா கழிக்கும் - *உண்டாகிற நரை வாட்டி வருத்தும்.*

**நேர்நிரையின்பாலூட்டும்**

நேர் நிரையின் பால் ஊட்டும் - *செவ்வையான பசுவின் பாலை உண்பிக்கும்.*

நேர்நிரை இன்பால் ஊட்டும் - *நேர்நிரை முதலிய அசைகளை இனிமையாகச் சேர்க்கும்.*

**நேர்ந்தழைக்கப்பெற்றிடும்**

நேர்ந்த தழைக் கப்பு எற்றிடும்- *நொய்ய இலைகளையுடைய (மரக்)கொம்புகளால் எற்றப் படும்.*

நேர்ந்து அழைக்கப் பெற்றிடும்- *விரும்பி எதிர்கொண்டழைக் கப்பெறும்.*

**நேர்பழங்கணட்டிடும்**

நேர்பழகள் நட்டிடும்-*கொடுக் கப்படும் பழமையான கள்ளை விரும்பும்*

நேர் பழங்கள் நட்டிடும் - *நல்ல பழங்களை முளைக்க வைப்ப தற்கு நடும்.*

நேர் பழங்கண் அட்டிடும்-*உண் டாகின்ற துன்பத்தைக் கெடுக்கும்.*

**நேர்புதனையுங்கொடுக்கும்**

நேர் புதனை உங்கு ஒடுக்கும் - *நேரான புதனை உவ்விடத்தில் அடக்கும்.*

நேர்பு தனையும் கொடுக்கும் - *உடன்பட்டு (உடல் பொரு ளாவியோடு)தன்னையுந்தரும்.*

**நேர்புறங்காட்டுறும்**

நேர் புறம் காட்டுறும் - *கணவர் முன் முதுகைக் காட்டும்.*

நேர் புறங்காட்டுறும் - *புறங் காட்டுறும் நேர் - புறங்கா டடையும் (பிணம்) போல்.*

**நேர்புனிதப்பந்துறவா**

நேர் புல்நிதம்பம் துறவா - *நேராகப் புல்லிய நிதம்பம் நீங்கப்பெறாத.*

நேர் புனிதம் பந்து உறவா - *நேரிய பண்புடைய சுற்றத் தினர் உறவாகவுள்ள.*

நேர்பு நிதம் பந்து உறவா - *எதிர்த்து நாள்தோறும் பந்து கள் குதிக்கின்ற.*

**நேர்வாயமுதமெனும்**

அமுதம் நேர்வாய் எனும் - *தண் ணீர் கொடுப்பாயாக என்று கேட்கும்.*

வாய் அமுதம் நேர் எனும்-*இத ழமுது தருவாயாக என்று கூறும்.*

**நேர்வாளமருந்தீ**

நேர்வாள் அமர் உம்-தீ-*நேரான வாட்போருந் தீயும்.*

நேர்வாள மருந்து ஈ - *நேர்வா ளம் என்னும் மருந்தைக் கொடுக்கின்ற.*

**நேர்வைக்கோற்போர்புரியும்**

நேர் வைக்கோல் போர் புரியும்- *நொய்ம்மையான வைக்கோ லைப் போராகப்போடும்.*

நேர் வை கோல் புரியும் - *நேரா கச் செல்லுகின்ற கூரிய அம்பைக்கொண்டு போர் புரியும்.*

**பங்கசம்**

பங்கசம் - *தாமரை.*

பங்கு அசம் - *பங்கில் உள்ள*

**பங்கமலையார்**

பங்கு அமலையார் - *பாகத்திலே உமாதேவியை உடையவர்.*

பங்கம் அலையார் - *(தீயவர்க ளுடைய) குற்றத்தைப் போக்கமாட்டார்.*

**பங்கமுகந்தலை**

பங்கம் முகந்து அலை - *சேற்றை அள்ளி அலையானது.*

பங்கம் உகந்து அலே - *பழுதாகிய செயல்களை விரும்பியலேகிற.*

பங்க! முகம் தலே - *பாகத்தி லிருப்பவனே! முகம் பொருந்திய தலே.*

பம் கமுகம் தலே - *நெருங்கிய பாக்குமரத்திடத்து.*

## பங்கையவாவி

பங்கை அவாவி - *பாகத்தினே விரும்பி*

பங்கய வாவி - *தாமரை பொருந்திய தடாகம்.*

## பசுவேதனைத்துறுவார்

பசு ஏதம் நைத்து உறுவார் - *ஆன்மாக்களின் குற்றத்தைத் தொலேத்து அவர்களிடத்தில் பொருந்துவார்.*

பசு வே தனே துறுவார் - *பசிய மூங்கிலிடத்திற் பொருந்தியிருப்பார்.*

## பச்செனுங்குழைசேர் அத்திக்கும்

பச்செனும் குழைசேர் அத்திக்கும் - *பச்சை நிறமாகிய சேறு பொருந்திய கடலினும்.*

பச்செனும் குழைசேர் அத்திக்கும் - *பச்சென்ற தளிர்சேர்ந்த அத்திமரத்துக்கும்.*

பச்செனும் குழைசேர் அத்திக்கும் - *பசுமையாகிய பொற்குழையணிந்த தாய்க்கும்.*

## பஞ்சமுகத்தான்

பஞ்ச முகத்தான் - *பஞ்சத்தின் தன்மையிஞல்.*

பஞ்ச முகத்தான் - *ஐந்து திருமுகங்களே உடையவன்.*

## பஞ்சவனாத்தத்தை

பஞ்சவனம்தத்தை - *ஐந்து நிறங்களேயுடைய கிளி.*

பஞ்ச அனத்தத்தை - *பஞ்சத்திஞல் ஏற்படுங் கேட்டை.*

பஞ்சவன் அத்தத்து ஐ - *பாண்டியனுடைய கையின் அழகு.*

## பஞ்சவிலக்கணமறிந்தார்

பஞ்ச இலக்கணம் அறிந்தார் - *எழுத்துச் சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்திலக்கணங்களேயும் உணர்ந்தவர்கள்.*

பஞ்ச இலக்கணம் அறிந்தார் - *பஞ்சத்தின் தன்மைகளேயெல்லாம் உணர்ந்தவர்.*

## பஞ்சாக்கரனுர்

பஞ்ச அக்கரனுர் - *ஐந்தெழுத்தை உடையவர்.*

பஞ்சு ஆக்கு அரனுர் - *பஞ்சாகச் செய்கிற சிவனுர்.*

## பஞ்சாங்கமோதி

பஞ்சாங்கம் ஓதி - *பஞ்சாங்கம் சொல்லி.*

பஞ்சாங்கம் ஓதி - *ஐந்து வகையான முடிச்சுக்களேயுடைய கூந்தல்.*

## பஞ்சானனத்தான்

பஞ்சான னத்தான் - *(நர)சிங்க வடிவமான திருமால்.*

பஞ்ச ஆனனத்தான் - *ஐந்து திருமுகங்களே உடையவன்.*

## படநாகத்து

படநாகத்து - *படத்தையுடைய பாம்பின் மீது.*

படநா கத்து - *பலவற்றை நாவிஞற் கத்துகிற.*

**படருமாமைமேற்கொண்டு**

படரும் ஆமை மேல்கொண்டு - *மிகுதியாக இருக்கின்ற ஆமைகளைத் தன் மேலிடத்திற் கொண்டு.*

படரும் மாமை மேல்கொண்டு- *பெருகி வருகிற பொன்னிறப் பசலையை உடலிலே கொண்டு.*

**படர்நீத்தவம்புலியான்**

படர் நீத்த அம் புலியான் - *படருந்தன்மையுள்ள வெள்ளமாகிய நீரைப்பொருந்தியவன்.*

படர் நீத்த அம்புலியான் - *துன்பம் விட்ட திங்களைச் சடையில் அணிந்தவன்.*

**படர்ந்தகொம்பு**

படர்ந்த கொம்பு - *மிகுந்த ஊது கொம்புகள்.*

படர்ந்த கொம்பு - *விரிந்த மரக் கிளைகள்.*

**படிதழுவும்**

படிதழுவும் - *நிலத்தைச் சூழ்ந்திருக்கும்.*

படிதழுவும் - *மிக ஆழமாக இருக்கும்.*

**படித்துறையுமாறும்**

படித்துறையும் ஆறும் - *இறங்கும் படிகள் பொருந்திய கரையும் ஆறும்.*

படித்து உறையுமாறும் - *படித்துக்கொண்டு தங்கியிருக்கும் படியும்.*

**படித்துறையும்பூந்தருவும்**

படித்துறையும் பூந் தருவும் - *நீராடும் படித்துறையும் இனிய இசைப்பாட்டும்.*

படித்து உறையும் பூந்தருவும் - *படித்துக்கொண்டு தங்கியிருக்கும் அழகிய மரமும்.*

**படிப்பையெடுத்திடலால்**

படிபை எடுத்திடலால் - *நிறுக்கும் படிக்கற்களுள்ள பையை எடுப்பதால்.*

படிப்பை எடுத்திடலால் - *கல்வி கற்றலை விட்டுவிடுதலால்.*

**படிப்போர்**

படிப்போர் - *உலகப்போர்.*

படிப்போர் - *நூல்களைக் கற்பவர்கள்.*

படிப்பு ஓர்-*படித்தலைத் தெரிந்துகொள்.*

**படிமேற்கொண்டவிருப்பாலும்**

படிமேற்கொண்ட விருப்பாலும்-*நிலத்தின் மேற்கொண்ட அவாவாலும்.*

படிமேற்கொண்டு அவிர் உப்பு ஆலும் - *படியின்மேலேறிக் கொண்டிருந்து விளங்குகின்ற உப்பு அசையும்.*

**படியதிலேஆர்ந்திடலால்**

படி அதிலே ஆர்ந்திடலால் - *நிலவுலகிலே பொருந்தியிருத்தலால்.*

படி அதிலே ஆர்ந்திடலால் - *ஏறும் படிக்கட்டுக்கள் அதிலே அமைந்திருத்தலால்.*

**படியாதவன்**

படியாதவன் - *கல்வி கற்காதவன்.*

படி ஆதவன் - *உலகில் திரியும் கதிரவன்.*

**படியேற்றமால்**

படி ஏற்ற மால் - *பகையாய் வந்தெதிர்த்த பெரிய.*

படி ஏற்ற மால் - *நிலத்தைத் தானம் வாங்கிய திருமால்.*

### பட்டப்பகல்செய்

பட்டப்பகல்செய் - *ஒளியை உடைய பகலாகச் செய்.*

பட்டு அப்பு அகல் செய் - *பொருந்தித் தண்ணீரானது அகலமாகச் செய்யும்.*

### பட்டவம்போருகந்தான்

பட்டம் அம்போருகம்தான் - *தாமரைப் பட்டங்களானவை.*

பட்டு அவம் போர் உகந்தான் - *பட்டொடாழியும் வீணை போரை விரும்பினான்.*

### பட்டாங்குசேரும்

பட்டாங்கு சேரும் - *உண்மை நூல் பொருந்தி விளங்கும்.*

பட்டு ஆங்கு சேரும் - *பட்டாடையானது அவ்விடத்திலே பொருந்தும்.*

### பணச்செருக்கால்

பணச் செருக்கால் - *பொருட் களிப்பினால்.*

பணச் செருக்கால் - *பாம்பின் படத்தைப் போன்ற அல்குலினது களிப்பால்.*

### பணவரவு

பண அரவு - *படத்தினையுடைய பாம்பு.*

பண வரவு - *பொருள் வருகை.*

### பணியாதவர்க்கு

பணியாதவர்க்கு - *வணங்காதவர்களுக்கு.*

பணி யாது அவர்க்கு - *அவர்கட்கு வேலை என்ன?*

பணி யாதவர்க்கு - *வணங்குகிற இடையர்கட்கு.*

### பணியாரந்தோசை

பணியாரம் தோசை - *பணியாரம் தோசை என்னுஞ் சிற்றுண்டிகள்.*

பணியார் அந்தோ சை-*வணங்க மாட்டார்கள் ஐயோ ஈதென்ன தீவினை.*

பணி ஆர் அந்து ஓசை - *பாம்பு மிகுதியான அந்து ஒலி.*

### பணியாரெடுத்து வரப்படைத்து

பணியார் அது எடுத்து வர படைத்து - *தொழிலாளர் அதனை எடுத்து வருகின்றவர்களுக்குக் கொடுத்து.*

பணி ஆரம் எடுத்து வர படைத்து - *வளைவுள்ள மாலைகளை எடுத்துவர உடையதாகி.*

### பணியாரம்

பணியாரம் - *ஒருவகைப் பலகாரம்.*

பணி ஆரம் - *அணிகலன்களும் முத்துமாலையும்.*

### பணியாற்று மூர்த்தியார்

பணி ஆற்றும் மூர்த்தியார்-*பணிவிடை செய்த மூர்த்தி நாயனார்.*

பணி ஆற்றும் மூர்த்தியார்-*ஆதி சேடனால் தாங்கப்பெறும் திருமேனியை உடையவர்.*

### பணிவிடையாரத்தர்

பணிவிடை ஆர் அத்தர்-*பணிவு பொருந்திய விடையில் ஏறும் தலைவர்.*

பணிவிடை ஆர் அத்தர் - *பணிவிடையைப் பெறுந்தலைவர்.*

**பண்டழைந்தவாரணத்தார்**

பண்டு அழைத்த வாரணத்தார்- முன்னொரு கூப்பிட்ட கசேந்திரனை உடையவர்.

பண் தழைத்த ஆரணத்தார் - இசை மிகுந்த மறையை உடையவர்.

பண்தழைத்த வாரணத்தார் - இசையொலி நிறைந்த மூங்கிற் குழாயை உடையவர்.

**பண்டழைத்துப்பாடுகென்றார்**

பண்டு அழைத்துப் பாடுக என்றார்-முன்பு அழைத்துப் பாடுவாயாக என்றார்.

பண் தழைத்துப் பாடுக என்றார்- இசை சிறந்து விளங்கப் பாடுவாயாக என்றார்.

**பண்டாரம்நண்ணும்**

பண்டாரம் நண்ணும் - துறவிகள் பொருந்தும்.

பண்டு ஆரம் நண்ணும் - பழமையான அணிகலன்கள் அமை

**பண்ணவனந்தம்**

பண்ண அனந்தம் - யுடைய கணக்கற்ற.

பண்ணவன் நந்தம் - பண்பாட்டினையுடையவன்நம்முடைய.

**பண்ணளிபாடலம்**

பண் நளி பாடலம் - கலணை செறிந்த குதிரை.

பண் அளி பாடல் அம் - பண்களை வண்டுகள் பாடும் அழகிய.

**பண்ணாடிவாழும்**

பண்ணாடி வாழும் - இசையை விரும்பி வாழும்.

பள் நாடி வாழும் - பள்ளுப்பிரபந்தத்தை விரும்பி வாழும்.

**பண்பரணிசேரும்**

பண் பரணி சேரும் - அழகிய செப்புகள் பொருந்தும்.

பண்பர் அணி சேரும் - மேலானவர்கள் வரிசையாகக்கூடும்.

**பண்பலவே**

பண் பலவே-இசை பலவாகும்.

பண்பு அலவே - ஏற்ற செயலன்றே.

**பண்புணருங்காலம்**

பண் புணரும் காலம் - இசைகள் ஒன்றுகூடுங் காலம்.

பண்பு உணரும் காலம் - அழகு முதலியவைகளை உணருகிற காலம்.

**பண்பைத்திருமலை**

பண்பு ஐ திரு மலை - பண்பாட்டையும் அழகையும் உடைய திருமகளைத் தாங்கிய.

பண்பைத் திருமலை - பண்புளிப்பட்டினத்தைச் சார்ந்த திருமலை.

**பதக்கவலதென்று**

பதக்கு அவலது என்று - பதக்கு அவலையுடையதென்று சொல்லி.

பதக்கம் வலது என்று - பதக்கத்தையணிந்த சூதாடு கருவியை உடையது என்று.

**பதங்கடந்தான்**

பதங்கள் தந்தான் - திருவடிகளைக் கொடுத்தான்.

பதங்கள் தந்தான் - சோறுகளை நூலால்.

பதம் கடந்தான்-பதவிகளுக்கு, சொற்களுக்கு அப்பாற்பட்டவன்.

**பதஞ்சலியாதவன்**

பதஞ்சலி யாதவன் - *பதஞ்சலி முனிவரும் யாதவகுலத்திற் பிறந்த திருமாலும்.*

பதம் சலியாதவன் - *அடிகள் நோகப்பெறாதவன்.*

**பதத்துக்களவிலை**

பதத்துக்கு அளவு இலை - *பதவிகளுக்கு எண் இல்லை.*

பதத்து க(ள்)ள இலை-*அடிகளில் தேன் பொருந்திய மலர்களையும் இலைகளையும்.*

**பதியாச்சேர்தல்**

பதி ஆ சேர்தல் - *இருப்பிடமாகக் கொள்ளுதல்.*

பதி ஆ சேர்தல் - *தலைவனாகப் பொருந்துதல்.*

**பதினெட்டு**

பதில் நெட்டு - *மறுமொழி நீளம்.*

பதினெட்டு - *ஈரொன்பது.*

**பத்தினியாயம்**

பத்தினி ஆயம் - *கற்புடை மகளிர் கூட்டம்.*

பத்தி நியாயம் - *பத்தி முறை.*

**பந்தங்கடிக்கும்**

பந்து அங்கு அடிக்கும் - *பந்தினை அந்த இடத்தே அடித்து விளையாடும்.*

பந்தம் கடிக்கும் - *பிறவியை வெறுக்கும்.*

**பந்தங்குலவும்**

பந்து அங்கு உலவும் - *பந்துகளானவை அவ்விடத்தில் விளங்கும்.*

பந்தம் குலவும் - *திவட்டிகள் சேரும்.*



**பந்தங்குலைக்கும்**

பந்து அங்கு உலைக்கும்-*பந்தை அங்கே வருத்தும்.*

பந்தம் குலைக்கும் - *அஞ்ஞான பந்தத்தைப் போக்கும்.*

**பந்தாடல்கண்டனம்**

பந்து ஆடல் கண்டனம் - *பந்து ஆடுதலைப் பார்த்தோம்.*

பந்து ஆடல் கண்டனம் - *பந்து போன்ற கொங்கை அசைதலைக் கண்டோம்.*

**பந்திப்பரியார்**

பந்திப்பு அரியார் - *பந்தத்தைத் தொலைக்கமாட்டார்.*

பந்தி பரியார் - *வரிசையான குதிரைகளை உடையவர்.*

**பயந்தருமின்புற்றணையும்**

பயம்தரும் இன்புற்று அணையும் - *பாலைக்கொடுக்கும் இன்பத்தோடு அணைதலைப்பெறும்.*

பயம்தரும் மின் புற்று அணையும் - *அச்சத்தைக் கொடுக்கும் ஒளி தங்கிய புற்றிலே நுழையும்.*

**பயந்தாரைவிட்டு**

பயம்தாரை விட்டு - *ஒழுங்காக நீரைப் பொழிந்து.*

பயந்தாரை விட்டு - *ஈன்றோர்களை நீங்கி.*

**பயந்தேற்றாய்**

பயம் தேற்றாய் - *அச்சத்தைத் தெளிவிப்பாயாக.*

பயந்து ஏற்றாய் - *தந்து பொருந்தினாய்; அஞ்சி ஏற்றுக்கொண்டாய்.*

**பயவாரணமே**

பய வாரணமே-*நீர்ப்பெருக்கையுடைய கடலே!*

பய வா ரணமே-மெதுவாக வா தன்பமே.

**பயவேலையமதித்தான்**

பய வேலையை மதித்தான்-பாற் கடலைக் கடைந்தவன்.

பயவேலையை மதித்தான் - அச்சம் பொருந்திய வேலையை ஒரு பொருளாக எண்ணியவன்.

**பயோதரம்**

பயோதரம்-நீரைத் தாங்கியுள்ள முகில்.

பயோதரம் - பாலைக் கொண்டுள்ள கொங்கை.

**பரசங்கரனுர்**

பரசு அம் கரனுர் - மழுவைக் கையில் உடையவர்.

பர சங்கரனுர் - மேலான சுகத்தைச் செய்பவர்.

பர சங்கரனுர் - சிறந்த அழித்தற் கடவுளாகவுள்ளவர்.

**பரசமயக்கோளரியார்**

பர சமயம் கோளரியார் - மேலான சமயக்கொள்கைகளை நீக்காதவர்.

பர சமயக்கோள் அரியார் - பிற சமயமாகிய யானைகளை ஒழிக்கும் அரிமாவைப் போன்றவர்.

**பரசமையத்தர்**

பரசு அமை அத்தர் - மழுப் பொருந்திய கையை உடையவர்.

பர சமையத்தர்-பிற சமயத்தில் உள்ளவர்கள்.

**பரசமையமுந்தடுப்பார்**

பரசமையமும் தடுப்பார் - பிற சமயங்களையும் தடுப்பவர்.

பரசு அமைய முந்து அடுப்பார்-போற்றுதல் பொருந்த முன்னே அடைபவர்.

**பரசுகவிதையாரும்**

பர சுக விதையாரும் - மேலான பரமசுகத்திற்கு விதையாக இருப்பவரும்.

பரசு கவிதையாரும் - புகழ்ந்து பாராட்டப் பெறுகிற திருப் பாடல்களை உடையவரும்.

**பரசேந்தனுமையன்**

பரசு ஏந்து அனுமையன் - பரசை யேந்திய அனுமையனாகிய சிவன்.

பர சேந்தனும் ஐயன் - மேலான சிவந்த நிறத்தினையுடையவனாகிய தலைவன்.

**பரதத்துவந்தான்**

பரம் தத்துவம் தான் - மேலான உண்மைப் பொருள் தானே யானவன்.

பரதத்து உவந்தான் - கூத்தாடுதலில் விருப்புற்றவன்.

**பரநாடகத்தார்**

பரம் நாடு அகத்தார் - பரத்தை நாடுகிற உள்ளத்திலே எழுந்தருளபவர்.

பர நாடகத்தார் - மேலான கூத்தினை இயற்றுபவர்.

**பரப்பணை**

பரப்பு அணை - பரப்புகளின் வரிசை.

பரப்பு அணை - விரிக்கப்பட்ட படுக்கை.

**பரமாதவர்பணி**

பரம் மாதவர் பணி - மேலான சிறந்த தவத்தினர் பணிகின்ற.

பரமாது அவர் பணி - பிறமாதர்களின் அணிகலன்கள்.

**பரமானந்தத்தை**

பரம ஆனந்தத்தை - மேலான இன்பத்தை.

பரம்மால் நம் தத்தை - பாரம் மயக்கந்தரும் நமது துன்பத்தை.

**பரவப்பாலப்பளம் நிறைத்து**

பரவ பால் அப்பளம் நிறைத்து - பாலையும் அப்பளத்தையும் மிகுதியாக உட்கொண்டு அமைத்து.

பரவ பால் அப்பு அளம் நிறைத்து-நிறைய வெண்மையான நீரை நிலத்திற்பெருக்கி.

**பரவரி**

பரவு அரி - பரவிய ரேகைகளை உடைய.

பரவு அரி - வணங்குகின்ற திருமால்.

**பரவாதிருக்கை**

பரவாது இருக்கை - போற்றுமல் இருத்தல்.

பர! வா திருக்கை - மேலானவனே! வருக அழகிய திருக்கைகளை.

பர வாது இருக்கை-பிறருடைய சொற்போல் இருத்தல்.

**பரவைக்கருணையத்தர்**

பரவைக்கு அருள் நயத்தர் - பரவைநாய்ச்சிக்கு அருள் செய்த நன்மையுடையவர்.

பரவை கருணை அத்தர்-கடலைப் போன்ற அருள் பொருந்திய தலைவர்.

**பரவையாலம்**

பரவை ஆலம் - கடலில் தோன்றிய நஞ்சு.

பரவு ஐ ஆலம் - போற்றப்படுகிற அழகிய கல்லால மரம்.

பரவையால் அம் - கடலால் அழகிய.

**பரவையின்கணடைந்து**

பரவையின்கண் அடைந்து - பரவைநாய்ச்சியார்பால் தூது போய்.

பரவையின்கண் அடைந்து - திருப்பாற் கடலின்கண்ணே எழுந்தருளி.

**பரவையுங்காட்டில்**

பரவையுங் காட்டில் - பரவை நாய்ச்சியாரையுங் காண்பித்தால்.

பரவையுங் காட்டில்-கடலையுங் காட்டினுல்,(கடலைப்போன்ற கண்ணையுங் காட்டினுல்.)

**பரிகாரந்தந்ததால்**

பரிகாரம் தந்ததால்-மருத்துவஞ் செய்ததால்.

பரிகாரம் தந்ததால் - கூந்தலைக் கொடுத்தபடியினுல்.

**பரிசிலை**

பரிசிலை - தாங்கிய வானவில்.

பரிசு இலை - தன்மை இல்லை.

**பரிபாலனத்தார்**

பரிபால் அனத்தார் - தாங்குகின்ற வெள்ளிய அன்னவாகனத்தை உடையவர்.

பரிபாலனத்தார் - காப்பாற்று உடையவர்.

**பருஞ்சக்கரமாவட்டமிட**

பரும் சக்கரம்மாவட்டம் இட - பெரிய சக்கரவாகப் பறவைகள் அழகுடன் வளைந்து பறந்து வர.

பரும் சக்கரமா வட்டம் இட - பெரிய சுற்றாக வளைந்து செல்ல.

**பருந்தனத்தார்**

பருந்து அனத்தார் - பருந்தை உடையவர், அன்னத்தை யுடையவர்.

பரும் தனத்தர் - பெருத்த கொங்கைகளையுடையவர்.

**பருப்பதமீதுமலருஞ்செங்காந்தள்**

பருப்பதம்மீது மலரும் செங்காந்தள் - மலையின்மீது மலர்தலை யுடைய செங்காந்தள்.

பருப்பதம் மீது மலரும் செங்காந்தள் - மலையைப் போன்ற கொங்கைகள் மீது விளங்கும் செங்காந்தள் மலரைப் போன்ற கைகள்

**பருப்புந்தனம்**

பருப்பு உம் தனம் - பருத்தலை யுடைய உம்முடைய கொங்கை

பருப்பு உந்து அனம் - பருப் போடு கூடிய சோறு.

**பருவமடுவிற்படிந்து**

பருஅம் மடுவில் படிந்து - பெரிய நன்னீருள்ள குளத்தில் மூழ்கி நீராடி.

பருவம் அடு வில் படிந்து - காலத்தைச் சேர்ந்த தனுசு லக்கினத்திற் சேர்ந்து.

**பலகறைவைத்து**

பலகறை வைத்து - பலவகைக் களங்கத்தைத் தன்னிடம் வைத்துக் கொண்டு.

பலகறை வைத்து - சோகிகளைக்

**பலகையிடும்**

பல கை இடும் - பல கைகள் விடப்பெறும்.

பலகையிடும் - மரப்பலகையை அமைத்துச் செய்யப்படும்.

**பலநாடகத்தார்**

பல நாடகத்தார் - பலவாகிய கூத்துக்களை உடையவர்.

பல நாடு அகத்தார் - பலவற்றை நாடுகிற உள்ளத்தையுடைய வர்.

பல நாடு அகத்தார் - பல நாடு களை உடையவர்.

பலம்நாடு அகத்தார் - பயனை நாடுகிற உள்ளத்தில் எழுந் தருளியவர்.

**பலமாதரையுமுருக்குதலால்**

பல மாதரையும் உருக்குதலால் - வலிமை பெருமையுடைய உலகத்தையுஞ் சுட்டு உருக்கு தலால்.

பலமாதரையும் உருக்குதலால் - பல பெண்களையும் வருத்தப் படுத்துவதால்.

**பலவம்பரத்தினை**

பல அம்பரத்தினை - பல ஆடை களை.

பலம் அம் பரத்தினை - பயனாகிய அழகிய வீடுபேற்றை.

**பலவாய்க்கேசங்காட்டி**

பல வாய்க்கே சங்கு ஆட்டி - பல இடங்களில் சங்குகளை அலைத்து

பல ஆய் கேசம் காட்டி - பல வகைத் தன்மையாய்க் கூந் தலைக் காண்பித்து.

**பலவாளையும்**

பல ஆளையும் - பல ஆட்களையும்.

பல வாளையும் - *பல வாளை மீன் களையும்.*
பல வாளையும் - *பல வாட்படை களையும்.*

**பலவிலை**

பல விலை - *பலவகையான விலை.*
பலம் இலை - *பழமும் இலையும்.*

**பலனிலை**

பலன் இலை - *பயன் இல்லை.*
பல் அல் நிலை - *பல துன்பங் களின் கொடுமை*

**பலிப்பாலனம்**

பலிப்பால் அனம் - *பிச்சையால் வந்த சோறு.*
பலிப்பால் அனம் - *பயனுடைய வெள்ளை அன்னப்பறவை.*

**பல்குதிரையும்**

பல் குதிரையும் - *பல குதிரை களும்.*
பல்கு திரையும் - *மிகுதியான அலைகளும்*

**பல்லவங்கள்சாரும்**

பல்லவங்கள் சாரும் - *தளிர்கள் சேர்ந்து விளங்கும்.*
பல்லவங்கள் சாரும் - *அம்புகள் பொருந்தும்.*

**பல்லவிகள்கூடும்**

பல்லவிகள் கூடும் - *இசைப் பாடல்கள் பொருந்தும்.*
பல் அவிகள் கூடும் - *பலவகை யான தேவருணவுகள் சேரும்.*

**பல்லாண்டுவந்தார்**

பல் ஆண்டு வந்தார் - *பல ஆண்டு கள் வந்தவர்.*
பல்லாண்டு உவந்தார் - *பல் லாண்டு என்னும் புகழ்நூலை உவந்துகொண்டவர்.*

**பல்லாரங்காட்டும்**

பல் ஆரம் காட்டும் - *பலவகை யான மாலைகள் காணப் பெறும்.*
பல்லார் அங்கு ஆட்டும் - *பலரை அவ்விடத்திலே வருத்தும்.*

**பல்லாரிருக்கவும்**

பல்லார் இருக்கவும் - *பற்களா னவை இருக்கவும்.*
பல்லார் இருக்கவும் - *பலர் இருக்கவும்.*

**பல்லியங்கண்மிக்கூர்**

பல்லி அங்கண் மிக்கு ஊர் - *பல்லிகள் அவ்விடத்திலே மிகுதியாக ஊருதலைச் செய் கிற.*
பல்லியங்கள் மிக்கு ஊர் - *வாத்தி யங்கள் மிகுதியாக முழங்கு கின்ற.*

**பவனம்பிருதிவி**

பவனம் பிருதிவி - *காற்றும் மண்ணும்.*
பவம் நம்பு இருதிவி - *நற் பிறப்பை நம்பு விண்ணுலகத் தில் இரு.*

**பழங்கழனிமைக்கும்**

பழம் கழனி மைக்கும் - *பழைய வயலை இளகச் செய்யும்.*
பழங் கழல் நிமைக்கும் - *பழைய செருப்புக்களுக்குமெருகிடும்.*

**பழங்கற்கண்டு**

பழம் கற்கண்டு - *பழமும் கற் கண்டும்.*
பழம் கல் கண்டு - *பழைய மலை யைப் பார்த்து.*

**பழநிமலைபாலன்**

பழநி மலை பாலன் - *பழநி மலையைக் காக்கும் முருகன்.*

பழ நிமலை பாலன் - *பழமையை உடைய உமையின் பிள்ளை.*

**பள்ளிகளையும்**

பள்ளி களையும் - *மருத நிலப் பெண்கள் பிடுங்கியெறியும்.*

பள்ளி களையும் - *பள்ளிக்கூடமானது போக்கும்.*

(I)

**பனித்துளி**

பனித் துளி - *பனியின் துளி.*

பனித்து உ(ள்)ளி - *நடுங்கி நினைந்து.*

**பன்மாமைசேரும்**

பல் மாமை சேரும் - *பல அழகு பொருந்தும்.*

பல் மாமை சேரும் - *மிகுந்த பெரிய துன்பம் பொருந்தும்.*

**பன்னகங்களிற்பிறந்து**

பல நகங்களில் பிறந்து - *பல மலைகளிலே உண்டாகி.*

பன்னு அகங்களில் பிறந்து - *கூறப்படுகிற வீடுகளில் தோன்றி.*

**பன்னகமேல்மேவுதலால்**

பல்நகம் மேல் மேவுதலால் - *பல நகக்குறிகள் மேலே பொருந்துகையால்.*

பன்னகம் மேல் மேவுதலால் - *பாம்புகள் மேலே ஊர்தலால்.*

பன்னகம் மேல் மேவுதலால் - *ஆதிசேடன் மேல் தங்கியிருத்தலால்.*

**பன்னகராசி**

பல்நகர் ஆசி - *பல்லின் முயற்சியால் கூறும் வாழ்த்து.*

பன்னகராசி - *பாம்பின் கூட்டம்.*

**பன்னுடைநிற்கும்**

பன்னுடை நிற்கும் - *வில்லின் நாணியானது விளங்கும்.*

பன்னுடை நிற்கும் - *மெல்லிய துணி அமைந்திருக்கும்.*

**பன்னுடைமூடு**

பன்னுடை மூடு - *பன்னுடையென்னும் செய்யரியால் மறைக்கப்பட்ட.*

பன் ஆடை மூடு - *புகழ்தற்குரிய ஆடையால் மூடப்பெற்ற.*

**பன்னுசனஞ்சார்**

பன்னுசனம் சார் - *முகில்கள் பொருந்தியுள்ள.*

பன்ன ஆசனம் சார் - *இலையுணவுகள் சேர்ந்துள்ள.*

**பன்னலந்தோன்றும்**

பன்னலம் தோன்றும் - *தெப்பங்கள் காணப்பெறும்.*

பன் ஆலம் தோன்றும் - *சொல்லப்படும் நஞ்சு விளங்குகிற.*

**பற்றலர்கடாழும்**

பற்றலர்கள் தாழும் - *பகைவர்கள் வணங்கும்.*

பற்று அலர்கள் தாழும்-*பொருந்திய மலர்கள் விளங்கும்.*

**பற்றியிருக்குநாணையும்**

பற்றியிருக்கும் நாணையும் - *சார்ந்திருக்கின்ற நாண் அசையும்.*

பற்றி இருக்கும் நாணையும் - *வேரூன்றியிருக்கும் நாணற்புற்களையும்.*

**பற்றினகரனுக்கு**

பல் தினகரனுக்கு - *கதிரவனுக்குப் பல்லானது.*

பற்றின கரனுக்கு - *பிடித்த கையை உடையவனுக்கு.*

15/ பணிக்காலம் நன்று

பணிக்காலம் நன்று – பணிக்காலம் நல்லது.

பணிக்கு ஆலம் நன்று - பணிக்கு நஞ்சு நல்லது

**பாகத்தகலார்**

பாகம் தகலார் - *பகுதி தகுதி யானவர்.*

பாகத்து அகலார் - *பாகத்தை விட்டு நீங்கமாட்டார்.*

**பாகத்திருக்கும்**

பாகத்து இருக்கும்-*இடப்பாகத்திலே இருக்கும்.*

பாகத்து இருக்கும் - *சுவையை உடைய இருக்குமறையும்.*

**பாகப்பாவை**

பாகப் பாவை - *செம்பாகமான பாடலை.*

பாகப் பாவை-*இறைவன் இடப் பாகத்தில் உள்ள உமாதேவி.*

**பாகமொழியார்**

பாகு அம் மொழி ஆர் - *பாகு போன்ற இனிய மொழி பொருந்திய.*

பாகம் மொழியார் - *சிறந்த மறைமொழிகளை உடையவர்.*

பாகம் ஒழியார் - *பக்கத்தை விட்டு நீங்கப் பெறாதவர்.*

**பாகிரதிநேரும்**

பாகிரதி நேரும் - *கங்கையைப் போல் விளங்கும்.*

பாகு இரதி நேரும் - *இனிய சொல்லையுடைய இரதியைப் போல் விளங்கும்.*

**பாசாங்குசமுந்தோற்றி**

பாச அங்குசமும் தோற்றி-*பாசக் கயிறு தோட்டி என்னும் படைகளைக்கையிற்கொண்டு.*

பாசு ஆம் குசமும் தோற்றி - *பசுமையாகிய தருப்பைப் புற்களை உண்டாக்கித் தெரியச் செய்து.*

**பாசுபதத்தார்**

பாசு பதத்தார் - *பசுமையான அறுகம் புல்லை உடையவர்.*

பாசு பதத்தார் - *பாசுபதம் என்னுங் கணையை அளித்தவர்.*

**பாடகங்களாரும்**

பாடகங்கள் ஆரும்-*காலணிகள் பொருந்தும்.*

பாடு அகங்கள் ஆரும் - *பாடும் இடங்கள் அமைந்திருக்கும்.*

**பாடகந்தண்டை**

பாடகம் தண்டை - *பாடகமுந் தண்டையும்.*

பாடு அகம் தண்டை - *பாடு கின்ற இடமாகிய நாளத்தை.*

**பாடப்பழகும்**

பாடு அப்பு அழகும்-*ஒலிக்கின்ற நீரின் அழகும்.*

பாடப் பழகும் - *இசைபாடுவதற்குப் பழக்கஞ் செய்யும்.*

**பாடலங்களாரும்**

பாடலங்கள் ஆரும் - *பாதிரி மரங்கள் நிறைந்திருக்கும்.*

பாடு அலங்கள் ஆரும் -*பெருமை பொருந்திய கலப்பைகள் அமைந்திருக்கும்.*

**பாடுமிசையாற்றனக்கும்பத்தால்**

பாடும் இசையால் தனம் கும்பத்தால் - *பலருஞ் சொல்லும் புகழாலும் பொன்னாற் செய்த கலசத்தாலும்*

பாடும் இசையால் தனம் கும்பத்தால் - *பாடாநின்ற இசையினாலும் தனங்களாகிய குடத்தினாலும்.*

**பாணரையுங்கண்டுகொள்வன்**

பாணரையும் கண்டுகொள்வன்- *பாணரையும் பார்த்துக் கொள்வேன்.*

பாணர் ஐயும் கண்டுகொள் வன் - *வண்டு (கண்)களின் அழகையும் பார்த்துக்கொள் வேன்.*

**பாணியார்வேணியார்**

பாணியார் வேணிஆர்-*கையை உடையவர், விண்ணிற் பொருந்திய.*

பாணிஆர் வேணியார் - *கங்கை நீர் பொருந்திய சடையை உடையவர்.*

**பாதகமலத்தினர்**

பாதகம் மலத்தினர் - *தீவினை யாகிய மலத்தையுடையவர்.*

பாத கமலத்தினர் - *திருவடித் தாமரையை உடையவர்.*

**பாதலமாரும்**

பாதலம் ஆரும் - *பாதாள உல கத்தை அடையும்.*

பா தலம் ஆரும்-*பாக்களானவை இடங்களிலே பொருந்தும்.*

**பாதவத்தன்**

பாத அத்தன் - *அடியையுடைய இறைவன்.*

பாதவத்தன் - *கல்லாலமரத் தின்கீழ் எழுந்தருளியவன்.*

**பாயசம்**

பாயசம் - *ஓர் இன்சுவைக்கஞ்சி.*

பாய் அசம் - *பாய்கிற ஆடு.*

**பாயுங்களிறு**

பாயும் களிறு - *பாய்கின்ற ஆண் யானை.*

பாயும் களிறு - *பரந்து செல்லு கின்ற கெளிற்றுமீன்.*

**பாரங்காட்டும்**

பாரம் காட்டும் - *கனத்தைக் காட்டுகிற.*

பார்அங்குஆட்டும்-*நிலத்தைஅவ் வவ்விடங்களில் அசைக்கும்.*

**பாரதங்காட்டும்**

பாரதம் காட்டும் - *பாரதம் என் னும் நூலைப் புலப்படுத்தும்.*

பார் அது அங்கு ஆட்டும் - *உலகத்தை அவ்விடத்திலே அசைத்து வருத்தும்.*

**பாரதிக்கும் புகலாவோட்டந்தரும்**

பார திக்கும் புகலா ஓட்டம் தரும் - *பெரிய திசைகளி லெல்லாம் புகுதலாகி ஓடி நிற்கும்.*

பாரதிக்கும் புகலா ஓட்டம் தரும் - *கலைமகளுக்கும் உள் ளடங்கி யிருத்தற்குத் தன் நாவை இடமாகத் தரும்.*

**பாரத்தனமலைபாகன்**

பார் அத்தன் அம்மலைபாகன் - *உலகத்திற்கிறைவன், அழ கிய வெள்ளிமலையின் பக்கத் தில் இருப்பவன்.*

பாரம் தனம் மலைபாகன் - *பார மான தனங்களாகிய மலையை உடைய உமாதேவியைப் பாகத்திற் கொண்டவன்.*

**பாரத்திருந்தவிடக்கயமும்**

பாரத்து இருந்த இடக்கயமும் - *தேரிற் கட்டிய தேர்க்கொடி யும்.*

பாரம் திருந்து அவிடம்கயமும்- *நீர்க்கரையாகிய திருந்திய அவ்விடத்துள்ள கெண்டை மீனும்.*

**பாரமரிவை**
பாரம் அரிவை - *பெண் சுமை யாவள்*
பார் அமர் இவை-*போர்களான இவைகளைப் பார்.*

**பாரிசாதஞ்சேர்**
பாரிசாதம் சேர் - *பாரிசாதமரஞ் சேர்ந்திருக்கும்.*
பாரி சாதம்சேர் - *பாரியைப் போல் மகிழ்வுடன் விளங்கும்.*

**பாரிடந்துன்னடி**
பார் இடந்து உன் அடி - *நிலத்தைத் தோண்டி உன்னுடைய அடிகளை.*
பார் இடம் துன் அடி - *முத்தியாகிய இடத்தைப் பார் திருவடியைச் சேர்.*

**பாரிடமேவிய**
பாரிடம் ஏவிய - *பூதப்படைகளை ஏவிய.*
பார் இடம் மேவிய - *நிலத்தினிடத்திலே பொருந்திய.*

**பாரினகைசெய்ய**
பாரில் நகை செய்ய - *உலகத்தார்க்கு அணிகலன்கள் செய்யும் பொருட்டு.*
பாரி நகை செய்ய - *மனைவியானவள் எள்ளி நகையாட.*

**பார்க்கவிகள்சேரும்**
பார்க்கவிகள் சேரும் - *திருமகளிர்கள் சேர்ந்து விளங்கும்.*
பார்க்க அவிகள் சேரும்-*காணுமாறு அவியுணவுகள் பொருந்தும்.*

**பார்க்கவிதையுட்கொளலால்**
பார் கவிதை உட்கொளலால் - *பூமியிற் பலர் பாடும் பாட்டை மனங்கொள்ளுதலால்.*
பார்க்க விதை உட்கொளலால்- *பார்க்கும்படி விதையைச் சாப்பிடுதலால்.*

**பார்த்தாண்டவனூர்**
பார் தாண்டவனூர்-*தில்லைப் பூமியில் திருக்கூத்தைச் செய்பவர்.*
பார்த்து ஆண்டவனூர்-*பார்த்து அருள் செய்தவர்.*

**பார்ப்பாரத்தம்உறப்படைத்தார்**
பார்ப்பார் அத்தம் உற படைத்தார்-*அந்தணர்கள் செல்வம் பொருந்தப் பெற்றூர்கள்.*
பார்ப்பார் அத்தம் உற படைத்தார் - *கண்கள் கை பொருந்தச் செய்தனர்.*

**பார்ப்பாருஞ்சக்கிலியாய்த்திரிந்தார்**
பார்ப்பாரும் சக்கு இலியாய் திரிந்தார்-*கண்களும் பார்க்க முடியாமல் மாறுபட்டன.*
பார்ப்பாரும் சக்கிலியாய்த்திரிந்தார் - *அந்தணர்களும் சக்கிலிய குலத்தினராயினர்.*

**பார்ப்பார்**
பார்ப்பார் - *பார்க்கின்றவர்கள் (கண்கள்).*
பார்ப்பார் - *மறையினைப் பார்க்கும் அந்தணர்.*

**பாலத்திருக்கழலார்**
பாலம் திருக்கு அழலார் - *நெற்றியில் உள்ள கண்ணைத் தீயாக உடையவர்.*
பாலம் திரு கழலார் - *காபாலம் என்னுங் கூத்தைச் செய்கிற திருவடியை உடையவர். பாலம் - காபாலம்; முதற் குறை.*

**பாலனஞ்செய்**

பால் அனம் செய் - *வெள்ளிய அன்னங்கள் வயலின்.*

பாலனம் செய் - *பாதுகாத்தலைச் செய்.*

**பாலனத்தைவிடுத்தனள்**

பால் அனத்தை விடுத்தனள் - *பாலுஞ் சோறும் உண்பதை விட்டுவிட்டாள்.*

பால் அனத்தை விடுத்தனள் - *வெள்ளிய அன்னத்தைத் தூதாக அனுப்பினள்.*

**பாலனமேயாரும்**

பால் அனமே ஆரும் - *வெள்ளிய அன்னப் பறவைகளே பொருந்தியிருக்கும்.*

பால் அனமே ஆரும் - *பாற் சோற்றையே உண்ணும்.*

**பாலார்கலியுடையார்**

பால் ஆர்கலி உடையார் - *இடத்தில் பொருந்திய கலியைப் போக்கமாட்டார்.*

பால் ஆர்கலி உடையார் - *பாற் கடலை உடையவர்.*

**பாலிக்குநேர்**

பாலிக்கும் நேர் - *கொடுக்கும் நேர்மையை உடைய.*

பால் இக்கு நேர் - *பாலையுங் கரும்பையும் போன்ற.*

**பாலுறலால்**

பால் உறலால் - *பாலைப் பொருந்துதலால்.*

பால் உறலால் - *பாற்கடலில் பள்ளிகொண்டிருத்தலால்.*

**பாலைக்குடிபோ**

பாலை குடிபோ - *சென்று பாலைக் குடிப்பாயாக.*

பாலை குடி போ - *பாலை நிலத்திற் குடியாகப் போயிரு.*

**பாலையை**

பால் ஐ ஐ - *ஐந்து பகுப்பாகிய கூந்தலை.*

பாலையை - *பாலை நிலத்தை.*

**பாவகவல்செய்யும்**

பா அகவல் செய்யும் - *பரவிய கூவுதலைச் செய்யும்.*

பா அகவல் செய்யும் - *அகவற் பாடல்களை இயற்றும்.*

**பாவசங்களாரும்**

பாவசங்கள் ஆரும் - *காம உணர்ச்சிகள் பொருந்தும்.*

பாவு அசங்கள் ஆரும் — *பரவிய ஆடுகள் சேரும்.*

**பாவருணைக்கடுத்தார்**

பா வருணைக் கடுத்தார் - *பரவிய வருணதேவனைச் சினந்தவர்.*

பா வருணைக்கு அடுத்தார் - *பாட்டின்புகழ்ச்சிவருணைக்குப் பொருந்தியவர்.*

**பாவலர்தூற்றும்**

பாவலர் தூற்றும் - *புலவர்கள் பரப்பும்.*

பா அலர் தூற்றும் - *பரவும் பழிச் சொல்லைப் பேசும்.*

**பாவாதரிப்பார்**

பாவாது அரிப்பார் - *பரவாமல் கெடுப்பார்.*

பா ஆதரிப்பார் - *பாடலை விரும்புவார்.*

**பாவுகமாகும்**

பாவுகம் ஆகும் - *நன்றாக விளங்கும்.*

பா உகம் ஆகும் - *பரவிய ஊழிக்காலமாக முடியும்.*

**பாவைக்களிப்பார்**

பாவை களிப்பார்-*செய்யுளுக்கு மகிழ்வார்.*
பாவைக்கு அளிப்பார் - *பெண்ணுக்குக் கொடுப்பார்.*

**பாளையங்களாரும்**

பாளையங்கள் ஆரும் - *படைகள் பொருந்தும்.*
பாளை அம்கள் ஆரும் - *பாளையினிடத்திலே இனிய கள்ளினையுண்ணும்.*

**பாற்சங்கரியார்**

பால் சங்கு அரியார்-*வெள்ளிய சங்கையேந்திய திருமால்.*
பால் சங்கரியார் - *பக்கத்திலே சங்கரியை உடையவர்.*

**பானத்தேனை**

பான தேனை - *பருகும்படியான தேனை.*
பால் நத்தேனை - *பாலை விரும்பாத என்னை.*

**பானலம்போருக**

பானல் அம்போர் உக - *கருங்குவளைக் கணையை உடைய காமன் கெடும்படி.*
பால்நல் அம்பு ஓருக - *பகுதிப்பட்ட நல்ல முகில்களானவை அறிந்துகொள்க.*

**பானலங்கண்ணி**

பானல் அம் கண்ணி - *கருங்குவளை மலரைப் போன்ற அழகிய கண்ணையுடையவள்.*
பால் நலம் கண்ணி - *பாலின் சிறப்பை நினைத்து.*
பானல் அங்கு அண்ணி - *கருங்குவளை அவ்விடத்திலே பொருந்தி.*

**பிண்டியையவனநாறியவில்லம்**

பிண்டி ஐவனம் நாறிய இல்லம்- *தினை மாவும் மலைநெல்லும் பொருந்திய வீடுகள்.*
பிண்டி ஐவனம் நாறிய வில்லம்- *அசோகும் அழகிய சுனை நீரும் மணம் வீசும் வில்வ மரமும்.*

**பிண்ணுக்குமுண்டாம்**

பிண்ணுக்கும் உண்டாம்-*பின்னுக்கும் (எள்ளிலிருந்து) தோன்றும்.*
பிள் நாக்கும் உண்டாம் - *(பாம்புக்கு) பிளவுபட்ட நாவும் இருக்கும்.*

**பித்தர்முடியேறும்**

பித்தர்முடி ஏறும் - *பைத்தியம் பிடித்தவர்கட்குத் தலையில் தேய்க்கப்பெறும்.*
பித்தர்முடி ஏறும் - *சிவபெருமானுடைய திருமுடியிலே வைக்கப்பெறும்.*

**பின்போதியென்றால்**

பின் போதி என்றால் - *பிறகு போவாயாக என்று சொன்னால்.*
பின் போதி என்றால் - *பிறகு போதிப்பாயாக என்று சொன்னால்.*
பின்பு ஓதி என்றால் - *பின்னுள்ளது கூந்தல் என்று அதனைக் காட்டினால்.*

**பின்னலிலங்க**

பின் அல் இலங்க-*பிறகு இரவுப் பொழுதில் விளக்கமுற.*

பின்னல் இலங்க - பின்னிய சடை அழகாக விளங்க.

**பின்னுமோதியவம்புகுமே**

பின்னும் ஓதி அவம் புகுமே - பின்னப்படுகிற கூந்தல் வீணில் அவிழ்ந்து விழும்.

பின்னும் மோதிய அம்பு உகுமே - பிறகும் மோதும் பொருட்டு அம்பைச் சிந்தும்.

**பின்னையான்**

பின்னையான் - நப்பின்னைப் பிராட்டியை உடையவன்.

பின்னை யான் - பிறகு நான்.

பின் நையான் - பிறகு வருந்தான்.

**பீசத்தைநாட்டுவன்**

பீசத்தை நாட்டுவன் - பிசாக்கரத்தை எழுதுவேன்.

பீசத்தைநாட்டுவன்- கோசத்தை அழுத்துவேன்.

**புக்களவித்தாக்கும்**

புக்கு அளவி தாக்கும் - புகுந்து கலந்து தாக்குதலைச் செய்யும்.

புக்கள் அவித்து ஆக்கும்-அவாக்களைக் கெடுத்துச் செய்யும்.

**புங்கவரையாக்கவரும்**

புங்கவரை ஆக்கவரும் - தேவரைப் பெருகச் செய்ய வரும்.

புங்கம் வரையா கவரும் - உயர்ச்சியுள்ள மலையாக உள்ளுணரும்.

**புடைக்கும்புடைக்குந்துரைத் - தனந்தர**

புடைக்கும் புடைக்கும் துரைத் தனம் தர-வழிவழி முறைக்கு அரசாட்சியைக் கொடுக்க.

புடைக்கும் புடைக்கும் துரைத் தனம் தர - மேன்மேலும் பெருக்கின்ற உயர்வாகிய தனத்தைக் கொடுக்க.

**புட்கரங்கடுக்கும்**

புட்கரம் கடுக்கும் - விண்ணை யொக்கும்.

புட்கு அரங்கு அடுக்கும்-வண்டுகளுக்கு இருக்கையாக அடுக்கும்.

**புட்டரிக்கவீறும்**

புட்டு அரிக்க வீறும் - துண்டித்துச் சிதைக்க மலரும்.

புள்தரிக்க வீறும் - அன்னங்கள் தங்கப் பெருமையடையும்.

**புட்பங்கயமாரும்**

புட்பம் கயம் ஆரும் - மலர்கள் தடாகத்தில் பொருந்தும்.

புள் பங்கயம் ஆரும் - பறவைகள் தாமரை மலரிற் பொருந்தும்.

**புட்பஞ்சரஞ்சேர்**

புட்பம் சரம் சேர் - மலரானது மாலையாகச் சேருகின்ற.

புள் பஞ்சரம் சேர் - பறவையானது கூட்டைச் சேருகின்ற.

**புட்பரதங்காட்டும்**

புள் பரதம் காட்டும் - மயிலாகிய பறவை கூத்தினைச் செய்யும்.

புட்பரதம் காட்டும் - புட்பக விமானத்தைக் காட்டும்.

**புண்டரிகமல்கும்**

புண்டரிகம் அல்கும் - புலியானது தங்கும்.

புண்டரிகம் மல்கும் - தாமரைகள் நிறையும்.

**புண்டரிகம் பிணைமேற்பாயத்தந்தி புறப்பட்டது**

புண்டரிகம் பிணைமேல் பாய தந்தி புறப்பட்டது - *புலியானது பெண் மான்மேற் பாய யானையானது வெளிப்பட்டது.*

புண்டரிகம் பிணைமேற் பாய தந்தி புறப்பட்டது - *தாமரை மலர் போன்ற கையானது பெண் மானைப் போன்ற கண் மேற்செல்ல யானையைப் போன்ற கொங்கை வெளியாகக் காணப்பட்டது.*

**புண்ணியமங்குலவும்**

புண்ணியம் அங்கு உலவும் - *நல்வினையானது அவ்விடத்திலே விளங்கும்.*

புள் நியமம் குலவும் - *கிளிப் பறவையானது வனங்களிற் சுற்றும்.*

**புத்தகமலர்ந்திடும்**

புத்து அகம் மலர்ந்திடும்-*புதிய மனைகள் சிறந்து விளங்கும்.*

புத்தகம் மலர்ந்திடும்-*நூல்கள் விரித்துப் படிக்கப்பெறும்.*

**புத்தகமே நோக்கும்**

புத்தகமே நோக்கும் - *நூல்களையே பார்க்கும்.*

புத்து அகமே நோக்கும் - *புற்றாகிய இருப்பிடத்தையே பார்க்கும்.*

புத்து அகமே நோக்கும் - *புதிய வீட்டையே தேடும்.*

**புத்தரவமாற்றும்**

புத்து அரவம் ஆற்றும் - *புற்றிலுள்ள பாம்பு செய்யும்.*

புத்தர் அவம் மாற்றும் - *புத்தர்களுடைய தீங்குகளைக்கெடுக்கும்.*

**புத்திக்கனையார்**

புத்திக்கு அனையார் - *அறிவுக்கு அத்தகையோர்.*

புத்து இக்கு அனையார் - *புதிய கரும்பைப்போல் இனியவர்கள்.*

**புத்திக்கு**

புத்திக்கு - *அறிவுக்கு.*

புது இக்கு - *புதிய கரும்பு.*

**புத்திரசம்பத்திவரும்**

புத்தி ரசம் பத்தி வரும் - *அறிவு இனிமையும் அன்பும் வரும்.*

புத்திர சம்பத்து இவரும்-*மக்கட்பேற்றின் செல்வம் மிகுதிப்படும்.*

**புயங்கலந்தான்**

புயம் கலம் தான் - *தோளின் அணிகலன்தான்*

புயம் கலந்தான் - *தோளைக் கலந்தான்.*

**புரந்தரனுடும்**

புரந்தரன் நாடும் - *இந்திரனுடைய உலகமும்.*

புரந்து அரன் ஆடும் - *காத்தருளிச் சிவன் ஆடுதலைச் செய்யும்.*

**புரவலர்**

புரவலர் - *அரசர்.*

புரம் வல்அர் - *நகரங்களில் சூதாடுவோர்.*

புரம் வல்அர் - *மார்பிடத்துள்ள சூதாடு கருவியைப் போன்ற கொங்கைகள்.*

## புரமாய்த்தவம்பகத்தன்

புரம் மாய்த்த அம்பகத்தன் - (காமனுடைய) உடலை யெரித்த கண்ணையுடையவன்.
புரம் மாய்த்த அம்புஅகத்தன் - முப்புரங்களை எரித்தொழித்த திருமாலாகிய அம்பைத் தன்னிடங் கொண்டவன்.

## புரிசையஞ்சக்கரம்

புரி சை அஞ்சு அக்கரம்-விரும்பும் குறிப்பாகிய அஞ்சு எழுத்து.
புரிசை அம் சக்கரம் - மதிலில் உள்ள அழகிய சக்கரம்.

## புரியாதவன்

புரியாதவன் - விளங்காதவன்.
புரி யாதவன் - முப்புரி நூலையுடைய இடையன்.

## புரிவார்சடையார்

புரி வார் சடையார் - கட்டப்பட்ட நீண்ட சடையை உடையவர்.
புரிவார், சடையார் - செய்வார், செய்வதற்குப் பின் வாங்கமாட்டார்.

## புல்பதத்தையாரும்

புல்பதத்தை ஆரும் - புலியினது அடியைப் பொருந்தும்.
புல் பதத்தை ஆரும் - புல்லரிசியின் உணவை உண்ணும்

## புல்லகண்டமாக்கும்

புல் அகண்டம் ஆக்கும் - சிற்றறிவைப் பேரறிவாகச் செய்யும்
புல்லகண்டம் ஆக்கும் - (கரும்பிரதத்தை) சர்க்கரையாகச் செய்யும்.

## புல்லர்களிடத்தில்நாடான்

புல்லர்கள் இடத்தில் நாடான் - இழிந்தவர்களுடைய இடத்திற்குச் செல்லமாட்டான்.
புல்லர்கள் இடத்தில் நாடான் - புல்லர்களோடு பழகுபவனாகிய சாணான்.

## புல்லிக்களிக்கும்

புல் இக்கு அளிக்கும் - புல்லாகின்ற கரும்பைக்கொடுக்கும்.
புல்லி களிக்கும் - சேர்ந்து மகிழும்.

## புல்லிக்குடையும்

புல்லிக் குடையும் - பொருந்தி நீராடும்.
புல் இக்கு உடையும் - தோகையை உடைய கரும்புகள் உடையும்.

## புல்லைச்செங்கையிற்கொண்டாடும்

புல்லைச் செங்கையில் கொண்டு ஆடும் - புல்லைச் செவ்விய துதிக்கையிலே கொண்டு வீசும்.
புல்லை செங்கையில் கொண்டு ஆடும் - மானைச் சிவந்த கையிற் கொண்டு கூத்தாடும்.

## புறங்காணில்

புறம் காணில்-முதுகில் காணப்பட்டால்.
புறம்காணில் - தோற்றுப்போனால்.

## புறம்பயம்

புறம்பயம் - திருப்புறம்பயம் என்னும் ஊர்.
புறம் பயம் - முதுகின் பயன்.

லியையுந் தின்னும்

புல் இலையுந் தின்னும் - புல்லிப் பொருந்தி யுண்ணும்

புலியையும் தின்னும் - புலி என்னும் விலங்கையும்

காப்பரும்.

**புறவார்பனங்காட்டூர்**

புறவுஆர் பனங்காட்டு ஊர் - *முல்லை நிலங்கள் பொருந்திய பனங்காட்டூர் என்னும் ஊர்.*

புறம்வார் பனைகாட்டூர் - *முதுகின் பக்கமாக நீண்ட கூந்தற் பனையைக் காட்டும் இடம்.*

**புன்காலிகான்றழைக்கும்**

புன்காலி கான் தழைக்கும் - *காயா மரம் காட்டில் தழைக்கும்.*

புன்காலி கான்று அழைக்கும் - *சிறிய தலையீற்றுப் பசுக்கள் பால் சொரிந்து கூப்பிடும்.*

**புன்னகத்தோடார்**

புன்னகத் தோடு ஆர்-*புன்னை மலரின் இதழ்கள் பொருந்திய.*

புல் நாகத்தோடு ஆர் - *புலி பாம்போடு அமைந்த.*

**புன்னகமன்னும்**

புன்னகமன்னும் - *புன்னைமரம் பொருந்தியிருக்கும்.*

புல்நாகம் மன்னும் - *புலியும் யானையும் பொருந்தியிருக்கும்.*

**புன்னகமேவும்**

புன்னகமேவும் - *புன்னை மரங்கள் பொருந்தியிருக்கும்.*

புன் ஆகம் மேவும் - *புல்லிய மார்பில் பொருந்தும்.*

**புன்னைவளமடுக்கும்**

புல் நைவளம் அடுக்கும் - *புல்லிய நைவளம் என்னும் பண்ணைப் பாடும்.*

புன்னை வளம் மடுக்கும்-*புன்னை மரம் செழிப்பாக வளர்ந்திருக்கும்.*

**பூகதரங்கோங்கநல்கும்**

பூகம் தரம் கோங்கம் நல்கும் - *கமுகுக் கூட்டம் கோங்கு அழகைக் கொடுக்கும்.*

பூகதர் அங்கு ஓங்க நல்கும் - *புகழ்வோர் ஓங்கும்படி அவ்விடத்தே கொடுக்கும்.*

**பூகம்பொருவும்**

பூகம் பொருவும்-*கமுகமரத்தை ஒத்து விளங்கும்.*

பூ கம்பு ஒருவும் - *பூக்களும் சங்குகளும் நீங்கும்.*

**பூங்கிளைகள்மேவும்**

பூம் கிளைகள் மேவும் - *அழகிய கிளிகள் பொருந்தும்.*

பூம்கிளைகள் மேவும் - *அழகிய மரக்கிளைகளில் இருக்கும்.*

**பூட்டைதனைச்செய்யும்**

பூட்டை தனைச் செய்யும்-*இறை கூடையைச் செய்யும்.*

பூட்டை தனைச்செய்யும் - *எண்ணெய் ஆட்டச் செக்கினைச் செய்யும்.*

**பூணாரம்பூணும்**

பூண் ஆரம் பூணும்-*அணிகலன்களாக முத்துமாலைகளை அணியும்.*

பூண் நாரம் பூணும் - *அணிகலமாகத் தண்ணீரைப் பெற்றிருக்கும்.*

**பூண்டயங்கவிந்தாடும்**

பூண் தயங்க இந்து ஆடும் - *பூண் விளங்குமாறு திங்கள் அசையும்.*

பூண்டு அயம் கவிந்து ஆடும் - *அணிந்து குதிரைகள் கவிந்து நடிக்கும்.*

**பூதகஙகைககு**

பூத கங்கைக்கு - *தாய்மை பொருந்திய விண்ணாற்றிற்கு.*

பூ தகு அங்கைக்கு - *மலரை ஒப்பிடத்தக்க அழகிய கைக்கு.*

**பூதத்தார்**

பூ தத்தார்-*நிலவுலகிலே பிறவாதவர்*

பூதத்தார் - *பூதப்படையை உடையவர்.*

**பூதப்படையான்**

பூதப்படையான் - *பூதப்படைகளையுடையவன்.*

பூ தப்பு அடையான் - *பிறப்பாகிய தவற்றினை அடையப் பெறாதவன்;*

**பூதரங்கமோங்கும்**

பூதர் அங்கம் ஓங்கும் - *பூதர்களது அங்கம் நிலைபெறும்.*

பூதரம் கம் ஓங்கும் - *மலையின் மேல் அளாவியிருக்கும்.*

**பூதரத்தர்**

பூதரத்தர்-*மலையை உடையவர்.*

பூதர் அத்தர் - *பூதப்படைகளுக்குத் தலைவராகவிருப்பவர்.*

பூ தரத்தர் - *அழகில் மேம்பாட்டையுடையவர்.*

**பூதரமாங்கோதண்டன்**

பூதரம் ஆம் கோதண்டன் - *(மேரு) மலையாகின்ற வில்லையுடையவன்.*

பூதர் அம் ஆங்கு ஓது அண்டன் - *பூதர்கள் அழகினை அவ்விடத்திலே ஓதிப்போற்றுகிற கடவுள்.*

**பூதிமிகப்பொலியும்**

பூதி மிகப் பொலியும் - *செல்வம் மிகுதியாக விளங்கும்.*

பூதி மிகப்பொலியும் - *திருநீறு நன்றாக ஒளி செய்யும்.*

**பூத்தவிருங்காலம்**

பூத்து அவிரும் காலம் - *பூத்து விளங்குகிற காலம்.*

பூத் தவிரும் காலம் - *பூத்தலை ஒழிகிற காலம்.*

**பூத்தழைக்கப்பாடும்**

பூ தழை கப்பு ஆடும் - *மலர்களும் தழைகளும் கவடுகளில் அலையும்.*

பூத்து அழைக்கப் பாடும் - *மகிழ்ச்சியடைந்து அழைக்கப் பாடுதலைச் செய்யும்.*

**பூத்தாறுடைக்கும்**

பூத்த ஆல் துடைக்கும்-*தோன்றிய ஆலமரமானது துடைக்கும்.* 110 X 3

பூத்தாறு உடைக்கும் - *பூவோடு கூடிய குலைகளை உடைத்தல் செய்யும்.*

**பூத்தானத்திற்கூடும்**

பூத்தானத்தில் கூடும் - *நிலக்கொடை பெறுதற்குச்சேரும்.*

பூத்தானத்திற்கு ஊடும் - *பூவினது இடத்திற்காக ஊடுதல் செய்யும்.*

**பூபாலனந்தரிக்கும்**

பூ பாலனம் தரிக்கும் - *நிலவுலகங்காத்தலைச் செய்யும்.*

பூ பால் அனம் தரிக்கும் - *பூவானது வெள்ளை அன்னத்தைத் தாங்கியிருக்கும்.*

**பூமாதிடமன்னும்**

பூ மா திடம் மன்னும் - *அழகிய மிகுந்த வலிமைபெறும்.*

பூ மாது இடம் மன்னும் - *திருமகள் தனக்கு இடமாகப் பொருந்தும்.*

**பூமிக்கணிசெய்யும்**

பூ மிக்கு அணி செய்யும் - *மலர் மிகுந்து அழகு செய்யும்.*

பூமிக்கு அணி செய்யும் - *நிலத்திற்கு அழகை உண்டாக்கும்.*

**பூம்பழனஞ்சாரும்**

பூ பழன் நஞ்சு ஆரும் - *பொலிவமைந்த பழங்கள் நைந்து நிறையும்.*

பூம் பழனம் சாரும் - *அழகிய வயல்கள் சேர்ந்திருக்கும்.*

**பூம்பாவைக்கூட்டும்**

பூம் பாவைக்கு ஊட்டும் - *அழகிய பாவை வடிவுக்குக் கொடுக்கும்.*

பூம் பாவை கூட்டும் - *அழகிய பாடல்களை இயற்றும்.*

**பூரணகும்பம்வைத்தாய்**

பூரண கும்பம் வைத்தாய்-*நிறை குடங்களைப் போன்ற கொங்கைகளை வைத்தாய்.*

பூரணகும்பம் வைத்தாய்-*பெரிய குடங்களை வைத்தாய்.*

**பூரியங்கூட்டும்**

பூரி அங்கு ஊட்டும் - *இசையை அவ்விடத்திலே சேர்க்கும்.*

பூரியம் கூட்டும் - *அரசிருக்கையைச் செறிக்கும்.*

**பூருவந்தவர்க்கறுக்கும்**

பூருவம் தவர்க்கு அறுக்கும் - *முன் காலத்தில் முனிவர்களுக்குப் போக்கும்.*

பூரு அம்தவர் கறுக்கும் - *புருவம் அழகிய வில்லைச் சினக்கும்.*

**பூவணங்குலாவும்**

பூ வ(ண்)ணம் குலாவும் - *மலர் அழகுற நிறைந்து விளங்கும்.*

பூ அணங்கு உலாவும் - *திருமகள் விளங்கும்.*

**பூவளையாழியே**

பூ வளை ஆழியே-*அழகிய சங்கு சக்கரமே*

பூ வளை ஆழியே - *பூமியைச் சூழ்ந்த கடலையே.*

**பூவாய்கொழுநனையேய்**

பூவாய் கொழுநனை ஏய் - *பூதேவிக்கு வாய்த்த கணவனை ஒக்கும்.*

பூ வாய் கொழு நனை ஏய் - *பொலிவு வாய்ந்த செழும் பூவரும்புகளைப் பொருந்தும்.*

**பூவில்மேவுதலால்**

பூவில் மேவுதலால் - *பூவுலகத்திற் பொருந்துதலால்.*

பூ இல் மேவுதலால்-*மலர் மனையில் தங்கியிருத்தலால்.*

பூ வில் மேவுதலால் - *அழகிய வில்லைத் தாங்குதலால்.*

**பூவேந்தன்**

பூ வேநதன - *உலகத்தின் அரசன்.*

பூவேந்தன் - *பூவரசு. (மரம்)*

**பெண்ணையிடத்திலுளான்**

பெண்ணை இடத்தில் உளான் - *உமாதேவியை இடப்பாகத்தில் வைத்தவன்.*

பெண்ணை இடத்தில் உளான் - *பனைமரத்தடியில் (பனசையில்) எழுந்தருளியவன்.*

**பெண்ணையொருபால்**

பெண்ணை ஒருபால் - *பெண்ணை ஒருபக்கத்தில்.*

பெண்ணை ஒருபால் - *பெண்ணை யாற்றை ஓரிடத்தில்*

**பெரியவரைநீத்து**

பெரியவரை நீத்து - *பெரியோர்களுடைய கூட்டுறவை நீக்கி விட்டு.*

பெரிய வரைநீத்து - *பெரிய மலைபோலுந் தனங்க விட்டுவிட்டு.*

**பெரியவிடமேசேரும்**

பெரிய விடமே சேரும்-*மிகுந்த நஞ்சையே கொண்டதாக இருக்கும்*

பெரிய இடமே சேரும் - *சிறப்புத் தங்கிய இடங்களையே அடையும்.*

**பெருகுமரவமேற்கொண்டு**

பெருகும்அரவம்மேற்கொண்டு- *மிகுகின்ற ஒலியை மேலாகக் கொண்டு.*

பெருகும் அரவம் மேல் கொண்டு - *வளருகிற பாம்பைத் தலையில் அணிந்து.*

**பெருங்காயந்தேடேன்**

பெரும் காயம் தேடேன்-*பெரிய உடலை எடுப்பதற்கு விரும்ப மாட்டேன்.*

பெருங்காயம் தேடேன்-*பெருங் காயம் என்னும் பொருளை நாடமாட்டேன்.*

**பெருந்தீவாரகண்பொருந்தி**

பெரும் தீ வார் அகண் பொருந்தி - *மிக்க நெருப்புக் கக்கும் அந்த நெற்றிக்கண் கொண்டு.*

பெரும் தீவு ஆர் அகண் பொருந்தி-*பெரிய உள்திட்டுக்கள் பொருந்தி அழகிய இடங்களைக் கொண்டு.*

**பெரும்பட்டணக்கோட்டை**

பெரும் பட்டணக் கோட்டை - *பெரிய பட்டணத்துக் கோட்டை.*

பெரும்பட்டு அண் அக்கோட்டு ஐ - *பெரிய பட்டாடை அணிந்த அந்த யானைக் கொம்பினது (கொங்கையினது) அழகு.*

**பெருவேதனையேயுற்றான்**

பெரு வேதனையே உற்றான் - *பெருந்துன்பத்தை அடைந்தவன்.*

பெரு வே தனையே உற்றான் - *பெரிய மூங்கிலினிடத்தே தோன்றியவன்.*

**பெலத்தவிரும்பார்காணுமல்**

பெலத்த இரும்பார் காணுமல் - *வன்மையுடைய பெரிய பாறை நிலங்கள் வெளித் தோன்றுமல்.*

பெலத்த விரும்பார் காணுமல் - *நிலைபெற்ற அன்பரல்லார் காணமுடியாமல்.*

**பேதக்கவலைமறைத்தது**

பேதம் கவலை மறைத்தது - *வேற்றுமையாகிய என் கவலையை மறைத்தது.*

பேது அக்கம் வலை மறைத்தது - *நான் மயங்குதற்கு ஏதுவாகிய கண்ணுகிய வலையை மறைத்தது*

**பேரம்பலம்**

பேர் அம்பலம் - *பெரிய அம்பலம்.*

பேர் அம்பல் அம் - *பெரிய பழிச்சொல்லை அழகாக.*

**பேரன்புடையீர்**

பேரன்புடையீர் - *பெயரனைப் பக்கத்தில் உடையவரே!*

பேர் அன்பு உடையீர் - *மிகுந்த அன்பு உடையவரே.*

**பேரானை**

பேரானை-*பெயரையுடையவனை.*

பேர் ஆனை - *பெரிய யானை.*

பேரானை-*இடம் பெயராதவனை.*

**பொன்வண்ணத்தந்தாதி**

பொன்வண்ணத்தந்தாதி - *ஓர் அந்தாதி நூல்.*

பொன் வண்ணத்து அம் தாதி - *பொன் போன்ற நிறத்தையுடைய அழகிய பணிப்பெண்.*

**பேரைவைகுந்தம்**

பேர் ஐ வை குந்தம் - *பேரழகும் கூர்மையும் உடைய ஓர் ஆயுதம்.*

பேரை வைகுந்தம் - *பேரை நகரே வைகுந்தமாகும்.*

**பொங்கரவமாற்றும்**

பொங்கர் அவம் மாற்றும் - *சோலைகள் வருத்தத்தைப் போக்கும்.*

பொங்கு அரவம் மாற்றும் - *சீறுகிற பாம்பை மாற்றும்.*

**பொங்கராவீடாம்**

பொங்கு அராஈடு ஆம்-*விளங்குகின்ற பாம்புகள் ஒப்பாகும்.*

பொங்கர் ஆ வீடு ஆம்-*பொழிலிலுள்ள ஆச்சாமரம் வீடாகப் பொருந்தும்.*

**பொங்கலில்**

பொங்கு அல்இல் - *மிகுந்த இருள் பொருந்திய இரவில்.*

பொங்கலில் - *பொங்கல் என்னும் உணவில்.*

**பொங்குபயம்பெற்றிடலால்**

பொங்கு பயம் பெற்றிடலால் - *மிகுந்த அச்சத்தை அடைதலால்.*

பொங்கு பயம் பெற்றிடலால் - *மிகுந்த பாற்கடல் ஈன்றமையால்.*

**பொடிப்பையும்பெற்று**

பொடி பையும் பெற்று - *திருநீற்றுப் பையையுங்கொண்டு.*

பொடிப்பையும் பெற்று-*பொடித் தன்மையுங்கொண்டு.*

**பொய்கையார்**

பொய் கையார் - *பொய்யான ஒழுக்கமுடையவர்.*

பொய்கையார் - *தடாகத்தையுடையவர்.*

**பொய்க்காதலைத் தடுக்கும்**

பொய்க்காது அலைத்து அடுக்கும் - *பொய்க்காமல் கெடுத்துப் பொருந்தும்.*

பொய் காதலை தடுக்கும் - *பொய்யாகிய ஆசைகளைத் தடுக்கும்.*

**பொருந்தாது**

பொரும் தாது - *மகரந்தப்பொடி பொருதலைச் செய்யும்.*

பொருந்தாது - *சேருதலைச் செய்யாது.*

**பொருந்தாரையடக்கியநீர்**

பொருந்தாரை அடக்கிய நீர் - *பகைவர்களை அடக்கிய நீர்.*

பொரும் தாரை அடக்கிய நீர் - *பொருகின்ற கண்ணை மூடிக் கொண்ட நீர்.*

**பொருந்தியவிடையன்**

பொருந்திய விடையன் - *பொருத்தமான மறுமொழி களைக் கூறுபவன்.*

பொருந்திய விடையன் - *ஏறிய காளையூர்தியை உடையவன்.*

பொருந்திய இடையன் - *சேர்ந்த ஆடுகளை மேய்க்கும் இடையன்.*

**பொருந்துங்கவளத்தந்திமுந்த**

பொருந்தும் கவள தந்தி முந்த - *சேர்த்துள்ள கவளத்தை உண்ணுகின்ற யானைகள் முன்னே செல்ல.*

பொரும் துங்க வளத்து அந்தி முந்த - *பொருகின்ற உயர்ந்த செழுமையுள்ள மாலைப் பொழுது வர.*

**பொருமலையீசத்தி**

பொருமலை ஈ சத்தி - *பொருமலைக் கொடுக்கின்ற வாந்தி.*

பொரும் அலை ஈ சத்தி - *பொருங் கொலையைச் செய்யும் வேல்.*

**பொற்கடகமூரும்**

பொன்கடகம் ஊரும் - *பொன் வளையல்கள் பொருந்தியிருக்கும்.*

பொன் கடகம் ஊரும் - *அழகிய கடகலத்திற்கு மேலே செல்லும்.*

**பொற்பணியநாகத்தார்**

பொற்பு அணிய நாகத்தார் - *மேன்மை பொருந்திய தேவர்கள்.*

பொன் பணி அ நாகத்தார் - *அழகிய பொன் அணிகலனுகப் பாம்புகளை உடையவர்.*

**பொற்பதக்கங்கொள**

பொன் பதக்கம் கொள - *பொன் பதக்கத்தைக் கைக்கொள்ள.*

பொற்பது அக்கம் கொள - *அழகானது கண்ணை மறைத்துக் கொள்ள.*

**பொற்பந்தினையாடும்**

பொன் பந்தினை ஆடும் - *பொன்னுலாகிய பந்தினை விளையாடும்.*

பொற்பு அம் தினை ஆடும் - *பொலிவுள்ள தினைக்கதிர்கள் அசையும்.*

**பொற்பளிக்குஞ்சாரும்**

பொன் பளிக்குஞ்சாரும் - *பொன் வீடுகளாகவும் பளிக்கு வீடுகளாகவும் பொருந்தும்.*

பொற்பு அளி குஞ்சு ஆரும் - *அழகிய வண்டின் குஞ்சுகள் மிகுந்து நிறையும்.*

**பொற்பினாகத்தான்**

பொற்பின் நாகத்தான் - *அழகிய (வெள்ளி) மலையில் இருப்பவன்*

பொன்பினுகத்தான் - *அழகிய பினுகம் என்னும் வில்லையுடையவன்.*

**பொன்கற்படுக்கும்**

பொன் கற்பு அடுக்கும் - *அழகிய கற்பு நிலையைப் பொருந்தும்*

பொன் கல் படுக்கும் - *பொன்னும் மணியும் பதிக்கப் பெறும்.*

### பொன்போதிகையோவாத

பொன் போதிகை ஓவாத - *பொன்னாலாகிய போதிகை நீங்கப்பெறாத.*

பொற் போது இகை ஓவாத - *பொன்மலர் ஈகை ஒழியப் பெறாத.*

### பொன்றாதவிரும்

பொன்றாது அவிரும் - *கெடாமல் விளங்கும்*

பொன் தாது அவிரும் - *பொன் னிறத் தாதுடன் மலரும்.*

### பொன்னங்குடத்தையெதிர் - காண்டல்

பொன் அம் குடத்தை எதிர் காண்டல் - *பொன்னினால் ஆகிய அழகிய குடத்தை எதிரே பார்த்தல்.*

பொன் அங்குடத்தை எதிர் காண்டல் - *பொற்குடம் போன்ற தனங்களை முன்னே பார்த்தல்.*

### பொன்னண்டுவரையொப்பாம்

பொன் அண்டு வரை ஒப்பாம் - *மேருமலைக்கு ஒப்பாகும்.*

பொன் அண் துவரை ஒப்பாம் - *அழகு வாய்ந்த பவளத்திற்கு ஒப்பாகும்.*

பொன் அண்துவரை ஒப்பாம் - *திருமகள் பொருந்திய துவார காபுரிக்கு ஒப்பான.*

### பொன்னம்பலவன்

பொன் அம்பு அலவன் - *திருமகள் அம்நீர், சந்திரன்.*

பொன்னம்பலவன் - *கனகசபையில் எழுந்தருளிய சிவபெருமான்.*

### பொன்னனையேயொக்கும்

பொன் அனையே ஒக்கும் - *திருமகளாந்தாயை ஒத்து விளங்கும்.*

பொன்னனையே ஒக்கும்-*இரணியனையே ஒத்துவிளங்கும்.*

(1)

### பொன்னாரம்

பொன் ஆரம் - *பொன்மாலை.*

பொன் நாரம் - *அழகாகிய தண்ணீர்.*

### பொன்னாழிமருவும்

பொன் ஆழி மருவும் - *பொன் மோதிரம் பொருந்தும்.*

பொன் ஆழி மருவும்-*திருமகள் பிறந்த பாற்கடலைப்போல் விளங்கும்.*

### போகத்தான்போற்றும்

போக தான் போற்றும் - *கெடுமாறு தாம் வணங்கும்.*

போகத்தான் போற்றும்-*போகத்தையுடையவன் பேணும்.*

### போகத்திருந்தார்

போக திருந்தார் - *தீமைகள் கெடுமாறு திருந்தாதவர்கள்.*

போகத்து இருந்தார் - *பேரின்ப நுகர்ச்சியிலே இருந்தவர்.*

### போகபோக்கியங்கொடுக்கும்

போக போக்கியம் கொடுக்கும்- *இன்ப நலங்களை அளிக்கும்.*

போக போக்கி அங்கு ஒடுக்கும் - *போவன நீக்கி அவ்விடத்தே தணிக்கும்.*

**போகாதியாருமுறை**

போகாது யாரும் உறை-*நீங்காமல் யாவரும் உறைகின்ற.*

போகம் ஆதி ஆரும் உறை - *போகம் முதலியவற்றை நுகரும் தங்குகிற.*

**போதகங்குலாவும்**

போதகம் குலாவும் - *ஞானம் விளங்கும்.*

போத கங்கு உலாவும் - *மிகுதியாகக் கழுகு முதலியவை உலாவும்.*

**போதகத்துக்கிளை**

போதகத்துக்கு இளை-*யானைக்கு கிளை.*

போது அகத்து கிளை - *மலரினிடத்துள்ள கிளி.*

**போதகமேநிற்கும்**

போதுஅகமே நிற்கும்-*தாமரைப் பூவினிடமே இருக்கும்.*

போதகமே நிற்கும் - *யானைக் கன்றுகளே நிற்கும்.*

**போதஞ்சங்கூரும்**

போது அஞ்சம் கூரும் - *மலர் மேல் அன்னம் பொருந்தும்.*

போதம் சங்கு ஊரும்-*மரக்கலங்களிற் சங்குகள் சென்று தவழும்.*

**போதந்தருவார்**

போதம் தருவார் - *மெய்யறிவைக் கொடுப்பார்.*

போது அம் தரு ஆர்-*மலருள்ள அழகிய மரங்கள் பொருந்திய.*

**போதந்துவைக்கும்**

போதம்துவைக்கும்-*மறையறிவு ஒலி செய்யும்.*

போதந்து வைக்கும் - *கொணர்ந்து வைக்கும்.*

**போதம்பொலியும்**

போதம் பொலியும் - *ஞானத்தாற் சிறந்து விளங்கும்.*

போது அம் பொலியும் - *பூவின் அழகு விளங்கும்.*

போதனை காலை காயும் - *நான்முகனையும் நமனையுஞ் சீறும்.*

போதனை காலைக்கு ஆயும் - *போதிக்கும் நேரத்திற்கு ஆராய்ச்சி செய்யும்.*

**போதாரவாவும்**

போது ஆர வாவும் - *மலரில் அமையத்தாவும்*

போதார் அவாவும் - *போகாதவராய் விரும்பும்.*

**போதியம்பலத்தார்**

போதி அம் பலத்தார் - *போதிக்கின்ற அழகான பயனையுடையவர்.*

போதி அம்பலத்தார் - *அரசமரத்தடியில் எழுந்தருளிய அம்பலவாணர்.*

**போந்திற்கலிக்கும்**

போந்து இல் கலிக்கும் - *வந்து வீடுகள்தோறும் முழங்கும்.*

போந்தில் கலிக்கும் - *பனைமேற் கூவும்.*

**போரிற்சிறந்துபொலிவாகும்**

போரிற் சிறந்து பொலிவாகும் - *வைக்கோற்போரையடைந்து விளங்கும்.*

போரிற் சிறந்து பொலிவாகும் - *போர்க்களத்திலே சிறப்படைந்து விளங்கும்.*

**போரைப்புரியும்**

போரைப் புரியும் - *சண்டையைச் செய்யும்.*

போரைப் புரியும் - *வைக்கோற் போரைப் போடும்.*

**போர்த்தலைக்கனுடும்**

போர்த்து அலைக்கண் ஆடும் - *மறைத்து அலையினிடத்து ஆடும்.*

போர்த் தலைக்கண் நாடும் - *போரினிடத்தில் கண்கள் தாவும்.*

**போர்ப்பவனன்பார்க்கும்**

போர்ப்பவன் அன்பு ஆர்க்கும் - *போர்ப்பவன் அன்பினைப் பொருந்தும்.*

போர் பவனன் பார்க்கும் - *போர்த் தொழிலையுடைய காற்று எதிர்பார்க்கும்.*

**போற்றவளமிக்க**

போற்ற வளம் மிக்க - *துதிக்க அருட்செல்வம் மிகும்*

போல் தவளம் மிக்க - *போன்ற வெண்ணிறம் மிகுந்த.*

**போற்றிருக்கு**

போல் திருக்கு - *போன்ற கண்கள்.*

போற்று இருக்கு - *போற்றுகிற இருக்கு மறை.*

**போற்றனுமானையே**

போல் தனு மானையே - *போன்ற உடலுடைய மானையே.*

போற்று அனுமானையே - *போற்றப்பெறுகிற அனுமானையே.*

**போனகங்காளமே**

போனகம் காளமே - *உணவு நஞ்சே.*

போன கங்காளமே - *(கழிந்து) போன உடலின் எலும்பே.*

**போனகத்தன்**

போன கத்தன் - *சென்ற தலைவன்.*

போல் நகத்தன்-*போன்ற நகத்தையுடையவன்.*

போனகத்தன் - *உணவினையுண்டவன்.*

**போனகம்பாலிக்கும்**

போனகம் பாலிக்கும் - *உணவினைக் கொடுக்கும்.*

போன கம்பு ஆலிக்கும் - *சென்ற சங்குகளானவை ஒலி செய்யும்.*

**மகத்துவத்தாரத்தர்**

மக துவம் தாரத்தர்-*பிள்ளைகள் இரண்டைப் பெற்ற மனைவியை உடையவர்.*

மகத்துவத்தார் அத்தர் - *பெருமை பொருந்திய தலைவர்.*

**மகமருவும்**

மகம் மருவும் - *மக நட்சத்திரம் பொருந்தப்பெறும்.*

மகம் மருவும்-*வேள்வியமையப் பெறும்.*

மக மருவும் - *பிள்ளைப்பேறுகள் திகழும்.*

**மகராலயங்கடந்தார்**

மகராலயம் கடந்தார் - *கடலைத் தாண்டியவர்.*

மகர் ஆலயங்கள் தந்தார் - *புதல்வரானவர் கோயில்களைத் தந்தருளியவர்.*

**மகவானையாண்ட**

மகவானை ஆண்ட - *இந்திரனை அடிமை கொண்ட.*

மக வான் ஐயாண்ட - பெருமை யும் ஐந்து அகவையையும் உடைய குழவி.

மகிழமருந்தாயே

மகிழ் அமரும் தாயே! - மகிழ மரத்தின்கீழ் எழுந்தருளி யிருக்கும் அன்னையே.
மகிழ மருந்துஆய் ஏ - களிப் படைய மருந்தாகியே.

மகிழ்பூக்கும்

மகிழ்பூக்கும் - மகிழமரம் பூத் தலைச் செய்யும்.
மகிழ் பூக்கும் - மகிழ்ச்சியை அடையும்.

மங்குலகமேயா

மங்குல் அகமே ஆ - முகிலுக்கு இடமாகப் பொருந்திய.
மங்கு உலகம் ஏயா - அழிவ தாகிய உலகப்பற்றுப்பொருந் தாத.

மங்குருவச்சிரநீட்டி

மங்கு உரு வச்சிரம் நீட்டி - மழுங்காத குலிசப்படையை நீட்டி.
மங்குல் தாவ சிரம் நீட்டி-முகில் கள் படிய உச்சி உயர்ந்து.

மச்சதேசம்

மச்சதேசம் - மச்சநாடு.
மச்ச தேசம் - மீனைப் போன்ற கண் இருக்குமிடம்.

மச்சமுங்காட்டுவதில்லையென்றால்

மச்சமும் காட்டுவது இல்லை என்றால் - மீனைப் போன்ற கயல் விழியையுங்காட்டுவது இல்லையென்றால்.
மச்சமும் காட்டுவது இல்லை என்றால்-மாற்றறிய வெட்டும் பொன் வடிவமுங் காட்டுவ [illegible]யென்றால்.

மஞ்சமங்கடுக்க

மஞ்சு அங்கு அடுக்க - முகில் கள் அவ்விடத்தில் உடன்வர.
மஞ்சம் கடுக்க - படுக்கை என்னை வருத்த.

மஞ்சணத்திமேவும்

மஞ்சள் நத்தி மேவும் - மஞ்சளை விரும்பிக் கொள்ளும்.
மஞ்சு அண் அத்தி மேவும் - முகிலையொத்த யானைகள் பொருந்தும்.

மஞ்சரிவண்ணங்கொள்

மஞ்சரி வண்ணம் கொள் - மஞ்சரி வண்ணம் முதலிய நூல்களைக் கொள்ளுகிற.
மஞ்சு அரி வண்ணம்கொள் - அழகிய திருமாலின் நிறத் தைக்கொள்ளும்.

மஞ்சுவகைமேவும்

மஞ்சு வகை மேவும் - முகில் வகைகள் பொருந்தும்.
மஞ்சு உவகை மேவும்-அழகும் மகிழ்வும் கொள்ளும்.

மஞ்சுவணமேறும்

மஞ்சு வண்ணம் ஏறும் - முகி லின் நிறத்தைப் பெறும்.
மஞ்சு உவணம் ஏறும் - அழகிய கருட ஊர்தியில் ஏறும்.

மடங்கலே

மடங்கலே - அரிமாவை.
மடங்கு அலே-மடங்குகிற அலை.
மடம் கலே - அறியாமையைக் கலக்கிற.

**மடங்கலையாதரியான்**

மடங்கலை ஆதரியான்-*பின்னிடு தலைப் பொருந்ாதவன்.*

மடம் கலையாது அரிஆன்-*அறியாமை நீங்காது திருமால் விடையாக.*

**மடங்காதிருக்கும்பலவடர்ந்தே**

மடங்காது இருக்கும் பல அடர்ந்தே - *சாயாமல் இருக்கிற பலாமரங்கள் நெருங்கி.*

மடம் காது இருக்கும் பல அடர்ந்தே-*அறியாமை நீக்குகின்ற வேதங்கள் பலவும் நிறைந்து.*

**மடங்குமரவத்தையுங்காட்டும்**

மடங்கும் மர வத்தையும் காட்டும் - *திரும்பிச் செலுத்தும் மரத்தாற் செய்யப்பட்ட ஓடத்தையும் தன்னிடத்திற் கொண்டிருக்கும்.*

மடங்கும் அரவத்தையும் காட்டும் - *மடங்குதலையுடைய பாம்புகளையும் உடையதாகவிருக்கும்.*

**மடத்தனமுமண்டிவரலால்**

மடத்தனமும் மண்டி வரலால்-*அறியாமையும் மிகுந்து வருகிறபடியால்.*

மடம் தனமும் அண்டி வரலால்-*மடாலயங்களின் பொருளும் நெருங்கிவருவதால்.*

**மடவனம்**

மட அனம் - *இளமை பொருந்திய அன்னப் பறவை.*

மட அனம் - *மடத்துச் சோறு.*

**மடவன்னம்**

மட அன்னம்-*மடத்திலே உள்ள சோறு.*

மட அன்னம் - *மடமை தங்கிய அன்னம் போன்றவளே !*

மணக்க மலர்ந்தில - *மணம் வீசுமாறு விரிந்தில.*

மணக்க மலர்ந்தில - *மணம் புணர்தற்குக் கண்கள் மலர்ந்து நோக்கிற்றில.*

**மணக்கோலஞ்செய்ய**

மணம்கோல் அஞ்சு எய்ய - *மலர்க்கணைகள் ஐந்தை வீச.*

மணக்கோலம் செய்ய-*திருமண அழகு இயற்ற.*

**மணத்தைவளர்க்கும்**

மண் நத்தை வளர்க்கும் - *மண்ணில் உண்டாகிற நத்தையைப் பெருக்கும்.*

மணத்தை வளர்க்கும் - *வாசனையை உண்டாக்கும்.*

மணத்தை வளர்க்கும் - *கூட்டத்தை மிகுதிப்படுத்தும்.*

**மணந்து**

மணந்து - *சேர்ந்து.*

மண் நந்து - *மண் வளர்ந்து.*

**மணந்துவக்குங்காலம்**

மணம் துவக்கும் காலம் - *வாசனை வீசத் தொடங்குங் காலம்.*

மணந்து உவக்கும் காலம் - *மணம்புரிந்து மகிழுங்காலம்.*

**மணமருவும்**

மணம் மருவும் - *நறுமணம் பொருந்தப்பெறும்.*

மணம் மருவும்-*திருமணத்தைப் பொருந்தும்.*

**மணலேமேலாக்கொளலாலும்**

மண்ணலே மேலாக்கொளலாலும் - *அலங்கரித்தலைத் தன்னிடமாகக் கொண்டிருத்தலாலும்.*

மண்ணலே மேலாக்கொளலாலும் - *மண் பொருந்திய அலையை மேலாகக்கொண்டு வருகிறபடியாலும்.*

**மணியாட்டினல்**

மணி ஆட்டினல் - *மணியை ஆடச் செய்தால்.*

மணி ஆட்டினல் - *அழகிய ஆட்டால்.*

**மணிவடம்பூண்டு**

மணிவடம் பூண்டு - *மணிகளையும் வடங்களையும் அணிந்து.*

மணிவடம் பூண்டு - *முத்தாரத்தைத் தாங்கி.*

**மணிவாயிலார்**

மணி வாயிலார் - *அழகிய வாயிலார் காயனர்.*

மணிவாய் இல்லார் - *வனப்புப் பொருந்திய திருக்கோயிலாகிய இல்லத்தையுடையவர்.*

**மண்டலத்தார்மேவும்**

மண்டலத்தார் மேவும் - *மண்டலங்களில் உள்ளவர்கள் அடையும்.*

மண்டு அலம் தார் மேவும் - *நிறைந்த கலப்பைகளின் ஒழுங்கு பொருந்தும்.*

**மண்டலம்**

மண்டலம் - *வட்ட வடிவம்.*

மண்டு அலம் - *நெருங்கிய துன்பம்.*

**மண்டுகம்பார்க்கும்**

மண்டுகம் பார்க்கும் - *தவளைகள் பார்க்கும்.*

மண்டு கம்பு ஆர்க்கும் - *நெருங்கிய சங்குகள் முழங்கும்.*

**மண்டுகளைப்பாற்றும்**

மண் துகளைப் பாற்றும் - *மண் தூசியை நீக்கும்.*

மண்டு களைப்பு ஆற்றும் - *பொருந்திய தளர்ச்சியைப் போக்கும்.*

**மதலை**

மதலை - *குழந்தை.*

மது அலை - *தேனினுடைய அலை.*

ம தலை - *மாயையை இடமாகக் கொண்ட.*

**மதனல்**

மதனல் - *வலிமையினல்.*

மதனல் - *காமனல்.*

**மதிக்கவந்தனை**

மதிக்க வந்தனை - *எவரும் மதிக்கும்படி வந்தாய்.*

மதிக்க வந்தனை - *போற்றுமாறு வணக்கம்.*

மதிக்க வந்தனை - *கடைதற்கு வந்தாய்.*

மதிக்கு அவம் தனை - *திங்களுக்கு இகழ்ச்சியை.*

மதிக்கு அவம் தனை - *அறிவுக்கு இகழ்ச்சியை.*

**மதிக்கவரிசந்தனந்தழுவி**

மதிக்க அரிசந்தனம் தழுவி - *மேன்மையாக எண்ண அரிசந்தனம் முதலிய ஐந்தருக்களையுங் கொண்டு.*

மதிக வரி சந்தனம் தழுவி - *சந்திரன் போன்ற சாமரங்களும் சந்தனமும் தன்னிடங் கொண்டு.*

**மதிக்கவலே**

மதிக்க அலே-கடையும்பொழுது *அலேகின்ற.*

மதி கவலே - *அறிவில் உண்டாகும் கவலே.*

**மதிக்குமணிமுத்திரையாழி**

மதிக்கும் அணி முத்திரை ஆழி- *விலே மதிக்கப் பெறுகின்ற அழகிய முத்திரை மோதிரம்.*

மதிக்கு மணி முத்து இரை ஆழி - *மேன்மையாகக் கொள்ளப்பெறுகின்ற மணிமுத்து இரைச்சலிடுகின்ற கடல்.*

**மதிக்கும்பயப்படவே**

மதிக்கும் பயப்படவே - *மதிக்கின்ற தண்ணீரிற் சஞ்சரிக்கும் படகே.*

மதிக்கும் பயப்படவே - *திங்களுக்கும் அஞ்சும்படியாகவே.*

**மதித்தீயே**

மதி தீயே - *திங்களாகிய நெருப்பே.*

மதித்து ஈயே-*மதித்துக் கொடுத்தலேச் செய்.*

**மதிபே.**

மதிபோல் நகம் விராவு - *திங்களேப்போல் நகம் விளங்கும்.*

மதி போனகம் விராவு-*மதிக்கத் தக்க உணவு விளங்கும்.*

**மதிமானவிடஞ்சேர்ந்திடலால்**

மதிமான் அவிடம் சேர்ந்திடலால் - *அறிவாளியானவன் அவ்விடத்தில் இருத்தலால்.*

மதிமான் அ விடம் சேர்ந்திடலால் - *திங்களும் மானும் நஞ்சும் சேர்ந்திருத்தலால்.*

**மதியரவம்பாற்றினன்**

மதி அரவு அம்பு ஆற்றினன் - *திங்களேயும் பாம்பையும் கங்கையையுந் தாங்கியவர்.*

மதியர் அவம் பாற்றினன் - *நல்லறிவாளர்களது தீமையை நீக்கியவர்.*

**ம ர**

மதி ஆதரவைக் கோரும்-*மதிக்கத் தக்க துணையை விரும்பும்.*

மதியாது அரவை கோரும் - *மதியாது பாம்பை அலகிலே கோத்துத் திரியும்.*

**மதியாதவன்**

மதி ஆதவன் - *திங்களும் கதிரவனும்.*

மதியாதவன் - *ஒரு பொருட் படுத்தாதவன்*

மதி யாதவன்-*அறிவையுடைய இடையன். (கண்ணன்)*

**ம**

மதி ஆதவன் அங்கி - *திங்கள் கதிரவன் தீ.*

மதியாதவன் அங்கி - *மதித்தல் செய்யாதவன் தீக்கு ஒப்பானவன்.*

மதி யாதவன் அங்கி - *மதிக்கத் தக்க கண்ணபிரான் சட்டையணிந்தனன்.*

மதி ஆதவன் அழலான் - *திங்களாகவும் கதிரவனுகவும் தீயாகவும் உடையவன்.*

மதியாதவன் அழலான் - *எண்ணுதவன், சினங்கொள்ளாதவன்.*

**மதியாதிரைநாடும்**

மதியாது இரை நாடும் - (எதனையும்) மதிக்காமல் இரையைத் தேடும்.

மதி ஆதிரை நாடும் - திங்கள் திருவாதிரைநாளைச் சேரும்.

**மதுகரமேலேந்தும்**

மது கரம் மேல் ஏந்தும் - மதுவினைக் கையின்மேல் தாங்கும்.

மதுகரம் மேல் ஏந்தும்-வண்டுகளைத் தன்மேல் கொண்டிருக்கும்.

**மத்தகநாட்டத்தான்**

மத்து அகம் நாட்ட தான் - மத்தாக நாட்டுவதற்குத்தான்.

மத்தக நாட்டத்தான் - நெற்றிக் கண்ணை உடையவன்.

**மத்தினடிக்குமெய்யன்**

மத்தின் அடிக்கும் மெய்யன் - மத்தினால் அடித்தலைப்பெறும் உடலையுடைய திருமால்.

(ஈ) மத்தில் நடிக்கும் மெய்யன்-சுடலையில் ஆடும் உண்மைப் பொருளாகிய கடவுள்.

**மந்திரத்தே**

மந்திரத்தே-கட்டுத்துறையிலே.

மந்திரத்து ஏ(ம்) - மந்திரத்தால் இன்பம்.

**மயக்கோடுபயமெதிர்காட்டி**

மயக்கோடு பயம் எதிர்காட்டி-மயக்கத்தோடு அச்சத்தையும் நேரிற் காண்பித்து.

ம(ய்)யக் கோடு உபயம் எதிர் காட்டி - இரண்டு வளைவுகளும் நடுவிற் பொருந்தக் காண்பித்து.

**மயங்காராகவண்டர்மொய்ப்ப**

மயங்கார் ஆக அண்டர் மொய்ப்ப-மயக்கம் இல்லாதவர்களாய்த் தேவர்கள் சூழ.

மயம் கார் ஆகவண்டர் மொய்ப்ப - அழகிய கருநிற உடலையுடைய வண்டினங்கள் சூழ.

**மரக்கால்**

மரக்கால்-மரத்தினாற் செய்யப் பெற்ற அளவு கருவி.

மரம் கால் - மரத்தினாற் செய்யப்பட்ட கால்.

**மருங்குறுவண்டுவருந்தமலர் - வரிசை**

மருங்குல் துவண்டு வருந்த மலர் வரிசை - இடைநுடங்கி ஆடி வருத்தமுற இடமகன்ற மதிப்புடைய.

மருங்கு உறு வண்டு வர உந்து அமலர் வரிசை - பக்கத்திற் சேர்ந்த வண்டுகள் வருதற்கு மேலோங்கியிருக்கின்ற அந்தப் பூ வரிசைகள்.

**மருத்தருந்தும்பையரவர்**

மருத்து அருந்தும் பை அரவர் - காற்றினை உண்ணும் படத்தையுடைய பாம்பையணிந்தவர்.

மரு தரும் தும்பையர் அவர் - மணத்தைத் தரும் தும்பை மாலையை அணிந்த அச்சிவனார்.

**மருத்துவக்கும்**

மருத்து உவக்கும் - காற்றை உணவாக விரும்பும்.

மரு துவக்கும் - மணம் வீசத் தொடங்கும்.

**மருவுமடலுநலமதுவும்**

மருவும் அடலும் நலம் அதுவும்- *சேருகின்ற வெற்றியும் அத னால் வருகிற நன்மையும்.*

மருவும்மடலும் நல மதுவும் - *மணமும் இதழ்களும் நல்ல தேனும்.*

**மலங்குதிக்கும்**

மலங்கு உதிக்கும் - *மலங்கு மீன்கள் தோன்றும்.*

மலம் குதிக்கும் - *ஆணவமலத் தைத் தாண்டிச் செல்லும்.*

**மலராசுகங்களிங்கா**

மலர் ஆசுகம் கள் நீங்கா - *பரந்த காற்றும் கள்ளும் நீங்காத.*

மலர் ஆசுகங்கள் நீங்கா-*மலர்க் கணைகள் அகலாத.*

**மலர்சூடன்**

மலர் சூடன் - *விளங்குகின்ற சூடன்.*

மலர்சூடன்-*பூச்சூடமாட்டேன்.*

**மலிவாசம்**

மலிவாசம் - *கொத்தமல்லியின் மணம்.*

மலி வாசம் - *நிறைந்த ஆடை.*

**மலைத்தலைத்தீர்த்தரை**

மலைதலைத் தீர்த்தரை - *மயங்கு தலை நீக்கியவரை.*

மலைத்தலைத் தீர்த்தரை - *கயிலை மலையில் எழுந்தருளிய தேவ தேவரை.*

**மலையமுனி**

மலையமுனி - *அணிந்துகொள்ள எண்ணி.*

மலைய முனி - *அகத்தியர்.*

**மலையமலையனை**

மலைய மலையன் ஐ-*பொதிய மலை யில் உள்ள அகத்தியருக்குத் தலைவன்.*

மலைய மலையனை - *வருத்த வருத்த வருந்துகிற.*

**மலையாவருந்தினூர்க்கு**

மலையா - *கலங் காமல் உண்டவர்க்கு.*

மலையா வரும் தி(ன்)னூர்க்கு - *கலங்கி வருகிற வறியவர் கட்கு.*

மலையா வருந்தினூர்க்கு - *மிகுதி யாகத் துன்பப்பட்டவர் கட்கு.*

**மலைவிலத்தர்**

மலை விலத்தர் - *சாத்தும் வில் வத்தை உடையவர்.*

மலைவு இல் அத்தர் - *எப்போ தும் மயக்கமில்லாத தலைவர்.*

மலை வில் அத்தர்-*மேரு மலையை வில்லாகக் கொண்ட தலைவர்.*

**மலைவில்லான்**

மலைவு இல்லான் - *மயக்கம் இல்லாதவன்.*

மலை வில்லான்-(*மேரு*) *மலையை வில்லாக உடையவன்.*

**மறந்தனையே**

மறந்தனையே - *மறந்துவிட் டாயே.*

மறம் தனையே-*தீவினைகளையே.*

**மறந்திருப்பீர்**

மறந்து இருப்பீர்-*மறந்து இருப் பவர்களே!*

மறம் திருப்பீர் - *மாறுபாட்டை மாற்றுங்கள்.*

மறுத்தழைத்தார்

மறு தழைத்தார்-களங்கம் மிகப் பெற்றவர்.
மறுத்து அழைத்தார் - மீண்டுங் கூப்பிட்டவர்.

மறுவடக்கும்

மறு அடக்கும் - குற்றத்தை அடக்கும்.
மறு வடக்கும் - மற்ற வடக்குத் திக்கும்.

மறைக்கண்ணார்

மறைக் கண்ணார்-மறையினிடத் திலே பொருந்தியவர்.
மறைக்கு அண்ணார் - மறையி னிடத்திலே பொருந்தாதவர்.

மறைக்குமாறுபுடைத்துவர

மறைக்கும் ஆறுபுடைத்து வர- மூடப்படுமாறு மேலே புடைத்துவர.
மறைக்கும் ஆறு புடை துவர - மறைக்கின்ற வழிகள் பக்கங் களில் முற்ற முடிய

மறைப்பரியவாகனத்தன்

மறைப்பரி அ வாகனத்தன் - மறையாகிய குதிரைகளையே அழகிய ஊர்தியாகவுடைய வன்.
மறைப்பு அரிய வாகன், அத் தன் - மறைக்க முடியாத தன்மையமைந்தவன், வன்.

மறைவாயிருத்தல்

மறைவாய் இருத்தல் - ஒளிந் திருத்தல்.
மறைவாய் இருத்தல் - மறையா கிய வேதத்தாற் கூறப்படு தல்.

மற்கடங்காட்டி

மல்கடம் காட்டி-வளம் பொருந் திய மலையைக் காட்டி.
மற்கடம் காட்டி-குரங்குகளைக் காண்பித்து.

மற்றலையிலேமேயும்

மற்று அலையிலே மேயும் - நீர் அலையின்மீது அங்கும் இங் கும் திரிந்து செல்லும்.
மன் தலையிலே மேயும் - தலை மயிரிலே திரிந்து செல்லும்.

மற்றுமுலையாவனமிகலால்

மற்றும் உலையா வனம் மிக லால்-மேலும் கெடாத அழகு மிகுதிப் படுதலால்.
மற்றும் முலை ஆவனம் மிகலால்- மேலும் மேலும் கொங்கை கள் பருத்து அழகு சிறந்த லால்.

மனத்துக்குழையான்

மனத்துக் குழையான் - சங்கக் குண்டலத்தை அணிந்தவர்.
மனத்து குழையான் - மன தி னிடத்திலே குழையாதவர். (குழைதல்-அருள் சுரத்தல்.)

மனம் ஆறுகைக்கு-மனமானது தெளிவையடைவதற்கு.
மனம் மாறுகைக்கு-மனமானது வேறுபடுவதற்கு.

மனம்பாலனைய

மனம் பால் அனைய-மனம் பாலை யொத்த.
மன் அம்பால் அனைய - காம னுடைய அம்பினால் அத் தன் மையை உடைய.

**மன்மதனுல்வாயார்**

மன் மத நால்வாய் ஆர் - *பெற்ற மதம் பொருந்திய தொங்குகின்ற வாய் பொருந்திய.*

மன் மதனுல் வாயார்-*காமனுல் (மோகம்) உண்டாக்கப்படாதவர்.*

**மன்றகங்கை கூடும்**

மன்று அகம் கைகூடும் - *அவையிடத்துக் கிடைக்கும்.*

மன்ற கங்கை கூடும் - *தெளிவாகக் கங்கை சேரப்பெறும்.*

**மன்றத்துவந்து**

மன்றத்து வந்து - *அவையிலே வந்து.*

மன்றத்து உவந்து - *அவையிலே மகிழ்ந்து.*

**மன்றலங்காரப்புரி**

மன்று அலங்கு ஆர் அ புரி - *பொன்னம்பலத்தில் விளங்குகிற ஆத்தி மாலையை அணிந்த அழகியபுரி போன்ற.*

மன்றல் அங்கு ஆரபுரி - *திருமணத்தில் அவ்விடத்துப் பொருந்த விரும்புகின்ற.*

**மன்றன்முகப்பெய்தும்**

மன்றல் முகப்பு எய்தும் - *மணத்தை முகர்தலுறும்.*

மன்றல் முகப்பு எய்தும் - *திருமண முன்வாசல் பொருந்தும்.*

**மன்னரணி**

மன்னர் அணி-*அரசர்களுடைய வரிசை.*

மன் அரணி - *நிலைபெற்ற தீக்கடைகோல்.*

**மன்னரம்பைநேராம்**

மன்னர் அம்பை நேர் ஆம் - *அரசர்களுடைய அம்பையொத்து விளங்கும்.*

மன் அரம்பை நேராம் - *நிலைபெற்ற வாழைத்தண்டுக்கு ஒப்பாக விளங்கும்.*

**மன்னரவைக்கூட்டும்**

மன்னர் அவைக்கு ஊட்டும் - *அரசர்களுடைய உண்பிக்கும்.*

மன்னு அரவைக் கூட்டும் - *பொருந்திய பாம்புகளைச் சேர்க்கும்.*

**மன்னுகமத்தினுன்**

மல்நாக மத்தினுல் - *வலிமையுள்ள மந்தர மலையாகிய மத்தினுல்.*

மன் ஆகமத்தினுன்-*நிலைபெற்ற ஆகம நூலை அருளியவன்.*

**மன்னுவலாரியன்**

மன்னு வலாரியன் - *அரசனுகிய இந்திரன்.*

மன் ஆவல் ஆரியன் - *நிலைபெற்ற விருப்பத்தையுடைய மேலோன்.*

மன் நாவலார் இயல் - *நல்ல புலமையுடைய அறிஞர்களின் தன்மை.*

**மன்னித்திலம்நேர்**

மன் நித்திலம் நேர்-*பொருந்திய முத்தைப்போல் விளங்கும்.*

மன்னி திலம் நேர் - *அமைந்து எட்பூவையொத்து விளங்கும்.*

**மன்னிரதம்பொங்கும்**

மன் இரதம் பொங்கும் - *மிகுதியாகச் சாறு வழியும்.*

மன்னி ரதம் பொங்கும் - *நிலைபெற்றுத் தேர்கள் செல்லும்.*

**மன்னீரிலேபிறக்கும்**

மன் நீரிலே பிறக்கும் - *நிலை பெற்ற நீரிலே உண்டாகும்.*
மன் ஈரிலே பிறக்கும் - *நிலைத்த பேன் முட்டையிலே உண்டாகும்.*

**மன்னுமலைதந்துவந்து**

மன்னும் அலை தந்து வந்து - *மிகுந்த அலைகளை வீசி வந்து.*
மன்னும் மலை தந்து உவந்து - *நிலை பெற்ற மலை தந்து மகிழ்ந்து.*

**மன்னுமாகத்துறலால்**

மன்னும் மாகத்து உறலால் - *நிலை பெற்ற விண்ணிற் பொருந்துதலால்.*
மன்னும் ஆகத்து உறலால் - *நிலைபெற்ற உடலிற் பொருந்துதலால்*

**மாகத்திகையார்**

மா கத்திகையார்-*சிறந்த மாலையை உடையவர்.*
மா கத்தி கையார் - *சிறந்த கத்தியைக் கையில் உடையவர்.*

**மாகந்தரத்தர்**

மா கந்தரத்தர் - *சிறந்த கழுத்தையுடையவர்.*
மா கந்தர் அத்தர் - *அழகிய முருகக் கடவுளின் தந்தை.*

**மாகமண்டலந்தாங்கி**

மாக மண்டலம் தாங்கி - *விண்ணுலகத்தைச் சுமந்து.*
மா கமண்டலம் தாங்கி - *பெருமை பொருந்திய கமண்டலத்தை ஏந்தி.*

**மாகமுகினேராம்**

மாக முகில் நேராம் - *விண்ணில் திரிகிற முகிலுக்கு நேராக விளங்கும்.*
மா கமுகின் ஏராம் - *சிறந்த கமுகின் அழகு பொருந்திய.*

**மாகமுறைந்து**

மா கம் உறைந்து - *மிகுந்த நீரில் தங்கி.*
மாகம் உறைந்து-*விண்ணுலகத்தில் வசித்து.*

**மாகம்பயிலும்**

மாகம் பயிலும் - *விண்ணிடத்தைப் பொருந்தும்.*
மாகம் பயிலும் - *மாகம் என்ற காவியத்தைக் கற்கும்.*

**மாகப்புவனம்முறைபடைத்து**

மாகம் புவனம் முறை படைத்து-*விண்ணையும் மண்ணையும் முறைமையாக உண்டாக்கி.*
மா கம்பு வனம் உறை படைத்து-*பெரிய சங்கு, நீர், மருந்து இவற்றை உண்டாக்கி.*

**மாகவசமோங்கும்**

மாக வசம் ஓங்கும் - *ஆகாயத்தினிடமாக உயரும்.*
மா கவசம் ஓங்கும் - *சிறந்த பாதுகாப்புச் சட்டைகள் ஓங்கும்.*

**மாகவனங்கொள்ளும்**

மாக அனம் கொள்ளும் - *தேவருலகத்து அன்னப்பறவைகள் பெறும்.*
மா கவனம் கொள்ளும்-*மிகுந்த கருத்துக்கொள்ளும்.*

**மாகவிமானமே**

மாகவி மானமே - *சிறந்த கவிகளாகிய பெருமையே.*
மாக விமானமே - *விண்ணுலகத்து இந்திர விமானமே.*

**மாகவியார்**

மா கவியார்-*சிறந்த பாடல்களை உடையவர்.*
மா கவியார் - *பெரிய குரங்கார்.*

**மாகனகக்கார்முகந்தான்**

மா கனகம் கார்முகம் தான் - *பெரிய பொன்மலையாகிய வில்லை இறைவனாகிய தான்.*
மாகம் நகு அக்கார் முகந்தான்- *விண்ணில் விளங்குகின்ற நீரைத் தாங்கியவன்.*

**மாகனகம்மேற்சேர்**

மா கனகம் மேல் சேர்-*மாமரம் நீருண்ட முகிலின்மேற்சேரும்.*
மாகனகம் மேல் சேர் - *திருமகளும் பொன்னும் மிகுதியாக விளங்கும்.*
மாகம் நக மேல் சேர் - *விண்ணில் விளங்க உயர்ந்து செல்லும்.*

**மாக்களிற்றைப்பெற்று**

மா களிற்றைப் பெற்று - *பெரிய களிற்று மீனை ஈன்று.*
மாக்களிற்றைப் பெற்று - *பெருமை தங்கிய விநாயகக் கடவுளைப் பயந்து.*

**மாக்கனியை**

மா கனியை - *திருமகளாகிய பெண்ணை.*
மா கனியை-*மாவின் பழத்தை.*

**மாசசிபோற்காணுதலால்**

மாசசி போல் காணுதலால் - *சிறந்த திங்களைப்போற் காணப்படுவதால்.*
மா சசிபோல் காணுதலால் - *அழகிய இந்திராணிபோற் றோன்றுதலால்.*

**மாசடையார்**

மாசடையார்-*பெரிய சடையை உடையவர்.*
மாசு அடையார் - *குற்றம் அடையப்பெறுதவர்.*

**மாசிலம்பன்**

மாசு இல் அம்பன் - *குற்றமில்லாத அம்பையுடையவன்.*
மா சிலம்பன் - *பெரிய மலையை உடையவன்.*

**மாசுகம்**

மாசு உகு அம்-*அழுக்கை நீக்குகிற நீர்*
மா சுகம் - *மிகுந்த இன்பம்.*

**மாசுணங்காப்பிட்டவரன்**

மாசுணம் காப்பு இட்ட வரன் - *பாம்பாகிய கங்கணத்தை அணிந்த மேன்மையை உடையவன்.*
மா சுணம் காப்பு இட்ட அரன்- *பெருமை தங்கிய பொடியாகிய திருநீற்றை அணிந்த இறைவன்.*

**மாசுணங்கூர்**

மாசுணம் கூர் - *பெரும் பாம்புகள் விரும்புகிற.*
மாசுணங்கு ஊர்-*பெரிய தேமல் பரவும்.*

**மாசுணந்துன்புடையீர்**

மாசுணம் துன் புடையீர்-*பாம்பு நெருங்கிய பக்கத்தையுடைய வரே!*

மாசு உண் நம் துன்பு உடையீர்-*குற்றம் அடைந்ததற்குக் காரணமான எம் துன்பத்தைப் போக்கமாட்டீர்.*

**மாசுபத்திரைக்கணனூர்**

மா சுபத்திரைக்கு அணனூர் - *அழகிய சுபத்திரைக்கு அண்ணனானவர்.*

மா சுபம் திரை கணனூர்-*பெரிய மங்களகரமான பாற்கடலிற் பொருந்திய கண்ணபிரானானவர்.*

**மாசுவணநேரும்**

மா சுவணம் நேரும் - *அழகிய பொன்னைப் போலும்.*

மாசு வண்ணம் நேரும் - *முகில் நிறத்தையொக்கும்.*

**மாசுவர்க்கம்**

மாசு உவர்கம் - *அழுக்கும் உவர்ப்பும் பொருந்திய நீர்.*

மா சுவர்க்கம் - *சிறந்த விண்ணுலகம்.*

மாசு வர்க்கம் (வருக்கம்) - *குற்றத்தின் வகை.*

**மாசுறவு**

மாசு உறவு - *குற்றமுள்ள உறவு.*

மா சுறவு - *பெரிய சுறுமீன்.*

**மாடஞ்சிறக்க**

மாடம் சிறக்க - *மாளிகைகள் சிறந்து விளங்க.*

மாடு அஞ்சு இறக்க - *மாடுகள் ஐந்து சாவ.*

**மாடமதிற்சேர்ந்திடலால்**

மாடம் அதிற் சேர்ந்திடலால் - *மாளிகையிற் சேருவதால்.*

மாடம் அதில் சேர்ந்திடலால் - *உளுந்து அதனிற் கலப்பதால்.*

**மாணவனுமலம்**

மாணவ நா மல்அம் - *பெருமை பொருந்திய நாவினது வளத்தின் அழகு.*

மாணவன் ஆம் அலம்- *மாணவனாகிற துன்பம்.*

**மாணுக்கர்**

மாண் நாக்கர் - *பெருமை பொருந்திய நாவலர்.*

மாணுக்கர் - *கற்பவர்.*

**மாணிக்கங்கூட்டினார்**

மாணிக்கம் கூட்டினார்-*மாணிக்கங்களை ஒன்று சேர்த்தார்.*

மாண் இக்கு அங்கு ஊட்டினார்- *பெருமை பொருந்திய கரும்பை மதுரையில் கல்லானைக்கு ஊட்டியவர்.*

மாணிக்கு அங்கு ஊட்டினார் - *பிரமசாரிக்கு அங்கே உணவளித்தார்.*

**மாணிக்கவாசகர்**

மாணிக்கு அவா சகர் - *பிரமசாரியின் விருப்பத்தினை உலகினர்.*

மாணிக்கவாசகர் - *மாணிக்கம் போன்ற வாசகங்களையுடையவர்.*

**மாண்டவரைப்போற்றும்**

மாண்டவரை போற்றும்-*இறந்தவர்களை வழிபடும்.*

மாண்தவரை போற்றும்-*சிறந்த தவத்தினரை வழிபடும்.*

**மாண்டவர்**

மாண்டவர் - *இறந்துபோனவர்.*
மாண் தவர் - *மாட்சிமைப்பட்ட தவத்தையுடையவர்.*

**மாண்டாரைப்பண்டழைத்தார்**

மாண்தாரை பண் தழைத்தார் - *மாட்சிமைப்பட்ட இசையைச் செழிக்க ஊதியவர்.*
மாண்டாரை பண்டு அழைத்தார் - *இறந்துபோனவர்களை முன் காலத்திலே அழைத்தவர்.*

**மாண்மனத்தார்**

மாண் மனத்தார் - *பெருமை தங்கிய உள்ளம் உடையவர்.*
மாள் மனத்தார்-*மாண்ட மனத்தையுடைய முனிவர்கள்.*

**மாதங்கங்கோடி**

மாதங்கம் கோடி - *யானைகள் கோடி.*
மாது அங்கு அங்கு ஓடி - *பெண்ணனவள் பலவிடங்களுக்கும் ஓடி.*

**மாதங்கத்துரியார்**

மாதங்கத்து உரியார் - *யானைத் தோலை உடையவர்.*
மாது அங்கத்து உரியார் - *உமாதேவியை இடப்பாகத்தில் உடையவர்.*

**மாதங்கந்தனைநாடி**

மாது அங்கம் தனைநாடி-*பெண்ணின் உடலைத்தேடி.*
மாதங்கம் தனைநாடி - *பொன்னை விரும்பி.*
மாதங்கம் தனைநாடி - *யானையை விரும்பி.*
மாதம் கந்தனை நாடி - *திங்கள் தோறும் முருகனை விரும்பி.*

**மாதங்கமடங்கல்**

மாதங்கம் மடங்கல் - *யானைகளும் சிங்கங்களும்.*
மாதங்கம் அடங்கல் - *சிறந்த பொன் முழுவதும்.*
மா தங்க மடம்கல் - *திருமகள் தங்குமாறு அறியாமையைப் போக்கு.*

**மாதங்கமன்றுரித்தார்**

மாதங்கம் அன்று உரித்தார் - *அக் காலத்திலே யானையை உரித்தவர்.*
மா தங்க மன்று உரித்தார் - *சிறந்த பொன்னாலாகிய அம்பலத்துக்கு உரியவர்.*

**மாதங்கமேவும்**

மா தங்க மேவும் - *வண்டுகள் தங்கப்பெறும்.*
மா தங்கம் மேவும் - *சிறந்த தங்கம் விளங்கும்*
மாதங்கம் மேவும் - *யானைகளைப் பொருந்தும்.*

**மாதங்கப்மேவுதலால்**

மாதங்கம் மேவுதலால் - *யானைகள் பொருந்தியிருத்தலால்.*
மாது அங்கம் மேவுதலால் - *உமாதேவி உடலிற் பொருந்தியிருப்பதால்.*
மாதங்கம் மேவுதலால் - *சிறந்த தங்கம் அமைந்திருத்தலால்.*

**மாதங்கமேவும்**

மா தங்க மேவும் - *திருமகள் தங்க விரும்பும்.*
மாதங்கம் மேவும்-*சிறந்த தங்கம் பொருந்தும்.*
மாது அங்கம் மேவும் - *உமாதேவியை உடலில் கொள்ளும்.*

மாதங்கம் மேவும்-யானையானது பொருந்தியிருக்கும்.

**மாதங்கவேட்கைமறந்திகழும்**

மாது அங்கம் வேள்கை மறந்து இகழும் - *மாதர்களின் உடம்பினிடத்துக் காதலை முற்றும் ஒழித்து அதனை இகழும்.*

மாதங்கம் வேட்கை மறம் திகழும்-*யானையைக் கொல்ல வேண்டுமென்றும் விருப்பத்தோடு வீரம் விளங்கப் பெறும்.*

**மாதம்பத்துந்தி**

மா தம்பத்து உந்தி - *பெரிய தூணின் நடுவிடம்.*

மாதம் பத்து உந்தி - *பத்து மாதம் வயிற்றில்.*

**மாதரங்கங்கூடும்**

மாதர் அங்கு அங்கு ஊடும் - *பெண்கள் இடந்தோறும் ஊடல்கொள்ளும்.*

மாதரங்கம் கூடும்-*பெரிய அலைகள் சேரும்.*

**மாதரங்கஞ்சேருதலால்**

மாதர் அங்கம் சேருதலால் - *பெண்களினுடைய உடலைப் பொருந்துவதால்.*

மா தரங்கம் சேருதலால்-*பெரிய அலைகள் அடிக்கடி வீசுதலால்.*

**மாதரங்கத்தார்**

மாதர் அங்கத்தார் - *மாதர் பொருந்திய உறுப்பையுடையவர்.*

மா தரங்கத்தார் - *பெரிய அலை பொருந்திய கடலையுடையவர்.*

**மாதரங்கன்**

மாது அரங்கன் - *திருமகளை உடைய திருமால்.*

மா தரங்கன் - *பேரலை பொருந்திய பாற்கடலில் எழுந்தருளியவன்.*

**மாதரணிசூழும்**

மா தரணி சூழும் - *பெரிய பூவுலகை விரும்பும்*

மாதர் அணி சூழும் - *பெண்களின் வரிசை சுற்றும்.*

**மாதரணியாடும்**

மா தரணி ஆடும் - *சிறந்த உலகத்தார்கள் ஆடுதலைச் செய்யும்.*

மாதர் அணி ஆடும் - *பெண்களுடைய அணிகலன்கள் அசையும்.*

**மாதருக்கநேராம்**

மாதர் உக்கம் நேர்ஆம்-*பெண்களின் இடையை நிகர்க்கும்.*

மா தரு கம் நேர் ஆம் - *சிறந்த கற்பகமும் முகிலும் ஒப்பாகும்.*

**மாதருக்ககற்றுவார்**

மா தருக்கு அகற்றுவார் - *மிகுந்த செருக்கினைப்போக்குவார்.*

மாதருக்கு அகற்றுவார் - *பெண்களுக்குப் பெருகச் செய்வார்.*

**மாதருமங்கூடும்**

மா தருமம் கூடும் - *சிறந்த அறங்களைச் செய்யும்.*

மாதரும் அங்கு ஊடும் - *பெண்களும் அவ்விடத்தே ஊடுதலைச் செய்யும்.*

**மா தருமதுரை**

மாதரு மதுரை - *பெரிய மரங்கள் பொருந்திய மதுரை.*

மா தருமம் துரை - *சிறந்த அறங்களைச் செய்யுஞ் செல்வன்.*

மாது அரு மது உரை - *மங்கையின் அரிய தேனைப் போன்ற சொல்.*

மா தரும் அது உரை - *செல்வத்தைக் கொடுக்கும் அதனைச் சொல்.*

**மாதரையளாவும்**

மாதரை அளாவும் - *பெண்களைக் கலக்கும்.*

மா தரை அளாவும் - *அழகிய பூமியை நெருக்கும்.*

**மாதர்மானங்கெடுத்தார்**

மாதர் மான் அங்கு எடுத்தார் - *அழகிய மானை அவ்விடத்திலே கையிலெடுத்தார்.*

மாதர் மானம் கெடுத்தார் - *(தாருகாவன முனிவர்) மனைவியரின் பெருமையைக் கெடுத்தவர்.*

**மாதவத்தையாதரித்தான்**

மா தவத்தை ஆதரித்தான் - *சிறந்த தவத்தைப் போற்றினன்.*

மாது அவத்தை யாது அரித்தான் - *பெண் விருப்பால் வருந்துன்பம் எதனையும் அழித்துப் போக்கியவன்.*

**மாதவரங்கமே**

மா தவர் அங்கமே - *பெரிய முனிவர்களுடைய உடலே.*

மாது அவர் அங்கமே - *மாதாகிய இறைவியிருப்பது அவர் உடலிடத்தே.*

**மாதவரைநேராம்**

மாதவரை நேராம் - *சிறந்த தவமுடையவர்கட்கு ஒப்பாக விளங்கும்.*

மா தவரை நேராம் - *சிறந்த வில்லுக்கு ஒப்பாகும்.*

**மாதவத்தன்**

மா தவத்தன் - *சி[illegible] யுடையவன்*

மாது அ அத்தன் - *மாதைப் அந்தப் பாதியுடலில் உடையவன்.*

**மாதவனங்காக்கும்**

மாதவன் அம் காக்கும் - *பெரிய தவத்தையுடைய அகத்திய முனிவர் அழகைப் பாதுகாக்கும்.*

மா தவன் அங்காக்கும் - *திருமால் வாயைத் திறக்கும்.*

**மாதவனாயனந்தாமனே**

மாதவன் ஆயன் நந்தா மன் ஐ- *மாதவன், ஆயன் என்ற பெயரை யுடைய அழியாத இறைவனுக்குந் தலைவனே!*

மாதவன் ஆய் அநந்தா மனை - *தவத்தைச் செய்பவனால் ஆராயப்படுகிற அளவில்லாதவனே இருப்பிடம்.*

**மாதவனாய்**

மாது அவனாய் - *பெண்ணே*

மாது அவம் நாய் - *ஆசையை உடைய வீணனாய்.*

மா தவனாய் - *பெருமை பொருந்திய தவத்தைச் செய்பவனாய்.*

**மாதானமேவும்**

மா தானம் மேவும் - *திருமகள் இடமாகப் பொருந்தும்*

மா தானம் மேவும் - சிறந்த தானங்களைப் பெறும்.

**மாதிடங்கொண்டான்**

மாது இடங்கொண்டான்-உமா தேவியை இடப்பாகத்திற் கொண்டவன்.

மா திடம் கொண்டான்-மிகுந்த ஆற்றல் அமையப்பெற்றவன்.

**மாதுரியங்கடந்தார்**

மாதுரியங்கள் தந்து ஆர் - இனிமைகள் அமைந்து பொருந்திய.

மாதுரியம் கடந்தார் - பெரிய துரியா அவத்தையைக் கடந்தவர்.

**மாதுரியமேலுறலால்**

மாதுரியம் மேல் உறலால் - இனிமை மிகுதியாகப் பெறுதலால்.

மா துரியம் மேல் உறலால் - வீடுபேற்று நிலையை மேன்மையாக அடைதலால்.

**மாதுருக்கங்காதரனுர்**

மாதுருக்கு அங்கு ஆதரனுர் - தாய்க்கு அவ்விடத்தே அன்பு செய்பவர்.

மா துருக்கம் காது அரனுர் - (முப்புரத்தாருடைய) பெரிய கோட்டைகளை அழித்த சிவனுர்.

மாதுஉரு கங்கா தரனுர்-பெண்ணுருவமுடைய கங்கையைத் தாங்கியவர்.

**மாதுவசமன்புள்ளார்**

மாது வசம் அன்பு உள்ளார் - பெண்ணின் இடத்திலே அன்பை உடையவர்.

மா துவசம் மன்புள்ளார்-சிறந்த கொடியில் நிலைபெற்ற கருடனை உடையவர்.

**மாதுளங்கடுக்கும்**

மாதுளம் கடுக்கும் - மாதுளங் கனியை ஒத்து விளங்கும்.

மாது உளம் கடுக்கும் - பெண்ணுனவள் உள்ளம் வருந்தும்.

**மாதுளவனத்தன்**

மா துளவன் நத்தன் - சிறந்த துளசியை அணிந்தவன் சங்கையேந்தியவன்.

மாது உளவன் அத்தன்-மாதையுடையவன் தலைவன்.

**மாந்தருக்கொப்பேயும்**

மாம் தரு கொப்பு ஏயும் - மாமரங்கள் கொப்புகள் பொருந்தும்.

மாந்தருக்கு ஒப்பு ஏயும்-மனிதர்கட்கு ஒப்பாக விளங்கும்.

**மாபாடியங்கூர்**

மாபாடியம் கூர் - மாபாடியம் என்னும் உரையைக்கொள்ளுகின்ற.

மா பாடி அங்கு ஊர் - வண்டுகள் பாடிக்கொண்டு அங்கே செல்லுகின்ற.

**மாப்பினுகத்தான்**

மா பின் ஆக தான் - குதிரையானது பின்னேவரத்தான்.

மா பினுகத்தான் - பெருமை பொருந்திய பினுகமென்னும் வில்லையுடையவன்.

**மாப்புளினமேயும்**

மா புள் இனம் ஏயும் - வண்டுகளும் பறவையினங்களும் பொருந்தும்.

மா புளினம் ஏயும் - *பெரிய மணற்குவியல்கள் அமையும்.*

**மாமதியார்ந்தோங்கும்**

மா மதி ஆர்ந்து ஓங்கும்-*சிறந்த திங்களைப் பொருந்தி ஓங்கும்*
மாமதி ஆர்ந்து ஓங்கும்-*சிறந்த அறிவு பொருந்தி விளங்கும்.*

**மாமனுரென்ருர்**

மா மன் ஆர்என்தார் - *வண்டு பொருந்திய ஆத்தி என்கிற மாலையை.*
மாமனுர் என்ருர் - *மாமனுர் என்று சொன்னவர்.*

**மாமலை**

மாமலை - *மாதுலனை.*
மாமலை - *திருமகள் வீடாகிய தாமரை.*

**மாமன்றலைக்காய்ந்தார்**

மாமன் தலைக்கு ஆய்ந்தார் - *மாமன் தலைக்கு வேறு தலையைத் தெரிந்தெடுத்தவர்.*
மா மன்றலைக் காய்ந்தார்-*சிறந்த திருமணத்தை முனிந்தவர்.*

**மாயவராகமே**

மாயவர் ஆகமே - *திருமாலது முழுவெலும்பே.*
மாயவராகமே - *வஞ்சனையை உடைய பன்றியே.*

**மாயாதவர்**

மா யாதவர் - *சிறந்த இடையர்கள்.*
மாயாதவர் - *இறவாதவர்கள்.*

**மாயாநலங்கூர்**

மாயா அநலம்கூர் - *மயக்கத் தீ மிகும்.*
மாயா நலம்கூர் - *கெடாத நன்மை பொருந்தும்.*

**மாலகலமுற்று**

மால் அகலம் உற்று - *பெருமையையும் விசாலத்தையும் பொருந்தி.*
மால் அகலம் உற்று-*திருமாலின் மார்பைப் பொருந்தி.*

**மாலதிகந்தஞ்சேர்**

மாலதி கந்தம் சேர்-*முல்லையின் மணம் பொருந்தும்.*
மால்அது இகந்து அம்சேர் - *மயக்கமாகிய அது நீங்கி அழகு சேரும்.*

**மாலயனின்ருடும்**

மால் அயன் நின்று ஆடும் - *திருமாலும் நான்முகனும் நின்று கூத்தாடும்.*
மால் அயல் நின்று ஆடும் - *மேகம் பக்கத்திலே நின்று ஆடும்.*

**மாலாகமஞ்சார்**

மால் ஆக மஞ்சு ஆர் - *மிகுதியாக முகில்கள் பொருந்துகிற.*
மால் ஆகமம் சார் - *திருமாலுடைய மறைபொருந்தும்.*

**மாலார்திருக்கச்சிஅத்திகிரி**

மால் ஆர் திருக்கச்சி அத்திகிரி- *திருமால் எழுந்தருளியிருக்கின்ற திருக்கச்சியும் அத்திகிரி என்னும் ஊரும்.*
மால் ஆர் திருக்கச்சி அத்திகிரி- *ஆடவர்க்கு ஆசையை உண்டாக்குகின்ற அழகிய கச்சைத் தாங்கிய யானைமலை.*

**மாலினுலும்கலக்கம்**

மாலினுலும் கலக்கம் - *திருமாலாலும் குழப்பம்.*

மாலினாலும் கலக்கம் - காம மயக்கத்தாலுங் கலங்கிய தன்மை.

**மாலைக்கல்லார்**

மாலை கல்லார் - மயக்கத்தைப் போக்கமாட்டார்கள்.

மாலைக் கல்லார் - திருமாலை அறிந்து கொள்ளமாட்டார்கள்.

மாலைக்கு அல் ஆர் - மாலைப் பொழுதுக்கும் இரவிலே பொருந்துகின்ற.

**மாலைப்போதுட்கவரும்**

மாலை போதுள் கவரும் - மாலை மலர்களில் (தேனைக்) கவரும்.

மாலைப் போது உட்கவரும் - மாலைக்காலமானது அஞ்சுமாறு வரும்.

**மாலையணியான்**

மாலை அணியான் - மயலை மேற்கொள்ளான்.

மாலை அணியான் - மாலையினை அணியமாட்டான்.

மாலை அணியான் - மாலையினை அணியாகக் கொண்டவன்.

**மாலையம்போர்**

மால் ஐ அம்போர்-மயக்கத்தைச் செய்கின்ற ஐங்கணைகளையுடைய காமர்.

மாலையம் போர் - மாலைக்காலத்துக் காமப்போர்.

**மாலையாகமேற்சாய்ந்து**

மால் ஐ ஆகம் மேல் சாய்ந்து - திருமாலின் அழகிய மார்பின் மீது சேர்ந்து.

மாலை ஆக மேல் சாய்ந்து-தாரகத் தன்னுடைய ... த்திலே பொருந்தி.

**மாலையாக்கும்**

மாலை யாக்கும் - மாலையைக் கட்டும்.

மாலை ஆக்கும் - மாலைக்காலமாகச் செய்யும்.

மாலை ஆக்கும் - மையலை உண்டாக்கும்.

**மாலையானையனே**

மாலையான் ஐயனே - மாலைக் காலத்தால் தலைவனே!

மாலை யானையனே - மாலையை அணிந்த யானைவாகனத்தையுடையவனே!

மால் ஐயா நயனே - பெரிய ஆட்டு வாகனத்தையும் நன்மையையும் உடையவனே!

**மாலையிருள்வந்து**

மாலை இருள் வந்து - மாலைக் காலத்து இருளானது சேர்ந்து.

மால் ஐ இருள் வந்து - மயக்கந் தருவதாகிய ஐந்து பகுப்பினையுடைய கூந்தல் வந்து.

**மாலையுறலால்**

மாலை உறலால் - பூமாலையை அடைதலால்.

மாலை உறலால்-திருமாலை அடைதலால்.

மாலை உறலால் - மாலைக்காலம் சேர்தலால்.

**மாலையெடுத்து**

மாலை யெடுத்து - மாலைக்காலத்தை அஞ்சி.

மாலையெடுத்து - திருமாலைச் சுமந்துகொண்டு.

**மாலையேற்றுமின்னுதலால்**

மாலை ஏற்று மின்னுதலால் - *மாலைப்பொழுதில் வெளித் தோன்றி விளங்குகிறபடியால்.*

மாலை ஏற்று மின்னுதலால் - *பூமாலை பொன்மாலை முதலியவைகளை அணிந்து விளங்குவதால்.*

**மாலோகவித்தது**

மாலோ கவித்தது - *மயக்கமோ சூடிக்கொண்டது.*

மா லோக வித்து அது - *சிறந்த உலகத்திற்கு விதையாக இருக்கின்றது அது.*

**மால்கொண்டகாலத்தும்**

மால்கொண்ட காலத்தும் - *முகிலைக்கொண்ட கார்காலத்திலும்.*

மால்கொண்ட காலத்தும் - *காமமயக்கத்தைக் கொண்ட பொழுதும்.*

**மால்பயமடைந்தார்**

மால் பயம் அடைந்தார் - *திருமால் அச்சங்கொண்டார்.*

மால்பயம் அடைந்தார் - *திருமால் பாற்கடலை அடைந்தார்.*

**மாவடுவருந்துவார்**

மாவடுவர் உந்து வார் - *பெரிய (தன) வடுவையுடையவர் மேலெழும் நீண்ட.*

மாவடு அருந்துவார் - *மாவின் வடுவைச் சாப்பிடுவார்.*

**மாவடுவைத்தகத்தன்**

மா வடுவை தக தன் - *பெரிய தழும்பைத் தகுதியாகத் தன்னுடைய.*

மா வடு வைத்த கத்தன் - *மா வடுவை உண்டாக்கியருளிய கடவுள்.*

**மாவரம்பைமன்னும்**

மா வரம்பை மன்னும் - *பெரிய கரையைப் பொருந்தும்.*

மா அரம்பை மன்னும் - *மாவும் வாழையும் பொருந்தும்.*

மா அரம்பை மன்னும் - *அழகிய தேவரம்பை சேரும்.*

**மாவலியைநேரும்**

மா வலியை நேரும் - *மிகுந்த ஆற்றலைப் பொருந்தும்.*

மாவலியை நேரும் - *மகாபலியைப் போன்று விளங்கும்.*

**மாவாசமன்னும்**

மா வாசம் மன்னும் - *திருமகள் வாசஞ்செய்யும்.*

மா வாசம் மன்னும் - *சிறந்த மணம் நிலைபெறும்.*

**மாவாசம்**

மாவாசம் - *மிகுந்த மணம்.*

மா வாசம் - *திருமகள் தங்கியிருக்குமிடம்.*

மா வாசம் - *அழகிய ஆடை.*

**மாவாரணவரையார்**

மா வாரண வரையார் - *சிறந்த யானைமலையை உடையவர்.*

மா வாரண வரையார் - *உயர்ந்த சங்க ரேகையை உடையவர்.*

**மாவிசையமேவும்**

மா இசை அம் மேவும் - *வண்டுகளின் இசையும் அழகும் பொருந்தும்.*

மா இசைய மேவும் - *இலக்குமி பொருந்த விரும்பும்.*

மா விசையம் மேவும் - *பெரிய வெற்றியுண்டாகும்.*

**மாவிடத்தார் கந்தரத்தர்**

மா விடத்து ஆர் கந்தரத்தர் - *கரிய நஞ்சு பொருந்தப்பெற்ற கழுத்தையுடையவர்.*

மா இடத்தார் கந்தர் அத்தர் - *தாயாகிய இறைவி இடப்பாகத்திலே பொருந்தப்பெற்றவர் முருகக் கடவுளுடைய தந்தை.*

**மாவிரதமாரும்**

மா விரதம் ஆரும்-*சிறந்த நோன்புகளை மேற்கொள்ளும்.*

மா இரதம் ஆரும் - *சிறந்த இரதங்கள் செல்லும்.*

**மாவிரதத்தால்**

மா விரதத்தால் - *பெருமை வாய்ந்த விரதங்களினால்.*

மா இரதத்தால்-*குதிரை கட்டிய தேரால்.*

**மாவிரதமேவும்**

மா இரதம் மேவும் - *மாங்கனியின் சாறு பொருந்தும்.*

மா இரதம் மேவும் - *குதிரை பூட்டப்பெற்ற தேர் விளங்கும்.*

மா விரதம் மேவும் - *சிறந்த நோன்பைக் கடைப்பிடிக்கும்.*

**மாவிருந்தோம்பும்**

மா இருந்து ஓம்பும் - *திருமகள் இருந்து பாதுகாக்கும்.*

மா விருந்து ஓம்பும் - *சிறந்த விருந்தைப் போற்றும்.*

**மாவிலைகொளலால்**

மா விலை கொள்லால் - *மிகுந்த விலையைக் கொள்ளுதலினால்.*

மாஇலை கொளலால் - *மாமரத்தின் இலையைக் கொள்ளுகிற படியால்.*

**மாவையகமன்னும்**

மா வையகம் மன்னும் - *பெரிய உலகைப் பொருந்தும்.*

மாவை அகம் மன்னும் - *திருமகளை வீட்டில் அடையும்.*

மாவை அகம் மன்னும் - *மாவடுவை அல்லது வண்டை உள்ளத்திற் பொருந்த நினைக்கும்.*

**மாழைவடுவாகும்**

மாழை வடு ஆகும்-*மாவடுவை ஒக்கும்.*

மாழை வடுவாகும்-*பொன்னுங் குற்றமாகும்.*

**மாறங்கைமன்னும்**

மாறு அங்கை மன்னும்-*பிரம்பை அழகிய கையிற் பொருந்தும்.*

மால் தங்கை மன்னும் - *திருமாலுடைய தங்கையாகிய தடாதகைப் பிராட்டியார் பொருந்தும்.*

**மாறனித நீர்சார்**

மாறன் இத நீர் சார் - *பாண்டியனுடைய இனிய தன்மை பொருந்தும்.*

மால் தனித நீர் சார் - *முகில் முழக்கத்துடன் மழைநீர் மிகும்.*

**மாறுக்கோட்டையுறலாலும்**

மாறு கோட்டை உறலாலும் - *அகலாத வளைவைப் பெற்றிருத்தலாலும்.*

மாறு கோட்டை உறலாலும் - *கெடாத கரையைப் பொருந்துதலாலும்.*

**மாறுவாரம் படைத்து**

மாறு ஆரம்படைத்து- *தவறுமல் மாலையைக் கொண்டு.*

மாருவாரம் படைத்து - *நிலைப் பாகக் கரையைப்பெற்று.*

**மாருத்தேனுமணிபடைத்து**

மாரு தேனும் மணிபடைத்து - *நீங்காத காமதேனுவையுஞ் சிந்தாமணியையும் படைத்து.*

மாரு தேனும் மணிபடைத்து - *இடைவிடாமல் தேனடைகளையும் இரத்தின வகைகளையும் உண்டாக்கி.*

**மாருமனேகந்தரம்**

மால் தாமனேகந்தரம்-*பெருமை தங்கிய ஒளியை உடையவனே! முகில்.*

மாறுஆம் அனேகம் தரம்-*மாறுபாடாகும் பலமுறையும்.*

**மாருவளம்பெற்றிடும்**

மாரு அளம் பெற்றிடும் - *மாருத உப்பளங்களைக் கொண்டிருக்கும்.*

மாரு வளம் பெற்றிடும்-*கெடாத வளத்தையுங் கொண்டிருக்கும்.*

**மாற்குவளைகாட்டும்**

மால் குவளை காட்டும் - *சிறந்த கருங்குவளை மலரைப் புலப்படுத்தும்.*

மாற்கு வளை காட்டும் - *திருமாலுக்குச் சங்கினைக் காண்பிக்கும்.*

**மாற்புணர்ந்து**

மால் புணர்ந்து - *திருமாலைச் சேர்ந்து.*

மால் புணர்ந்து-*முகிலையளாவி.*

மால் புணர்ந்து - *பெருமை பொருந்தி.*

**மாற்றங்கெடாத**

மாற்று அங்கு எடாத - *பொன் மாற்று அங்கு எடுபடாத.*

மாற்றம் கெடாத - *சொன்ன சொல் தவருத.*

**மாற்றமொழிபுட்கரத்துறலால்**

மாற்றம் ஒழி புட்கரத்து உறலால் - *பேச்சு வழக்கற்ற விண்ணில் தோன்றுவதால்.*

மாற்றம் மொழிபுள் கரத்து உறலால் - *சொற்களைப் பேசுகிற கிளி முதலியவை கையில் இருப்பதால்.*

**மாற்றுரைவெல்லும்**

மாற்றுரை வெல்லும் - *பகைவர்களை வெற்றி கொள்ளும்.*

மால்தாரை வெல்லும்-*முகிலின் மழைத்தாரையை வெற்றி கொள்ளும்.*

**மாற்றினடிக்கும்**

மாற்றின் அடிக்கும் - *பிரம்பினுலே அடிக்கும்.*

மாற்றி நடிக்கும் - *மாறியாடுதலைச் செய்யும்.*

**மானங்கையான்**

மால் நங்கையான் - *பெருமை பொருந்திய நங்கையை உடையவன்.*

மான் அங்கையான் - *மானை அழகிய கையிலே உடையவன்.*

மானம் கையான் -*பெருமையை வெறுக்காதவன்.*

**மானச்சோதிபுறந்துவள**

மானம் சோதி புறம் துவள - *மிகுதியான ஒளி வெளியிடமெல்லாம் ஒளிர.*

மான் அ சோதி புறம் துவள - மான்போன்ற களங்கமும், அந்த ஒளியும் வெளியில் தோன்ற.
மால் நச்சு ஓதி புறம் துவள - முகில்கள் விரும்புகிற கூந்தல் பின்புறம் அவிழ்ந்து சரிய

**மானத்தரங்கம்**

மால் நத்து அரங்கம்-பெருமை பொருந்திய சங்கு ஆற்றி டைக் துறைகளில்
மால்நத்து அரங்கம் - திருமால் விரும்புகிற சீரங்கம்.
மானத்து அரங்கம் - பெருமை பொருந்திய சபை.

**மானத்தரையரை**

மான் அத்தரை அரை - மானைக் கையிலேந்தியவரை யிடுப் பில்.
மான் நத்து அரையரை - மான் போன்ற கண்ணையுடைய உமாதேவி விரும்பும் அரைப் பாகத்தை யுடையவரை.
மால் நத்தர் ஐயரை-பெரிய சங் கேந்திய திருமாலின் தலை வரை.
மானம் தரையரை - பெருமை பொருந்திய உலகில் உள்ள வர்களை.

**மானத்தன்**

மான் அத்தன் - மானேந்திய கையை உடையவன்.
மான் அத்தன் - மான்போன்ற உமாதேவியைப் பாதியாக வுடையவன்.
மானத்தன்-பெருமையை உடை யவன்.
மால் நத்தன் - திருமாலால் விரும்பப்படுபவன்.

**மானத்திரங்கொள்**

மால் நத்து இரங்கு ஒள் - திரு மாலின் சங்கு கவலும்படி யான ஒளியமைந்த.
மான் அத்திரம் கொள் - மானை யும் அம்பையும் உவமை கொள்ளுகிற.
மானத் திரம்கொள் - விரத்தின் நிலை கொள்கிற.

**மானத்திராவிடத்தான்**

மானம் திராவிடத்தான் - பெரு மை பொருந்திய தமிழ்மொழி யை உடையவன்.
மால் நத்து இரா விடத்தான் - திருமாலினால் விரும்பப்படுப வனும் இருளைப்போல் கண் டத்தில் நஞ்சுக்கருமை யுடை யவனுமாகிய இறைவன்.

**மானந்தணியா**

மால்நந்து அணியா(ம்)-திருமா லேந்திய சங்கின் அழகுறும்.
மானம் தணியா - பெருமை நீங்காத.

**மானந் தவாதவர்**

மானம் தவாதவர் - பெருமை கெடாதவர்.
மான் நந்த வா தவர் - மானும் மிகுதியாகத் தாவுகின்ற தவத்தர்.

**மானந்தழைக்கும்**

மானம் தழைக்கும் - பெருமை சிறக்கும்.
மான் அம் தழைக்கும்-மானின் அழகு மிகும்.

**மானந்திகழும்**

மானம் திகழும் - பெருமை விளங்கும்.

மால் நந்து இகழும் - *திருமாலினுடைய சங்கைப் பழிக்கும்.*

**மானமிசைமேவும்**

மானம் மிசை மேவும் - *விமானத்தின்மீது செல்லும்.*

மானம் இசை மேவும் - *பெருமையுஞ் சீர்த்தியும் பொருந்தும்.*

**மானலங்காணும்**

மான் அலம் காணும் - *மானின் அமைவைக் காணும்.*

மால் நலம் காணும் - *மிகுந்த அழகு தோன்றும்.*

**மானவியற்பகை**

மான் அவியல் பகை - *மானினுடைய அவித்த கறிப் பகுப்பு.*

மான இயற்பகை - *பெருமை பொருந்திய இயற்பகை நாயனார்.*

**மானுரங்காட்டும்**

மானார் அங்கு ஆட்டும் - *பெண்களை அங்கு அலையச் செய்யும்.*

மால் நாரம் காட்டும் - *முகிலினிடம் அன்பைக் காண்பிக்கும்.*

மால் நாரம் காட்டும் - *மிகுந்த நீரைப் புலப்படுத்தும்.*

**மானருக்குட் சிறந்திலங்கும்**

மானருக்கு உள் சிறந்து இலங்கும் - *பெண்களுக்குள்ளே உயர்வு பெற்று விளங்கும்.*

மால்நாருக்குள் சிறந்திலங்கும் - *உயர்ந்த நாரால் கட்டப்பெற்றுச் சிறப்புற்று விளங்கும்.*

**மானிடமாகியும்**

மான் இடமாகியும் - *மானை இடது கையில் ஏந்தியும்.*

மான் இடமாகியும் - *மானைப் போன்ற உமாதேவியை இடப் பாகத்தில் வைத்தும்.*

மானிடம் ஆகியும் - *மனிதப் பிறப்பை யெடுத்தும்.*

**மானிடராக**

மானிடர் ஆக - *மனிதர்களாக.*

மான் இடர் ஆக - *மானை இடக் கையிலேந்திய சிவபெருமானாக.*

**மானினியக்கம்**

மானின் இயக்கம் - *மான்களின் சஞ்சாரம்.*

மானினி அக்கம் - *பெண்களின் கண்கள்.*

**மானேயமாகும்**

மான் நேய மாகும் - *மான் நட்புரிமையைக் கொள்ளும்.*

மால் நேயமாகும் - *முகில் நட்பாகும்.*

**மான்மதத்தார்**

மால் மதத்து ஆர் - *மிகுந்த மதத்தைப் பொருந்திய.*

மான் மதத்தார்- *கத்தூரித் திலகத்தையுடையவர்.*

**மான்மதமேநாறும்**

மான்மதமே நாறும் - *கத்தூரி மணமே வீசும்.*

மால்மதமே நாறும் - *திருமால் சமயமே விளங்கும்.*

**மான்மருகன்**

மால் மருகன் - *திருமாலுடைய உடன் பிறந்தாள் மகன்.*

மால் மரு கன் - *பெருமை பொருந்திய நிறைகோல்.*

**மான்மருவி**

மான் மருவி - *மான் பொருந்தி.*
மால் மருவி- *திருமால் அமைந்து.*
மால் மருவி - *அவசம் உற்று.*

**மான்மறியும்புண்டரீகமுமோரிடை நீர் வைக்கின்றநீதியினுல்**

மான்மறியும் புண்டரீகமும் ஓர் இடை நீர் வைக்கின்ற நீதியி

னுல் - *மான் கன்றையும் புலியையும் ஓரிடத்திலே நீர்வைக்கின்ற நெறியினுல்.*
மான்மறியும் புண்டரீகமும் ஓர் இடை நீர் வைக்கின்ற நீதியினுல் - *மான்கன்று போன்ற கண்மிது தாமரை மலர் போன்ற கையை நீர் வைக்கின்றபடியினுல்.*

**மிகக்கோதண்டமேற்கொண்டு**

மிக கோதண்டம் மேல் கொண்டு - *பெரிய வில்லைத் தோளின் மேலே சுமந்து.*
மிக கோது அண்டம் மேல் கொண்டு - *மிகுந்த களங்கத்தை வானத்தினிடத்து மேற் கொண்டு நின்று.*

**மிகவாடையாய்மருவி**

மிக ஆடையாய் மருவி-*மிகுந்த ஆடையாக அமைந்து.*
மிக வாடையாய் மருவி-*மிகுந்த வாடைக் காற்ருக நின்று.*

**மிகுந்தகோபமுடனுகமேவ**

மிகுந்த கோபமுடன் ஆகம் மேவ - *மிகுந்த சினத்தோடு உடலிற் பொருந்த.*
மிகுந்த கோபமுடன் நாகம் மேவ - *மிகுந்த சினத்தோடு பாம்பு பொருந்த.*

**மிக்ககலைதோய்ந்திடலால்**

மிக்ககலை தோய்ந்திடலால் - *மிகுந்த கலைகள் வளரப் பெறுவதால்.*
மிக்க கலை தோய்ந்திடலால் - *மிகுதியான ஆடைகள் தோய்க்கப் பெறுகிறபடியினுல்.*

**மிக்கபொருள்பெறலால்**

மிக்க பொருள் பெறலால் - *மிகுந்த விலைப்பொருள் அடைதலால்*
மிக்க பொருள் பெறலால் - *மிக விரிவான சொற் பொருளைப் பெறுதலால்.*

**மிக்கமனுவளையும்**

மிக்க மனு அளையும் - *சிறந்த மந்திரம் சொல்லப்பெறும்.*
மிக்க மனு வளையும் - *மிகுந்த மனிதர்கள் வளஞ்செய்யும்.*

**மிக்கவிலைபெறலால்**

மிக்க விலை பெறலால் - *மிகுந்த விலையைப் பெறுதலினுல்.*
மிக்க இலை பெறலால் - *மிகுந்த இலையைப் பெறுகையால்.*

**மிதியடி**

மிதியடி-*காலுக்கிடுஞ் செருப்பு.*
மிதி அடி - *மிதிப்பாயாக, அடிப்பாயாக.*

**மின்னார்சடைவற்கலைபடைத்து**

மின் ஆர் சடை வற்கலை படைத்து - *ஒளியுள்ள சடைமுடியையும் மரவுரியையும்*

மின்னார் சடை வன் கலை படைத்து - *ஒளிமிக்க சடையில்வலியகலையாக அமைந்து.*

**மின்னுமணியாய்விளங்க**

**மின்னும் அணியாய் விளங்க** - *மின்னலும் வரிசையாக விளங்க.*

**மின்னும் மணியாய் விளங்க** - *ஒளிவிடுகின்ற மணியாகத் திகழ.*

**மின்னுமணிவேழத்தால்**

**மின்னும் மணி வேழத்தால்** - *விளங்குகிற சிந்தாமணியினால், ஐராவதமென்னும் யானையினால்.*

**மின்னும் மணி வேழத்தால்** - *ஒளிவிடும் மணியை உடைய கரும்பினால்.*

**மீதரம்பையைப்பழிக்கும்**

**மீது அரம்பையை பழிக்கும்** - *மேல் உலகத்தில் உள்ள அரம்பை யென்னும் தேவ மாதை இழிவுபடுத்தும்.*

**மீது அரம்பையை பழிக்கும்** - *மேன்மையுள்ள வாழைத் தண்டை இகழும்.*

**மீனங்கொடுக்கும்**

**மீனம் கொடுக்கும்** - *மீன்களைத் தரும்.*

**மீன் அங்கு ஒடுக்கும்** - *மீன் போன்ற கண்களைத் தூங்கச் செய்கிற.*

**மீனைப்பொருந்திடலால்**

**மீனைப் பொருந்திடலால்** - *விண் மீன்களைப் பொருந்தியிருக்கிறபடியால்.*

**மீனைப் பொருந்திடலால்** - *கயல்களைத் தன்னிடத்தே பெற்றிருக்கிறபடியால்.*

**மீனோவெனக்கொழிக்கும்**

**மீனோ என கொழிக்கும்** - *விண் மீன்களோ என்று சொல்லுமாறு ஒதுக்கும்.*

**மீநோவு எனக்கு ஒழிக்கும்** - *மிகுதியான பிறவித் துன்பத்தை எனக்குப் போக்கும்.*

**முகமதியப்பெண்**

**முகம் மதியம் பெண்** - *திங்களைப் போன்ற முகமுடைய பெண்.*

**முகமதியப் பெண்** - *துலுக்கப் பெண்.*

**முகமாறுளதால்**

**முகம் ஆறு உளதால்** - *முகம் ஆறு இருப்பதால்.*

**முகம் மாறு உளதால்** - *முகம் மாறுபட்டு இருப்பதால்.*

**முக்கணன்**

**முக் கணன்** - *மூன்று கண்களையுடைய சிவபெருமான்.*

**முக் கணன்** - *மூன்று கண்களையுடைய தேங்காய்.*

**முடியப்படு**

**முடியப்படு** - *கட்டப்படுகிற.*

**முடி அப்பு அடு** - *தலையிலே கங்கை பொருந்திய.*

**முடிய படு**-*நன்ருக அழுத்துகிற.*

**முட்டைக்கும்**

**முள் தைக்கும்** - *முள்ளானது காலிலே குத்தும்.*

**முட்டைக்கும்** - *கோழி முதலியவைகளின் முட்டைக்கும்.*

**முதிரச்சுகந்தந்தேற்றுகையால்**

**முதிர சுகம் தந்து ஏற்றுகையால்** - *மிகுதியாக நன்மை கொடுத்து மேன்மை செய்ததால்.*

முதிர் அ சுகந்தம் ஏற்றுகை யால் - மிகுந்த நல்ல மணத்தை உண்டாக்குவதால்.

**முதுகோடுநீங்காதிருக்கும்**

முது ...
மேலிடத்தில் தவறாமல் இருந்து கொண்டேயிருக்கும்.

முதுகு ஓடும் நீங்காது இருக்கும் - தன்மேற் செல்லும் தானிருந்த இடத்தை விட்டுப் பேராமலிருக்கும்.

**முத்தங்கொழிக்கும்**

முத்தம் கொழிக்கும் - முத்துகளை ஒதுக்கும்

முத்து அங்கு ஒழிக்கும்-முத்துக்களை அவ்விடத்திலே இல்லாமற் செய்யும்.

(1)

**முத்தரும்பாவரும்**

முத்தரும் பாவரும்-வீடுபேற்று விருப்பினரும் தீவினையாளர்களும்.

முத்து அரும்பா வரும் - முத்துகள் தோன்றுகிற்கும்.

**முத்தாரன்**

முத்து ஆரன் - முத்துமாலையை அணிந்தவன்.

மு தாரன்-மூன்று மனைவியரை உடையவன்.

**முத்திக்குவேலிதழைக்கின்ற**

முத்திக்கு வேலி தழைக்கின்ற - மோட்சமாகிய வீடுபேற்றிற்கு வேலியாகத் தழைக்கின்ற

முத்து இக்கு வேலி தழைக்கின்ற - முத்துப் பொருந்திய கரும்புவேலி செழிக்கின்ற.

**முத்தினம்**

முத்து இனம் - முத்துக்கூட்டம்.

மு தினம் - மூன்று நாள்.

**முருகாவிதந்தனம்**

முருகா விதந்தனம் - முருகக் கடவுளே நின்னைப் புகழ்ந்தோம்.

முருகா இதம் தனம் - முருகா இனிமையானதாகும் செல்வம்.

**முழங்கிக்கடுந்தோகையின்**

முழங்கி கடும் தோகையின் எழலால்-இரைந்து கொண்டு விரைவில் தன் சிறகு கொண்டு மேலே பறந்ததால்.

முழங்கி கடும் தோகையின் எழலால்-கனைத்துக்கொண்டு பறவைகள் பறப்பதைப் போல் விரைந்து செல்வதால்.

**முழுவம்பர்கள்**

முழு வம்பர்கள் - மிகவுங் கீழ் மக்கள் ஆனவர்.

முழு வம்பர்கள் - முழுமையும் கச்சினை அணிந்தவர்கள் (கொங்கைகள்) (வம்பு - கச்சு.)

**முறைசூழ்குஞ்சங்காக்குதலால்**

முறை சூழ் குஞ்சு அங்கு ஆக்குதலால் - முறையாகத் தன்னைச் சூழுகின்ற குஞ்சுகளை உண்டாக்குவதால்.

முறை சூழ் குஞ்சம் காக்குதலால் - வரிசையாக உடலில் அணிந்துள்ள குஞ்சங்கள் தொங்குவதால்.

**முறையாகக்கண்ணனையுறலால்**

**முறை ஆகம் கண்ணனை உற லால்** - *முறையே உடம்பெல் லாம் கண்ணுடைய இந்தி ரனைச் சார்ந்திருத்தலினல்.*

**முறை ஆக கள்நனை உறலால்** - *சிறப்பாகத் தேன் பொதிந்த பூமொட்டு இருத்தலால்.*

**முறையினுகமுங்கண்டுநின்று**

**முறையின் உகமும் கண்டு நின்று** - *முறைமையாக ஊழிக் காலத்தையும் பார்த்திருந்து*

**முறையின் நுகமும் கண்டு நின்று** - *இடத்தில் நுகத்தடி யையும் ஏற்றுநின்று.*

**முற்றத்தழைத்து**

**முற்றத்து அழைத்து** - *முன்னி டத்திற் கூப்பிட்டு.*

**முற்ற தழைத்து** - *முதிருமாறு செழித்து.*

**முற்ருக்காலெட்டுண்மையினல்**

**முற்ரு கால் எட்டு உண்மையி னல்** - *முதிராத எட்டுக் கால் கள் சேர்ந்து இருக்கின்ற படியினல்.*

**முற்ரு கால் எட்டு உண்மையி னல்** - *வளைத்து வாய்க்கால் களால் தாவியோடுந் தன்மை யிருப்பதால்*

**முற்றுணர்**

**முன் துணர்** - *முன்னே உள்ள பூங்கொத்து*

**முற்று உணர்** - *முழுவதையும் உணர்ந்துகொள்.*

**முற்றுந்தருவானலந்தழுவி**

**முற்றும் தரும் வான் நலம் தழுவி** - *எல்லா நலங்களுங் கொடுக்கின்ற வானத்தில் இருக்கும் நன்மையைப் பெற்று.*

**முற்றும் தரு ஆன் நலம் தழுவி** - *எல்லாவற்றையுந் தருகின்ற மாட்டினது நன்மைக்கு உரியதாகி.*

**முனியாயமான**

**முனி ஆயம் ஆன** - *முனிவ ருடைய பேருகிய.*

**முன் நியாயம் ஆன** - *முன்னே நேர்மையாகவிருந்த*

**முனி ஆயம் ஆன** - *வெறுக் கின்ற பொருள்களானவை.*

**முனிவருமானந்த**

**முனிவு அரும் ஆனந்த** - *வெறுத் தற்கரிய இன்பத்தையுடைய.*

**முனிவரும் மால் நந்த** - *முனி வரும் மயக்கங்கெட.*

**முனைகாட்டும்பல்படைத்து**

**முனைகாட்டும் பல் படைத்து** - *கூர்மையோடு தோன்றுகிற பற்களைக் கொண்டு.*

**முனைகாட்டு உம்பல் படைத்து** - *போர்க்களத்தில் வருகின்ற யானைகளைத் தன்னிடத்தே கொண்டு.*

**முனைநோக்கும்**

**முனை நோக்கும்** - *போர்க்களத் தைப் பார்க்கும்.*

**முனை நோக்கும்** - *அரும்பின் மலரும்.*

**முன்பாவிளன்பதனல்**

**முன்பா வி என்பதனல்** - *வலிமை யாகிய பறவையென்று சொல்லுகிறபடியால்.*

முன் பாவி என்பதனால் - முன்னைய தீவினையாளன் என்று கூறுவதால்.

**முன்பானையளித்தீர்**

முன் பானை அளித்தீர் - முன்னே பானையைக் கொடுத்தீர்.
முன்பு ஆனை அளித்தீர் - முன்பு ஆனையைக் கொடுத்தீர்.

**முன்னங்கவித்தார்**

முன்னம் கவித்தார் - முன்னாளில் குடையாகப்பிடித்தார்.
முன் அங்கு அவித்தார் - முன்பு அங்குக் கெடுத்தவர்.

**முன்னங்கெடுத்தார்**

முன்னம் கெடுத்தார் - முன்னாளிலே கெடுத்தொழித்தவர்.
முன் அங்கு எடுத்தார் - முற்காலத்திலே அங்கே எடுத்தவர்.

**முன்னங்கெலித்தலை**

முன்னம் கெலித்தலை -முன்னால் வெற்றியடைதலை.
முன் அங்கு எலித்தலை - முன் அவ்விடத்தில் [illegible]

**முன்னந்தராவரங்கன்**

முன்னம் தரா அரங்கன் -முன்னாற் கொடுக்காத அரங்கநாதன்.
முன் நந்து அரா அரங்கன் - நினைக்கின்ற சங்கு பாம்பு ஆகியவைகளை யுடைய அரங்கன்.

**முன்னாசீர்வாதஞ்செய்**

முன் ஆசீர்வாதம் செய் - முன்னால் வாழ்த்துரை வழங்குகின்ற.
முன்னு சீர் வாதம் செய் - எண்ணுமச் சிறப்புப் பொருந்திய சொற்போரைச் செய்கின்ற.

**முன்னாலுகையால்**

முன் நாலு கையால் - பன்னிரண்டு கையுடைமையால்.
முன் நாலுகையால் - முன்னே தொங்குதலால்.

**முன்னாளம்போதிவருவதால்**

முன்நாள் அம்போதி வருவதால் - முற்காலத்தில் திருப்பாற்கடலில் தோன்றி வந்திருத்தலால்.
முன் நாள் அம்போது இவருதலால் - முதல் நாள் பேரநம் பாகி மேல் வருதலினால்.

**முன்னிவந்தவரையாதரித்து**

முன் நிவந்த வரை ஆதரித்து - மேல் உயர்ந்த மலையினிடத்தை விரும்பி.
முன்னி வந்தவரை ஆதரித்து - தன்னை நினைத்துவந்தவர்களைப் பாதுகாத்து.

**முன்னிவந்திப்பார்க்கருளி**

முன்னி வந்திப்பார்க்கு அருளி - மனதி லெண்ணி வணக்கஞ் செய்பவர்கட்கு அருள் செய்து.
முன் நிவந்து இப் பார்க்கு அருளி - முன் நிமிர்ந்துநின்று இவ்வுலகத்திற்கு அருள் செய்து.

**முன்னீர்முத்தந்தாரீரென்**

முன்னீர் முத்துஅம் தாரீர்என் - கடலில் உண்டாகிய முத்துக் களாலாகிய அழகிய மாலையை அணிந்தவரே! என்னும்.

முன் நீர் முத்தம் தாரீர் என் - *முதலிலே நீர் முத்தங் கொடுப்பீராக என்று கேட்கும்.*

**மூவாயிரவரும்**

மூவாய் இர வரும் - *மூப்படைதல் இல்லாதவனே இரவில் வருகின்ற.*

மூ ஆயிரவரும் - *தில்லைவாழ் அந்தணர் மூவாயிரவரும்.*

**மூவாவண்டங்குலவுதலால்**

மூவா அண்டம் குலவு தலால் - *நிலைமாறாத வானுலகில் இருத்தலால்.*

மூவா வண்டு அங்கு உலவு தலால் - *இளவண்டுகள் அவ்விடத்தில் வந்து பறந்து திரிதலினால்.*

**மெத்தசலம்**

மெத்த சலம் - *மிகுந்த நீர்.*

மெத்து அசலம் - *மென்மையாகிய மலை (தனம்.)*

**மெய்கண்டதேசிகனர்**

மெய்கண்ட தேசிகனர் - *மெய்கண்ட தேவர்.*

மெய்கண்ட தேசிகனர் - *(உயிர்களிடத்துக் கொண்ட அருளால்) அருட்புரு மேனி கொண்ட ஆசிரியர்.*

மெய்கண்ட தேசிகர் - *உண்மைப் பொருளை அறிந்த குருநாதர்.*

**மெய்க்கவசப்பூண்டிருக்கும்**

மெய் கவசம் பூண்டு இருக்கும்- *உண்மையாகிய கவசத்தை அணிந்திருக்கும்.*

மெய்க்கு அவசம் பூண்டு இருக்கும் - *உடலில் மயக்கத்தை மேற்கொண்டிருக்கும்.*

**மெய்ந்நூலலங்கவரும்**

மெய்நூல் நலம் கவரும் - *உண்மை நூல்களின் நன்மையைப் பற்றும்.*

மெய்நூல் நலங்க வரும் - *பஞ்சு நூலினது நன்மை கெடும்படியாக வரும்.*

**மெய்ப்பவங்காய்ந்து**

மெய்ப் பவம் காய்ந்து - *உடம்போடு கூடிய பிறவியை*

மெய்ப்ப அங்கு ஆய்ந்து - *உண்மை பொருந்த, அவ்விடத்தே ஆராயப்பட்டு.*

**மெய்யாம்வழுத்தேயும்**

மெய் ஆம் வழு தேயும் - *உடல் தொடர்பினலாகிய குற்றங்கள் கெடும்.*

மெய்யாம் வழுத்து ஏயும் - *உண்மையான புகழ்மொழிகள் பொருந்தும்.*

**மெய்யானவன்பிலான்**

மெய் ஆன அன்பு இலான் - *உண்மையான அன்பு இல்லாதவன். (மெய் உண்மை)*

மெய்யான அன்பிலான் - *அழிவில்லாத அன்பில் என்னும் ஊரையுடையவன்.*

**மெய்யின்முல்லை**

மெய்யில் முல்லை - *உடம்பிலே முல்லை மலர் மாலை.*

மெய் இல் முல்லை-*மெய்யெழுத்தில்லாத முல்லை. அது மு(ல்)லை, முலை.*

**மெல்லக்கிழங்கெடுக்கும்**

மெல்ல கிழங்கு எடுக்கும் - *மென்று தின்னும் பொருட்டுக் கிழங்குகளைத் தோண்டியெடுக்கும்.*

மெல்ல கிழம் கெடுக்கும்-மெது வாக முதுமைப் பருவத்தைப் போக்கும்.

**மெல்லவிரும்புமுழைவாய்காட்டி**

மெல்ல விரும்பும் உழைவாய் காட்டி - மெதுவாக யாவரும் விரும்புகிற மான் களங்கத் தைத் தன்னிடத்திலே காண் பித்து.

மெல்ல விரும்பு முழை வாய் காட்டி-மென்று தின்ன அவாக் கொள்ளும் குகைபோன்ற பெரிய வாயைத் காட்டி.

**மென்காமரமுழக்கும்**

மெல் காமரம் முழக்கும் - அமை மையான இசையைப் பாடும்.

மெல் கா மரம் உழக்கும்-மெல் லிய சோலைகளில் உள்ள மரத்தை அசைத்து ஆட்டும்

**மேதகுவிண்டாவுறலால்**

மேதகு விண் தாவுறலால் - மேன்மை பொருந்திய விண் ணுலகத்தவர் வருதலால்.

மேதகு விண் தாவுறலால் - மேன்மை பொருந்திய விண் ணில் தங்குதலால்.

**மேலஞ்சுவர்க்கமார்**

மேல் அஞ்சு வர்க்கம் ஆர் மேன்மையான ஐந்து வகை யாகப் பொருந்தப்பெற்ற.

மேல் அம் சுவர்க்கம் ஆர் - மேலேயுள்ள அழகிய விண் ணுலகத்தைஅளாவப்பெற்ற.

**மேலம்புலியுறலால்**

மேல் அம் புலி உறலால் - மேன்மை தங்கிய அழகிய புலியானது வந்து பொருந்து தலால்.

மேல் அம்புலி உறலால்-மேலே திங்கள் செல்லுதலால்.

**மேலோரையும்பார்த்து**

மேலோரையும் பார்த்து - பெரி யோர்களையுங் கண்டு.

மேல் ஓரையும் பார்த்து - மேல் நாழிகையையுந் தெரிந்து.

**மேவங்கரனர்**

மேவு அம் கரனர் - பொருந்திய அழகிய கையை உடையவர்.

அங்கு மேவு அரனர்-அவ்விடத் திலே எழுந்தருளிய இறை வர்.

**மேவலரைச்சாடுதலால்**

மேவு அலரைச் சாடுதலால் - பொருந்திய பூவினைத் தாக்கு தலால்.

மேவலரைச் சாடுதலால் - பகைவர்களைத் தாக்குகிறபடி யால்.

**மேவரம்பையால்**

மேவு அரம்பையால் - விரும்பு கிற அரம்பை மாதர்களால்.

மேவு அரம்பையால் - பொருந் திய வாழை மரங்களால்.

**மேன்மேல்வடிவாள்புடைவீசி**

மேல்மேல் வடிவாள் புடைவீசி- மிகமிகக் கூர்மையான வாளைப் பக்கத்தில் வீசி.

மேல்மேல் வடிவாள் புடைவீசி- மேன் மேலுந் தெளிவுள்ள ஒளிக்கதிர்களைப் பக்கங் களில் வீசி.

மேன்மைதழைக்க

**மேன்மை தழைக்க** - *உயர்வு பெருக.*

**மேல் மை தழைக்க** - *மேலிடத் நிலை மை நிறைய.*

மைக்கண்டனத்து

**மைக்கண் தனத்து** - *மை தீட்டிய கண்களையும் கொங்கைகளையும்.*

**மைக்கண்டன் நத்து** - *கரிய கழுத்தையுடைய இறைவனை விரும்புகிற.*

மைக்குப்பிணையாம்

**மைக்கு பிணையாம்** - *முகிலுக்குப்பிணையாகும்.*

**மை குப்பு இணையாம்** - *இருட் கூட்டத்திற்கு ஒப்பாகும்.*

மைந்தாசரணம்

**மைந்தா சரணம்** - *மகனே அடைக்கலம்.*

**மைந்து அ சர் அண் நம்** - *வலிய ஆட்டிலேறுந் தீக் கடவுள் சேர்ந்திருக்கும் நம்முடைய.*

மைபட்டாற்றீருமோ

**மை பட்டால் தீருமோ** - *மையைத் தடவினால் தீர்ந்து போகுமோ?*

**மை பட்டால் தீருமோ** - *ஆடு இறந்தால் ஒழியுமோ?*

மையலங்காரகல

**மையல் அம் கார் அகல** - *அஞ்ஞானமாகிய நீருண்ட முகில் நீங்கவும்.*

**மை அலங்கு ஆர் அகல** - *கருமை விளங்குகின்ற ஆத்திமாலை பொருந்திய மார்பையுடையவனே!*

மையலம்பங்கணி

**மை அலம்பு அம் கணி** - *மை தோய்ந்த அழகிய கண்களையுடையவள்.*

**மை அலம்புஅம் கணி** - *மயக்கத்தைப் போக்குகிற காலக்கணி தன்.*

மையலைநிந்திக்கும்

**மை அலை நிந்திக்கும்** - *கரிய இருளைப் பழிக்கும்.*

**மையலை நிந்திக்கும்** - *காம மயக்கத்தை இகழும்.*

மையல்வளரமுலைபொலிய

**மை அல் வளர மு (ல்) லை பொலிய** - *கரிய இரவு பெருக முல்லை மலர்ந்து விளங்க.*

**மையல் வளர முலை பொலிய** - *காமவுணர்ச்சி மேலிடக் கொங்கைகள் விம்ம.*

மையல் விளக்க

**மையல் விளக்க** - *மோகத்தைக் காட்ட.*

**மை அல் விளக்க** - *மை போன்ற இருளில் பொருளைக் காட்ட.*

மையாப்பொழியும்

**மை ஆப் பொழியும்** - *முகிலாகப் பொழியும்.*

**மையாப்பு ஒழியும்** - *மயக்கத் தொடர்பு நீங்கும்.*

மொழியுமேருவந்தடுத்து

**மொழியும் மேரு வந்து அடுத்து** - *பேசப்படுகிற பொன் மலை வந்து சார்ந்து.*

**மொழியும் ஏர் உவந்து அடுத்து** - *மேன்மையாகப் பேசப் பெறும் கலப்பை யுருவம் மகிழ்ந்து எழுதப்பெற்று.*

**யாமினி**

யாம் இனி - *நாம் இனிமேல்.*
யாமினி - *இராப்பொழுது.*

**யாமோதியானம்**

யாம் ஓதி ஆனம் - *நாம் அறிவுடையவர்களானோம்.*
யாமோ தியானம் - *யாமோ இறைவனை எண்ணுபவர்களாவோம்.*

**யார்க்கும்நாவிதன்**

யார்க்கும் நாவிதன்-*யாவரிடத்திலும் நாவுக்கினிமையாகப் பேசுபவன்.*
யார்க்கும் நாவிதன் - *எவருக்கும் மயிர்கழிக்கும் மயிர் வினைஞன்.*

**யானைக்கண்டங்கரி**

யானைக் கண் தங்கு அரி - *வெள்ளையானையின் மேல் இருக்கும் இந்திரன்.*
யான் ஐக் கண்டம் கரி - *யான் அழகிய கழுத்துக் கருமையாக.*

**வகரத்தின்மேலேயிகரத்தைக் - காட்டி**

வகரத்தின்மேலே இகரத்தைக் காட்டி - *வ என்னும் எழுத்துக்கு மேலே இ என்னும் எழுத்தைக் காட்டி.*
வகரத்தின்மேலே இகரத்தைக் காட்டி-*(வ) காலுக்குமேலே (இ) அரையைக் காட்டி. (இடக்க ரடக்கல்)*

**வங்கமலைமேவுதலால்**

வங்க மலை மேவுதலால் - *வெள்ளி மலையைப் பொருந்தியிருத்தலால்.*
வங்கம் அலைமேவு தலால் - *தோணி அலையிலே செல்லுதலால்.*

**வசந்தனலவன்**

வசந்தன் அலவன் - *குரங்கு நண்டு.*
வசந்தன் அலவன் - *காமன் சந்திரன்.*
வசந்தன் நலவன் - *காமன் நல்லவன்.*

**வஞ்சத்தைமேவா**

வஞ்சத்தை மேவா - *வாளைப் பொருந்தாத.*
வஞ்சத்தை மேவா - *வஞ்சகத் தன்மையைப் பொருந்தாத.*

**வஞ்சிக்குமுப்புரமால்**

வஞ்சிக்கு உம் உப்பு உரம் மால்-*பொருதலைக் குறித்துச் செல்லுதற்கு உம்முடைய கடலிடத்துப் பள்ளி கொண்ட திருமால்.*
வஞ்சிக்கும் முப்புரம் மால் - *வஞ்சனையை உடைய முப்புரத்தார் பெருமையை.*

**வஞ்சித்திறைகொள்**

வஞ்சி திறை கொள் - *சேரன் நாட்டுத் திறைப் பொருளைக் கொள்ளும்.*
வஞ்சித்து இறை கொள் - *வஞ்சனையாக இறையைக் கொள்ளும்.*

**வடமலை**

வடமலை - *வடக்கின்கண் உள்ள திருவேங்கடம்.*
வடமலை - *முத்து வடத்தை யணிந்த கொங்கை.*
வடம் அலை -*மாலை அசைகின்ற.*

**வடமலைமாலைமனத்தடக்கி**

**வடமலை மாலை மனத்து அடக்கி** - *திருமலையில் எழுந்தருளிய திருமாலை உள்ளத்திலே அமைத்து.*

**வட மலை மாலை மனத்து அடக்கி** - *மணிமாலையணிந்த மலை போன்றதனமுடையவளையை உள்ளத்தில் அடக்கிக் கொண்டு.*

**வடிவில்லா**

**வடிவு இல்லா** - *உருவமில்லாத.*

**வடிவு இல்லா** - *(நீர்)வடிதலில்லாத.*

**வடுத்தவிரும்**

**வடுத்து அவிரும்**-*பிஞ்சு விட்டு விளங்கப்பெறும்.*

**வடு தவிரும்** - *உடற் குற்றமாகிய நோய் நீங்கப்பெறும்.*

**வட்டங்கொடுக்கும்பணத்துக்கு - மேல்தனம்**

**வட்டம் கொடுக்கும் பணத்துக்கு மேல் தனம்** - *வாசி கொடுக்குங் காசுக்குமேல் காசு.*

**வட்டம் கொடுக்கும் பணத்துக்கு மேல் தனம்** - *வளைவினைக் கொடுக்கும் பாம்பின் படத்தைப் போன்ற அல்குலுக்கு மேலுள்ள கொங்கை.*

**வட்டிகைகொள்ளும்**

**வட்டி கை கொள்ளும்** - *வட்டியைக் கையில் வாங்கிக் கொள்ளும்.*

**வட்டிகை கொள்ளும்** - *ஓவியம் எழுதும் கருவியைக் கொள்ளும்.*

**வட்டிக்குவேண்டா**

**வட்டிக்கு வேண்டா** - *வட்டிக் கடனை விரும்பாத.*

**வட்டு இக்கு வேண்டா** - *வெல்லக் கட்டியையும் கரும்பையும் நாடாத.*

**வணங்கரியார்**

**வணங்கு அரியார்**-*வணங்குதல் இல்லாதவர்கள்.*

**வணம் கரியார்** - *நிறம் கருமையாக அமையப் பெற்றவர்.*

**வணங்கரியான்**

**வணம் கரியான்** - *நிறம் கருமையானவன்.*

**வணங்க அரியான்** - *வணங்குவதற்கு அருமையானவன்.*

**வணங்கலைத்தார்**

**வணம் கலைத்தார்** - *அழகைக் கெடுத்தார்கள்.*

**வணங்கு அலை தார்** - *மாலையின் பொருட்டு வணங்கி யலைவாயாக.*

**வணங்கல் ஐது ஆர்** - *வணங்குதல் சிறந்த அழகாகும்.*

**வணங்காதரம்புரி**

**வணங்க ஆதரம் புரி** - *வணங்குவதற்கு அன்பு கொள்ளுங்கள்.*

**வணங்காது அரம் புரி** - *வணங்காமல் தீமையைச் செய்கின்ற.*

**வணங்கூடுதலனலை**

**வணம் கூடுதல் அனலை** - *நிறங் கூடுதலையுடைய நெருப்பை.*

**வணங்கு ஊடுதல் அனலை** - *வழிபாடு செய்து புலவியால் நெருப்பை.*

### வண்கலங்கள்மேற்கொளலால்

**வண் கலங்கள் மேல் கொள லால்** - *வளவிய அணிகலன் களை மேலே அணிவதால்.*

**வண் கலங்கள் மேல் கொள லால்** - *நல்ல மரக்கலங்களைக் கொண்டிருப்பதால்.*

### வண்காவியஞ்சார்

**வண் காவியம் சார்** - *வளப்பம் பொருந்திய கலை நூல்கள் சேருகிற*

**வண்காவி அம் சார்** - *செழித்த கருங்குவளை அழகு பொருந் திய.*

### வண்கான்மருவுதலால்

**வண் கால் மருவு தலால்** - *வள விய காலிற் குத்துதலால்*

**வண் கான் மருவுதலால்** - *நல்ல மணத்தைப் பொருந்துத லால்.*

### வண்சந்தனஞ்சார்

**வண் சந்தனம் சார்** - *வளப்பம் பொருந்திய சந்தன மரம் உள்ள.*

**வண் சந்து அனம் சார்** - *வள விய தூதுக்கு அன்னம் செல்லுகிற.*

### வண்டணிகைச்சத்தியத்தன்

**வண் தணிகை சத்தி அத்தன்** - *வளப்பம் பொருந்திய தணி கை மலையில் எழுந்தருளிய வேலைத் தாங்கிய முருகன்.*

**வண்டு அணி கை சத்தி அத் தன்** - *வளையலை யணிந்த கையை உடைய உமாதேவி யைப் பாதிப்பாகத்தில் உடைய சிவன்.*

### வண்டமிழ்தங்கொள்

**வண்டு அமிழ்தம் கொள்** - *வண் டுக்கும் அமுதுக்கும் இணை கொள்ளும்.*

**வண் தமிழ் தங்கு ஒள்** - *வள முள்ள தமிழ் தங்கும் ஒள்ளிய.*

### வண்டமிழ்பூத்தாறுவிட்டு

**வண்தமிழ் பூத்தாறு விட்டு** - *வளப்பமாகிய இனிமை பொருந்திய பூங்குலைகளை விட்டு.*

**வண்தமிழ் பூத்து ஆறுவிட்டு** - *வளமை வாய்ந்த தமிழை யுண்டாக்கிக் காவிரியாற்றை விட்டு.*

### வண்டரங்கங்கோடு

**வண் தரங்கம் கோடு(ம்)** - *மிக்க அலைகள் வளையும்.*

**வண்டர் அங்கு அங்கு ஓடு** - *வண்டுகள் அவ்வவ்விடங் களிலே ஓடும்.*

(**வண்டர்** - *நாழிகையறிவிப் போர், மங்கலபாடகர், கீழ் மக்கள்.*)

### வண்டரணிமேவும்

**வண்டர் அணி மேவும்** - *வண்டு களின் வரிசை பொருந்தும்.*

**வண்டர் அணி மேவும்** - *வளைய லாகிய அணிகலம் தங்கும்.*

**வண் தரணி மேவும்** - *வளமுள்ள கதிரவனை ஒக்கும்.*

### வண்டரணுகா

**வண்டர் அணுகா** - *வண்டுகள் நெருங்காத.*

**வண்டர் அணுகா** - *கீழ் மக்கள் நெருங்காத.*

**வண்டருங்கப்பாலார்**

வண்டருக்கு அப்பாலார் - *கீழ்மக்களுக்கு எட்டாதவர்.*
வண்தரு கப்பு ஆல் ஆர் - *வளவிய கிளைகளையுடைய வட வால மரத்தின் கீழ்த் தென் முகக் கடவுளாக எழுந்தருளியவர்.*

**வண்டர்பரவிவரத்தழைக்கும்**

வண்டர் பரவி வர தழைக்கும் - *போர்வீரர்கள் வணங்கி வாழ்த்த மிக்கோங்கும்.*
வண்டர் பரவி வரத் தழைக்கும் - *வண்டுகள் பாடிக் கொண்டு வரவிரிந்து கொடுக்கும்.*

**வண்டலமரும்**

வண்டு அலமரும் - *வண்டுகள் சுழலுகிற.*
வண்டல் அமரும் - *சேறுகள் பொருந்தியுள்ள.*

**வண்டலம்படர்மாவரையார்**

வண்மை தலம் படர் மா வரையார் - *வளவிய இடங்களிற் செல்லும் கரிய குறவர்.*
வண்டு அலம்பு அடர்மா அரை ஆர் - *வண்டுகளிசைபாடும் நெருங்கிய மாமரமும் அரைமரமும் ஆத்திமரமும்.*

**வண்டனங்கள்பொங்கும்**

வண் தனங்கள் பொங்கும் - *வளப்பமாகிய செல்வங்கள் மிகுதிப்படும்.*
வண்டு அனங்கள் பொங்கும் - *வண்டுகளும் அன்னங்களும் நிறையும்.*

**வண்டாரமன்னும்**

வண்டு ஆர மன்னும் - *வண்டுகள் தேனுண்ணப் பொருந்தும்.*
வண் தாரம் மன்னும் - *அழகிய மணியாள் பொருந்தும்.*

**வண்டானமேவும்**

வண்டால் அம் மேவும் - *வளையல்களால் அழகு பெறும்.*
வண் தானம் மேவும் - *மிகுந்த மதம் பொருந்தும்.*
வண்டானம் மேவும் - *நாரைகள் தங்கும்.*
வண்டு ஆன மேவும் - *வண்டுகளானவை அடையும்.*

**வண்டிசையெட்டுங்கான்**

வண்டு இசை எட்டும் கான் - *வண்டுகளின் இராகம் எட்டுகின்ற சோலை சூழ்ந்த.*
வண் திசை எட்டும் கால் - *பெரிய எட்டுத் திக்குகளிலும் வீசும்.*

**வண்டிமிரஞ்சாரும்**

வண் திமிரம் சாரும் - *மிகுந்த இருள் பொருந்தும்.*
வண்டு இமிர் அம் சாரும் - *வண்டுகள் ஒலிக்கும் அழகு சேரும்.*

**வண்டினங்கள்நீளும்**

வண்டினங்கள் நீளும் - *வண்டுக் கூட்டங்கள் மிகுதியாகச் செல்லும்.*
வண் தினங்கள் நீளும் - *வளப்பம் பொருந்திய நாட்கள் நீடிக்கும்.*

**வண்டுதலைநீட்ட**

வண்டு தலை நீட்ட - *வண்டுகளான வர.*

வண்டு தலை நீட்ட - *சங்குகள் மேலோங்கி வர.*

**வண்டுளாயும்**

வண்டு உள் ஆயும் - *வண்டுகள் தேன் உண்பதற்கு உள்ளே கிளைக்கின்ற.*

வண் துளாயும் - *மணமிக்க துளபமும்.*

**வண்டூதிவரும்**

வண்டு ஊதி வரும் - *வண்டுகளானவை ஊதிக்கொண்டு வரும்.*

வண் தூது இவரும் - *சிறந்த தூது செல்லும்.*

**வண்டேந்தியசெங்கை**

வண்டு ஏந்திய செங்கை - *வளையலைத் தாங்கிய சிவந்த கை.*

வண்டு ஏந்திய செங்கை - *வண்டைப்போன்ற கண்ணை கூடிய சிவந்த கை.*

**வண்டேர்விளங்கும்**

வண்டு ஏர் விளங்கும் - *வண்டு அழகாக விளங்கும்.*

வண் தேர் விளங்கும் - *அழகிய தேர்கள் விளங்கும்.*

**வண்ணக்கரும்**

வண்ணக்கரும் - *தெளிவுள்ள சிவபெருமானும்.*

வண்ணம் கரும் - *அழகும் வலிமையும்,*

**வண்ணக்கவி**

வண்ணக் கவி - *வண்ணப் பாடல்.*

வண்ணக் கவி-*அழகிய குரங்கு.*

**வண்ணத்தானத்தன்**

வண்ணத்தான், நத்தன் - *நிறத்தையுடைவன்,சங்கையுடைய திருமால்.*

வண்ண தானத்தன் - *அழகிய இருப்பிடத்தையுடையவன்.*

வண்ணத்து ஆன் அத்தன் - *நிறத்தையுடைய காளையி லேறுந் தலைவன்.*

**வண்ணத்தாநாகத்தான்**

வண்ணத்தான் நாகத்தான் - *நிறத்தையுடையவன், பரம பதத்தை உடையவன்.*

வள் நத்தான் நாகத்தான் - *வளவிய சங்கையுடையவன் பாம்புப்படுக்கையை உடையவன்.*

**வண்ணத்தொலி**

வள் நத்து ஒலி - *வளப்பம் பொருந்திய சங்குகளின் ஓசை.*

வண்ணத்து ஒலி - *வண்ணப் பாட்டின் இசை.*

**வண்ணம்படுக்கும்**

வண் அம்பு அடுக்கும் - *நல்லநீர் செல்லும்.*

வண்ணம் படுக்கும் - *அழகினை உண்டாக்கும்.*

**வண்ணாத்தி**

வண்ணாத்தி - *வண்ணாரப்பெண்.*

வண் ஆத்தி-*வளப்பம் பொருந்திய ஆத்தி மரம்.*

**வண்ணான்**

வண்ணான் - *துணிவெளுக்கும் ஏகாலி.*

வண்மை ஆன் - *வளப்பம் பொருந்திய காளை.*

**வத்திரங்களைந்தார்**

வத்திரங்கள் ஐந்தார் - *ஐந்து (?)ரூகங்களை உடையவர்.*

வத்திரம் களைந்தார்-*ஆடைகளை அகற்றினர்.*

**வந்தவலப்பாற்றினர்**

வந்து அவலம் பாற்றினர் - *(குருவாக) வந்து பிறவிப்பிணியை மாற்றினர்.*

வந்த அலம்பு ஆற்றினர் - *(விண்ணிலுயர்ந்து) வந்த ஒலிக்கின்ற கங்கையை உடையவர்.*

**வந்தழைத்தங்காக்கும்**

வந்து அழைத்து அங்கு ஆக்கும்- *வந்து அழைத்துச் சென்று அங்கே செய்யும்.*

வந்து அழைத்து அங்காக்கும் - *வந்து கூப்பிட்டு வாயைத் திறக்கும்.*

**வந்தனஞ்செய்நீரார்**

வந்தனம் செய் நீரார் - *வணக்கஞ் செய்கிற தன்மையுடையவர்கள்.*

வந்து அனம் செய்நீர் ஆர் - *அன்னமானவை வந்து வயலின் நீரிற் பொருந்துகிற.*

**வந்தனஞ்செய்யும்**

வந்தனம் செய்யும் - *வணக்கஞ் செய்யும்.*

வந்தன் அஞ்சு எய்யும் - *தென்றற் றேருடைய காமன் ஐந்து கணைகளை எய்யும்.*

வந்து அனம் செய்யும் - *வந்து உணவினை யாக்கும்.*

**வந்தனந்தந்தனம்**

வந்தனம் தந்தனம் - *வணக்கத்தைக் கொடுத்தோம்.*

வந்து அனம் தந்தனம் - *வந்து உணவு கொடுத்தோம்.*

**வந்திப்பார்மேவும்**

வந்திப்பார் மேவும் - *வணங்குபவர் அடையும்.*

வந்து இப்பார் மேவும் - *வந்து இப்பூவுலகத்தைச் சேரும்.*

**வந்துவந்துகொள்ளும்**

வந்து வந்து கொள்ளும் - *பல கால் வந்து கொடைபெறும்.*

வந்து உவந்து கொள்ளும்-*தென்றலை மகிழ்ந்து கொள்ளும்.*

**வம்பட்டதுட்டர்**

வம்பு அட்ட துட்டர் - *வம்பைச் செய்கிற தீயவர்கள்.*

வம்பு அட்ட துட்டர் - *கச்சினைக் கிழித்த கொங்கைகள்.*

**வம்புறுரோமர்**

வம்புறு ரோமர் - *வம்புத் தன்மை மிகுந்த உரோமர்கள்.*

வம்புறு ரோமர் - *வாசனை மிக்க கூந்தல்.*

**வயங்கக்குளிர்கொண்டலை - நிரப்பும்**

வயங்க குளிர்கொண்டு அலை நிரப்பும்-*விளங்கும்படி நண்டுகளை ஒதுக்கிக்கொண்டு அலைகளை மிகுக்கும்.*

வயங்க குளிர்கொண்டு அலை நிரப்பும் - *விளங்கும்படியாக குளிர்ச்சியைக் கொண்டு அலைகள் வரும்.*

**வயங்கித்தாங்குவளைகாய்கண் - மதர்ப்ப**

வயங்கி தாம்குவளை காய்கண் மதர்ப்ப - *விளங்கிக் குவளை மலர்களை வரட்டுகின்ற கண்கள் செருக்கடைய.*

வயங்கித் தாங்கு வளை காய்கள் மதர்ப்ப - தோற்றங் கொடுத்துத் தாங்கப் பெற்றுள்ள வளைவுள்ள காய்கள் மூற்ற.

**வயங்கியபயம்படைத்து**

வயங்கி அபயம் படைத்து - விளங்கிப் பிறரைக் காக்குந் தன்மை பெற்று.

வயங்கிய பயம் படைத்து - விளங்கிய நீரைக் குடித்து உட்கொண்டு.

**வயங்குத்திரத்திஞெடுபயின்றும்**

வயம் குத்திரத்தி ஞெடு பயின்றும்-வஞ்சகச் செயலில் பழகி வெற்றிபெற்றும்.

வயங்கு உத்திரத்தி ஞெடு பயின்றும்-விளங்குகின்ற உத்திரநாள் மீனுடன் சார்ந்தும்.

**வரதரம்போதி**

வரதர் அம்போதி - வரங்களைக் கொடுப்பவர் கடலின்.

வர தரம் போதி-மேன்மையினையுஞ் சிறப்பினையும் உடைய அரசமரம்.

**வரத்தானவரை**

வர தானவரை - வரங்களைப் பெற்ற அசுரர்களை.

வரத்தான் நவரை-விருப்பத்தையுடையவர்களையும் நிலத்தில் உள்ளவர்களையும்.

**வரப்படைத்தார்**

வர படைத்தார் - பிறக்குமாறு படைத்தவர்.

வரப்பு அடைத்தார் - வரப்பினை அடைத்தவர்.

**வரப்பாரதனத்தைவெளியாக்கி**

வரப்பு ஆர் அதனத்தை வெளி ஆக்கி - கரைகள் மிகுந்த மிகுதியிடத்தை வெற்றிடமாகச் செய்து.

வரு அப் பார தனத்தை வெளி ஆக்கி - வளருகிற அழகிய பெரிய கொங்கைகளை விளங்கச் செய்து.

**வரப்புடைக்கும்**

வரப்பு உடைக்கும்-வரப்பினைத் தகர்க்கும்.

வர புடைக்கும் - விளங்குமாறு பருக்கும்.

**வரமருளம்பெண்ணை**

வரம் அருள் அம் பெண்ணை - வரத்தைக் கொடுக்கும் அழகிய மங்கையை.

வர மருள் அம் பெண்ணை - வரவே மருட்சியை அடைந்த மேலான பனையை.

**வரமாசடையாரும்**

வரம் மா சடையாரும்-மேலான சிறந்த சடையை உடையவரும்.

வரம் மாசு அடையாரும்-மேன்மையிற் குற்றஞ்சேரப்பெறாதவரும்.

**வரமாட்டான்**

வரமாட்டான் - வந்து சேர மாட்டான்.

வர மாட்டான் - மேன்மையான மாட்டை ஊர்தியாக வுடையவன்.

**வரம்பரிக்கும்**

வரம் பரிக்கும் - வரத்தினுல் தோன்றும்.

வரம்பு அரிக்கும் - கரையை அழிக்கும்.

**வரம்பலவாய்**

**வரம் பல ஆய்** - *வரங்கள் பல வாகி.*

**வரம்பு அல ஆய்** - *எல்லை இல்லாததாய்.*

**வரனகரம்**

**வரன் அகரம்** - *மேலானவன் அகரத்தைப் போன்றவன்.*

**வரல் நகரம்** - *வருதலையுடைய நகரம்.*

**வரிசைக்கலைமானினந்தழுவி**

**வரிசைக் கலைமானின் அம் தழுவி** - *சிறப்புடைய கலைமகளின் அழகோடு சேர்ந்து.*

**வரிசைக் கலைமான் இனம் தழுவி** - *வரிசையான கலைமானின் கூட்டங்களைப் பொருந்தி.*

**வரியானையானையன்**

**வரியானை யான் ஐயன்** - *புள்ளியுடைய யானைமுகவனுக்குத் தந்தை.*

**வரியான் ஐயான் ஐயன்** - *புலித்தோலையுடைய அழகன் ஐயமேற்பவன்.*

**வருங்கடுக்கையான்**

**வரும் கடு கையான்** - *வந்த நஞ்சினை வெறுக்காதுண்டவன்.*

**வரும் கடுக்கையான்** - *வருகிற கொன்றை மாலையை உடையவன்.*

**வருதேமலைக்கொண்டு**

**வரு தேமலை கொண்டு** - *வருகின்ற நிறத்தேமலைக் கொண்டு.*

**வரு தேம அலை கொண்டு** - *வருகின்ற இனிமையுள்ள கலை அலையோடு சேர்த்துக் கொண்டு.*

**வருத்தங்களுள்ளான்**

**வருத்தங்கள் உள்ளான்** - *துன்பங்களை எண்ணிப்பார்க்காதவன்.*

**வருத்து அம் கள் உள்ளான்** - *துன்பத்தினை உண்டாக்கும் இனிய கள்ளை எண்ணிப் பார்க்காதவன்.*

**வருந்தப்படையார்**

**வரும் தப்பு அடையார்** - *வரக்கூடிய தவறுகள் பொருந்தப் பெறுதவர்.*

**வருந்த படையார்** - *வருத்தத்தினை அடையுமாறு பிறவியிற் புகுத்தார்.*

**வருந்ாதிசையப்புல்லியெய்தும்**

**வரும் தாது இசைய புல்லி எய்தும்** - *தோன்றுகின்ற மகரந்தப் பொடிகள் படியப் புறவிதழ் பொருந்தியும்.*

**வருந்தாது இசைய புல்லி எய்தும்** - *வாடாமல் பொருந்த இணைந்து சேர்ந்தும்.*

**வருந்தாமதமாவினையுடையவழி-காட்டியுமை வனம்படைத்தும்**

**வருந்தா மதமாவினை உடைய வழி காட்டியும் மைவனம் படைத்தும்** - *களைப்பற்ற மத யானையைக் கொன்றொழித்தும் கருமை நிறம் பெற்றும்.*

**வரும்தாமத மாவினை உடைய வழிகாட்டியும் ஐவனம் படைத்தும்** - *தங்கவரும் விலங்குகட்குரிய வழியைத் தன்பாற்கொண்டும் மலைநெற் பயிர்களைக் கொண்டும்.*

வருபாட்டைநோக்கு

வரு பாட்டை நோக்கு-வருகிற பாடலைப் பார்.

வரு பாட்டை நோக்கு-வருகிற வழியைப் பார்.

வருமெல்லிடைதோன்றுமையினுல்

வரும் எல்இடை தோன்றுமை யினுல்-வருகின்ற பகற்காலத் தில் காணப் பெறுமையினுல்.

வரும்மெல் இடை தோன்றுமை யினுல் - அசைந்து வருகின்ற மெல்லிய இடுப்பு நன்கு காணப்படாமையினுல்.

வரையவரைய

வரை அவர் ஐய - மூங்கிலில் தோன்றிய அந்தச் சிவபெரு மானுடைய குருவானவரே.

வரைய! வரைய - மலையை உடையவரே ஏட்டில் எழுத.

வரையாதளிக்கும்

வரையாது அளிக்கும் - எல்லை யில்லாமற் கொடுக்கும்.

வரையாது அளிக்கும் - மணஞ் செய்யாமற் கொடுக்கும்.

வரைவனஞ்செய்யும்

வரைவன் அஞ்சு எய்யும் - மணஞ்செய்வன் ஐங் கணை களை வீசும்.

வரைவன் அம் செய்யும் - ஓட்டு வேன் அழகைச் செய்யும்.

வரைவிலங்கை

வரை வில் அம் கை-மலைவில்லை அழகிய கையிலே.

வரை விலங்கை - மலையினிடத் [illegible]

வரைவு இலங்கை - எல்லையாக வுள்ள இலங்கை.

வரைவிலரிவையம்பு

வரை வில் அரிவை அம்பு-மகா மேருமலை வில் திருமால் கூரிய அம்பு.

வரைவில் அரிவை அம்பு-வரை வில்லாதவளாகிய விலைமகள் அம்புபோலக் கொடுமையைச் செய்வாள்.

வலக்காரம்

வலக்காரம் - வலுக்கட்டாயம்.

வல் அக்கு ஆரம் - வலிய எலும்பு மாலை.

வலவம்பட

வலவம்பட - வல்லமையானது அழிய.

வல் அவம் பட-சூதாடு கருவியா னது குற்றத்துட் பொருந்த.

வலியவரவெண்கரிகாட்டி

வல் இயவு வர வெண்கரி காட்டி - மிகுந்த வழிகளைக் கடப்பதற்கு வெள்ளையானை யைத் தன்னிடங்கொண்டு

வலிய அரவு எண்கு அரி காட்டி- வலிய பாம்பு கரடி சிங்கம் முதலியவைகளைத் தன்னி டத்தே கொண்டு.

வலையம்பரிக்கும்

வலை அம்பு அரிக்கும் - வலையி னுலே நீரையரிக்கின்ற.

வல் ஐ அம்பர் இக்கும்-வலிமை தங்கிய ஐங்கணைகளையுடைய காமரின் கரும்பு வில்லும்.

வல் அரியாய் உற்றிடலால் - வலிமையுடைய நரசிங்கவடி வாய்த் தோன்றியபடியால்.

வல்லரியாய் உற்றிடலால் - கொழித்தற்குரிய நல்ல கருவி யாக அமைதலால்.

**வல்லவிநயங்கூர்**

வல்லவி நயம்கூர் - மனைவியின் நன்மை மிகும்

வல்ல விநயம் கூர் - திட்பமான அறிவு மிகும்.

**வல்லியமாமன்**

வல்லியம் மா மன் - புலியினது பெரிய நிலைபெற்ற.

வல்லி அம் மாமன் - வள்ளி நாயகியின் அழகிய மாமனர்.

**வல்லியமேற்பொங்கும்**

வல்லியம் மேல் பொங்கும் - புலிகளினும் மிகுதியாகப் பொங்கியெழும்.

வல் இயம் மேற்பொங்கும் - வலிய வாத்தியங்கள் மிகுதி யாக ஒலிக்கும்.

**வல்லையங்காட்டும்**

வல்லை அங்கு ஆட்டும்-சூதாடு கருவியை அவ்விடத்தில் அலைக்கும்.

வல்லையம் காட்டும் - வல்லய மென்னும் படைக்கலத்தைக் காட்டும்.

**வல்லோரகந்தனிலேவாழ்தலால்**

வல்லோர் அகம் தனிலே வாழ் தலால் - பெரியோர்களுடைய உள்ளத்திலே வீற்றிருப்ப தால்.

வல்லோர் அகம் தனிலே வாழ் தலால்-பலருடைய வீட்டிலே இருப்பதால்.

**வழுத்தமலர்மீதினிற்பொலிந்து**

வழுத்து அமலர் மீதினில் பொலிந்து - வணங்கப்படுகின்ற இறைவன் மேலே விளங்கி.

வழுத்த மலர் மீதினில் பொலிந்து - எல்லோரும் வணங்கும்படி மலர்மேலே திகழ்ந்து.

**வளமேயனையபுட்பகவிமானன்-களிக்க**

வ(ள்)ளமே அனைய புட்பம் கவிமானன் களிக்க-கிண்ணம் போன்ற தாமரை மலரிற் றங்கிய பெருமையுடையவன் மகிழ.

வளமேயன் ஐய புட்பக விமா னன் களிக்க - செல்வச் சிறப் புடையவன். புட்பகவிமான முடைய குபேரன் களிப்புற் றிருக்க.

**வளமைத்தடங்கண்மலரும்**

வள மை தடம்கண் மலரும் - செழிப்புள்ள மை தீட்டிய அகன்ற கண் விழிக்கும்.

வளமை தடம் கள் மலரும் - செழிப்புள்ள குளங்களில் தேன் பொருந்திய பூக்களும்.

**வளர்ந்துவருமத்தகம்படைத்து**

வளர்ந்து வரும் மத்தகம் படைத்து வளருகிற மத்த கத்தைப் பெற்று.

வளர்ந்து வரும் அ தகு அம்பு அடைத்து-பெருகி வருகின்ற அத்தகைய நீரையடைத்து

**வளவனை**

வளவனே - சோழ மன்னனை.

வளவு அனை - வீட்டில் உள்ள தாய்.

வளவன்மலை

வள் அவல் மலை - நெருங்கிய பள்ளங்களையுடைய மலை நிலம்.

வள வல் மலை - வளம் பொருந்திய சூதாடு கருவியை ஒத்த.

வளனாகக்கொங்கு

வளன் நாகம் கொங்கு - வளப்பம் பொருந்திய மலைகளமைந்த கொங்கு நாடு.

வளன் நாகம் கொங்கு - வளப்பம் பொருந்திய பாம்பையும் மணந்தங்கிய.

+
வளைந்தவாரமுதுகுலவ

வளைந்த ஆரம் முதுகு உலவ - அணிந்த முத்துமாலை முதுகிலே சுழல.

வளைந்த ஆர் அமுது குலவ - உள் சுற்றி நிறைந்துள்ள அமிழ்தக் கதிர்கள் ஒளிவிட்டு விளங்க.

வளைந்துபரந்தமீனுலும்

வளைந்து பரந்த மீனுலும் - சுற்றி மிகுந்திருக்கின்ற உடுக்கூட்டங்களாலும்.

வளைந்து பரந்த மீனுலும் - சூழ்ந்து பரவியிருக்கின்ற மீன்களினுலும்.

வளைவாயிருக்கும்

வளை வாய் இருக்கும்-சங்குகள் உள்ளிடத்தில் இருக்கும்.

வளைவு ஆய் இருக்கும் - வளைவு உள்ளதாக இருக்கும்.

வள்ளப்பாலாகும்

வள் அப்பால் ஆகும் ரிய அம்பால் ஆகும்.

வள்ளப்பால் ஆகும் - கிண்ணத்தில் வைத்த பாலையொக்கும்.

வள்ளலையப்போடு

வள் அலைய போடு - காதினிடத்தில் அசையும்படி போடுகிற.

வள் அலை அப்பு ஓடு-நெருங்கிய திரைகளையுடைய கங்கையும் பலிப்பாத்திர ஓடும்.

வள்ளிபுணர்ந்தாறுமுகமன்னி - மயின்மேற்கொளலால்

வள்ளி புணர்ந்து ஆறுமுகம் மன்னி மயில்மேல் கொளலால் - வள்ளி நாயகியைச் சேர்ந்து ஆறுமுகம் பொருந்தி மயில்மீது ஏறுதலால்.

வள்ளி புணர்ந்து ஆறுமுக மன்னி மயில்மேல் கொளலால் - வள்ளிக் கொடிகளோடு பொருந்தி ஆறுகள் தன்னிடத்தே அமையப் பெற்று மயில்கள் தன்மீது ஏறப்பெற்றிருத்தலால்.

வள்ளியோராகும்

வள்ளியோர் ஆகும் - கொடையாளிகளாகும்.

வள்ளியோர் ஆகும் - வள்ளி மணந்த முருகக்கடவுளாகும்.

வனசங்குவளை

வனசம் குவளை-தாமரை மலரும் குவளையும்.

வன சங்குவளை - அழகிய சங்கு வளையல்கள்.

வனத்தேரகம்

வனம் தேர் அகம்-அழகிய தேரினிடம்.

வனத்து ஏரகம்-சோலை சூழ்ந்த திருவேரகம்.

ஒளிதழுக்கம் பதிகம்

வளிதழுக்கு அம்பு அதிகம் - வளிதழுக்கு அம்புமேல்
வளைதழுக்கம்பு அதிகம் - வளிதழுக்கம்பானது மேல்.

**வனந்தரிக்கும்**

வனம் தரிக்கும் - *காடுகளில் வாழும்.*

வனம் தரிக்கும் - *துளசி மாலையை அணியும்.*

**வனப்போதகம்**

வனப் போதகம் - *காட்டில் உள்ள யானை.*

வனப்பு ஓது அகம் - *அழகாகச் சொல்லப்படுகிற இல்லம்.*

**வனவேடனுரணி**

வனவேடனுர் அணி - *காட்டு வேடரானவர் அணிந்த.*

வனவேள் தன் ஆர் அணி - *அழகிய காமன்தன் மிகுந்த படை வகுப்போடு.*

**வன்னங்கணறும்**

வன்னம் கண் ஆறும் - *அழகினையும் கண் ஆறினையும்.*

வன்னம் கள் நாறும் - *நிறத்தினையுடைய தேன் மணக்கும்.*

**வன்னந்தவளமாகையினுல்**

வல் நந்து அவளம் மா கையினுல் - *வலிமையுள்ள சங்கை அழகிய சிறப்புடைய பெரிய கையில் கொண்டிருத்தலால்*

வன்னம் தவளம் ஆகையினுல் - *நிறமானது வெண்மையான படியால்.*

**வன்னிகரந்தோயும்**

வன்னி கரம் தோயும் - *தீ கையிற் பொருந்தும்.*

வன்னி கரந்து ஓயும் - *கிளி ஒளிந்து அடங்கும்.*

வல் நிகர் அம் தோயும் - *சூதாடு கருவியைப் போன்ற அழகு பொருந்தும்.*

**வன்னித்திருக்கரனுர்**

வன்னி திருக்கரன் ஆர் - *கிளி அழகிய கையிலே பொருந்திய.*

வன்னித் திருக்கு அரனுர் - *தீக் கண்ணினையுடைய சிவபெருமான்.*

**வன்மைமேவுமாகம்பொலியநின்று**

வன்மை மேவும் ஆகம் பொலிய நின்று - *வலிமை பொருந்திய உடல் தோன்றும்படி நின்று.*

வல் மை மேவும் மாகம் பொலிய நின்று - *மிக இருண்டுள்ள வானத்தில் விளங்க நின்று.*

**வாகத்தனே**

வா கத்தனே - *தலைவனே வருவாயாக.*

வாகு அத்தனே - *அழகிய தோளையுடைய முதல்வனே!*

**வாகனங்குலாவு**

வாகு அனம் குலாவு - *அழகிய அன்னங்கள் குலாவுகின்ற.*

வாகனம் குலாவு - *தேர் முதலிய ஊர்திகள் செல்லுகின்ற.*

**வாகனத்தான்**

வாகு அனத்தான் - *அழகிய அன்னத்தை உடையவன்.*

வாகனத்தான் - *ஊர்தியை உடையவன்.*

**வாகா**

வா கா - *வந்து காப்பாயாக.*

வாகா - *தோளையுடையவனே!*

வாகு ஆ - *ஒழுங்கா, அழகா?*

**வாக்குமனநீர்சேர்**

வாக்கும் அனம் நீர் - *வார்க்கின்ற சோறும் நீரும்.*

வாக்கு மனநீர் - *வாக்குடன் மனத்தன்மையும்.*

**வாங்குதிரைக்கடல்**

வாங்கு திரைக்கடல் - *வளைந்து வீசும் அலைகளையுடைய கடல்.*

வாம குதிரைக்கடல் - *தாவுகின்ற குதிரைகளின் மிகுதி.*

**வாங்குதிரைசேரும்**

வாங்கு திரை சேரும்-*இழுக்கப்பெறுகிற திரை பொருந்தும்.*

வாம் குதிரை சேரும் - *தாவும் குதிரைகள் செல்லும்.*

**வாங்குதிரையேறும்**

வாங்கு திரை ஏறும் - *வளைந்த அலைகள் மேற்சேரும்.*

வாம் குதிரை ஏறும் - *தாவிச் செல்லும் குதிரைகளிலேறும்.*

**வாங்குதிரையேற்றினர்**

வாங்கு திரை ஏற்றினர்-*வளைந்த ஆற்றைச் சடையில் ஏற்றியவர்.*

வாம் குதிரை ஏற்றினர்-*தாவிச் செல்லும் குதிரையேற்றத்தை நடத்தியவர்.*

**வாசமாதங்கத்தான்**

வாசம் மாது அங்கத்தான் - *தாமரை மலரில் வாழும் திருமகளை உடலிற் கொண்டவன்.*

வாசம் மா தங்கத்தான்-*ஆடை, சிறந்த பீதாம்பரமாக அமையப்பெற்றவன்.*

**வாசமுகக்கும்**

வாசம் உகக்கும் - *வசித்தலை விரும்பும்.*

வாசம் முகக்கும் - *மணத்தை முகக்கும்.*

**வாசவனங்கண்முறைசூழ**

வாசவன் அங்கண் முறைசூழ - *இந்திரன் அவ்விடத்திலே அரசு முறைசெலுத்த.*

வாச வனங்கள் முறைசூழ-*மணமுள்ள சோலைகள் வரிசையாகச் சுற்றியிருக்க.*

**வாசவனங்காக்கும்**

வாசவன் அங்கு ஆக்கும் - *இந்திரன் அவ்விடத்திற் செய்து வைக்கும்.*

வாச அனம் காக்கும் - *வசிக்கின்ற அன்னப்பறவை பாதுகாக்கும்.*

**வாசவனசத்தினன்**

வாசவன் அசத்தினன் - *இந்திரன் ஆட்டு வாகனத்தையுடைய திக்கடவுள்.*

வாச வனசத்தினன் - *மணம் தங்கிய தாமரை மலரையுடையவன்.*

**வாசித்தலைமருவு**

வாசி தலை மருவு-*குதிரைத்தலை பொருந்திய.*

வாசித்தலை மருவு - *படித்தலை மேற்கொண்ட.*

**வாசிப்பலங்கொள்**

வாசி பலம்கொள் - *வாசியின் (சுவாசம்) பயனைக்கொள்ளும்.*

வாசிப்பு அலம்கொள் - *கற்றலின் அமைதியைப் பொருந்தும்.*

**வாடியென்றாள்பற்றி**

வாடி என்தாள் பற்றி - *தளர்ந்து என்னுடையகாலைப்பிடித்துக் கொண்டு.*

பற்றி வாடி என்றாள் - *பிடித்துக் கொண்டு வாடியென்று சொன்னாள்.*

**வாட்டானவரை**

வாள் தானவரை - *வாட்படையை உடைய அசுரர்களை.*
வாட்டான் அவரை - *மெலியச் செய்யாமல் அவர்களை.*

**வாட்டானைக்கைக்கொள்**

வாள்தானை கைக்கொள் - *வாட்படையைக் கைக்கொள்ளுகின்ற.*
வாட்டு ஆனை கைக்கொள் - *வாட்டுகின்ற யானையைக் கொண்ட.*

**வாணிகர்சீரோங்கும்**

வாணிகர் சீர் ஓங்கும்-*வணிகர்கள் சிறப்புற்று விளங்கும்.*
வாள் நிகர் சீர் ஓங்கும்-*வாளைப் போன்ற தன்மை விளங்கும்.*

**வாணியனைநேருதலால்**

வாணியனை நேருதலால் - *செக்கானிடத்திலே பொருந்துதலால்.*
வாணி அனை நேருதலால் - *கலைமகளாகிய தாயைப் போன்றிருத்தலால்.*

**வாணியன்**

வாணியன்-*எண்ணெய் ஆட்டுஞ் செக்கான்.*
வாணியன் - *கலைமகளை நாவில் கொண்ட நான்முகன்.*

**வாணிவந்துமன்னும்**

வாணி வந்து மன்னும் - *கலைமகள் வந்து பொருந்தும்.*
வாள் நிவந்து மன்னும் - *வாளாயுதம் உயர்ந்து மேவும்.*

**வாதங்கடக்கும்**

வாதம் கடக்கும்-*சொற்போரை வெற்றிகொள்ளும்.*
வாதம் கடக்கும் - *காற்றைப் போற் பறந்து செல்லும்.*

**வாமக்கடம்பவனத்தார்**

வாமம் கடம்ப வனத்தார் - *அழகிய மதுரையில் எழுந்தருளியவர்.*
வாம் மக்கள்தம் பவம்நத்தார் - *ஞானிகளானோர் பிறத்தலை யெண்ணார்.*

**வாமனனேயனகங்களை**

வாமனனே அல் நகம் *மனமே நீ வருவாயாக அஞ்ஞான பூமியிற் செய்யும் பொய்ம்மைகளை.*
வாமனன் நேயன் அகம்களை - *வாமனனாகிய திருமாலின் மகனாகிய நான்முகனுடைய மனச்செருக்கை நீக்கு.*

**வாயமனத்தார்**

வாய் அமல் நத்தார் - *(காதுத்) தொளையிற் பொருந்திய சங்க குண்டலத்தையுடையவர்.*
வாய மனத்தார் - *உண்மை பொருந்திய மனம் உடையவர்.*

**வாயனந்தங்கள்**

வாயன் அந்தங்கள் - *மெய்ம்மையன் அழகுகளையுடைய.*
வாய் அனந்தங்கள் - *வாய் எண்ணிறந்தவைகள்.*

**வாயாரப்பாடும்**

வாய் ஆரப் பாடும் - *வாய்நிறையப் போற்றிப்புகழும்.*

வாய் ஆர் அப்பு ஆடும் - *விளிம்பு பொருந்திய அம்பு ஆடும்.*

**வாய்க்குங்குழற்காம்பு**

வாய்க்கும் குழல்காம்பு-*வாயிற் பொருந்தும் வேய்ங்குழல்.*

வாய்க்கும் குழல்காம்பு-*பொருந்தியிருக்கின்ற துளையையுடைய கால்.*

**வாய்க்குமதுரஞ்சேர்**

வாய்க்கும் மது உரம் சேர் - *பொருந்திய தேறுகிய உரம் சேரும்.*

வாய்க்கு மதுரம் சேர்-*வாய்க்கு இனிமை பொருந்தும்.*

**வாய்ந்தமடுமேவிடலால்**

வாய்ந்த மடு மேவிடலால் - *பொருந்திய காளிங்க மடுவைச் சேர்தலால்.*

வாய்ந்த மடு மேவிடலால் - *அழகிய மடியைப் பெற்றிருத்தலால்.*

**வாய்ந்தவடபத்திரத்தான்**

வாய்ந்தவள் தபம் திரத்தான் - *பொருந்தியவளுடைய தவ வலிமையில்.*

வாய்ந்த வட பத்திரத்தான் - *பள்ளிகொள்ளற் கமைந்த ஆலிலையை உடையவன்.*

**வாய்ந்தவலம்புரிப்பூமாதழுவி**

வாய்ந்த வலம்புரிப் பூமாதழுவி- *பொருந்திய நந்தியாவட்ட மலரையும் வண்டையும் பொருந்தி.*

வாய்ந்த வலம்புரி பூமா தழுவி- *சிறந்த வலம்புரிச் சங்கையும் பூதேவியையும் சீதேவியையுஞ் சேர்ந்து.*

**வாய்ப்பணியாக**

வாய்ப்பு அணியாக-*பொருந்துதல் அன்மையாக.*

வாய் பணியாக - *வாயினாற் செய்யுந் தொண்டாக.*

**வாய்ப்பவளத்தத்தன்**

வாய் பவளத்து அத்தன் - *வாய் பவளம்போற் பொருந்திய இறைவன்.*

வாய்ப்பவள் அத்தத்தன் - *பொருந்தியவளைப் பாதி உடம்பாகக் கொண்டவர்.*

**வாய்ப்பவளமெய்தும்**

வாய்ப்ப வளம் எய்தும் - *பொருந்துமாறு வளங்கள் சாரும்.*

வாய்ப் பவளம் எய்தும் - *வாயாகிய பவளம் பொருந்தும்.*

**வாய்மையேபோற்றும்**

வாய்மையே போற்றும் - *உண்மையையே கடைப்பிடிக்கும்.*

வாய் மையே போற்றும்-*பொருந்திய மையையே அணியும்.*

**வாரணங்கொடிக்கையன்**

வாரணம் கொடி கையன் - *கோழிக் கொடியை ஏந்திய கையை உடையவன்.*

வாரணம் கொள் திக்கு ஐயன்- *திக்கு யானைகள் பொருந்திய திசைகட்கெல்லாம் தலைவன்.*

**வாரணத்தானத்தன்**

வாரணத் தானத்தன் - *யானை முகத்தை உடையவற்குத் தமயன்.*

வார் அள் நத்தான் அத்தன் - *நீண்ட காதினிடத்தில் சங்கக் குழையை அணிந்த சிவபிரானுக்கு ஆசிரியன்.*

## வாரணமுலாவும்

வாரணம் உலாவும் - *யானை திரியும்.*
வாரணம் உலாவும் - *சங்கு திரியும்.*
வாரணம் உலாவும் - *சேவற் கொடி விளங்கும்.*

## வாரணமேலொருவாரணமேறி

வாரணம் மேல் ஒரு வாரணம் ஏறி - *யானையின் மேல் ஒரு யானை ஏறி.*
வாரணம் மேல் ஒரு வாரணம் ஏறி - *அத்திமரத்தின் மேல் ஆம்பல்பூவைக் கொண்டு போய்.*
*(வாரணம்-யானை, ஆம்பல் - யானை, யானை - அத்தி, ஆம்பல்-ஆம்பற்பூ, அத்தி-அத்தி மரம். வாரணம்: பலபொருள் ஒருசொல்.)*

## வாரப்படையத்தர்

வார் அப்பு அடை அத்தர் - *மிகுந்த நீரைச் சடையில் அடைத்த இறைவர்.*
வார படை அத்தர் - *உரிமையுடைய மழுப்படையைக் கையில் ஏந்தியவர்.*

## வாரமலைபெற்றிடும்

வாரம் அலை பெற்றிடும் - *கரையோரங்களில் அலைகளைக் கொண்டிருக்கும்.*
வாரம் மலைபெற்றிடும் - *மலைச் சரிவுகளைத் தனக்கு இடமாகக்கொண்டிருக்கும்.*
வார் அம்மலை பெற்றிடும் - *பெருமுழக்கஞ் செய்யும்.*

## வாரம்படைத்தார்

வார் அம்பு அடைத்தார் - *ஒழுகுகின்ற கங்கையை அணிந்தார்.*
வாரம் படைத்தார் - *அன்பைப் பெற்றார்.*

## வாரம்பாடும்

வாரம் பாடும் - *தேவாரப்பாடலைப் பாடும்.*
வார் அம்பு [illegible]ம் - *நீண்ட அம்பு பொருந்தும்.*
வார் அம்பு ஆடும் - *மிகுந்த தண்ணீர் அசையும்.*

## வாரம்பிரியாமல்

வாரம் பிரியாமல் - *அன்பு நீங்காமல்.*
வாரம் பிரியாமல் - *கரையை விட்டுக் கடவாமல்.*

## வாரம்புலரா

வாரம் புலரா - *அன்பு வாடாத.*
வார் அம்பு உலரா - *கட்டிய நீர் காயாத.*

## வாரிக்களத்தடிக்கும்

வாரிக் களத்து அடிக்கும் - *வயலில் இருந்து அள்ளப்பட்டுக் களத்தில் அடிக்கப்பெறும்.*
வாரிக் களத்து அடிக்கும்-*பகைவரின் படையைப் போர்க்களத்திலே சிதைக்கும்.*

## வாரிக்குநேராம்

வார் இக்கு நேர் ஆம் - *நீண்ட கரும்பைப்போல் விளங்கும்.*
வாரிக்கு நேர்ஆம் - *கடலுக்கு ஒப்பாகப் பொருந்தும்.*

**வாரிக்குவளையும்**

வார் இக்கு வளையும் - நீண்ட கரும்பு வளைதலைச் செய்யும்.
வாரிக்கு வளையும் - கடலுக்குச் சங்குகளும்.

**வாரிக்கொடுக்கும்**

வாரி கொடுக்கும் - அள்ளித் தரும்.
வார் இக்கு ஒடுக்கும் - நீண்ட கரும்பை அடக்கும்.

**வாரிசமானங்கொள்**

வாரிச மான் அம்கொள் - திருமகளின் அழகைக் கொண்ட.
வாரி சமானம் கொள் - கடலுக்கு ஒப்பாகப் பொருந்திய.

**வாரியமுதங்கலித்திணங்க**

வாரி அமுதம் கலித்து இணங்க - பாற்கடலில் தோன்றிய அமிழ்தம் மிகுந்து கிடைக்க.
வார்இய அமுதம் கலித்து இணங்க - வாரால் கட்டப் பட்ட இசைக் கருவிகளின் இசை ஒலித்துக்கூட.

**வாருமாரமுந்திமிட**

வாரும் ஆரம் முந்தி இட - கச்சும் முத்துமாலைகளும் மேலிடத்தில் அணிய.
வாரும் ஆரம் உந்தியிட - கொழித்தலையுடைய முத்துக் களை ஒதுக்க.

**வாலிபத்தைமேவும்**

வாலிபத்தை மேவும் - இளமையை அடையும்.
வால் இபத்தை மேவும் - வெள்ளை யானை பொருந்தும்.

**வாலிபமேயாரும்**

வால் இபமே ஆரும் - வாலினை யுடைய யானைகள் பொருந்தும்.
வாலிபமே ஆரும் - இளமை யையே சேரும்.

**வாலைப்பொருந்துதலால்**

வாலைப் பொருந்துதலால் - வெண்மைநிறத்தையுடைமையால்.
வாலைப்பொருந்துதலால் - வாலையுடைமையால்.

**வால்வளைகளார்க்கும்**

வால்வளைகள் ஆர்க்கும் - வெள்ளிய சங்குகள் ஆரவாரிக்கும்.
வால்வளைகள் ஆர்க்கும் - பெருமை பொருந்திய வளையல்கள் ஒலிக்கும்.

**வாவிக்களிக்கும்**

வாவிக்கு அளிக்கும் - பொய்கைக்குக் கொடுக்கும்.
வாவி களிக்கும் - தாவி மகிழும்.

**வாவியலைமோதும்**

வாவி அலை மோதும் - தாவி இருளைத் தாக்கும்.
வாவி அலை மோதும் - பொய் கைகள் அலைவீசும்.

**வாளக்கரத்தார்**

வாள் அ கரத்தார் - வாளை அழகிய கையிலே ஏந்தியவர்.
வாள் அக்கரத்தார் - சிறொளி பொருந்திய ஐந்தெழுத்தரு மறையை உடையவர்.

**வாளம்பரவை**

வாளம் பரவை - சக்கரவாளகிரியும் கடலும்.

வாள் அம்பரம்ஐ - *வாளாயுதம், உடை இவற்றின் அழகு.*

**வாளம்பொருவு**

வாளம் பொருவு - *சக்கரவாள கிரியை ஒக்கும்.*

வாள் அம்பு ஒருவு - *வாளும் அம்பும் ஒப்பில்லை என்று நீங்குகிற.*

**வாளாவிருந்தவர்**

வாளா இருந்தவர்-*வீணாக இருந் தவர்கள்.*

வாளா இருந் தவர்-*வாளாகவும் பெரிய வில்.*

**வாளியைந்துநண்ணும்**

வாள் இயைந்து நண்ணும் - *வாளாயுதம் பொருந்தி விளங் கும்.*

வாளி ஐந்து நண்ணும்-*ஐங்கணை கள் பொருந்தும்.*

**வாளியைந்துவீசும்**

வாளி ஐந்து வீசும் - *கணைகள் ஐந்தைச் செலுத்தும்.*

வாள் இயைந்து வீசும் - *வாளைப் பொருத்தமாக வீசும்.*

**வானகங்கொண்டாடுவார்**

வான் அகம் கொண்டாடுவார்- *விண்ணுலகத்தாரால் போற் றப்பெறுபவர்.*

வால்நகம் கொண்டு ஆடுவார்- *வெள்ளிய நகத்தைக் கொண்டு அழிப்பவர்.*

**வானகத்தைநேரும்**

வால் நகத்தை நேரும் - *சுத்த மான நகங்களை ஒக்கும்.*

வான் அகத்தை நேரும் - *முகி லின் இடத்தைச் சேரும்.*

**வானதிகம்பரவு**

வான் அதிகம் பரவு-*விண்ணுல கத்தார் மிகுதியாகப் பணி கின்ற.*

வால் நதி கம் பரவு - *தூய கங்கை தலையிலே பரவப் பெற்ற.*

**வானத்தன்**

வான் அத்தன்-*சிறந்த தலைவன்.*

வால் நத்தன் - *வெள்ளிய சங்கை உடையவன்.*

வான் அத்தன் - *விண்ணவர்கட் குத் தலைவன்.*

**வானத்துலாவும்**

வானத்து உலாவும் - *விண்ணில் திரியும்.*

வால் நத்து உலாவும்-*வெள்ளிய சங்குகள் சுற்றும்.*

**வானத்துதிக்கைதனைத்தழுவி**

வான துதிக்கை தனைத் தழுவி- *உயர்ந்த தும்பிக்கையைப் பெற்று.*

வானத்து உதிக்கை தனைத் தழுவி - *விண்ணில் தோன்றி வருதலைப் பொருந்தி.*

**வானத்தையுந்தழுவி**

வானத்தையும் தழுவி - *வானி டத்தையுஞ் சேர்ந்து நின்று.*

வால்நத்தையும் தழுவி - *வெள் ளிய சங்குகளையும் உள் ளடக்கி.*

**வானந்தடுக்கும்**

வால் நந்து அடுக்கும்-*வெள்ளிய சங்குகள் சேரும்.*

வானம் தடுக்கும்-*விண்ணனது இடை மறிக்கும்.*

**வானந்தரித்துவரலாலும்**

வானம் தரித்து வரலாலும் - *விண்ணில் தங்கி வருவதாலும்.*

வால் நந்து அரித்து வரலாலும்- *வெள்ளிய சங்குகளை வாரிக் கொண்டு வருகையாலும்.*

**வானந்தாமைபடைக்கும்**

வால் நந்து ஆமை படைக்கும் - *வெள்ளை நிறமுள்ள சங்கு ஆமை முதலியவற்றை உண்டாக்கும்*

வானம் தா மை படைக்கும் - *வானத்தின்மேற் செல்லும் மேகத்தை ஏற்று நிற்கும்.*

வான் அம் தாமை படைக்கும் - *மேலான அழகிய தாம்புக் கயிறு கட்டப்பெற்றிருக்கும்.*

**வானந்துடைக்கும்**

வானம் துடைக்கும் - *லகத்தைத் தேய்க்கும்.*

வால் நந்து உடைக்கும் - *வெள்ளிய சங்குகள் உடைத்துவிடும்.*

**வானந்துதிக்கும்**

வால் நந்து உதிக்கும் - *வெண்மையாகிய சங்குகள் பிறக்கும்.*

வானம்

*கத்தார்.*

**வானந்தொடுசந்தத்திகிரி - மலிந்தும்**

வால் நந்தொடு சந்தம் திகிரி மலிந்தும் - *வெள்ளை நிறச் சங்குடன் அழகிய சக்கரப் படையைக் கொண்டும்.*

வானம் தொடு சந்து அத் திகிரி மலிந்தும் - *வானத் தளவு உயர்ந்து வளர்ந்துள்ள சந்தன மரங்கள் அழகிய மூங்கில் மரங்கள் பெருகியும்.*

**வானம்பரவுமையன்**

வானம பரவும ஐயன் - *விண்ணுலகத்தார் போற்றுங் கடவுள்.*

வான் அம் பரவும் ஐயன்-*சிறந்த அழகு பொருந்திய கடவுள்.*

**வானம்பரித்தார்**

வான் அம்பு அரித்தார் - *சிறந்த கங்கையாகிய நீரையும் பாம்பு மாலையையும் உடையவர்.*

வானம் பரித்தார்-*விண்ணுலகத் தேவர்களைத் தாங்கிப் பாது காத்தவர்.*

**வானம்பவனம்**

வானம் பவனம் - *விண்ணும் வாயுவும்.*

வான் நம்பு அவன்நம் - *விண்ணுலகத்தாரும் நம்புகின்ற அவன் நம்முடைய.*

**வானரங்குலாவும்**

வானரம் குலாவும் - *குரங்குகள் உலாவும்.*

வானர் அங்கு உலாவும் - *தேவர்கள் அங்குத் திரியும்.*

வான் அரங்கு உலாவும்-*சிறந்த அவையிற் பொலியும்.*

**வானரம்பன்ன**

வானர் அம் பன்ன - *தேவர்கள் அழகாகத் துதிக்க.*

வால் நரம்பு அன்ன - *தூய யாழின் நரம்பிசையைப் போன்ற.*

**வானரம்பையராவிற்பயந்தர**

வானரம் பை அராவின் பயம் தர - *குரங்குகட்குப் படத்தை யுடைய பாம்பினது அச்சம் உண்டாக.*

வான் அரம்பையர் ஆவின் பயம் தர - *விண்ணுலகிலுள்ள தேவ மாதர்கள் பசுவின் பாலைக் கொடுக்க.*

**வானரவாலி**

வானர வாலி - *வானரமாகிய வாலி.*

வான் அரவு ஆலி - *பெருமை பொருந்திய பாம்பிடத் துண்டான நஞ்சை யுண்டவன்.*

**வானவரங்காடும்**

வானவர் அங்கு ஆடும் - *தேவர்கள் அவ்விடத்திலே வந்து நீராடலைச் செய்யும்*

வான அரங்கு ஆடும் - *சிறந்த அவையிலே கூத்தியற்றும்.*

**வானாகமஞ்சார்**

வான் நாகம் மஞ்சு ஆர் - *விண்ணையளாவிய புன்னை மரங்கள் அழகிய ஆத்தி மரங்கள்.*

வால் நாகம் அஞ்ச ஆர் - *வாலை யுடைய பாம்புகள் அஞ்சுமாறு பொருந்தியுள்ள.*

**வானாடுவாகனன்**

வான் நாடு வாகு அனன் - *விண்ணுலகில் உள்ள தேவர்களும் அழகிய அன்னவாகனத்தை யுடைய நான்முகனும்.*

வான் நாடு வாகன் நல் - *பெருமையை விரும்பும் புயங்களை யுடையவன் நல்ல.*

**வானாறுபாவும்**

வான் ஆறு பாவும் - *விண்ணுலக ஆறு பரவும்.*

வால் நாறு பாவும் - *வெள்ளிய நாற்றுக்கள் பரந்திருக்கும்.*

**வானாறுமேற்செல்**

வான் ஆறு மேல் செல் - *ஆகாய கங்கையையுங் கடந்து அப்பாற் செல்லுகின்ற.*

வான் நாறு மேற் செல் - *சிறந்த நாற்றுகள் மிகுதியாகச் செல்லுகின்ற.*

**வான்கற்பகமார்**

வான் கற்பு அகம் ஆர் - *சிறந்த கற்பு உள்ளத்திலே பொருந்திய.*

வான் கற்பகம் ஆர் - *விண்ணுலகில் உள்ள கற்பகமரம் பொருந்திய.*

**வான்சிலம்புநேரும்**

வான் சில் அம்பு நேரும் - *சிறந்த சிலவாகிய அம்புகளையொத்து விளங்கும்.*

வான் சிலம்பு நேரும் - *சிறந்த மலையைப்போல் விளங்கும்.*

**வான்றேசிகனைப்பழிக்கும்**

வான் தேசி கனைப்பு அழிக்கும் - *விண்ணிற் செல்லுகிற கதிரவன் குதிரைக் கனைப்பை ஒழிக்கும்.*

வான்தேசிகனை பழிக்கும் - *தேவ குருவாகிய வியாழப்புத்தேளை இகழும்.*

**வான்மீதெழும்புகையால்**

வான்மீது எழும் புகையால் - *விண்ணின்மேல் எழும்புகின்ற புகையினாலும்.*

வான் மீது எழும்புகையால் - *விண்ணின்மீது தோன்றுகிற படியாலும்.*

**வான்முத்தலைவேலை**

வால் முத்து அலைவேலை - *வெள்ளிய முத்துக்களை அலைகளில் ஒதுக்கும் கடல்; அலைகிற கடல் எனினுமாம்.*

வான் முத்தலை வேல் ஐ - *பெருமை தங்கிய மூன்று தலைச் சூலத்தைத் தாங்கிய இறைவன்.*

**வான்மேவியுள்ளமையால்**

வான் மேவி உள்ளமையால் - *விண்ணை யடைந்து விளங்குவதால்.*

வால் மேவி உள்ளமையால் - *வாலைப் பெற்றிருக்கிறபடியால்.*

**வான்வாசநீடேடுடைக்கவுறூஉம்**

வான் வாச நீடு ஏடு உடைக்க உறூஉம் - *உயர்ந்த மணம் பொருந்திய நீண்ட மலரிதழ்களை விரிப்பதற்குப் பொருந்தும்.*

வான் வாச நீள் தேள் துடைக்க உறூஉம் - *விண்ணில் வாசஞ் செய்யும் நீண்ட விருச்சிக ராசியைத் தொடுமாறு வளரும்.*

**விஞ்சத்திரராசியிற்பயின்றவிதத்தால்**

விஞ்சு அத்திர ராசியில் பயின்ற விதத்தால் - *மேம்பட்ட பல வகை அம்புகள் செலுத்தும் பழக்கத்தில் தேர்ந்த முறையால்.*

விஞ்ச திர ராசியில் பயின்ற விதத்தால் - *மிகுதியாக இராசிகளில் தங்கியிருந்த தன்மையால்.*

**விஞ்சமடித்திருக்கார்**

விஞ்ச மடித்த இருக்கு ஆர் - *மிகுதியாக மடித்து மடித்துச் சொல்லப் பெறுகிற மறைகள் நிரம்பப் பெற்ற.*

விஞ்ச மடி திருக்கு ஆர் - *மிகுதியாக வளைவோடு கூடிய முறுக்குப் பொருந்தப்பெற்ற.*

**விடப்பணியான்**

விட பணியான் - *நஞ்சு பொருந்திய பாம்பினை யணிந்தவன்.*

விட பணியான் - *விட்டு விடுதற்குக் கட்டளை கொடாதவன்.*

**விடமருந்தானார்**

விடம் அருந்து ஆனார் - *நஞ்சை யுண்ட ஆனார்தயை உடையவர்.*

விடம் மருந்து ஆனார் - *நஞ்சுக்கு மருந்தாக இருந்தவர்.*

**விட்டுமதிவிளங்கும்**

விட்டு மதி விளங்கும் - *மதிவிட்டு விளங்கும் - திங்கள் ஒளி வீசி விளங்கும்*

விட்டுமதி விளங்கும் - *திருமாலை அறிவிற் கொண்ட எண்ணம் விளங்கும்.*

**விண்டவிர்ந்துநிற்கின்ற**

விண் தவிர்ந்து நிற்கின்ற - *விண்ணுலகத்திற்குச் செல்லுதல் ஒழிந்து நிற்கிற*

விண்டு அவிர்ந்து நிற்கின்ற - *இதழ் விரிந்து மலர்ந்து நிற்கின்ற.*

**விண்டாரைநாடுகின்ற**

**விண்தாரை நாடுகின்ற**-*முகிலின் மழைத்தாரையை விரும்பி உணவாகக் கொள்ளுகிற.*

**விண்டாரை நாடுகின்ற**-*(போர் செய்தற்குப்)பகைத்தவரைத் தேடுகின்ற.*

**விண்டொடுபொற்பாம்பணைசேர்**

**விண்டொடு பொன்பாம்பு அணை சேர்** - *திருமாலுடனே அழகிய பாம்புப் படுக்கையை என்னுகிற.*

**விண்தொடு பொற்பு ஆம்பணை சேர்** - *விண்ணை அளாவிய அழகிய கிளைகள் பொருந்தப் பெற்ற.*

**விண்மட்டுத்தாமரைசேர்**

**விள்மட்டு தாமரைசேர்**-*மலர்ந்த தேனையுடைய தாமரை மலர் பொருந்தப் பெற்ற.*

**விண்மட்டு தாம் மரைசேர்** - *மேலுலகத்தினளவும் தாவுகிற மான் பொருந்தப்பெற்ற.*

**விதனந்தோன்றும்**

**விதனம் தோன்றும்** - *தாமரைப் பூவின் அரும்பு போன்ற கொங்கை தோன்றும்.*

**விதனம் தோன்றும்** - *வருத்தம் உண்டாகும்.*

**வித்தியாசம்பன்னன்**

**வித்தியாசம் பன்னல்** - *வேறுபாடு கூறுதல்.*

**வித்தியா சம்பன்னன்** - *கலைச் செல்வத்தை உடையவன்.*

**வியந்திரு**

**வியம் திரு** - *பெருமையுஞ் செல்வமும்.*

**வியந்து இரு** *மதித்துப் போற்றி*

**விரும்புமவரைக்காய்**

**விரும்பும் அவரைக்காய்**-*விருப்பத்தையுண்டாக்கும் அவரைக்காய்.*

**விரும்பும் அவரைகாய்** - *விரும்புகிற அம் மனிதரைச்*

**விரைவிடுக்குங்காலம்**

**விரைவிடுக்கும் காலம்**-*மணத்தை வெளிப்படுத்துங் காலம்.*

**விரைவு இடுக்கும் காலம்** - *விரைவாக வருத்துகிறகாலம்.*

**விலங்குக்கையன்**

**விலங்குக்கையன்** - *கையில் தளையை உடையவன்.*

**விலங்குக்கையன்** - *மாறுகிய விலங்கைக் கையில் உடையவன்.*

**வில்லுமிழம்புஞ்சத்துருவைமிகல்**

**வில் உமிழ் அம் புஞ்சத்து உருவை இகல்** - *ஒளிவிடுகின்ற அழகாகிய திரட்சி வடிவை மாறுகொள்ளும்.*

**வில் உமிழ் அம்பும் சத்துருவை இகல்** - *வில்லில் எய்யும் கணை பகைவரை வெற்றிகொள்ளும்.*

**விலையுமுறும்பாந்தமதனால்**

**விலையும் உறும் பாந்தம் அதனால்** - *விலைக்கு விற்கப்பெறுகிற தொடர்பினால்.*

**வி(ல்)லையும் உறும்பாந்தம் அதனால்** - *தனுவென்னும் இராசியிற் சார்ந்திருக்கின்ற தன்மையினால்.*

வில்வளைவிட்டாய்

**வில் வளைவிட்டாய்** - *வில்லை வளைவாக வெளிப்படுத்தினாய்.*

**வில்வளை விட்டாய்** - *ஒளி தங்கிய வளையல்களை நீக்கிவிட்டாய்.*

விழையும்பலநிரம்ப

**விழையும் பலம் நிரம்ப**-*யாவரும் விரும்புகின்ற பழங்கள் மிகுதிப்பட.*

**விழையும் பலம் நிரம்ப**-*விரும்பப்படுகிற வலிமை மிகுதியாக.*

விளக்குமாற்றல்விளக்குதல்

**விளக்கும் ஆற்றல் விளக்குதல்**-*விளக்க வேண்டிய முறைப்படி விளக்குதல்.*

**விளக்குமாற்றல் விளக்குதல்** - *துடைப்பத்தினாலே கூட்டுதல்*

வினையாருளத்தர்

**வினைஆர் உளத்தர்** - *நல்வினை பொருந்தியவர்களுடைய உள்ளத்தில் மேவியவர்.*

**வில் நையார் உள் அத்தர்** - *அறிவொளி மழுங்கப் பெறாதவர்களுடைய உள்ளத்திலே பொருந்தியவர்.*

வீணாகாநத்தன்

**வீண் ஆகாநத்தன்**-*வீண் ஆகாத சங்கினையுடையவன்.*

**வீணா காநத்தன்** - *(மதுரையில்) வீணை கொண்டு இசை பாடியவர்.*

வீணையிராகத்தைவிடும்

**வீணை இராகத்தை விடும்**-*வீணையினால் இசை வாசித்தலை ஒழியப்பெறும்.*

**வீணை இராகத்தை விடும்** - *வீணான செயல்களையும் ஆசையையும் ஒழித்துவிடும்.*

வீமன்

**வீமன்** - *பாண்டவர்களில் ஒருவன்.*

**வீமன்** - *கருடனுக்குத் தலைவனாகிய திருமால்.*

வீறுதருமம்பல்க

**வீறு தருமம் பல்க** - *பெருமைமிக்க அறங்கள் பெருக.*

**வீறு தரும் அம்பு அல்க**-*விரைவு கொண்டு செல்கின்ற அம்பும் தன்மை குறைய.*

வீறுமருப்பிணைசேர்

**வீறு மருப்பு இணை சேர்**-*பெருமை தங்கிய இரட்டைத் தந்தங்களொன்று சேருகின்ற.*

**வீறுமரு பிணைசேர்** - *சிறப்புப் பொருந்திய பெண் மான் சேருகின்ற.*

வெங்கண்மதகரி

**வெம்கண் மதகரி** - *விருப்பத்தைத் தருகிற கண்ணையுடைய தனம்.*

**வெம் கண் மதகரி** - *கொடுந் தன்மையுள்ள மதயானை.*

வெங்கரிக்கோடு

**வெம் கரிக் கோடு** - *கொடிய யானைத் தந்தம்.*

**வெம் கரிக் கோடு** - *விருப்பத்தை உண்டாக்குகிற யானைக் கோட்டைப் போன்ற தனம்.*

### வெங்காயஞ்சுக்காளுல்

**வெம் காயம் சுக்கு ஆளுல் -** *விருப்பத்தைத் தருகிற வ் வுடம்பு தவத்திளுல் காய்ந்து சுக்கைப்போல் டால்.*

**வெங்காயம் சுக்கு ஆளுல்-** *வெங் காயம் என்று சொல்லப் பெறும் பொருள் சுக்குப் போல ஆகிவிட்டால்.*

### வெங்கோவடை

**வெம் கோ அடை-** *விருப்பத்தை உண்டாக்குகிற பசுக்கள் வந்து அடைய*

**வெம் கோ அடை-** *விருப்பத்தை உண்டாக்குகிற கண்ணைச் சேர்ந்த.*

### வெட்டிக்களித்தார்

**வெட்டி களித்தார் –** *வெட்டி மகிழ்ந்தார்.*

**வெட்டு இக்கு அளித்தார் -** *வெட்டப்படுகிற கரும்பைக் கொடுத்தவர்.*

### வெண்காடை

**வெண் காடை -** *வெள்ளை நிற முள்ள காடை என்னும் பறவை.*

**வெண்காடு ஐ -** *திருவெண்காட் டில் எழுந்தருளிய இறைவன்.*

### வெண்ணிலவினீறுபுனைந்திடும்

**வெள்நிலவின் நீறு புனைந்திடும்-** *வெள்ளிய நிலவைப் போன்ற திருநீற்றை அணிந்திடும்.*

**வெண் நிலவில் நீறு புனைந்திடும்.** *வெண்ணிலவால் நீருகி வருந் தும்.*

### வெண்மையான்

**வெண்மையான் -** *வெண்மை நிறத்தையுடையவன்.*

**வெண்மை ஆன்-** *வெள்ளிய நிற முடைய காளை; பசு.*

### வெந்தயத்தாலாவதென்ன

**வெந்த அத்தால் ஆவது என்ன-** *வெம்மையான வினையிளுல் வரக்கூடிய தீமை என்ன ?*

**வெந்தயத்தால் ஆவது என்ன -** *வெந்தயம் என்னும் பொருளி ளுல் ஆகக்கூடிய காரியம் என்ன ?*

### வெந்நீரளித்த

**வெங்நீர் அளித்த -** *வெந்நீரைக் கொடுத்த.*

**வெங் நீர் அளித்த -** *முதுகை நீர் காட்டிய.*

### வெம்பற்பெரிதுதோன்ற

**வெம் பல் பெரிது தோன்ற -** *கொடிய பற்கள் நன்கு வெளிப்பட்டுத் தெரிய.*

**வெம்பு அல் பெரிது தோன்ற -** *வருத்துகின்ற இரவு மிகுதி யாக உண்டாக.*

### வெவ்விடரினீங்கியெழும்

**வெம் இடரின் நீங்கி எழும் -** *கொடிய துன்பத்தினின்றும் நீங்கியெழப்பெறும்.*

**வெம் விடரின் நீங்கி எழும் -** *வெவ்விய மலைவெடிப்புக்களி னின்று புறப்பட்டு மேலே யெழும்.*

### வெள்ளரிக்காய்

**வெள்ளரிக்காய்-** *வெள்ளரி என் னும் கொடியினுடைய காய்.*

வெள் அரிக்கு ஆய் - வெள்ளிய நிறமுடைய திருமாலுக்குத் தாய்.

**வெள்ளியரங்கம்**

வெள்ளி அரங்கம் - வெள்ளியம் பலம்.
வெள்ளியர் அங்கம் - நல்லவர் களது உள்ளம்.

**வெற்றிமதிக்கண்ணி**

வெறு இமதிக்கு அண்ணி - வெறுமையான இந்தஅறிவை அடைந்து
வெற்றிமதி கண்ணி - வெற்றி பொருந்திய பிறைமாலை.

**வேங்கை**

வேம் கை - வேகின்ற கை.
வேங்கை - புலி.

**வேங்கைக்கோடாதரிக்கும்**

வேங்கை கோடு ஆதரிக்கும் - வேங்கை மரத்தின் கிளையை விரும்பிப் பிடிக்கும்.
வேங்கைக்கு ஓடாது அரிக்கும்- வேங்கைப் புலிகளுக்கு அஞ்சி யோடாமல் எதிர்த்து அழிக் கும்.

**வேடன்சரந்துரக்கும்**

வேள் தன் சரம் துரக்கும் - காமன் தன்னுடைய கணை களைச் செலுத்தும்.
வேடன் சரம் துரக்கும் - வேட னனவன் தன்னுடைய அம்பு களைச் செலுத்தும்.

**வேட்டவர்**

வேள்தவர் - காமனுடைய வில்.
வேட்டவர் - விரும்பியவர்.

**வேட்டுவரம்பொழியும்**

வேட்டு வரம் பொழியும்-விரும் பிக்கேட்கும் வரங்களை மிகுதி யாகக் கொடுக்கும்.
வேட்டுவர் அம்பு ஒழியும்-வேடு வர்கள் எய்யும் அம்புகளை நீங்கப்பெறும்.

**வேணியான்பாணியான்**

வேணியான் பாணியான்-சடை யை உடையவன் கங்கையை உடையவன்.
வேணியான் பாணியான் - வில் லையுடையவன் கையை உடையவன்.

**வேதங்கனுல்வளரும்**

வேதம் கனுல் வளரும்-மூங்கில் கள் தம்முடைய கணுக்க ளோடு வளரப்பெற்ற.
வேதங்கள் நால் வளரும்-மறை கள் நான்குஞ் செழிப்புறும்.

**வேதப்பரிய**

வேதம் பரிய - மறைகளாகிய குதிரைகளையுடைய.
வேது அப்பு அரிய - வேதியனை ஒற்றிடு கெடுக்க.

**வேதவனநாமத்தார்**

வேதவன நாமத்தார் - (சுவே தாரணியர் என்னும்) பட்டி னத்தடிகள்.
வேத வன நாமத்தார் - மறைக ளால் எடுத்துக் கூறப்பெறும் அழகிய பெயரையுடையவர்.

**வேதனது**

வேதனது - நான்முகனுடைய
வேதனது - [illegible]டைய.

வெள்ளிமாதங்கம்

வெள்ளி மாதங்கம் — வெள்ளியானை.

வெள்ளி மா தங்கம் — வெள்ளியுஞ் சிறந்த தங்கமும்.

வெள்ளி மாது அங்கம் — வெண்மையான மானை உடலில்.

**வேதனைக்கூற்றைத்தவிர்க்கும்**

வேதனை கூற்றை தவிர்க்கும் - *நான்முகனையும் நமனையும் விலக்கும்*

வேதனை கூற்றை தவிர்க்கும் - *துன்பங்களின் வகைகளை ஒழிக்கும்.*

**வேதனைதந்தனை**

வேதனை தந்தனை - *துன்பத்தைக் கொடுத்தாய்.*

வேதனை தந்தனை - *நான்முகனையின்றாய்*

வேதனை தந்தனை - *மூங்கிலை அளித்தாய்.*

**வேதாகமங்கையார்**

வேதா கம் கையார்-*நான்முகன் தலையோட்டைக் கையில் உடையவர்.*

வேதாகமம் கையார் - *வேதாகமங்களை வெறுக்காதவர்.*

**வேதாத்தியானத்தார்**

வேதா தியானத்தார் - *நான்முகனால் தியானஞ் செய்யப்பெறுபவர்.*

வேத அத்தியானத்தார் - *மறைகளை ஓதுபவர்.*

**வேதாந்தருப்பரமர்**

வேதாந்தர் உம்பர் அமர் - *வேதாந்தப் பொருளானவர், தேவர்கள் வசிக்கும்.*

வே தருமம் பரமர் - *மூங்கில் பெற்றருளிய சிவனர்.*

**வேதாவினுல்முடியா**

வே தாவினுல் முடியா - *மூங்கில்கள் அளாவி வளர்தலால் இயலாத.*

வேதாவினுல் முடியா - *நான்முகனுலும் நிறைவேருத.*

**வேதியனங்கற்படுத்தான்**

வேதியன் அங்கு அற்பு அடுத்தான் - *மறையவனால் அங்கு அன்பு செய்யப்பெற்றவன்.*

வேதி அனங்கற் படுத்தான் - *அறிந்து வந்து எய்துவனுகிய காமனை அழித்தவன்.*

**வேம்பன்புதல்வன்தலையுங்கலப்-பையுமேந்தினனே**

வேம்பன் புதல்வன் தலையும் கலப்பையும் ஏந்தினன் - *பாண்டியனுடைய மகனுனவன் தலையையும் கலப்பையையுந் தாங்கிக்கொண்டிருந்தான்.*

வேம்பன் புதல்வன் தலையும் கலப்பையும் ஏந்தினன்-*தென்னம்பிள்ளையின் மீது தாமரை மலர் வைக்கப்பட்டிருந்தது. (வேம்பன்-தென்னன், தலை - கம், கலப்பை-அலம், கம் + அலம்-கமலம்—தாமரை.)*

**வேரினறுஞ்சாந்தொழுகும்**

வேரிநறு சாந்து ஒழுகும் - *வாசனையை உடைய நல்ல மயிர்ச் சாந்து ஒழுகப்பெறும்.*

வேரின் அறும் சாந்து ஒழுகும் - *வேரோடும் அற்ற சந்தன மரங்கள் அடித்துக்கொண்டு வரப்பெற்ற.*

**வேர்க்கவலைமூலங்கல்**

வேர்க்க அலை மூலம் கல் - *வியர்வையடைய திருப்பாற்கடலில் எழுந்தருளிய ஆதிமூலப் பொருளைப் போற்றுகிற.*

**வேர் கவலை மூலம் கல்-வேரோடு கவலைக்கிழங்கைத் தோண்டுகிற.**

**வேலைபெறலால்**

**வேலை பெறலால்** - *பாற்கடல் பெறுதலால்.*

**வேலை பெறலால்** - *வேலைப்பாட்டைப் பொருந்துதலால்.*

**வேல் ஐ பெறலால்** - *வேலாயுதத்தையுடைய இறைவன் பெறுதலால்.*

**வேழமருப்புநதும்**

**வேழம் மருப்பு உகுதும்** - *யானைகளின் தந்தம் சிந்தப்பெறும்.*

**வேழம் மரு புகுதும்** - *மூங்கில்களும் மணம் சேரப்பெறும்.*

**வேள்விக்கினமாற்றும்**

**வேள் விக்கினம் மாற்றும்** - *காமவரும் இடையூற்றைக் கெடுக்கும்.*

**வேள்விக்கு இனம் ஆற்றும்** - *வேள்விக்கு இனமான நற்செயல்களைப் புரியும்.*

**வேள்விமலையான்**

**வேள்வி மலையான்** - *வேள்வி மலையில் எழுந்தருளியவன்.*

**வேள்வி மலையான்** - *வேள்வி செய்வதற்கு மயங்காதவன்.*

**வேள் விமலையான்** - *விரும்பத்தக்க உமாதேவியை உடையவன்.*

**வைகணையைநேராம்**

**வை கணையை நேராம்** - *கூரிய கணைக்கு ஒப்பாக விளங்கும்.*

**வைகு அணையை நேராம்** - *தங்குகிற இருக்கையை ஒத்து விளங்கும்.*

**வைகறையிற்சேர்ந்திடலால்**

**வைகறையில் சேர்ந்திடலால்** - *விடியற்காலத்தில் அடைதலால்.*

**வைகு அறையில் சேர்ந்திடலால்** - *பள்ளியறையிற் கலத்தலால்.*

**வைகுந்தங்காட்டும்**

**வைகுந்தம் காட்டும்** - *திருமால் உலகைக் காணச்செய்யும்.*

**வை குந்தம் காட்டும்** - *கூரிய ஈட்டியைப்போல் விளங்கும்.*

**வைகுந்தநாட்டான்**

**வை குந்தம் நாட்டான்** - *கூரிய சூலாயுதத்தை நமன் நாட்டாமல் தடுப்பவன்.*

**வைகுந்தம் நாட்டான்** - *வைகுண்டம் என்னும் நாட்டையுடையவன்.*

**வைத்தின்றுவாழும்**

**வைத்து இன்று வாழும்** - *வைத்துக்கொண்டு இந் நாளில் வாழ்க்கையை நடத்தும்.*

**வை தின்று வாழும்** - *வைக்கோலைத் தின்று உயிர் வாழும்.*

**வையத்தரங்கத்தர்**

**வையத்து அரங்கத்தர்** - *உலகத்திலே திருவரங்கத்தில் எழுந்தருளியவர்.*

**வையத்தர் அம் கத்தர்** - *தேரினையுடையவர் அழகிய கடவுள்.*

**வையத்தருக்கர்**

**வையம் தருக்கர்** - *உலகிலேயுள்ள களிம்பினையுடையவர்*

**வையத்து அருக்கர்** - *தேரினிடத்திலே கதிரவர்.*

**வையத்துறக்கந்தெரிந்துவந்தும்**

**வையத்து உறக்கம் வந்தும்** - *உலக மக்களின் தூக்கத்தைக் தெரிந்து கொண்டு வந்தும்.*

வை அத்து உற கம் தெரிந்து - வந்தும் - உலகில் மாலைப் பொழுது தோன்ற விண்ணில் தோன்றி வந்தும்.

**வையமருங்கோலத்தர்**

**வை அமரும் கோல் அத்தர்** - *கூர்மை பொருந்திய கணை யமைந்த கையை உடையவர்.*
**வையம் அரும் கோலத்தார்** - *நிலவுலகில் அருமையான கோலத்தைக் கொண்டவர்.*

**வையமிசையெய்தும்**

**வையம் மிசை எய்தும்** - *தேரின் மீது வரும்.*
**வையம் இசை எய்தும்** - *உலகம் புகழைப்பெறும்.*

**வையமுடுக்க**

**வையம் உடுக்க** - *நிலமகள் ஆடையாக உடுக்க.*
**வைய முடுக்க** - *இகழ்ந்து பேசித் துரத்த.*

**வையம்படரும்**

**வையம் படரும்**-*உலகத்தார்கள் நெருங்கி வரும்.*
**வையம் படரும்** - *தேர்கள் செல் லும்.*
**வை அம்பு அடரும்** - *கூரிய அம்புகள் வருத்தும்.*

**வையம்படைக்கவல்லார்**

**வையம் படைக்க வல்லார்** - *உலகத்தைப் படைக்க வல்ல வர்.*
**வை அம்பு அடைக்க வல்லார்** - *கூரிய அம்பினை அடைக்க வல்லவர்.*

**வையம்படைத்தான்**

**வையம் படைத்தான்** - *உலகத் தைப் படைத்தவனாகிய நான் முகன்.*
**வை அம்பு அடைத்தான்** - *தன் கூரிய அம்பைச் சேர்த்து வைத்தவன்.*

**வையம்பணிகூர்**

**வை அம்பு அணிகூர்** - *கூரிய அம்பு வரிசை மிகும்.*
**வையம் பணிகூர்** - *உலகத்தார் பணிவையுறும்.*
**வையம் பணிகூர்** - *பல்லக்கு முதலிய ஊர்திகளின் அழகு மிகும்.*

**வையம்பரியார்**

**வை அம்பு அரியார்** - *கூரிய அம்பாகத் திருமாலைக்கொண் டவர்.*
**வையம் பரியார்** - *நிலத்தைத் தேராக உடையவர்.*

**வையம்பலவாம்**

**வை அம்பல் அவாம்** - *இழித் பழிமொழியை விரும்பும்.*
**வையம் பல ஆம்** - *தண்டிகை பல ஆகும்.*

**வையம்புரந்தர**

**வை அம்பு உரம்தர** - *கூரிய அம்புவலிமையைக்கொடுக்க.*
**வையம் புரந்தர** - *உலகைக் காப்பாற்ற.*

**வையம்பொருவா**

**வையம் பொருவா** - *பூமி ஒப்பா காத.*
**வைஅம்பு ஒருவா**-*கூரிய அம்பு நீங்காத.*